

திருமலை ஸ்ரீநிவாஸன்—உத்ஸவர்

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



# பாரதீய பூர்வசிக ஸ்ரீவைஷ்ணவ சபா,
## ஸ்ரீரங்கம்

[ப்ரபவ-ஷு (1927) சித்திரை-மீ ஹஸ்த நக்ஷத்திரத்தில் ஸ்தாபிக்கப்பட்டது]

(1860-ஷு ஆக்ட்-21 பிரகாரம் ரிஜிஸ்தர் செய்யப்பட்டது)



# பொன்விழா மலர்



**பிங்கள பங்குனி 23, 24, 25 (1978 ஏப்ரல் 5, 6, 7) தேதிகளில் நடைபெற்ற பொன்விழாவின் நினைவாக வெளியிடப்பெற்ற மலர்.**

கிடைக்குமிடம்:—

**ஸ்ரீ S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்,**
*'ஸுதர்சனம்' ஆசிரியர்,*
3, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-17.

ஸ்ரீ. ரா. ஸ்ரீ. கி. ஸ்ரீநிவாஸய்யங்கார் குடும்ப தர்ம சொத்துக்களின் ஆதரவில் வெளிவருகிறது.



**விலை 8-00]** 1978 **[தபால் 1-00**

ஸ்ரீநிவாஸம் பிரஸ், புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-17.

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# சபைப் பொன்விழா மலர்—முன்னுரை

காடாய்க்கிடந்த தென்னாட்டில்—குறிப்பாகச் சோழதேசத்தில் முதன்முதலில் குடியேறி, அதனாலேயே 'சோழியர்கள்' என்று அழைக்கப்பட்டு, ஆழ்வார்கள், ஆசார்யர்கள் காலத்தில் விஷ்ணுகோயில் கைங்கர்யத்தையே உயிர்நாடியாகக்கொண்டு வைஷ்ணவத்தைப் பரப்பிவந்த த்3விஜகுலதிலகர்கள் பூர்வஶிக2 ஸ்ரீவைஷ்ணவர்கள். இவர்களுடைய முன்னேற்றங்கருதி ப்ரப4வ-ஞூ (கி. பி. 1927) சித்திரை-மீ ஹஸ்தநக்ஷத்திரத்தில் ஸுத3ர்ஶந ஸ்த2ாபகரான கி. ஸ்ரீநிவாஸய்யங்கார் ஸ்வாமி முதலான பல மஹநீயர்களால் பாரதீய பூர்வசிக ஸ்ரீவைஷ்ணவ சபை ஸ்ரீரங்கத்தில் தோற்றுவிக்கப்பட்டது. பல மகாநாடுகள் நடத்தியும், தொடர் உபந்யாஸங்களை நிகழ்த்தச் செய்தும் சபை வைணவத்தின் முன்னேற்றத்திற்குப் பாடுபட்டு வருவதை அனைவரும் அறிவர்; ஸ்ரீரங்க3த்தில் ஓர் கிருஹம் வாங்கி, அதை ஓர் கல்யாண-உபந்யாஸ மண்டபமாகச் சீர்திருத்தி, ஆஸ்திகர்கள் அனைவருக்குமே உபகாரம் ஏற்படும்படி சபாநிர்வாகிகள் சபையை வளர்த்திருக்கின்றனர். எம்பெருமானார் அவதரித்த பிங்கள வருஷத்தில் சபையின் பொன்விழாவும் நேர்ந்ததால் அதையொட்டி, பெரியாழ்வார் வம்ஶஸ்த2ரான ஸ்ரீவில்லிபுத்தூர் வேதப்பிரான்பட்டர் ஸ்ரீஉ. வே. கோவிந்தராஜய்யங்கார் ஸ்வாமியின் தலைமையில் பிங்கள பங்குனியில் சபைப்பொன்விழாவோடு, சபையின் பத்தாவது மஹாநாடும் நடைபெற்றது. அதன் நினைவாக, ஆழ்வார்கள் ஆசார்யர்களின் வைப4வமும் பல அறிஞர்களின் கட்டுரைகளுங் கொண்ட இம்மலர் வெளியிடப்படுகிறது. ஆஸ்திகர்கள் அனைவரும் இப்பெருவிருந்தைச் சுவைத்துக் களிப்பார்களாக.

ஸ்ரீ வைஷ்ணவ தா3ஸன்,

**ஸ்ரீ. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்,**

*சபைத்தலைவர்—ஸுதர்சனம் ஆசிரியர்.*

# ஆசார்யர்கள் காலம்பற்றி முக்கியமான குறிப்பு

இந்த மலரில் அந்தந்த ஆசார்யர்களின் வைப₄வத்திலும், குறிப்பாக நம்பிள்ளை வைப₄வத்தின் கடைசியிலும் (பக்கம் 239) ஆசார்யர்கள் வைப₄வத்தின் கடைசியிலும் (பக்கம் 295, 296) நாதமுனிகள் தொடங்கி, மாமுனிகளீருகவுள்ள ஆசார்யர்கள் வாழ்ந்த காலம் நிர்ண யிக்கப்பட்டுள்ளது. இதில் சில ஆராய்ச்சிகளும், செய்யக்கூடிய மாறுதல்களும் கீழே குறிப்பிடப்படுகின்றன.

(1) ஸ்ரீதே₃ஶிகன் ஸம்ப்ரதா₃ய பரிஶுத்₃தி₄யில் ''நாத₂முனிகள் தம்முடைய திருப்பேரனுரான ஆளவந்தாருக்குத் தாம் உபதே₃ஶியாதே, தம்முடைய ஶிஷ்ய ப்ரஶிஷ்யர்களை 'இவருக்கு ஆகாங்க்ஷை பிறந்த போது உபதே₃ஶியுங்கோள்' என்று ஆஜ்ஞாபித்தது'' என்று தொடங்கி ஸாதித்திருக்கும் ஸ்ரீஸூக்திகளைப் பார்த்தால், ஸ்ரீ நாத₂முனிகள் காலத்திலேயே ஆளவந்தார் அவதரித்துவிட்டதுபோல் தோன்றுகிறது. சரமோபாயநிர்ணயம், கு₃ருபரம்பராப்ரப₄ாவம் முதலானவற்ருேடு இது முரண்படுகிறது. முரணில்லாமல் நிர்வஹிக்க வழியுண்டா என ஆராயவேண்டும்.

(2) ஸ்ரீதே₃ஶிகன்–கு₃ருபரம்பராப்ரப₄ாவம் முதலானவற்றிற்போல் திருக்கச்சிநம்பியை, ஆளவந்தார் சிஷ்யராகக் குறிப்பிடாமல், பெரிய நம்பி சிஷ்யராகக் குறிப்பிடுகிருர். திருக்கோட்டியூர் நம்பியை ஆஶ்ர யித்து அவரது அபி₄மானத்தைப் பெற்றதாகவும் ஓர் வரலாறு உள்ளது. திருக்கச்சிநம்பிக்கு ஆளவந்தாரிடம் பஞ்சஸம்ஸ்கார மாத்ரமே ஆயிற்று என்றும். இரு நம்பிகளிடமே அவர் அர்த்த₂ க்₃ரஹணம் செய்தார் என்றும் முரணில்லாமல் நிர்வஹிக்கலாம்.

(3) ஸ்ரீதே₃ஶிகன் பெரியநம்பிகளின் சிஷ்யராக அணியரங்கத் தமுதனுர் என்று ஒருவரைக் குறிப்பிடுகிருர். பெரியதிருமுடியடை வில் திருவரங்கத்தமுதனுரின் தந்தையாகக் குறிக்கப்பட்ட அணிய ரங்கத்தமுதனுரே இவர். ஆகையால் ''கூரத்தாழ்வான் சரண் கூடியபின்'' என்று திருவரங்கத்தமுதனுர் தம்மைக் கூரத்தாழ்வா னுடைய சிஷ்யராகக் குறிப்பிட்டுக்கொண்டிருப்பதோடு முரணில்லை.

(4) திருவாய்மொழி ஈட்டில் '' **கங்குலும் பகலும்** '' [7-2] ப்ரவேஶத்தில் கூரத்தாழ்வான் பட்டருக்கு விவாஹம் நடக்கும் வரையில் எழுந்தருளியிருந்ததாக இருக்கையால், ஆசார்யர்கள் வைப₄வம் பக்கம் 295ல் கூரத்தாழ்வான் பரமபதித்₃த வருஷமாக 1127 (கி.பி.) ஐக்காட்டியிருப்பது சரியல்ல; அந்த வருஷத்தை கி.பி. 1135 (பட்டருக்கு வயஸ்ஸு 13) வரையிலாவது நீட்டியாகவேண்டும். இதற்கு அநுகு₃ணமாக கூரத்தாழ்வான், பட்டர் அவதார வருஷங் களிலும் சிறிது மாறுதல்கள் செய்யவேண்டியிருக்கலாம். இத்தகைய விஷயங்களில் ஆராய்ச்சியில் வல்லாரிடமிருந்து தக்க ஆதாரங்களோடு கட்டுரைகளை வரவேற்கிருேம்.

# விஷயஸூசிகை

## முதல்பகுதி—ஆழ்வார்கள் வைபவம்



## இரண்டாம் பகுதி—ஆசார்யர்கள் வைபவம்

மூன்றும் பகுதி—கட்டுரைகள்

## நாலாம் பகுதி—அநுபந்தம்

ஸ்ரீ:

ஆழ்வாராசார்யர்களின் அருளிச்செயல்களுக்கு

எளிய தமிழ் விரிவுரைகளுடன்

வெளிவரும் சிறந்த

ஸ்ரீவைஷ்ணவ மாதப்பத்திரிகை

# ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்

வேதம், ஸ்ம்ருதிகள், இதிஹாஸங்கள் முதலியவற்றிலிருந்து ஸ்ரீமந் நாராயணனின் பெருமையை விளக்கும் விஷ்ணுசித்தவிஜயம் என்னும் சிறந்த க்ரந்தமும், தமிழில் கீ3தா வ்யாக்யானமும், திருமாலை, நாச்சியார் திருமொழி முதலான தி3வ்யப்ரப3ந்தங்களுக்கு எளிய விவரணங்களோடு கூடிய பூர்வாசார்ய வ்யாக்2யானங்களும், விவரணத்தோடு கூடிய வார்த்தாமாலையும், ப்3ரஹ்மஸூத்ர வ்யாக்2யானமான விவரண ஸஹித சாரீரககாரிகாவளியும், கேள்வி-பதில்களும் இந்த மலர் போன்ற மற்றும் பல விஷயங்களும் வெளிவருகின்றன.

ஆசிரியர் :-

**ஸ்ரீ S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்,**

அட்வகேட்,

3, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-620017.

வருடச் சந்தா ரூ. 10-00.

ஸர்வஜித் மார்கழி 28-உ (12—1—1948) முதல்

தொடர்ந்து வெளிவருகிறது.

# பெரியாழ்வார் வைபவம்



ஸ்ரீவில்லிபுத்தூர்–பெரியாழ்வார்

**மிது₂நே ஸ்வாதிஜம் விஷ்ணோ ரத₂ாம்ஶம் த₄ந்விந: புரே ।**
**ப்ரபத்₃யே ஶ்வஶுரம் விஷ்ணோ: விஷ்ணுசித்தம் புரஶ்ஶிக₂ம் ॥**

[ஆனிமாதம் ஸ்வாதீ நக்ஷத்திரத்தில், ஸ்ரீவில்லிபுத்தூரில், விஷ்ணுவின் வாஹனமான க₃ருட₃னின் அம்ஶமாய், பூர்வஶிக₂ ஸ்ரீ வைஷ்ணவ ப்₃ராஹ்மண குலத்தில் அவதரித்தவராய், ரங்க₃நாத₂னுக்கு மாமனரான விஷ்ணுசித்தரென்னும் பெரியாழ்வாரை ஶரணடைகிறேன்.]

தாத3ாத்விக ப்ரதிப2லத்3ப4க3வத்பரத்வம்
விஸ்தீர்ய பாண்ட்3யகத2கேந்த்3ரஜயீ க3ஜேந ।
க3ச்ச2ந் ப்ரியாது3பக3தே க3ருடே3ந நாதே2
ப்ரேம்ணாऽऽஶிஷம் ரசயதிஸ்ம நமோऽஸ்து தஸ்மை ॥

[அப்போதே (பரமபுருஷனுடைய நிர்ஹேதுககிருபையால்) நெஞ்சில் தோன்றிய ஸ்ரீமந்நாராயணனுடைய பரத்துவத்தை விரியவுரைத்து வாத3ம் செய்து, பாண்டிய தே3ஶத்தில் கூடிய வாதம் வல்லவர்களை வெற்றிகொண்டவராய், யானைமேலேறி ஊர்வலம் வந்த எந்தப் பெரியாழ்வார். (அப்போது) உகந்து க3ருட3ன் மேலேறி ஸேவை ஸாதித்த ஸ்ரீமந்நாராயணன் விஷயத்தில் பொங்கும் பரிவாலே பல்லாண்டு பாடினரோ, அவருக்கு நமஸ்காரம்.]

தத்வாப்3த3ாபக3மே கலௌ யுக3வரே ஸம்வத்ஸரே க்ரோத4நே
சண்ட3ாம்ஶௌ மிது2நங்க3தேऽஹ்நி நவமே பக்ஷே வளக்ஷேऽபி ச ।
ஸ்வாத்யாம் பா4ஸ்கரவாஸரே ஶுப4தித2ாவேகாத3ஶீநாமநி
ஸ்ரீமாநாவிரபூ4த3சிந்த்யமஹிமா ஸ்ரீவிஷ்ணுசித்தோऽநக4: ॥

[(பொங்கும் பரிவாகிற) செல்வத்தையுடையவராய், எவராலும் அளவிடமுடியாத பெருமையையுடையவராய், குற்றமற்றவரான பெரியாழ்வார் யுக3ங்களினுள் (அல்பஶ்ரமத்திற்கு அதி4க ப2லனைத்தரும்) சிறப்புடைய கலியுக3த்தில் 'தத்வ' என்னும் எழுத்துக்களினால் (கடபயாதி3 ஸங்க்2யைப்படி) ஏற்படும் 46 வருடங்கள் கடந்தபின், 'க்ரோத4ந' என்கிற வருடத்தில், சூரியன் மிதுனராசியை அடையும் ஆனிமாதத்தில் ஒன்பதாம் தேதியில் சுக்லபக்ஷ ஏகாத3ஶியில் ஞாயிற்றுக்கிழமையில் ஸ்வாதீநக்ஷத்திரத்தில் அவதரித்தருளினர்.]

ஜ்யேஷ்டே2ऽத2 மாஸே பவமாநதாரே
ஶ்ரேஷ்டே2ா கு3ணேநாஜநி ப4ட்டநாத2: ।
தத்ர த்ரயீரூபக3ருத்மத3ாத்மா
கடாக்ஷலக்ஷ்யம் கமலாபதேர்ய: ॥
[தி3வ்யஸூரிசரிதம் 5-33]

[தி3வ்யாத்மகு3ணங்களினால் சிறந்தவராய், வேத3ஸ்வரூபனான க3ருட3ாழ்வானின் அம்ஶமாயிருப்பவராய், ஶ்ரிய:பதியினுடைய கடாக்ஷத்திற்கு இலக்காயிருப்பவரான பட்டர்பிரான் என்னும் பெரியாழ்வார். ஆனிமாதத்தில் வாயுவை தே3வதையாகக் கொண்ட ஸ்வாதீ நக்ஷத்திரத்தில் அவதரித்தருளினர்.]

முற்கூறிய தனியன்களிலும், வைப⁴வ ஶ்லோகங்களிலும் முன்னோர்கள் அநுஸந்தி⁴த்த ரீதியில், கலிபிறந்து நாற்பத்தேழாவதான குரோத⁴ந வருடத்தில் ஆனி மாதம் ஶுக்லபக்ஷம் ஏகாதசியில், ஸ்வாதீ நக்ஷத்திரத்தோடு கூடிய ஞாயிற்றுக்கிழமையன்று. ஸ்ரீவில்லிபுத்தூரிலே பூர்வஶிக₂ ஸ்ரீவைஷ்ணவ குலதிலகராய், வேயர்குலத்தவராய், வேதப்பொருள் வல்லவரான முகுந்த₃ ப₄ட்டருக்கும் பத்₃மா என்னும் பதிவ்ரதாஶிரோமணிக்கும் ஐந்தாவது புத்திரராக வேத₃ஸ்வரூபனை க₃ருட₃னின் அம்ஶமாக அவதரித்தவர் இவ்வாழ்வார். வடமொழியிலுள்ள ஸ்ரீவில்லிபுத்தூர் ஸ்த₂லபுராணத்திலும், மணிப்ரவாள நடையிலுள்ள கு₃ருபரம்பராப்ரப₄ாவங்களிலும் இவருடைய வைப₄வம் விரிவாக விவரிக்கப்பட்டுள்ளது. பல நூல்களை ஆராய்ந்து "பெரியாழ்வார் ப்ரப₄ாவம்" என்னும் விரிவான நூலிலே இவர் வைப₄வம் ஸுத₃ர்ஶந ஸ்த₂ாபகரான எந்தையாரால் மிக விரிவாக விளக்கப்பட்டுள்ளது. இவற்றையடியொற்றிச் சுருக்கமாகப் பெரியாழ்வார் வைப₄வத்தைக் காட்டுவோம் இங்கு.

இவருக்கு உரிய காலத்தில் ஜாதகர்மம் செய்து 'விஷ்ணுசித்தர்' என்னும் திருநாமமிட்டு, சௌளம், உபநயனம் முதலான அந்தணர்க்குரிய ஸம்ஸ்காரங்கள் அனைத்தையும் உரிய காலத்தில் செய்வித்து, வேத₃ங்களையும் பயில்வித்தார் முகுந்த பட்டர். உரிய காலத்தில் தக்க கன்னிகையைப் பாணிக்₃ரஹணமும் செய்வித்து க்₃ருஹஸ்த₂ த₄ர்மத்திலும் நிலைநிறுத்தினார். விஷ்ணுசித்தரும் வடபெருங்கோயிலுடையானுடைய நிர்ஹேதுக கடாக்ஷத்தினாலே அப்பெருமானுக்குக் கைங்கர்யம் செய்வதில் ஊற்றம் உடையவரானார். 'கைங்கர்யங்களிலே அவனுக்கு மிகவும் உகப்பானது எது?' என்று ஆராய்ந்து பார்த்தபோது, கிருஷ்ணாவதாரத்திலே கம்ஸனுக்கு மாலைகட்டி அளித்துவந்த ஸ்ரீமாலாகாரர் திருமாளிகையைத் தேடிச்சென்று மாலைகளை அவரிடம் யாசித்துப் பெற்றதைக்கண்டு, "மாலா கைங்கர்யமே இவன் மிகவும் உகந்த கைங்கர்யம்" என்று அறுதியிட்டுப் பெரியதொரு திருநந்தவனம் அமைத்து, வடபெருங்கோயிலுடையானுக்குத் திருமாலை கட்டிச் சாற்றிக் கொண்டு வந்தார்.

அக்காலத்தில் பாண்டிய குலதிலகனை 'ஸ்ரீவல்லப₄தே₃வன்' என்னும் அரசன் அறம்வழுவாமலும், எளியோரை வலியோர் வாட்டாதபடியும், கூடல் என்னும் மதுரை மாநகரைத் தலைநகராகக்கொண்டு பாண்டிய நாட்டை ஆண்டுவந்தான். அவன்

ஒருநாள் இரவு நகரஸோதனை செய்து வரும்போது, ஒரு வீட்டுத் திண்ணையின்மேல் உறங்கும் அந்தணன் ஒருவனைக் கண்டு எழுப்பி, "நீ யார்?" என்று கேட்டான். அதற்கு அவ் வந்தணன் 'நான் திவ்யதேஸயாத்திரை செய்துகொண்டு வட நாடெல்லாம் சுற்றி, கங்கை நீராடிவருபவன்' என்று பதில் கூறினன். அதுகேட்ட அரசன் 'உனக்குத் தெரிந்த நல்ல ஸ்லோகம் ஒன்றைச் சொல்' என்று நியமிக்க அந்தணனும்,

"வர்ஷார்த்தமஷ்டௌ ப்ரயதேத மாஸாந்
நிஸார்த்தமர்த்தம் திவஸம் யதேத।
வார்த்தக்யஹேதோர் வயஸா நவேந
பரத்ர ஹேதோரிஹ ஜந்மநா ச ॥"

[மழைகாலமாகிய ஆடி, ஆவணி, புரட்டாசி, ஐப்பசி என்னும் நான்கு மாதங்களிலும் இன்புற்று வாழ்வதற்காக மற்ற எட்டு மாதங்களிலும் முயலக்கடவன். இரவில் இன்புறுவதற்காகப் பகற்போதில் பாடுபடக்கடவன்; கிழவனும்போது சிரமமில் லாமல் வாழ்வதற்காக வாலிபப்பருவத்தில் பாடுபடக்கடவன்; மறுமையில் இன்புறுவதற்காக இப்பிறப்பில் முயலக்கடவன்.] என்ற ஸ்லோகத்தைச் சொன்னன். அரசனும் அன்றிரவு அந்த ஸ்லோகத்தின் பொருளைச் சிந்தித்துக்கொண்டே கண்ணுறங்கி னன். விடிந்தவுடன் "இந்த ஸ்லோகத்தின் முதல் மூன்று பாதங்களிலும் சொல்லப்பட்ட குறைகள் நமக்கு இல்லாமை யாலே, அவைபற்றி நாம் செய்யவேண்டிய முயற்சி எதுவும் இல்லை. நாலாவது பாதத்தில் சொல்லப்பட்ட மறுமை இன் பத்தைக்குறித்து இதுவரை எந்த முயற்சியும் செய்யாமல் இருந்துவிட்டோமே" என்று கவலையுற்றான். தனது புரோஹித ரும், ஸாஸ்திரங்களைக் கரைகண்டவருமான செல்வநம்பியைப் பார்த்து 'மறுமையில் பேரின்பம் பெறுவதற்கு என்ன வழி?' என்று கேட்டான். செல்வநம்பியும் "நாமாக ஒரு அர்த்தத் தைச் சொன்னல் இவனுக்கு உறுதியான நம்பிக்கை பிறக்காது" என்று கருதி "நாடெங்கும் பறை அறைவித்து வித்வான்களைத் திரட்டி வேதாந்தங்களைக்கொண்டு பரம்பொருளைப்பற்றி ஒரு நிர்ணயம் செய்வித்து, அவ்வழியாலே பேறுபெறவேணும்" என்று உபதேஸித்தார். அரசனும் அதற்கு இசைந்து பெரும் தநத்தை ஒரு வஸ்திரத்திலே முடிந்து, அப்பொற்கிழியை ஸபா மண்டபத்தின் முன்னிலையில் கல்தோரணத்திலே கட்டச் செய்து வித்வான்களைத் திரட்டுவதற்காக "பரதத்வ நிர்ணயம் செய்கின்றவர் இப்பொற்கிழியைப் பரிசாகப் பெறலாம்" என்று நாடெங்கும் பறை அறிவிக்கச் செய்தான்.

அப்போது வடபெருங்கோயிலுடையான் இவ்வாழ்வாரைக் கொண்டு வேத₃ாந்த விழுப்பொருளின் மேலிருந்த விளக்கை வெளிப்படுத்தி உலகை உய்விப்பதற்காக இவருடைய கனவில் எழுந்தருளி "நீர் போய்க் கிழியை அறுத்துக்கொண்டு வாரும்" என்று அருளிச்செய்ய, "அது எல்லா சாஸ்திரங்களும் கற்றறிந்த பண்டிதர்கள் செய்யவேண்டியதன்றோ, ஶாஸ்த்ராப்₄யாஸம் பண்ணுமல் நந்தவந கைங்கர்யத்திலே ஈடுபட்டிருக்கும் நான், களைக்கொட்டைப் பிடித்துப் பிடித்து என் கைகளில் ஏற்பட்டிருக்கும் கொட்டுத் தழும்பைக் காட்டிக் கிழியை அறுக்க முடியுமோ" என்று ஆழ்வார் பதில் கூற, "அதைப்பற்றி உமக்கு ஏன் கவலை? உம்மைக்கொண்டு பரதத்வநிர்ணயம் செய்து வைக்கப்போவது நாமன்றோ; நீர் அவஶ்யம் செய்ய வேண்டும்" என்று நிர்ப₃ந்தி₄த்தருளினன் எம்பெருமான். விஷ்ணுசித்தரும் விடியற்காலையில் எழுந்திருந்து இந்தக் கனவைப் பற்றி வியப்புடன் சிந்தித்துக்கொண்டிருக்கையில், வடபெருங்கோயிலுடையானுடைய கைங்கர்யபரர்கள் எம்பெருமானுலே நியமிக்கப்பெற்று, ஆழ்வார் எழுந்தருளுவதற்காகத் திருப்பல்லக்கும், திருச்சின்னம் முதலான கோயில் பரிச்ச₂த₃ங்களும் கொண்டுவந்து, தங்களுக்கும் ஆழ்வாரைக் கூடல் மாநகருக்கு எழுந்தருளப் பண்ணிக்கொண்டு போகும்படி எம்பெருமான் நியமித்திருப்பதைக் கூறினர்கள். ஆழ்வாரும் இசைந்து கோயில் பரிஜன பரிச்ச₂த₃ங்கள் புடைசூழப் பாண்டிய ஸபை₄க்கு எழுந்தருளினர். ஏற்கனவே செல்வநம்பியின்மூலம் இவருடைய பெருமையைக் கேள்விப்பட்டிருந்த வல்லப₄தே₃வன் இவருடைய தேஜஸ்ஸைக்கண்டு பெருவியப்படைந்தவனாய், செல்வநம்பியோடு கூடச்சென்று இவரை எதிர்கொண்டழைத்துத் திருவடியில் விழுந்து "பட்டர்பிரான் வந்தார்" என்று இவரைக்கொண்டாடினன். அங்கு ஏற்கனவே குழுமியிருந்த பற்பல மதங்களைச் சேர்ந்த வித்வான்கள் "எல்லா வேத₃ஶாஸ்த்ரங்களையும் பயின்று தேர்ந்த எங்கள் முன்னிலையில் ஒரு ஶாஸ்த்ரமும் பயிலாத இவரைக் கொண்டாடுவது தகாது" என்று ஆக்ஷேபித்தனர். அதுகண்ட செல்வநம்பி "வேத₃ாந்தவிழுப்பொருளான பரதத்வத்தை நிஶ்சயித்து அருளிச்செய்யவேணும்" என்று விஷ்ணுசித்தரைப் பிரார்த்தி₂த்தார்.

விஷ்ணுசித்தரும்—ப்₃ரஹ்மாவின் அருளாலே ராமாயணம் முழுவதையும் காணப்பெற்ற வால்மீகி ப₄க₃வானைப் போலவும், ஶங்க₂த்தின் நுனியால் ஸ்பர்ஶிக்கப்பெற்ற துருவன் கடல்மடை

திறந்ததுபோலே எம்பெருமானைத் துதிக்கலுற்றாற்போலவும், ஆக்ஷேபித்த இவ்வுலகப் பண்டிதர்களும், தேவலோகத்தி லிருந்து பண்டிதவுருவில் வந்திருந்த ப்ருஹஸ்பதியுங்கூட வாயடங்கும்படி, "ப்ராஹ வேதாநசேஷாந்" "வேண்டிய வேதங்களோதி" என்று தனியன்களில் அநுஸந்திக்கப்பட்ட படியே, தாம் குருமுகமாக ஓதிய வேதவாக்யங்களை மாத்திர மல்லாமல், குருமுகமாக ஓதாதவையாய், தேவலோகம் முதலான உலகங்களில் நடையாடுபவையான அநந்த வேத வாக்கியங்களையும் 'சார்ங்கம் உதைத்த சரமழைபோலே' பொழிந்து பரதத்வநிர்ணயம் செய்து, எல்லா வித்வான்களை யும் வெற்றிகொண்டார். அவர் வெற்றிகொண்ட முறை— பல்லாயிரக்கணக்கான பக்கங்கள்கொண்ட "விஷ்ணுசித்த விஜயம்" என்னும் க்ரந்தத்திலே எந்தையாராலும் நம்மாலும் இன்றுள்ள ப்ரதிபக்ஷிகள் வாய்திறக்கவொண்ணாதபடி ஓரள வுக்குப் பின்பற்றப்பட்டுள்ளது. இதுகொண்டு பெரியாழ்வார் அன்று நிலைநாட்டிய விஷ்ணுபரத்வம் இன்றுவரை அசைக்க முடியாததாய் விளங்குவதை அனைவரும் உணரலாம். நிற்க;

பல்லாயிரக்கணக்கான வேதவாக்கியங்களைக்கொண்டும், ஸ்ம்ருதி இதிஹாஸம் புராணம் முதலான ப்ரமாணங்களைக் கொண்டும் எதிரிட்ட வித்வான்கள் தாங்களே இசைந்து தீர வேண்டும்படி, பெரியாழ்வார் 'ஸ்ரீமந்நாராயணனே பரம்பொருள்' என்று நிர்ணயித்தவுடன் வித்யாசுல்கமாக (வெற்றிகொள்ப வருக்குப் பரிசாக) கல்தோரணத்தில் கட்டப்பட்டிருந்த பொற் கிழி, 'இவருடைய வெற்றி பரம்பொருளாலும் இசையப் பெற்றது' என்று விளங்கும்படி இவர் முன்னே தானே தாழவளைந்து வந்தது. ஆழ்வாரும் எம்பெருமானுடைய கருணையைக்கண்டு உகந்து "விரைந்து கிழியறுத்தான்" என்று தனியனில் அநுஸந்திக்கப்பட்டபடியே அந்தப் பொற்கிழியை அறுத்துக்கொண்டருளினார்.

இதைக்கண்ட வித்வான்களும் அரசனும் மற்றவர்களும் பெருவியப்புற்று இவர் திருவடிகளில் பணிந்து வணங்கினர். ஸ்ரீவல்லபதேவன் ஆழ்வாரைத் தன் பட்டத்து யானைமேலேற்றி "வேதப்பயன்கொள்ளவல்ல விட்டுசித்தர் வந்தார்" "மெய்ந் நாவன் வந்தார்" 'மெய்யடியார் வந்தார்" முதலான விருதுகளை ஊதித் திருச்சின்னம்பணிமாற, தானே முன்னின்று விஷ்ணு சித்தரை நகர்வலம் வரச்செய்தான். வித்வான்கள் அனைவரும் தங்களுக்கு விஷ்ணுசித்தரே தலைவர் என்பது தோற்றப்

'பட்டர்பிரான்' என்று அவருக்குத் திருநாமம் சாத்திக் கொண்டாடிக் குடை, கொடி, சாமரம் திருஆலவட்டம் (விசிறி) முதலானவற்றைத் தாங்களே பணிமாறிக்கொண்டு உடன் வந்தனர். இப்படி ஆழ்வார் நகர்வலம் வருகையில், தனயனின் சிறப்பைக் காணவந்த தந்தைபோலே க₃ருடா₃ரூட₄ராய், ஶங்க₂ சக்ரத₄ரனாய், ஸ்ரீ பூ₄மி ஸமேதனாய், வேதாந்த விழுப்பொருளின் மேலிருந்த விளக்கான ஸ்ரீமந்நாராயணன், பிரமன் சிவன் முதலான எல்லா தே₃வதைகளும் துதித்துநிற்க, பூ₄மியிலுள்ள அனைவரும் காணும்படி ஆகாயத்திலே தோன்றினான். எம்பெருமானுடைய நிர்ஹேதுக க்ருபையாலே மயர்வற மதிநலம் அருளப்பெற்ற ஆழ்வாரும் "காலாதீதமான ஸ்ரீவைகுண்ட₂த்திலே எழுந்தருளியிருக்கும் இவ்வஸ்து, காலாதீ₄நமான இவ்விருள்தருமாஞாலத்திலே கல்யாணகு₃ணங்களுடன் கூடிய ரூபத்துடன், கொள்ளிக் கண்ணர்களும் காணும்படி வந்திருப்பதால் அதற்கு என்ன தீங்கு வருமோ?" என்று வயிறு பிடித்து, மேன்மேலே ப₄யத்தைப் பெருக்கிக்கொண்டு "பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு, பலகோடி நூறாயிரம்" என்று தொடங்கி, பட்டத்துயானையின்மேலிட்டிருந்த இரு மணிகளையே தாளமாகக்கொண்டு திருப்பல்லாண்டு பாடத்தொடங்கினார். இவருடைய ப₄யம் நீங்குவதற்காக எம்பெருமான் தன்னுடைய மல்லாண்ட திண்டோள், வடிவழகு, அஸுரராக்கரைக் கொன்ற திருவடிகள், மங்களங்களுக்கெல்லாம் காரணமான பெரியபிராட்டியார், ஶங்க₂சக்ரங்கள் முதலானவை தன்னிடம் இருப்பதைக் காட்ட, அவையே இவருக்கு மேன்மேலும் ப₄யத்தை விளைக்கையாலே, அவற்றுக்கும் சேர்த்து முதலிரண்டு பாசுரங்களில் மங்களாஶாஸனம் செய்தார். இப்படித் தாம் ஒருவராகப் பல்லாண்டு பாடியதில் திருப்திகொள்ளாமல், தம்மைப்போன்ற அநந்யப்ரயோஜனர்களைச்சேர்த்துக்கொண்டும், ஐஶ்வர்ய கைவல்யார்த்தி₂களைத் திருத்திச் சேர்த்துக்கொண்டும் எம்பெருமானுக்குப் பல்லாண்டு பாடியபடியை மேல் ஒன்பது பாசுரங்களாலே காட்டிப் பரமபத₃த்திலும் பல்லாண்டு பாடுவதே பரமப₂லமாகும் என்று பயன்சொல்லி, "திருப்பல்லாண்டு" என்னும் தி₃வ்யப்ரப₃ந்த₄த்தைத் தலைக்கட்டினார். இவருடைய பொங்கும் பரிவைக்கண்ட எம்பெருமானும் இவருக்குப் "பெரியாழ்வார்" என்னும் பட்டம் சூட்டி மறைந்தருளினான்.

அதற்குப்பின் ஆழ்வார் "எம்பெருமானுக்கு மங்களாஶாஸனம் செய்துகொண்டு, அவனுக்காகவும் அவன் அடியார்

களுக்காகவும் வாழ்க்கை நடத்துவதே, அவனருளாலே மறுமையில் பேறு பெறுவதற்குத் தலைசிறந்த வழியாகும்'' என்னும் திருப்பல்லாண்டின் ஸாரார்த்தத்தை வல்லபதேவனுக்கு உபதேசித்து அவனைத் திருத்திப் பணிகொண்டு ஸ்ரீவில்லிபுத்தூருக்கு எழுந்தருளி, பொற்கிழியிலுள்ள பெரும் தனத்தைக்கொண்டு, வடபெருங்கோயிலுடையானுக்கு அரிய பெரிய திருப்பணிகளைச் செய்வித்துத் தான் ஏற்கனவே செய்துவந்த திருநந்தவன கைங்கர்யத்தைத் தொடர்ந்து செய்பவராய், தினந்தோறும் வடபெருங்கோயிலுடையானுக்குத் திருமாலை கட்டி ஸமர்ப்பித்து வந்தார். அப்போது தாம் மிகவும் ஈடுபட்ட கிருஷ்ணாவதாரத்தை, அவதாரம் தொடங்கி, பால்யலீலைகளை ஒன்றும் விடாமலும், மற்ற ஆனைத்தொழில்களையும், விஸ்தாரமாக அநுபவிக்கும் பெரியாழ்வார் திருமொழியையும் அநுக்ரஹித்தார். இப்படிக் கிருஷ்ண குணசேஷ்டிதங்களை யசோதாபாவனையிலே ஒன்றுவிடாமல் அநுபவிக்கையாலே ''போகத்தில் வழுவாத புதுவையர்கோன்'' என்று பெற்றெடுத்த பெண்பிள்ளையான ஆண்டாளாலும் புகழப்பெற்றார். திருப்பல்லாண்டுக்குப் பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்த வ்யாக்யானத்தின் மூலமாகவும் - பெரியாழ்வார் திருமொழிக்குப் பெரியவாச்சான்பிள்ளையும், அவருடைய வ்யாக்யானத்தில் லோபம் அடைந்த முதல்நாலு பத்து (நானூறு) பாசுரங்களுக்கு மணவாளமாமுனிகளும் அருளிச்செய்த வ்யாக்யானங்களின் மூலமாகவும், மாமுனிகளின் ஆசாரியரான திருவாய்மொழிப்பிள்ளை பெரியாழ்வார் திருமொழிக்கு அருளிச்செய்த ஸ்வாபதேச வ்யாக்யானத்தின் மூலமாகவும் பெரியாழ்வார் உலகுய்ய அருளிச்செய்த இப்பிரபந்தங்களின் பொருளை நாம் உணரலாம்.

இப்படிப் பிரபந்தங்களால் உலகுக்கு உபகரித்ததோடு நில்லாமல், ''ஒருமகள்தன்னையுடையேன்'' என்று தாமே அருளிச்செய்த ரீதியில் ஆண்டாளை வளர்த்து, அவள் திருப்பாவை நாச்சியார் திருமொழிகளை உலகுய்யப் பாடுவதற்கும் காரணமாயிருந்து, அவளை அரங்கனுக்கே அர்ப்பணித்த பெருமையை ஆண்டாள் வைபவத்திலே காணலாம். இப்படிப் பல மஹோபகாரங்களைச் செய்த ஆழ்வார் தாம் மிகவும் ஈடுபட்ட திருமாலிருஞ்சோலையிலேயே சரமகாலத்தில் வாழ்ந்து, அங்கேயே திருநாட்டுக்கு எழுந்தருளினார்.

**பெரியாழ்வார் வைபவம் நிறைவுற்றது.**

**பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.**

# ஆண்டாள் வைபவம்



ஸ்ரீவில்லிபுத்தூர்—ஆண்டாள்

**கர்க்கடே பூர்வப$_2$ல்கு$_3$ந்யாம் துளஸீகாநநோத்$_3$ப$_4$வாம் ।**
**பாண்ட்$_3$யே விஶ்வம்ப$_4$ராம் கோ$_3$தா$_3$ம் வந்தே$_3$ ஸ்ரீரங்க$_3$நாயகீம் ॥**

[பாண்டிய தேசத்தில் ஸ்ரீவில்லிபுத்தூரில் பெரியாழ்வாருடைய துளஸித் தோட்டத்தில் தோன்றியவளாய், பூ$_4$மிதே$_3$வியின் அவதாரமாகத் திருவாடிப்பூரத்தில் அவதரித்தவளாய், ஸ்ரீரங்க நாதனின் பத்னியானவளான கோதை எனப்படும் ஆண்டாளை வணங்குகிறேன்.]

தே₃வஸ்ய மஹிஷீம் தி₃வ்யாம் ஆதௌ₃ கோ₃தா₃முபாஸ்மஹே ।
யந்மௌலிமாலிகாம் ப்ரீத்யா ஸ்வீகரோதி ஸ்வயம் ப்ரபு₄: ॥

[எவள் சூடிக்களைந்த மாலையை ஸர்வேச்வரனே உகப்புடன் ஏற்றுக்கொள்கிறானோ, விஷ்ணுவின் தி₃வ்யமஹிஷியான அத்தகைய கோதையை முதலிலே உபாஸிக்கிறோம்]

ஶுசிமாஸி பாண்ட்₃யபு₄வி பூர்வப₂ல்கு₃நீ-
க₄நபே₄ நவீநதுளஸீவநாந்தராத் ।
உதி₃தாமுதா₃ரகு₃ணரங்க₃நாயக-
ப்ரியவல்லப₄ாம் வஸுமதீமுபாஸ்மஹே ॥

[பாண்டியதேசத்தில் ஆடிமாதத்தில், பூரமென்னும் சிறந்த நக்ஷத்திரத்தில், புதிய துளஸித் தோட்டத்தின் நடுவினின்றும் அவதரித்தவளாய், க₃ம்பீ₄ரமான கு₃ணங்களையுடைய ரங்கநாதனுக்கு இனிய மனைவியாய், பூ₄மிப்பிராட்டியின் அம்சமான ஆண்டாளை உபாஸனை செய்யக்கடவோம்.]

ஸித்₃த₄ாநாம் ஶரதா₃ம் கலாவபக₃மே வர்ஷே நளாக்₂யே ரவௌ
யாதே கர்க்கடகம் வித₄ாவுபசிதே ஷஷ்டே₂ऽஹநி ஶ்ரீமதி ।
நக்ஷத்ரேऽர்யமதை₃வதே க்ஷிதிபு₄வோ வாரே சதுர்த்₂யாம் திதௌ₂
கோ₃தா₃ ப்ராது₃ரபூ₄த₃சிந்த்யமஹிமா ஶ்ரீவிஷ்ணுசித்தாத்மஜா ॥

[கலியுகத்தில், 'ஸித்₃த₄' என்னும் இரண்டு எழுத்துக்களால் (கடபயாதி₃ ஸங்க்₂யைப்படி) கிடைத்த தொண்ணூற்றேழு வருடங்கள் கழிந்தவளவில், நள வருஷத்தில் ஸூர்யன் கடக ராசியை அடைந்திருக்கும் ஆடி மாதத்தில், சந்திரன் வளரும் சுக்ல பக்ஷத்தில், ஆறுவது தேதியில், அர்யமாவை தே₃வதையாகக்கொண்ட அழகிய பூர நன்னாளில், செவ்வாய்க்கிழமையிலே சதுர்த்தி₂ திதியில், எண்ணமுடியாத பெருமையையுடைய ஸ்ரீவிஷ்ணுசித்தருடைய பெண்ணான கோ₃தா₃தே₃வி அவதரித்தருளினாள்.]

முற்கூறிய தனியன்களிலும் வைப₄வ ச்லோகங்களிலும் முன்னோர்கள் அநுஸந்தி₄த்த ரீதியில், கலிபிறந்து தொண்

ணூற்றேழு வருடங்களுக்குப் பிறகு தொண்ணூற்றெட்டாவ தான நள வருடத்தில், ஆடிமாதம் ஶுக்லபக்ஷம் சதுர்த்தி, செவ்வாய்க்கிழமை கூடிய பூரநக்ஷத்திரத்தில், பூமிப்பிராட்டி யாரின் அம்ஶாவதாரமாய், ஸ்ரீ வில்லிபுத்தூரில் பெரியாழ்வா ருடைய துளஸித்தோட்டத்தில் திருத்துழாய் மண்ணின் கீழே தோன்றினவள் ஆண்டாள் என்று குருபரம்பரை நூல்கள் கூறும். த்ரேதாயுகத்திலே விதேஹ தேசத்தில் மிதிலாநகரில் ஸ்ரீஜனகமஹாராஜன் யாகசாலை அமைப்பதற்காகக் கலப்பை கொண்டு பூமியை உழுகையில் ஸ்ரீ தேவியின் அவதாரமான ஸீதாதேவி தோன்றியதுபோல, கலியுகத்திலே பாண்டிய நாட்டில் ஸ்ரீவில்லிபுத்தூரில் பெரியாழ்வார் திருத்துழாய்ப்பாத்தி அமைப்பதற்காகக் களைக்கொட்டுக்கொண்டு திருநந்தவனத் தைக் கொத்துகையில் பூதேவியின் அம்ஶமாகத் திருத்துழாய் மண்ணின் கீழே இந்த கோதாதேவியும் அயோநிஜையாகத் தோன்றினள். பிள்ளைப்பேறற்ற பெரியாழ்வாரும், பரம தரித்ரன் பெருநிதி எடுத்ததுபோலே அக்குழந்தையை எடுத் துத் தமது தர்மபத்னியின் கையில் கொடுத்து, கோதை என்று திருநாமம்சாத்தி "ஒருமகள் தன்னையுடையேன் உலகம் நிறைந்த புகழால், திருமகள்போல வளர்த்தேன்" [பெரியாழ்-திரு 3-8-4] என்று தாமே அருளிச்செய்தபடி அக்குழந்தையை அருமை யாகச் சீராட்டிப் பாராட்டிப் பாலூட்டிப் பாலித்து வளர்த்து, அவளுக்குப் பஞ்சஸம்ஸ்காரங்களைச்செய்து பரம ஜ்ஞானத்தை யும் ஊட்டி வளர்த்தார்.

உலகெல்லாம் வியக்கும்படி இளமையிலேயே எம்பெருமா னிடத்திலே பக்திப் பெருங்காதல்கொண்டு, பிஞ்சாய்ப்பழுத் தவளாய், அவனையே மணம்செய்துகொள்ளக்கருதி, அப்பெருமா னது பெருமைகளையே எப்பொழுதும் நினைத்தல் துதித்தல் முதலியன செய்துநின்றுள் அச்சுரும்பார் குழற்கோதை. தினந் தோறும் விஷ்ணுசித்தர் வடபெருங் கோயிலுடையானுக்குச் சாத்துவதற்காகக் கட்டிவைத்த திருமாலையை, அவரில்லாத ஸமயம்பார்த்து எடுத்து, தன்குழலிலே தரித்துக்கொண்டு, சிறந்த ஆடையாபரணங்களையும் அணிந்துகொண்டு "அப்பெருமானுக்கு நான் பொருந்தியிருக்கிறேனோ? இல்லை யோ?" என்று தன் அழகைக் கண்ணாடியிலே கண்டு

பெரியாழ்வார் வருவதற்கு முன்பே மலர்மாலையைக் களைந்து முன்போலவே பூக்கூடையில் நலங்காமல் வைத்து வந்தாள். தமக்குத் தெரியாமல் நடக்கிற அதை உணராமல், ஆழ்வார் அம்மாலையைக் கொண்டுபோய்ப் பெருமாளுக்குச் சாத்திவர, பெருமாளும் உகப்புடன் சாத்திக்கொண்டிருந்தார். இப்படிப் பல நாள்கள் கழிந்தபின், ஒருநாள் வெளியிற்சென்ற ஆழ்வார் விரைவில் மீண்டு வந்தபோது கோதை பூமாலை சூடியிருப்பதைப் பார்த்துக் கோபம் கொண்டு "பெண்ணே! நீ செய்த இக்காரியம் எம்பெருமானுக்கு அபசாரமாகும். இனி இப்படிச் செய்வதற்கு நினைவும் கொள்ளாதே" என்று நங்கைக்கு நற்புத்தி சொல்லிவிட்டு, அன்று பெருமாளுக்கு மாலை சாத்தாமல், அக்கைங்கர்யத்திற்கு இடையூறு நேர்ந்ததற்கு மிகவும் மனம் வருந்தியிருந்தார். அன்றிரவு வடபெருங்கோயிலுடையான் ஆழ்வாருடைய கனவிலேதோன்றி "இன்று நீர் நமக்கு மாலை கொண்டு வராதது ஏன்?" என்று கேட்க, அவர் தம் திருமகளாருடைய தவறான காரியத்தை விண்ணப்பிக்க, அதுகேட்டு அப்பெருமான் "அவள் சூடிக்கொடுத்த மாலையேகாணும் நறுமணம்மிக்கு, நமக்கு மிக உகப்பாயிருப்பது! ஆகையால் இனி நாள்தோறும் அவள் சூடிக்களைந்த மாலையையே நமக்குக் கொண்டு வருவீர்' என்று அருளிச் செய்தான். உடனே கண்விழித்த பெரியாழ்வார் தாம் பெற்றெடுத்த பெண்பிள்ளை எம்பெருமானுடைய தே₃விகளில் ஒருத்தியின் அவதாரமே என்று அறுதியிட்டு, அவளுக்கு அது காரணமாக "ஆண்டாள்" என்றும், எம்பெருமானுக்குரிய மலர்மாலையைத் தான் சூடிக்கொண்டு பார்த்துப் பின்பு அவனுக்குக்கொடுத்தது காரணமாக "சூடிக்கொடுத்த நாச்சியார்" என்றும் திருநாமம் இட்டு அழைத்துவந்தார்.

*பெரியாழ்வார்* பெற்றெடுத்த பெண்பிள்ளையாகிற *ஆண்டாளுடைய* ஜ்ஞான ப₄க்திகள் க்ஷணந்தோறும் ப₄க₃வத்₃ விஷயத்திலே கைவளர்ந்துவந்தன. ஒரு கொள் கொம்பிலே சேர்க்கவேண்டும் பருவத்தையடைந்தாள். "மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழகில்லேன்" என்னும்படியான உறுதியையுடையவளானாள். வடபெருங்கோயிலுடையானுடன்

தழுவி முழுசிப் பரிமாறவேணும் என்னும் ஆற்ருமை கரை புரண்டது. அப்பெருமானிடம் சென்றபோது அவன் முகங் கொடாதேயிருந்தான். 'ஐஶ்வர்யார்த்தி₂களுக்காகத் திருவுல களந்தருளின களைப்பாலே சாய்ந்து கிடக்கிருன்போலும்'' என்று நினைத்துத் தன் திருமுலைத்தடங்களாலே அப்பெருமானை நெருக்கிஞள். அவ்வளவிலும் பேசக்கண்டிலள். விசிறி முதலிய வைகளாலே ஶிஶிரோபசாரம்பண்ணியும் எழுந்திருக்கக் காண வில்லை. ''இது களைப்பல்ல; நம்மிடம் ப்ரணயாபராத₄த்திஞலே முகங்கொடாதே கிடக்கிருன்'' என்றறிந்து வருந்தி. ''இவனை அனுப₄வித்தாருண்டோ' என்று ஆராய்ந்தாள். ''திருவாய்ப் பாடியில் பெண் பிள்ளைகள் இவனை அனுப₄வித்தார்கள்; ஆனல் அது காலாந்தரத்திலேயாகையாலே நாம் அதுக்கு உதவப்பெற்றிலோம்'' என்று ஏங்கிஞள். ''இனி அவன் உலாவிப்போன அடிச்சுவடும், அவனும் பெண்களுமாய்த் திளைத்த யமுனையும், அவன் எடுத்த கோ₃ாவர்த்த₄னமும் கிடந்த தாகில் அவற்றைக் கண்டாகிலும் உயிர்வாழ்வோம்'' என்று பார்த்து, அவ்விடங்களுக்குப் போக ப₃லமில்லாமையாலே கலங்கிஞள். ''ஜனகராஜன் திருமகளைப்போலே 'வில்' என்று ஒரு அவதி₄பெற்றிலேன்; நப்பின்னைப்பிராட்டியைப்போலே 'ரிஷப₄ங்கள்' என்று ஒரு அவதி₄பெற்றிலேன்; என் செய் வேன்?'' என்று நிலைதடுமாறிஞள். அப்போது சில பெரியார் கள் ''ராஸக்ரீடை₃ செய்த பிறகு க்ருஷ்ணனைப் பிரிந்த இடைப்பெண்கள் தங்கள் ஆற்ருமையாலே க்ருஷ்ணஞகத் தங்களை பா₄வித்துக்கொண்டு உயிர்த₄ரித்தார்கள்; அம்மாதிரியே நீயும் அனுகரிப்பாயாக'' என்று உரைத்தனர். இவளும் ''க்ருஷ்ணனை அனுகரிப்பதைக் காட்டிலும் அவனை அனுகரித்த பெண்களை அனுகரிப்பது நல்லது'' என்று தீர்மானித்து, ஸ்ரீவில்லிபுத்தூரைத் திருவாய்ப்பாடியாகவும், அங்குள்ள பெண்களை இடைப்பெண்களாகவும், தன்னை அவர்களிலே ஒருத்தியாகவும், வடபெருங்கோயிலை ஸ்ரீ நந்த₃கோ₃பர் திரு மாளிகையாகவும், வடபெருங்கோயிலுடையானை க்ருஷ்ண ஞகவும் பா₄வித்து. இடைப்பெண்கள் நோற்ற நோன்பைத் தான் நோற்கிருள். பா₄வனாப்ரகர்ஷத்தாலே (நினைவின் முதிர்ச்சி யாலே) இவளுக்கு இடை நடையும், இடைமுடியும்,

இடைப்பேச்சும் முடைநாற்றமும் உண்டாயின. 'திருவாய்ப் பாடியில் மழைபொழியவேண்டும்' என்று நோன்பு நோற்கும் படி ஆயர்களால் நியமிக்கப்பெற்ற திருவாய்ப்பாடிப் பெண் கள் அதை வியாஜமாகக்கொண்டு கண்ணனைப் பெறுவதற்காக நோன்பு நோற்ற ப்ரகாரத்தை அநுகரித்து, பாதகங்கள் தீர்ப்பதாய், பரமனடி காட்டுவதாய், வேதம் அனைத்துக்கும் வித்தாவதான திருப்பாவையைப் பாடியருளினுள் ஆண்டாள்.

இவ்வநுகாரம் நாச்சியார் திருமொழியென்னும் இவளது மற்றொரு ப்ரப₃ந்த₄த்திலும் தொடர்ந்தது. திருப்பாவையில் 'நாராயணனே நமக்கே பறைதருவான்'' என்று முதற்பாட்டி லும், ''கறவைகள் பின்சென்று''(28) ''சிற்றம் சிறுகாலே''(29) என்னும் கடைசிப் பாசுரங்களிலும் எம்பெருமானே உபாயம் என்றும், அவன் உகப்புக்கான அடிமைசெய்வதே ப்ராப்ய மென்றும், தன் உறுதியை அறுதியிட்டபின்பும், தான் விரும்பியபடி எம்பெருமானைப் பெருமையாலே அவனைப் பெறவேணும் என்னும் மிகுந்த த்வரை ஏற்பட்டு, அதனுலே அறிவு கலங்கி, நாச்சியார்திருமொழி முதற்பதிகமான '' தை யொரு திங்க ''ளில் பிரிந்தாரைக் கூட்டும் இயல்புடைய காமதே₃வனை ''அனங்கதேவா ! வேங்கடவற்கென்னை விதிக் கிற்றியே'' என்று ஆஶ்ரயித்தாள். இது கண்டு பொருத எம்பெருமான் ஆனைக்கு வந்து உதவினுற்போலே விரைந்து வந்து முகம்காட்ட, ஊடலாலே தான் சிற்றில் இழைத்துக் கொண்டிருந்ததையும், அவன் ப₃லாத்காரமாக இவளைப் பற்றி மெய்ப்பிணக்கிட்டதையும் ( அணைத்ததையும் ) பேசினுள் இரண்டாம் திருமொழியான நாமமாயிரத்தில். இப்பதிகத்தில் ஏற்பட்ட ஸம்ஶ்லேஷம் தொடர்ந்து நடந்தால், ஆனந்த மிகுதி யினுலே அழிவை (உயிர் தரியாமையை) ஏற்படுத்திவிடும் என்று பயந்த உறவினர்கள் கண்ணனையும் ஆய்ச்சியரையும் பிரித்து நிலவறைகளிலே அடைக்க, அப்பிரிவாற்றுமையினுலே இவர் களுக்கு ப்ராணஹானி உண்டாகும் நிலை ஏற்பட, அது கண்ட உறவினர்கள் 'பெண்கள் நல்ல கணவனைப் பெறுவதற்குச் செய்யும் பனி நீராடுதல் என்னும் நோன்பைச் செய்வதற்காக இவர்களை வெளியில்விட, இவர்களும் கண்ணனைக் கூடியும்

பிரிந்தும் படுகிற வருத்தங்களைத் தவிர்ப்பதற்காக அவன் அறியாதபடி ஒரு பொய்கைக்குச் சென்று ஆடைகளைக் களைந்து கரையில் வைத்துவிட்டு விரஹதாபம் ஆறும்படி பொய்கையிலே குளித்திருந்ததையும், அவனும் இவர்கள் அறியாதபடி அங்கு வந்து இவர்களுடைய ஆடைகளை எடுத்துக்கொண்டு கரையில் இருந்த குருந்தில் ஏறி வீற்றிருந்ததையும், இவர்களும் குளித்துக் கரையேறிப் பார்த்தவுடன் ஆடையாபரணங்களைக் காணமல், இவனை மரத்தின் மேலே கண்டு, இவனை இரப்பார், ஏத்துவார், வாழ்த்துவார், சீறுவாராய்ப் பலவிதமாகக் கெஞ்சிக்கேட்க, அவனும் ஆடையாபரணங்களைக் கொடுத்து ஸம்ச்லேஷித்ததையும் பேசினுள் மூன்ரும் திருமொழியான கோழியழைப்பதில். ஸம்ச்லேஷமெல்லாம் விச்லேஷத்திலேயே முடியுமாகையாலே, இந்தக் கூடலும் பிரிவிலே முடிய, "மறுபடியும் ஒருகால் இவனைக் கூடவல்லோமோ?" என்று கூடல் இழைத்ததைப் பேசினுள் நாலாம் திருமொழியான தெள்ளியாரில். அசேதனமான கூடல் மறுமொழி கூருமையாலே சேதனமான குயிலைப்பார்த்து எம்பெருமான் வரும்படி கூவப் ப்ரார்த்திக்கிருள் ஐந்தாம் திருமொழியான மன்னுபெரும்புகழில்.

குயில் கூவியும் அவன் வாராமையாலே மிகவும் வருத்தமுற்ற இவளை உயிர்தரிக்கச் செய்வதற்காக, இவள் விரும்பியிருந்தபடிகளில் ஒன்றும் குறையாதபடி பாணிக்ரஹணம் ஈருகக் கனவிலே அவன் இவளை அநுபவிக்கச்செய்ய, அவ்வநுபவத்தைத் தோழிக்குச் சொல்லி தரித்திருந்தபடியைச் சொல்லுகிருள் ஆரும் திருமொழியான வாரணமாயிரத்தில். கனக் கண்டவுடன் அவனேடு ஏற்பட்ட ஸம்ச்லேஷம் நீடிக்கப் பெருமையாலே, அவனேடு எப்போதும் சேர்ந்திருக்கும் ஸ்ரீபாஞ்சஜன்யத்தை பகவதநுபவம் இருக்கும்படியைப் பலவாறு கேட்கிருள் ஏழாம் திருமொழியான "கருப்பூரம் நாறுமோ"வில். அவன் வருவதாகச் சொல்லிப்போன மழைகாலத்தில் அவன் வாராமையாலே, மேகங்களைத் திருவேங்கடமுடையானுக்குத் தூதாக விட்டமையைப் பேசினுள் எட்டாம் திருமொழியான விண்ணீலமேலாப்பில். மேகங்களும் தூது செல்லாமல், நின்றவிடத்திலே நின்று மழைபொழிய, அதனலே

மழைகாலத்தில் உண்டாகும் இந்திரகோபங்கள், முல்லைகள், காயா முதலிய மலர்கள், களங்கனி முதலான கனிகள், வண்டினங்கள், பூஞ்சுனைகள் முதலானவை உண்டாகி, எம்பெருமானுடைய திருமேனியையும் அவயவங்களையும் நினைவுபடுத்தித் தன்னை நலிவதைப் பேசினாள் ஒன்பதாம் திருமொழியான "சிந்துரச் செம்பொடி"யில். இப்படி இவற்றாலே நலிவுபட்டு "நமக்கு உயிர்தரிக்க வழி உண்டோ?" என்று ஆராய்ந்து, "மற்றவையெல்லாம் தப்பினாலும் பெரியாழ்வாரோடு நமக்குண்டான உறவு தப்பாது, அவன் ஸ்வாதந்திரியத்தையும் மாற்றி, நம்மை அவன் திருவடிகளில் சேர்த்தேவிடும்" என்று உறுதிபூண்டமையைப் பேசினாள் பத்தாம் திருமொழியான "கார்க்கோட"வில். இப்படி உறுதியோடு இருந்த பின்பும், தனக்கு முகங்கொடுக்கக் காணாமையாலே இவள் மிகவும் நோவுபட்டுக்கிடக்கிற நிலையைக்கண்டு தாய்மார் தோழிமார் முதலான பெண்பிள்ளைகள் இவளைக் காணவந்து திரண்டு கிடக்க, "அவன் நம்மை வைத்த பரிசைப் பார்த்தீர்களா" என்று வெறுத்து வார்த்தை சொல்லி, பின்பு "நம்மைப் போன்ற சில பெண்களுக்கு உதவினவன் பெரியாழ்வார் பெற்றெடுத்த நமக்கும் உதவாதொழியான்" என்று ஒருபடி த₄ரித்தமையைப் பேசினாள் பதினோராம் திருமொழியான "தாமுகக்கும் தம் கை"யில். இப்படி உறுதிபூண்டிருந்தும் முகம் காட்டாமையாலே, நடக்கவும் இயலாத நிலையை அடைந்து, அருகில் இருப்பாரைப் பார்த்து, "அவன் இருக்கும் தேசத்திலே என்னைக்கொண்டுபோய்ச் சேருங்கள்" என்கிறாள் பன்னிரண்டாம் திருமொழியான மற்றிருந்தீர்களில். இவள் நிலையை அநுஸந்தி₄த்து வருந்தியிருக்கையாலே, அருகில் இருந்தவர்களும் இவளைக் கொண்டுபோய் அவன் ஸம்ப₃ந்த₄முள்ள மதுரை முதலான தேசத்தில் சேர்க்கமுடியாமையாலே "அவனோடு தொடர்புள்ள ஏதாவதொன்றைக் கொண்டுவந்து என்னைத் தொடச்செய்து உயிர்தரிக்கச் செய்யுங்கள்" என்று அவர்களைப் பிரார்த்தி₂த்ததைப் பேசினாள் பதின்மூன்றாம் திருமொழியான "கண்ணனென்னும் கருந்தெய்வ"த்தில். இவளுக்குப் பரமப₄க்தி பர்யந்தம் விளையச்செய்வதற்காக, இவ்வளவிலும் அவன் காலதாமதம் செய்ய, அதனால் ஆற்றாமை

கரைபுரண்டு, பெருவிடில் முடியும் நிலை ஏற்பட்டவளவிலே. அவன் வந்து முகங்காட்டி இவளை விஷயீகரிக்க, அப்போது பிறந்த விடாயும், அதற்கு அநுகு₃ணமாகப் பெற்ற பேறும், ஒருவரிடத்தில் வைத்துப் பேசவொண்ணுதபடி அளவிறந் திருக்கையாலே, "கண்டீரே" என்று கேட்கிறவர்கள் பாசுரத் தால் தனக்குப் பிறந்த விடாயையும், "கண்டோம்" என்று பதில் சொல்லுகிறவர்கள் பாசுரத்தால் தான் பெற்ற பேற்றை யும் அந்யாபதே₃ஶத்தாலே சொல்லித் திருமொழியை நிறைவு படுத்துகிருள் பதினலாம் திருமொழியான பட்டிமேய்ந்தில்.

இப்படி ப₄க₃வத₃னுப₄வம் செய்துகொண்டு ஆண்டாள் வாழ்ந்து வருகையில். இவளுக்கு விவாஹத்துக்கேற்ற பருவம் வந்ததைக்கண்டு, பெரியாழ்வார் இவளுக்கேற்ற கணவனைக் காணப்பெருமல் கவலைப்பட்டு, இவளையழைத்து "நீ யாருக்கு வாழ்க்கைப்பட விரும்புகிருய்?" என்று கேட்க, ஆண்டாள் "மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழகில்லேன்" என்று சொல்ல, பட்டர்பிரான் "அப்படியானல் என்செய்வது?" என்று கேட்க. கோதையும் "பெருமாளையே மணம்புரிய விரும்பு கிறேன்" என்று உரைத்தனள். ஆழ்வாரும் "நூற்றெட்டுத் திருப்பதி எம்பெருமான்களில் யாருக்கு வாழ்க்கைப்பட விரும்புகிருய்" என்று கேட்க, ஆண்டாளும் "அவரவர்க ளுடைய கு₃ணங்களையும், பெருமைகளையும் சொல்லியருள வேணும்" என்று பிரார்த்திக்க, ஆழ்வாரும் வடபெருங் கோயிலுடையான் வைப₄வம் தொடக்கமாகப் பாண்டியநாட் டில் எம்பெருமான்கள் பெருமைகளையும், மலைநாட்டுத் திருப்பதி எம்பெருமான்களின் மேன்மைகளையும், வடவேங்க டம் தொடக்கமாகத் திருப்பிரிதி ஈருக வடநாட்டுத் திருப்பதி எம்பெருமான்களின் வைப₄வங்களையும், தொண்டைநாட்டில் எம்பெருமான்களின் பெருமைகளையும், நடுநாட்டில் எம் பெருமான்களின் ஏற்றங்களையும், அழகியமணவாளன் முதலான சோழநாட்டில் எம்பெருமான்களின் சீர்மைகளையும் அருளிச் செய்ய. ஆண்டாளும் அதுகேட்டு ஆனந்தக்கண்ணீர் துளிக்க, மயிர்க்கூச்செறியும் மேனியுடையளாய், அரங்கத்தின்னமுத ருடைய குழலழகு வாயழகு கண்ணழகுகளைக்கேட்டுப் பெருங்

காதல்கொண்டு மோஹித்து, "வந்தானோ திருவரங்கன் வாரானோ என்றென்றே வளையும் சோரும்" என்கிறபடியே மனமுருகி, மலர்க்கண்கள் பனிப்ப, அழகிய மணவாளனையே காமுற்று, பெருப்பெருத்த கண்ணாலங்கள் செய்யக் கனாக் கண்டு, அணியரங்கத்தம்மானுக்கே அற்றுத் தீர்ந்த காதலை யுடையவளானாள்.

பெரியாழ்வாரும் "கோதைக்குத் தக்க மணாளன் கோயிற் பிள்ளையான நம்பெருமாளே" என்று அறுதியிட்டு, "இது எப்படி நடக்கும்" என்று கவலைப்பட்டுக்கொண்டு கண் வளர்ந்தருள, திருவரங்கச் செல்வனும் ஆழ்வார் கனவிலே எழுந்தருளி, "உம்முடைய பெண்ணான கோதையைக் கூட்டிக் கொண்டு நம் கோயிலுக்கு வாரீர், அவளுக்குத் தகுதியாக நாமே அவளைக் கைப்பிடிக்கிறோம்" என்று அருளிச்செய்ய, ஆழ்வாரும் உகந்து கவலையற்றிருந்தார். நம்பெருமாளால் நியமிக் கப்பெற்ற திருவரங்கத்துக் கைங்கர்யபரர்கள் அவருடைய குடை சாமரம் திருவாலவட்டம் முதலான எல்லாப் பரிச் ச₂த₃ங்களோடும் ஸ்ரீவில்லிபுத்தூருக்குச் சென்று, நம்பெருமாள் நியமனத்தை விண்ணப்பம்செய்ய, ஆழ்வாரும் மிக உகந்து ஆச்சரியப்பட்டு, வடபெருங்கோயிலுடையானுடைய அநுமதி கொண்டு மணிகளிழைத்த மூடு பல்லக்கிலே ஆண்டாளை எழுந்தருள்வித்துக்கொண்டு, வாத்₃யகோ₄ஷங்களுடன், தொண் டர்சுழாம் புடைசூழ, "ஆண்டாள் வந்தாள், சூடிக்கொடுத் தாள் வந்தாள், சுரும்பார்குழற்கோதை வந்தாள், திருப்பாவை பாடிய செல்வி வந்தாள், தென்னரங்கம் தொழும் தேசுடை யாள் வந்தாள்" என்று பல சின்னங்கள் பணிமாற வந்து, அழகிய மணவாளனுடைய பெரியதிருமண்டபத்தே சென்று, மூடுபல்லக்கை மூடியிருந்த தட்டுப்பாயை அகற்ற, சூடிக் கொடுத்த நாச்சியாரும் அனைவரும் காணும்படி—உதறி உடுத்த பட்டுச்சேலையும், சுற்றிய செங்கழுநீர்மாலையும், திருநெற்றியிலே கஸ்தூரி திருநாமமும், காதளவும் ஓடிக் கயல்போல் மிளிரும் கடைக்கண் விழியும், கொடியேரிடையுமாய், சிலம்பார்க்கச் சீரார்வளையொலிப்ப, அன்னமென்னடையும் கொண்டு அழகிய மணவாளன் திருமுன்பேசென்று உள்ளே புகுந்து, கண்கு ளாரக்கண்டு, கேசவநம்பியைக் கால்பிடிப்பாள் என்னும் பேறு

பெற்று, நாகத்தணையை மிதித்தேறி, தீமுகத்து நாகணைமேல் சேரும் திருவரங்கரைச் சேர்ந்து, எப்போதும் திருவரங்கன் திருவடி வருடலாம்படி மறைந்தருள, இதைக்கண்ட ஆழ்வாரும் அவர் சிஷ்யரான வல்லபதேவர் முதலானோரும் ஆச்சர்யப்பட, திருவரங்கச்செல்வனார் ஆழ்வாருக்கு அருளப் பாடிட்டருளி "திருப்பாற்கடலரசனைப்போலேயும், ஜனகசக்ரவர்த்தியைப்போலேயும் நீரும் நமக்கு மாமனாராகிவிட்டீர்' என்று மிகவும் உகந்தருளி, அவருக்குத் தீர்த்தம் திருமாலை திருப்பரியட்டத்துடன் ஸ்ரீசடகோபனும் பிரஸாதித்து "வில்லி புத்தூருறைவானுக்கே கைங்கர்யம் செய்துகொண்டு வாழ்ந்து வருவீர்" என்று திருவாய் மலர்ந்து விடைகொடுத்தருளினான். பெரியாழ்வாரும்,

"ஒருமகள் தன்னையுடையேன் உலகம்நிறைந்த புகழால்
திருமகள்போல வளர்த்தேன் செங்கண் மால்தான்
கொண்டு போனான்."

என்று தாம்பாடியது உண்மையானதை நினைத்து ஆச்சர்யப் பட்டு, ஸ்ரீவில்லிபுத்தூருக்குச்சென்று முன்போலவே செண்பகம் மல்லிகையோடு செங்கழுநீர் இருவாட்சி முதலிய பல மலர்களுடன், ஆர்வமென்பதோர் பூவையும் இட்டுக்கொண்டு, எண்பத்தைந்து வருடங்கள் வாழ்ந்திருந்து கடைசியில் திருமாலிருஞ்சோலைமலை சென்று, அழகருக்குச் சிலகாலம் கைங்கர்யம்செய்து வாழ்ந்திருந்து பேரின்பப் பெருவீடு அடைந்தார்.

ஸ்ரீமத்யை விஷ்ணுசித்தார்யமநோநந்தநஹேதவே ।
நந்தநந்தநஸுந்தர்யை கோதாயை நித்யமங்களம் ॥

[விஷ்ணுசித்தர் என்னும் பெரியாழ்வாருடைய திருவுள்ள முகக்கக் காரணமானவளும், (அவ்விஷ்ணுசித்தரோடுள்ள உறவாகிய) பெருஞ்செல்வத்தை உடையவளும், நந்தகுமாரனுக்குப் பொருந்திய அழகுடையவளுமான கோதைக்கு என்றும் மங்களமாகுக.]

ஆண்டாள் வைபவம் நிறைவுற்றது.

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

# முதலாழ்வார்கள் வைபவம்



**காஞ்சி—பொய்கையாழ்வார்**

துலாயாம் *ஶ்*ரவணே ஜாதம் காஞ்ச்யாம் காஞ்சந வாரிஜாத்।
த்$_3$வாபரே பாஞ்சஜந்யாம்*ஶ*ம் ஸரோயோகி$_3$நமா*ஶ்*ரயே ॥

[துவாபரயுகத்தில் காஞ்சியில் திருவெஃகாவில் பொய்கையில் பொற்றாமரையிலிருந்து ஐப்பசித் திருவோணத்தில் பாஞ்சஜன்யம் என்னும் சங்கத்தின் அம்*ஶ*மாக அவதரித்த பொய்கையாழ்வாரை ஆ*ஶ்*ரயிக்கிறேன்.]

**காஞ்ச்யாம் ஸரஸிஹேமாப்₃ஜே ஜாதம் காஸாரயோகி₃நம் |**
**கலயே யஶ்ஶ்ரிய: பத்யே ரவிம் தீ₃பமகல்பயத் ||**

[காஞ்சியில் பொய்கையொன்றில் பொற்றாமரையில் பிறந்தவராய், ஸ்ரீமந்நாராயணனுக்கு வெய்யசுடரோனை விளக்காகஏற்றியவரான பொய்கையாழ்வாரை தியானிக்கிறேன்.]

**முகுந்த₃ஸ்ய முகே₂ந்லாஸ மூலவாக்₃ஜாலமூர்ச்சி₂தம் |**
**முநிமுக்₂யம் ஸரோஜாதம் முக்திமூலமுபாஸ்மஹே ||**

[முகுந்தனின் முகமலர்த்தியடியாக உண்டான பாசுரங்களைப் பாடி மயங்கிநிற்பவரும், ஆழ்வார்களில் முதல்வரும், முக்திக்கு மூலமாயிருப்பவருமான பொய்கையாழ்வாரை உபாஸிக்கிறோம்.]

**ஆஜ்ஞாதீ₄ ஶ்ரீசந்த₃நே த்₃வாபராக்₂யே**
**ஸித்₃த₄ார்த்₂யாக்₂யே வத்ஸரே மாஸி சேஷ்டே |**
**ஶுக்லாஷ்டம்யாம் பௌ₄மவாரே ஶ்ரவணர்க்ஷே**
**விஷ்ணோர் ஜந்ம ப்ராப காஸாரயோகீ₃ ||**

[பொய்கையாழ்வார், துவாபரம் என்ற யுக₃த்தில் ''ஆஜ்ஞாதீ₄ ஸ்ரீசந்த₃ந'' என்னும் அக்ஷரங்களால் கடபயாதி₃ஸங்க்₂யைப்படி கிடைத்த 862900 வருடம் சென்றபின் ஸித்தார்த்தி என்கிற வருடம் ஐப்பசி மாதத்தில் சுக்லபக்ஷத்தில் அஷ்டமிதிதியில் செவ்வாய்க்கிழமையில், விஷ்ணுவினுடைய மங்களமான திருவோண நட்சத்திரத்தில் அவதரித்தருளினார்.]

**ஹேமாப்₃ஜிநீ ஹேமஸரோஜ க₃ர்ப்ப₄ாத்**
**ஶ்ரீபாஞ்சஜந்யோऽஜநி தத்ர யோகீ₃ |**
**தாரே ஹரேராஶ்வயுஜாக்₂யமாஸே**
**ஸமஸ்தஜீவாவநகர்மஹேதோ: ||** [திவ்யஸூரிசரிதம் 2-10]

[பரமபுருஷனுடைய பாஞ்சஜன்யமென்னும் திருச்சங்காழ்வான், எல்லாவுயிர்களையும் ரக்ஷிப்பதற்காக ஐப்பசி மாதத்தில் விஷ்ணுவினுடையதான திருவோணநாளில் பொற்றாமரைப் பொய்கையில், பொற்றாமரைமலரின் நடுவிலிருந்து பொய்கையாழ்வாராக அவதரித்தருளினான்.]

முற்கூறிய தனியன்களிலும், வைப₄வ ஶ்லோகங்களிலும், முன்னோர்கள் அநுஸந்தி₄த்த ரீதியில் த்₃வாபரயுக₃த்தில் 862900 வருடங்களுக்குப்பின் ஸித்₃த₄ார்த்திஎன்னும் வருடத்தில் ஐப்பசி மாதத்தில் ஶுக்லபக்ஷ அஷ்டமி திதி₂யும் செவ்வாய்க்கிழமையும் கூடிய திருவோண நக்ஷத்திரத்தில் பாஞ்சஜன்யம் என்னும் ஶங்க₂த்தின் அம்ஶமாகக் காஞ்சியில் பொய்கை ஒன்றில் பொற்றாமரையில் பிறந்தவர் பொய்கையாழ்வார்.



திருக்கடல்மல்லை—பூதத்தாழ்வார்

துலா த$_4$நிஷ்ட$_2$ா ஸம்பூ$_4$தம் பூ$_4$தம் கல்லோலமாலிந: ।
தீரே பு$_2$ல்லோத்பலே மல்லாபுர்யாமீடே$_3$ க$_3$தாம்ஶகம் ॥

[ஐப்பசி அவிட்டத்தில் திருக்கடன்மல்லைக் கடற்கரையில் மலர்ந்த நீலோத்பலத்தில் க$_3$தை$_3$யின் அம்ஶமாய் அவதரித்த பூ$_4$தத்தாழ்வாரைத் துதிக்கிறேன்.]

**மல்லாபுரவராதீ₄ஶம் மாத₄வீகுஸுமோத்₃ப₄வம் |**
**பூ₄தம் நமாமி யோ விஷ்ணோ: ஜ்ஞாநதீ₃பமகல்பயத் ||**

[எவரொருவர் பரமபுருஷனுக்கு ஞானச் சுடர்விளக்கை ஏற்றினரோ, கடல்மல்லையின் தலைவராய், குருக்கத்திப்பூவில் அவதரித்தருளினவரான அந்த பூ₄தத்தாழ்வாரை வணங்குகிறேன்.]

**வந்தே₃ பூ₄தாக்₂யயோகீ₃ந்த்₃ரம் வரேண்யகு₃ணஸம்பத₃ம் |**
**லக்ஷ்மீஸஹாய கருணாப்ராப்த ப்ரமிதி வைப₄வம் ||**

[ஶ்ரிய:பதியின் கருணையால் மயர்வற மதிநலம் அருளப்பெற்றவராய், சிறந்த கல்யாண கு₃ணங்களையுடையவரான பூ₄தத்தாழ்வாரை வணங்குகிறேன்.]

**மாஸே தத₃ஸ்மிந் வஸுபே₄ऽஜநிஷ்ட**
**பாரேஸமுத்₃ரம் புரி மல்லநாம்ந்யாம் |**
**லதாக்₃ருஹாந்தாத் பு₄வி பூ₄தநாமா**
**கௌமோத₃கீஶக்திமயோ முநீந்த்₃ர: ||**

[தி₃வ்யஸூரிசரிதம் 2-12]

[ஸ்ரீமந்நாராயணனின் கௌமோத₃கியென்னும் க₃த₃ாயுத₄த்தின் ஶக்திஸ்வரூபியான பூ₄தத்தாழ்வார் என்னும் முனிவர் தலைவர்— இவ்வுலகில் கிழக்குக் கடற்கரையிலே, திருக்கடல் மல்லையென்னும் நகரில் பூப்பந்தலினுள் (நீலோற்பலத்தினுள் என்று பாட₂ாந்தரம்) அதே ஸித்தார்த்தி வருடத்தில், அதே ஐப்பசி மாதத்தில் பொய்கையாழ்வார் அவதரித்த மறுதினத்தில் அவிட்ட நட்சத்திரத்தில் அவதரித்தருளினார்.]

முற்கூறிய தனியன்களிலும், வைப₄வ ஶ்லோகங்களிலும் முன்னோர்கள் அநுஸந்தி₄த்த ரீதியில் பொய்கையாழ்வார் அவதரித்த மறுதினம் அவிட்டநக்ஷத்திரத்தில் எம்பெருமானுடைய பஞ்சாயுத₄ங்களில் "கௌமோத₃கீ" என்னும் க₃தை, யின் அம்ஶமாய், திருக்கடன்மல்லையில் ( மஹாப₃லிபுரத்தில் ) நீலோத்பலத்தினுள் அவதரித்தவர் பூ₄தத்தாழ்வார்.



## திருமயிலை—பேயாழ்வார்

துலா ஶதபி4ஷக்3ஜாதம் மயூரபுரிகைரவாத் ।
மஹாந்தம் மஹதா3க்2யாதம் வந்தே3 ஸ்ரீநந்த3காம்ஶகம் ॥

[ஐப்பசி சதயத்தில் திருமயிலையில் ஓர் கிணற்றில் செங்கழுநீர் (செவ்வல்லி) பூவிலிருந்து நந்தகமென்னும் வாளின் அம்ஶமாக அவதரித்த பெரியவரான பேயாழ்வாரை வணங்குகிறேன்.]

தந்மாஸி ஜாதம் ஶததாரகாயாம்
மயூரபுர்யாம் மணிகைரவாந்தாத் |
ப₄க்த்யா மஹாந்தம் மஹதா₃ஹ்வயம் தம்
ஶ்ரீநந்த₃காம்ஶம் ஶ்ரிதப₄க்திரூபம் ||

[பொய்கை பூ₄தத்தாழ்வார்கள் அவதரித்த அந்த ஸித்₃த₄ார்த்தி₂ ஐப்பசி மாதத்தில், பூ₄தத்தாழ்வார் அவதரித்த மறுதினம் சதய நட்சத்திரத்தில் மயிலையில் செங்கழுநீர் (செவ்வல்லி) நடுவிலிருந்து அவதரித்தவரும், ப₄க்தியினாலே பெரியவரும், அதனாலே பேயாழ்வார் என்று பெயர் பெற்றவரும், ஸாத்₄யப₄க்தியே வடிவெடுத்தவரும், ஸ்ரீநந்த₃கம் என்னும் வாளின் அம்ஶமானவருமான பேயாழ்வாரை வணங்குகிறேன்.]

த்₃ருஷ்ட்வா ஹ்ருஷ்டம் தத₃ா விஷ்ணும் ரமயா மயிலாதி₄பம்|
கூபே ரக்தோத்பலே ஜாதம் மஹதா₃ஹ்வயமாஶ்ரயே ||

[மயிலை நகர்க்குத் தலைவராய், கிணற்றிலே செவ்வல்லிப்பூவிலே அவதரித்தவராய், திருவோடு கூடிய நாராயணனைக் கண்டு களித்தவரான பேயாழ்வாரை ஶரணடைகிறேன்.]

பத்₃மாரமணபாத₃ாப்₃ஜ ப்ரேமப்₄ராந்த்யா மநோஜ்ஞயா|
ப்₄ராந்தயோகீ₃தி விக்₂யாதம் முநிம் வந்தே₃ கு₃ணாம்பு₃தி₄ம் ||

[தாமரையாள்கேள்வனுடைய திருவடித் தாமரைகளில் பெருங்காதலால் உண்டான சிறந்த மயக்கத்தால் பேய்போலே திரிந்தமையால் பேயாழ்வார் என்று எங்கும் புகழ்பெற்ற குணக்கடலான பேயாழ்வாரை வணங்குகிறேன்.]

தந்மாஸ ஏவாவிரபூ₄த் விபஶ்சித்
ப்ராசேதஸர்க்ஷே ஶத₂ மயூரபுர்யாம்|
மஹாபி₄த₄ாநோ மணிகைரவாந்தாத்
ஶ்ரீநந்த₃காத்மா ஶ்ரிதப₄க்திரூப: ||

[தி₃வ்யஸூரிசரிதம் 2-13]

[அந்த ஐப்பசி மாதத்திலேயே சதயநட்சத்திரத்தில் மயிலை நகரில் செவ்வல்லிப்பூவிலிருந்து நந்த₃கத்தின் அம்சமாய், ஸாத்₄யப₄க்தியே வடிவெடுத்தவராய், ஞானியான பேயாழ்வார் அவதரித்தருளினார்.]

முற்கூறிய தனியன்களிலும், வைப₄வ ஶ்லோகங்களிலும் முன்னோர்கள் அநுஸந்தி₄த்த ரீதியில் பூ₄தத்தாழ்வார் அவதரித்த மறுதினம் ஶதயநக்ஷத்திரத்தில் எம்பெருமானுடைய பஞ்சாயுத₄ங்களில் 'நந்த₃கம்' என்னும் வாளின் அம்ஶமாக மயிலையில் (மைலாப்பூரில்) ஒரு கிணற்றில் செவ்வல்லிப்பூவிலே அவதரித்தவர் பேயாழ்வார்.

## முதலாழ்வார்கள் மூவர் வைபவம்

இப்படி அயோநிஜராக அவதரித்த இம்மூவரும் எம்பெருமானுடைய நிர்ஹேதுக கடாக்ஷத்தாலே மயர்வற மதிநலம் அருளப்பெற்று, ரஜஸ்தமோகு₃ணங்களற்றவராய், ஸத்வகு₃ணம் மிகுந்தவராய், எம்பெருமான் விஷயத்தில் அடிமை செய்வதில் ஊன்றிநிற்பவராய், நிறைந்த ஜ்ஞாநப₄க்தி வைராக்₃யங்களையுடையவராய், சோறு நீர் வெற்றிலை முதலானவற்றை தா₄ரக போஷக போ₄க்₃யங்களாகக் கொள்ளாமல் எம்பெருமானுடைய கு₃ணங்களையே எல்லாமாகக் கொண்டவர்களாய், உண்டியே உடையே உகந்தோடும் ஸம்ஸாரிகளோடு ஒட்டாதவர்களாய், ஒருநாள் இருந்தவிடத்திலே மறுநாளிராமல் ஒவ்வொருநாள் ஒவ்வொரு ஊரில் தங்குகிறவர்களாய், ஒருவரையொருவர் அறியாதே தனித்தனியே வாழ்ந்து வந்தார்கள். இப்படியிருக்கும் காலத்தில், இவர்களைக்கொண்டு தி₃வ்யப்ரப₃ந்த₄ங்களை உலகுய்ய அவதரிக்கச் செய்யத் திருவுள்ளம்பற்றியவனாய், இவர்களைத் திருக்கோவலூரிலே ஒருநாளிரவு சந்திக்கச் செய்தான் எம்பெருமான். முதலில் அவ்வூருக்கு வந்த பொய்கையாழ்வார் "ம்ருகண்டு₃" முனிவருடைய ஆஶ்ரமத்தின் இடைகழியில் ஶயனித்துக்கொண்டிருந்தார். அப்போது பூ₄தத்தாழ்வார் அவ்விடத்திற்கு வந்து தங்க இடம் கேட்க, "இவ்விடம் ஒருவர் படுக்கலாம், இருவர் இருக்கலாம்" என்று கூறிப் பொய்கையாழ்வார் அவரை வரவேற்றார். இருவரும் ஒருவர்க்கொருவர் தண்டனிட்டு ப₄க₃வத்₃கு₃ணாநுப₄வம் செய்துகொண்டு வீற்றிருந்தார்கள். அப்போது அங்கு வந்த பேயாழ்வார் தங்க இடம் கேட்க, "இவ்விடம் ஒருவர் படுக்கலாம், இருவர் இருக்கலாம், மூவர் நிற்கலாம்" என்று கூறிப் பொய்கையாழ்வாரும் பூ₄தத்தாழ்வாரும் பேயாழ்வாரை வரவேற்றனர்.

ஒருவர்க்கொருவர் தண்டனிட்டு மூவரும் அவ்விடைகழியி லேயே நின்றுகொண்டு எம்பெருமானுடைய குணங்களை ஒருவர்க்கொருவர் சொல்லியும் கேட்டும் மகிழ்ந்திருந்தனர். ஜ்ஞாநிகளான இவர்களோடு நெருக்கத்தை விரும்பிய எம் பெருமான் அங்கு வந்து இவர்களை நெருக்கத் தொடங்கி ஞன். 'இப்படி நெருக்குகிறவர் யார்?' என்று காண்பதற்காக "வையம் தகளியா வார்கடலே நெய்யாக வெய்ய கதிரோன் விளக்காக" என்று தொடங்கி, வருத்தும் புறவிருள்மாற்ற, மறையின் குருத்தின் பொருளையும் செந்தமிழ்தன்னையும் கூட்டி, ஒன்றத்திரித்து அன்றெரித்த திருவிளக்காக முதல் திருவந்தாதியைப் பாடிஞர் பொய்கையாழ்வார். "அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக இன்புருகு சிந்தையிடுதிரியா, நன்புருகி — ஞானச்சுடர் விளக்கேற்றினேன் நாரணற்கு ஞானத்தமிழ் புரிந்த நான்" என்று தொடங்கி, இறைவனைக் காணும் இதயத்து இருள்கெட, ஞானமென்னும் நிறைவிளக்கு ஏற்றுவதுபோலே இரண்டாம் திருவந்தாதியைப் பாடிஞர் பூதத்தாழ்வார். இவ்விரண்டு விளக்குகளினுலும் மன்னிய பேரிருள் மாண்டபின், கோவலுள் மாமலராள் தன்னெடு மாயனைக் கண்டு காட்டிய தமிழ்த் தலைவரான பேயாழ்வார், "திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன்" என்று தொடங்கி மூன்ரும் திருவந்தாதியைப் பாடிஞர். "நீயும் திருமகளும் நின்ருயால்" [முதல்-திருவ 86] என்னும் பாசுரத்திலே பொய்கை யாழ்வார் இச்செய்தியைத் தெளிவாகப் பேசிஞர். மூவரும் உலகுய்ய இவ்வண்ணமாக திவ்யப்ரபந்தங்களை அருளிச் செய்து, எம்பெருமானுடைய ஸ்வரூபரூபகுணங்களை விஸ் தாரமாகத் தாங்கள் அநுபவித்துப் பிறரையும் அநுபவிக்கச் செய்தார்கள்.

அதற்குப்பின் அம்மூவரும் தேஹளீசனை திருக்கோவலூர் ஆயனரிடம் விடைபெற்றுக்கொண்டு, பலகாலம் திவ்யதேச யாத்திரை செய்து, திருமழிசைக்குச் சென்று, திருமழிசை யாழ்வாரைக்கண்டு பேசி, அவரோடு கூடிக் களித்து யோகு செய்து, யோகபலத்தால் நெடுங்காலம் வாழ்ந்திருந்து முடிவில் திருக்கோவலூரையே அடைந்து அங்கேயே திருநாட்டுக்கு எழுந்தருளிஞர்கள்.

மற்ற ஆழ்வார்களுக்கு முன்னே வந்து அவதரித்து அவர் களுக்கும் வழிகாட்டியாக திவ்யப்ரபந்தங்களை முதன்முதலில்

அருளிய பெருமையினால் இவர்கள் முதலாழ்வார்கள் என்று பேர்பெற்றார்கள்.

இனி இவர்களுடைய திருவந்தாதிகளின் ஸாரம் விவரிக்கப்படுகிறது, மூன்று ருஷிகள் கூடி ஒரு வியாகரண ஶாஸ்த்ரத்திற்குக் கர்த்தாக்களானாற்போலே, முதலாழ்வார்கள் மூவரும் கூடி மூன்று திருவந்தாதிகளாலே நிர்ணயித்த அர்த்த₂ம் ஒன்றே என்பர் பெரியவாச்சான்பிள்ளை. முதலாழ்வாரான பொய்கையாழ்வார் "வையம் தகளியா" என்று தொடங்கி லீலாவிபூ₄தியையும், "செய்ய சுடராழியான்" என்று நித்ய விபூ₄தியையும் அநுஸந்தி₄த்துக்கொண்டு ப்ரப₃ந்த₄த்தைத் தொடங்குகையாலே, உப₄யவிபூ₄திகளோடும் கூடியவன் பரம்பொருள் என்று நிலைநாட்டினார். இரண்டாமவரான பூ₄தத்தாழ்வார் "ஞானச்சுடர் விளக்கேற்றினேன் நாரணற்கு" என்று தொடங்குகையாலே அப்பரம்பொருள் நாராயணனே என்று நிலைநாட்டினார். மூன்றாமவரான பேயாழ்வார் "திருக்கண்டேன்" என்று தொடங்குகையாலே லக்ஷ்மீ ஸம்ப₃ந்த₄த்தைக் காட்டிப் பரதத்வநிர்ணயம் செய்தார். முதல்வரான பொய்கையாழ்வார் "வையம் தகளியா" என்று தொடங்கி ஞானம் பிறந்த நிலையை வெளிப்படுத்தினார். இரண்டாமவரான பூ₄தத்தாழ்வார் "அன்பே தகளியா" என்று தொடங்கி ஞானம் முற்றி ப₄க்தியாகும் நிலையை வெளிப்படுத்தினார். மூன்றாமவரான பேயாழ்வார் "திருக்கண்டேன்" என்று தொடங்கி அந்த ப₄க்தியாலே பரமபுருஷனை ஸாக்ஷாத்கரித்தபடியை விளக்கினார். ஆக, மூன்று திருவந்தாதிகளும் சேர்ந்து ஞானப₄க்தி ஸாக்ஷாத்காரங்களைச் சொல்லுகின்றன. மூன்று திருவந்தாதிகளும் முறையே பரமாத்மாவைக் காண்பதாகிற பரப₄க்தியையும், அதன் முற்றிய நிலையாய் அவனோடு கூடி அனுப₄விப்பதாகிற பரஜ்ஞாநத்தையும், அதன் முற்றிய நிலையாய் அவனைப் பிரியில் த₄ரியாமையாகிற பரமப₄க்தியையும் விளக்குகின்றன என்றும் நிர்வஹிப்பர்கள். முதலாழ்வார்கள் மூவரும் பரத்வத்திலே மண்டியிருப்பர்கள் என்பது பூர்வாசார்யர்களின் நிர்ணயம். இம்மூன்றுதிருவந்தாதிகளின் விஶேஷார்த்த₂ங்களை எமது விவரணத்தோடு கூடிய பெரியவாச்சான்பிள்ளையின் வ்யாக்₂யானத்திலிருந்தும், அப்பிள்ளையுரையிலிருந்தும் தெளிவாக அறியலாம்.

**முதலாழ்வார்கள் வைப₄வம் நிறைவுற்றது.**

**முதலாழ்வார்கள் திருவடிகளே ஶரணம்.**

# ஸ்ரீகுலசேகராழ்வார் வைபவம்



குலசேகராழ்வார்

கும்பே$_4$ புநர்வஸௌ ஜாதம் கேரளே சோளபத்தநே ।
கௌஸ்துப$_4$ாம்ஶம் த$_4$ராதீ$_4$ஶம் குலஶேக$_2$ரமாஶ்ரயே ॥

[கேரள தே$_3$ஶத்தில், கொல்லிநகர் (வஞ்சிக்களம்) என்னும் தலைநகரில், மாசி மாதம் புனர்வஸு நக்ஷத்திரத்தில் எம்பெருமான் திருமார்பில் உள்ள கௌஸ்துப$_4$த்தின் அம்சமாயிருப்ப

வராய், சேர நாட்டுக்கு அரசராய் அவதரித்த குலஶேகரரை ஆஶ்ரயிக்கிறேன்.]

கு₄ஷ்யதே யஸ்ய நக₃ரே ரங்க₃யாத்ரா தி₃நே தி₃நே ।
தமஹம் ஶிரஸா வந்தே₃ ராஜாநம் குலஶேக₂ரம் ॥

[எவருடைய தலைநகரிலே தினந்தோறும் ரங்க₃யாத்ரை முழங்கப் படுகிறதோ, அத்தகைய குலசேகரப் பெருமாளை அடியேன் தலையால் வணங்குகிறேன்.]

கல்யப்₃தே₃ ஸுக₂ஸங்க்₂யயா வ்யபக₃தே மாஸே ச மாக₄ாபி₄தே₄
வர்ஷே சாபி பராப₄வே ஸுரகு₃ரோர்வாரே ச பக்ஷே ஶுசௌ ।
த்₃வாத₃ஶ்யாக்₂யதிதௌ₂ புநர்வஸுதி₃நே
ப்ரீத்யாக்₂யயோக₃ாந்விதே
த்ராதும் ந: குலஶேக₂ர: க்ஷிதிபதிஶ்
ஶ்ரீகௌஸ்துப₄ாத்மாப₄வத் ॥

[கலியுக₃த்தில் 'ஸுக₂' என்கிற எழுத்துக்களால் ஏற்பட்ட 27 வருடங்கள் சென்ற வளவில், பராப₄வ என்னும் வருடத்தில், மாசி மாதத்தில், சுக்லபக்ஷத்தில், துவாதசி திதியில், வியாழக் கிழமையில், புநர்வஸு நட்சத்திரத்தில், பிரீதி என்னும் யோக₃த்தில் ஸ்ரீ கௌஸ்துப₄த்தின் அம்ஶபூ₄தரான குலசேகராழ் வார் என்னும் அரசர் நம்மை ரக்ஷிப்பதற்கு அவதரித்தருளினார்.]

தஸ்யாமபூ₄ச்சேரகுலப்ரதீ₃பஶ் ஶ்ரீகௌஸ்துப₄ாத்மா
குலஶேக₂ராக்₂ய: ।
மஹீபதிர் மாக₄புநர்வஸூத்₃யத்₃தி₃நே ஹரே:
பூர்ணகடாக்ஷலக்ஷ்ய: ॥
[தி₃வ்யஸூரிசரிதம் 5-6]

[ஸ்ரீகௌஸ்துப₄த்தின் அம்ஶமாய், பரமபுருஷனின் பூர்ண கடாக்ஷத்திற்கு இலக்கானவராய், அரசரான குலசேகரர் மாசி மாஸப் புனர்வஸுவோடு கூடிய சிறந்த நாளில் சேரகுலத்திற்குப் பெருவிளக்காய்த் தோன்றினார்.]

முற்கூறிய தனியன்களிலும், வைப₄வ ஶ்லோகங்களிலும், முன்னோர்கள் அநுஸந்தி₄த்த ரீதியில், சேரநாட்டில், கொல்லி நகர் என்னும் தலைநகரில் அரசாண்ட த்₃ருட₄வ்ரதன் என்கிற

அரசனுக்கு, நெடுங்காலமும் கண்ணன் நீண்மலர்ப்பாதம் பரவிய தால் ஸ்ரீகௌஸ்துப₄ரத்னத்தின் அம்சமாகக் கலியுகம் பிறந்து இருபத்தேழு வருடங்கள் கழிந்தபின்பு இருபத்தெட்டாவதான "பராப₄வ" என்னும் வருஷத்தில் மாசி மாதத்தில் ஶுக்லபக்ஷ த்₃வாத₃ஶியும் வியாழக்கிழமையும் கூடிய ஶுப₄தி₃னத்தில் புனர்வஸு நக்ஷத்திரத்தில் பட்டத்து ராணியிடம் "திருவஞ்சிக் களம்" என்னும் பெயர்பெற்ற அத்தலைநகரில் ராஜகுமாரராக அவதரித்தார் இவ்வாழ்வார். இவரது தந்தையான அரசன், இவருடைய முகப்பொலிவைக்கண்டு, தன் குலத்துக்கே ஶிரோமணியாயிருப்பான் என்றுணர்ந்து, இவருக்குக் "குலஶேக₂ரன்" என்று திருநாமம் இட்டான்.

அச்சக்ரவர்த்தியின் திருமகன்—நாளொருமேனியும் பொழு தொருவண்ணமுமாக வளர்பிறைச் சந்திரன்போலே வளர்ந்து, சௌளமும், உபநயனமும் தக்க பருவங்களில் தந்தையால் செய்விக்கப்பெற்று நல்லாசிரியர்கள் மூலம் நான்கு வேத₃ங் களையும், ஆறு அங்கங்களையும், மற்றும் அரசர்க்குரிய நீதி நூல்களையும், யானை குதிரை தேர் முதலியவைபற்றிய நூல் களையும், சிறிது காலத்திலேயே ஐயம்திரிபற முற்றும் கற்று, வல்லவனாய் விளங்கினான். மைந்தனது சிறப்பைக்கண்டு களிப்புற்ற தந்தை அவனுக்கு இளவரசு முடிசூட்டினான்.

அதற்குப்பின் குலஶேக₂ரன், க்ஷத்ரிய த₄ர்மப்படி பகைவரை வெல்வதற்காக நால்வகைச் சேனையோடு புறப்பட்டுச் சென்று, சோழர், பாண்டியர் முதலிய அரசர்கள் அனைவரையும் வென்று, அவர்களைச் சிற்றரசர்களாக்கி, அவர்கள் நாடுகளைத் தன்வஶப் படுத்தி, தான் சேர சோழ பாண்டியநாடுகள் மூன்றுக்கும் தலைவனானமையால், "கொல்லிகாவலன் கூடல்நாயகன் கோழிக் கோன் குலசேகரன்" [பெருமாள்திரு 2-10] என்னும் விருது களைப்பெற்று மீண்டு வந்தான். குமாரனுடைய தகுதியைக் கண்டு களிப்புற்ற த்₃ருட₄வ்ரதமகாராஜர் குமாரனை குலஶேக₂ர னுக்குப் பட்டாபி₄ஷேகம் செய்து, ராஜ்யப₄ாரம் முழுவதையும் அவன் தோளில் நிலைநிறுத்தி, க்ஷத்ரியஜாதிமுறைப்படியே தான் வனம் புகுந்து வானப்ரஸ்த₂ன் ஆனார்.

தந்தையின் பிரிவுக்கு ஆற்றாது வருந்தி, மந்திரிகள் தேற்றத் தேறிய குலசேகர மஹாராஜா, நடுநிலைதவறாமல் சிறியவற்றைப் பெரியவை நலியாதபடி, ராமராஜ்யம் என்று அனைவரும் போற்றும்படி ஒப்பற்ற முறையில் அரசாண்டு, அரசகுலக்குமாரி ஒருத்தியை மணந்து, தந்தையின் பெயரைக்கொண்ட த்ருடவ்ரதன் என்கிற ஒரு புத்திரனையும், நீளாதேவியின் அம்சமாய் "இளை" என்றும், "சேரகுலவல்லி" என்றும் பேர்பெற்ற ஒரு புத்ரியையும் பெற்றுச் சிறப்பாக ராஜ்யபாரம் செலுத்திவந்தார்.

இம்மை, மறுமை, மோக்ஷம் என்னும் மும்மை இன்பங்களையும் தரவல்லவனாய், முதலும் முடிவுமற்ற முழுமுதற் கடவுள் யார்? என்று பரதத்வவிசாரம் பண்ணத் தொடங்கி, பல பண்டிதர்களோடு ச்ருதி ஸ்ம்ருதி இதிஹாஸ புராணங்கள் ஆகிய ப்ரமாணங்களை ஆராய்ந்து வருகையில், அதையே பற்றாசாகக்கொண்டு, கமலக்கண்ணனை எம்பெருமான் இவரைக் குறித்து அமலங்களாக விழித்து மயர்வறமதிநலம் அருளி, தனது ஸ்வரூபம், ரூபங்கள், குணங்கள், விபூதிகள் ஆகியவற்றைக் காட்டிக்கொடுக்க, அவையனைத்தையும் பக்திரூபமான ஜ்ஞானத்தை உடையராய்க் கொண்டு தெளியக் கண்டவரான ஆழ்வார், ஞானம் கனிந்த நலமான பக்தியின் மிகுதியாலே கலங்கி, 'எம்பெருமானுக்கு என் வருகிறதோ?' என்று வயிறு பிடித்து மங்களாசாஸநம் செய்யும் பான்மை உடையவரானார். எம்பெருமானுடைய அனந்த கல்யாணகுணங்களாகிய பெருங் கடலில் ஆழ்ந்து நெஞ்சுருகி ஈடுபட்ட இக்குலசேகராழ்வார் எம்பெருமானுடைய விபவாவதாரங்களில், ஸ்ரீராமாவதார க்ருஷ்ணாவதாரங்களிடத்திலும், அர்ச்சாவதாரங்களில் திருவரங்கம், திருவேங்கடம், திருக்கண்ணபுரம், திருச்சித்திரகூடம், திருவித்துவக்கோடு முதலான திவ்யதேசத்து எம்பெருமான்களிடத்திலும் ஆராத காதல்கொண்டவராய், ஸ்ரீராமாயண காலக்ஷேபத்தையே எப்பொழுதும் பொழுதுபோக்காகப் பெற்றவராய், ஸ்ரீவைஷ்ணவர்களைக் கண்டால் எதிர்கொண்டழைத்துவந்து, விசேஷமாய் உபசரிக்கும் பாகவத நிஷ்டையை உடையவராய், அரசபோகங்களில் பற்றற்றவராய் வாழ்ந்துவரலானார்.

இவர் ஒருநாள் ஸ்ரீராமாயண காலக்ஷேபம் கேட்டுவருகையில், ஆரண்யகாண்டத்தில் "மூக்கறுந்த சூர்ப்பணகையால் தூண்டப்பட்ட பதினாலாயிரம் ராக்ஷஸர்கள் ஒருபுறமும், ஒரு துணையுமில்லாத இராமபிரான் ஒருபுறமுமாகப் போர் தொடங்கிற்று" என்று ஸ்ரீராமாயணம் வாசிப்பவர் சொல்லக்கேட்டவுடன், ஸ்ரீராமாயணத்தில் தமக்குள்ள மிக்க ஈடுபாட்டாலே, வெகுகாலத்துக்கு முன்பு நடந்த அந்தச் சரித்திரத்தை அன்று தான் நடக்கின்றதாக நினைத்து, "இப்படிப் பெருமாள் பேராபத்திலே சிக்கியிருக்கும்போது, நாம் நம்மால் இயன்ற உதவியைச் செய்யவேணும்" என்று துணிந்து, தமது சேனைகளையெல்லாம் போருக்கு ஸித்₃த₄மாய் முன் செல்லும்படி நியமித்துத் தாமும் ஜன ஸ்த₂ானத்தை நோக்கிப் புறப்பட்டார். அதுகண்ட அனைவரும் என்னசெய்வதென்று அறியாமல் திகைத்து நிற்கையில், அதிநிபுணரான ஸ்ரீராமாயணபண்டி₃தர் "ஸ்ரீராமபிரான் தாம் தனிவீரராக நின்று பதினாலாயிரம் அரக்கர்களையும் அழித்துப் பர்ணசாலைக்கு மீண்டுவர, அவரை ஸீதாப்பிராட்டி களிப்புடன் அணைத்துக் களைப்பாற்றினாள்" என்னும் செய்தியை எடுத்துக்கூற, அதுகேட்ட ஆழ்வாரும் பேரானந்தமடைந்து, ஸேனையைத் திருப்பிக்கொண்டு, தாமும் பிரயாணத்தை நிறுத்தினார்.

அதுமுதல் ஸ்ரீராமாயண பண்டி₃தர் ராமனுடைய வெற்றியைக்கூறும் ஸ்ரீராமாயணப₄ாக₃ங்களையே விரித்துரைத்தும், அவனுக்கு ஆபத்துவருமிடங்களில் சுருக்கியுரைத்தும் போந்தார். ஒருநாள் அப்பண்டி₃தருக்கு வேறொரு கார்யம் நேர்ந்தபடியால் ஸ்ரீராமாயணம் சொல்லத் தான் வராமல் தமது குமாரரை அனுப்பினார். அவர் குலசேகரருடைய இயல்பை அறியாமல் இராவணன் ஸீதையை எடுத்துப்போன செய்தியை விரிவாக விளக்கினார். அது செவிப்பட்டவுடன் குலசேகரர் மனம்கொதித்து "நான் இப்போதே விரைவில் சென்று கடல் கடந்து இராவணனைச் சுற்றத்தோடும் நண்பரோடும் போரில் தொலைத்து அன்னையை மீட்டு வருவேன்" என்று கூறி எழுந்து, ஸேனையோடு இலங்கையை நோக்கிப் பயணமானார். அப்போது விண்ணவரும் மண்ணவரும் செய்வதறியாமல் திகைத்து

நிற்கையில், ஆழ்வார் கடலளவும் சென்று கடலை நீந்திக் கடப்பதற்காக இறங்கியவுடன் இவரது அன்பு கண்டு உகந்த இராமபிரான் தாமே இலக்குவனோடும் மைதிலியோடும் காட்சி தந்து, அரக்கரை அழித்ததையும் தேவியை மீட்டுவந்ததையும் கூறி அவரைக் கரையேற்றித் தலைநகருக்கு அனுப்பி மறைந்தருளினான்.

இப்படி இதிஹாஸ புராணங்களைக் கேட்பதில் ஆர்வம் உடையவராய் இருந்த குலசேகரர் திருவரங்கப்பெருநகரின் பெருமையை அவற்றிலிருந்து உணர்ந்து, அங்கு சென்று பெரிய பெருமாளை ஸேவிப்பதற்கு ஒருநாள் குறித்தார். "இவர் அங்கு சென்று பெரியபெருமாளை ஸேவித்தால், மீண்டு வரமாட்டார்" என்பதை உணர்ந்த மந்திரிகள் இவரது யாத்திரையைத் தடுத்து நிறுத்த ஓர் உபாயம் செய்தனர். அதாவது — இவர் ததீ₃யாராத₄னம் செய்வதில் மிக விருப்பம் உடையவராதலால், இவர் யாத்திரைக்குக் குறித்த நாளன்று ஏராளமான ஸ்ரீவைஷ்ணவர்களை வரவழைத்து, இவர் திருமுன்பே அனுப்பினர். இவரும் 'எம்பெருமானை ஆராதி₄ப்பதிற்காட்டில் அவனடியார்களை ஆராதி₄ப்பது தலைசிறந்தது' என்று உணர்ந்தவராகையாலே, அவர்களை உபசரிப்பதற்காக யாத்திரையை நிறுத்திவிட்டார். இப்படியே இவர் ஸ்ரீரங்கம் செல்ல நாள்குறித்த போதெல்லாம் ஸ்ரீவைஷ்ணவர்களை அனுப்பி இவர் ஸ்ரீரங்கம் செல்லாமல் தடுத்து வந்தனர் மந்திரிகள். இவ்விஷயமே இவருடைய புகழ்பாடும் தனியன் ஒன்றில் "கு₄ஷ்யதே யஸ்ய நக₃ரே ரங்க₃யாத்ரா தி₃நே தி₃நே" (எவருடைய தலைநகரில் ஸ்ரீரங்க₃ யாத்திரையைப்பற்றிய பேச்சு தினந்தோறும் முழங்குகிறதோ) என்று கூறப்படுகிறது.

இவரது அரண்மனையினுள்ளும், ஆலோசனை மண்டபத்திலும், மற்றும் அந்தரங்க₃மான இடங்களிலும் ப₄ாக₃வதர்கள் எக்காலத்திலும் போய்வருவதற்கு உரிமை பெற்றிருந்ததைக் கண்டு, பொறாமைகொண்ட சில மந்திரிகள், இவர்களிடம் குலசேகரருக்கு வெறுப்பை உண்டாக்கக் கருதினர். அதற்காக ஒரு ஸ்ரீராமநவமி உத்ஸவத்தன்று, எம்பெருமானுக்குத் திருமஞ்சனம் நடைபெறும்போது, அதில் அனைவரும் ஈடுபட்டிருக்கையில், களைந்துவைத்திருந்த திருவாப₄ரணங்களில்

விலை மதிக்க முடியாததொரு முத்துமாலையை ஒருவரும் அறியாதபடி ஒளித்துவைத்தனர் மந்திரிகள். திருமஞ்சனம் முடிந்தபின் மாலையைக்காணுது, அர்ச்சகர்கள் அரசனிடம் அறிவிக்க. அவர் மந்திரிகளை அழைத்து "கள்வனை விரைவில் தேடிப்பிடியுங்கள்" என்று கட்டளையிட்டார். அதையே வியாஜமாகக்கொண்டு மந்திரிகள் "இவ்வரண்மனையில் தங்கு தடையின்றி எங்கும் புக்குத் திரியும் ஸ்ரீவைஷ்ணவர்களில் ஒருவரே இம்மாலையை எடுத்திருக்கவேணும்" என்று பழி சுமத்தினர். அதுகேட்ட ஆழ்வார் செவிபுதைத்து, மந்திரிகளைக் கடிந்து 'எம்பெருமானடியார்கள் ஒருநாளும் இவ்வடாத செயலை நினைக்கவும் மாட்டார்கள், இதை நானே சபதம் செய்து காட்டுவேன்" என்று கூறி பாம்பை உள்ளிட்டதொரு குடத்தை வரவழைத்து "ஸ்ரீவைஷ்ணவர்களில் எவரேனும் இவ்வடாத செயலைச் செய்திருந்தால் இப்பாம்பு என்னைத் தீண்டிக் கொல்லட்டும். அப்படியல்லாமல் அவர்கள் முக்கரணங்களாலும் பரிஶுத்₃த₄ராகில் இது என்னைத் தீண்டாது விடட்டும்" என்று ஶபத₂ம்செய்து அக்குடத்தின் உள்ளே கைவிட்டார். அப்போது, ஸத்யத்திற்குக் கட்டுப்படும் இயல்புடைய ஸர்ப்பம் இவரைத் தீண்டாது தணிந்திருந்தது. இதைக்கண்ட அமைச்சர் கள் தங்களுடைய தவறை ஒப்புக்கொண்டாலொழியத் தாங்கள் பிழைக்கமுடியாதென்பதை உணர்ந்து, ஒளித்து வைத்திருந்த ஆப₄ரணத்தை ஸமர்ப்பித்து, தாம் அறியாது செய்த பெரும் பிழையைப் பொறுத்தருளுமாறு ஆழ்வாரைச் சரணடைந்தனர். ஆழ்வார் தாம் பொறுத்தால் போதாது என்று திருவுள்ளம்பற்றி "ஸ்ரீவைஷ்ணவர்களுக்குச் செய்த பெரும்பிழைக்குப் பிராயஶ்சித்தம் இனி எப்போதும் அவர்களுக்கு பணிவிடை செய்வதே யாகும். அதையே தே₃ஹயாத்ரையாகக் கொள்வீர்களாக" என்று நியமித்துவிட, அவர்களும் அவ்வண்ணமே ப₄ாக₃வத கைங்கர்ய பரர்களாக இருந்து பேறுபெற்றனர். இந்தச்செய்தி "ஆரங்கெடப் பரனன்பர் கொள்ளாரென்று அவர்களுக்கே வாரங்கொடு குடப்பாம்பில் கையிட்டவன்" என்று இவருடைய தனியனில் அநுஸந்தி₄க்கப்பட்டது

பின்பு குலசேகரர் இத்தகைய பொய்ம்மைகளுக்கு இடமான அரசாட்சியில் தொடர்ந்து இருக்கவிரும்பாமல் தமது குமாரனை

த்3ருட4வ்ரதனுக்குப் பட்டாபி4ஷேகம் செய்வித்து, தாம் நீண்ட நாளாக ஆசைப்பட்டபடி திருவரங்கம் பெரியகோயிலுக்குச் சென்று, பல வருஷங்கள் அங்கு தங்கியிருந்து, நம்பெருமாளை ஸேவித்து, அவ்வழகிய மணவாளனையே தனக்கு உரிய மணவாளனுகக் கருதிய தம் திருமகளான சேரகுல வல்லியை, அப்பெருமானுக்கே மணம் செய்வித்து, இன்றும் குலசேகரன் வீதி என வழங்கும் மூன்ருவது ப்ராகாரத்தை அரங்கனுக்கு அரணுகக் கட்டி, மற்றும் பல ப4க3வத்3ப4ாக3வத கைங்கர்யங் களையும் செய்துகொண்டு வாழ்ந்திருந்தார்.

மற்ற தி3வ்யதே3சங்களுக்கும் யாத்திரைசெய்ய எண்ணிய குலசேகரர், திருவேங்கடம், திருவயோத்தி, தில்லைத்திருச்சித்ர கூடம், திருக்கண்ணபுரம், திருமாலிருஞ்சோலை, திருவித்துவக் கோடு முதலான திருப்பதிகளுக்குச் சென்று, ஆங்காங்கு எழுந்தருளியிருக்கின்ற எம்பெருமான்களைக் கண்ணுரக்கண்டு, தொழுது, திருக்குருகூர் சென்று, நம்மாழ்வாரைத் திருவடி தொழுது, அவ்வூருக்கு அருகிலுள்ள பிரம்மதேசம் என்கிற மன்னுர்கோவிலையடைந்து, அங்குள்ள ஸ்ரீராஜகோ3பாலனுக்குச் சில காலம் தொண்டு செய்துகொண்டிருந்து. தமது அறுபத் தேழாவது பிராயத்தில் பரமபதம் அடைந்தார். இவர் ஆங்காங்கு திவ்யதேசங்களிலுள்ள எம்பெருமான்களை அனுப4விக்கும் போது, அவ்வனுப4வத்தாலுண்டானஆனந்த3ம் உள்ளடங்காமல் அனைவரும் அனுப4வித்து உய்யலாம்படி வெளியிட்ட தி3வ்ய ப்ரப3ந்த4ம் பெருமாள்திருமொழியாகும். முகுந்த3மாலை என்னும் பெயருடன் வடமொழியில் அமைந்துள்ள அற்புதமான துதிநூல் இவர் அருளியதாக வழங்கப்படுகிறது. ஆயினும், நாலாயிர தி3வ்யப்ரப3ந்த4ங்களுக்கும் “ ஸ்தோத்ர ரத்நம் ” முதலான பூர்வாசார்ய ஸ்தோத்ரங்களுக்கும். வியாக்யானம் இட்டருளிய பெரியவாச்சான்பிள்ளை முதலான பூர்வாசார்யர்கள் இந்த முகுந்த3 மாலைக்கு வ்யாக்2யானம் இடாமையாலும், மணவாளமாமுனி களுக்கு முற்பட்ட எவரும் இத்துதி நூலிலிருந்து ஒரு துணுக்கைக்கூடக் கையாளாமையினுலும், முகுந்த3மாலை குலசேகராழ்வாரால் அருளிச்செயய்யப்பட்டதன்று என்றும், குலசேகராழ்வாருடைய வம்சத்தில் வந்தவராய், மாமுனி

களுக்குச் சிலகாலம் முன்பு வாழ்ந்தவரான குலசேகரர் என்னும் பரமப₄க்தரான கேரள அரசராலே இயற்றப்பட்டதே அது என்றும் நிச்சயிக்கத் தட்டில்லை.

இனி. பெருமாள்திருமொழியின் பொருளைச் சுருங்கக் கூறுவோம். காருணிகனுன எம்பெருமான் மயர்வற மதிநலம் அருள, அந்த ப₄க்திரூபாபன்ன ஜ்ஞானத்தாலே அவனை அப்போதே காணவேணுமென்று விடாய் பிறக்க, பரமபத₃த்தில் சென்று அநுப₄விக்கும்வரை ஆறியிருக்க இயலாமல் ஆழ்வார் அங்குள்ள பரத்வத்திற்கு (மேன்மைக்கு) உறுப்பான கு₃ணங்களோடு, ஸௌலப்₄யத்திற்கு (எளிமைக்கு) உறுப்பான சீலம் (நீர்மை) முதலான கு₃ணங்களும் நிறைந்திருக்கும் திருவரங்கம் பெரிய கோயிலுடையானை அநுப₄விக்கப் பாரித்து, ராஜகார்யத்தாலும் ப₄ாக₃வத ததீ₃யாராத₄னத்தாலும் தடைகள் உண்டாகையாலே 'அணியரங்கத்தில் பள்ளிகொள்ளும் கருமணியை அடியேன் கண்டு களிப்பது எந்நாளோ?' என்று தம் ஆசையை வெளியிடுகிருர் முதல் திருமொழியில். எம்பெருமானிடம் ஈடுபட்டவர்களுக்குப் படிப்படியாக நேரக்கூடிய (1) ஆநுகூல்ய ஸங்கல்பம், (2) ப்ராதிகூல்யவர்ஜநம், (3) "உடையவனுன பரமன் நம்மை ரக்ஷிப்பான்" என்னும் உறுதி, (4) அவனையே ரக்ஷகனுக மதிப்பது, (5) அவனிடம் தன் ஆத்மாவை ஸமர்ப்பிப்பது, (6) தன்னிடம் அவனையடைய எந்தக் கைம்முதலும் இல்லாமையை விண்ணப்பிப்பது என்னும் ப்ரபன்ன ஸ்வப₄ாவங்களில் ப₄க₃வத₃ாநுகூல்யஸங்கல்பம் ஏற்பட்டிருப்பதை "இருளிரிய" என்னும் முதல்திருமொழியிலே வெளிப்படுத்திஞர். அவனடியார்கள் விஷயத்தில் ஆநுகூல்யம் பிறந்தபடியை "தேட்டரும்" என்னும் இரண்டாம் திருமொழியில் வெளிப்படுத்திஞர். இப்படி எம்பெருமானிடம் ஈடுபாடு அவனடியார்களளவும் உண்டான பிறகு, தே₃ஹாத்மாபி₄மானிகள் (தே₃ஹமே ஆத்மா என்றிருப்பார்), விஷயப்ரவணர் (விஷயங்களிலே மண்டியிருப்பார்) ஆகிய ப்ரதிகூலரோடு தமக்குத் தொடர்பு அற்றமையாகிற ப்ராதிகூல்யவர்ஜனம் ஏற்பட்டது என்கிருர் "மெய்யில்" என்கிற மூன்ரும் திருமொழியில். இப்படி ப₄க₃வத்₃ப₄ாக₃வத விஷயத்திலே ஆநுகூல்யமும், ப்ரதிகூலரோடு பற்றற்றமையும் ஏற்பட்ட

பின்பும், எம்பெருமானை அடையக் காணாமையாலே "நமக்கு இம்மண்ணரசில் பற்று இருப்பதாக நினைத்துத் தன்னை அடைவிப்பதில் தாமதிக்கிறான்போலும்" என்று எண்ணி, முதல் மூன்று திருமொழிகளில் அநுப₄விக்கப்பட்ட அரங்கன் நிற்குமிடமான திருமலையிலே திருவேங்கடமுடையானிடம் தமக்கு இம் மண்ணரசிலும், வாழுளும் செல்வத்திலும் பற்றின்மையை விண்ணப்பித்து, 'அவனுடைய திருமலையில் ஏதேனும் ஒரு பொருளாகி அவன் பவளவாய் காணவேணும்' என்னுமாசையை வெளிப்படுத்துகிறார் "ஊனேறு" என்னும் நாலாம் திருமொழியில். இவ்வளவு பிறந்த பின்பும் பேறு கிட்டாமையாலே, ஆகிஞ்சன்யம் (கைம்முதலில்லாமை), அநந்ய க₃தித்வம் (வேறு எவரையும் புகலாகக்கொள்ளாமை) ஆகிற ஸ்வபா₄வங்கள் தமக்கு ஏற்பட்டிருக்கிறபடியைப் பல த்₃ருஷ்டாந்தங்களைக் காட்டி திருவித்துவக்கோட்டம்மான் திருவடிகளிலே விண்ணப்பம் செய்கிறார் "தருதுயரம்" என்னும் ஐந்தாம் திருமொழியில். இவ்வளவிலும் எம்பெருமானை அடையப் பெறாமையாலே துன்பத்தின் எல்லையை அடைந்து, பிராட்டிமார் நிலையைப் பெற்று, கூடுவது பிரிவது ஊடுவதாம்படியாகி, *"மின்னிடைமடவா"ரில் நம்மாழ்வாரைப் போலவும், /"காதில் கடிப்"பில் திருமங்கையாழ்வாரைப் போலவும் பாசுரம் அருளிச் செய்கிறார் "ஏர்மலர்" என்னும் ஆறும் திருமொழியில். "ப₄க₃வத்₃விஷயத்தை அநாதி₃காலமாக இழந்திருக்கிறோமே" என்கிற வருத்தம் தலையெடுக்கையாலே, பிள்ளைப்பிராயத்தில் அநுப₄வங்களையெல்லாம் இழந்த தே₃வகி, கம்ஸவத₄த்திற்குப் பின் கண்ணனைக் கண்டவுடன் தான் இழந்ததையெல்லாம் சொல்லிப் புலம்பிய பாசுரத்தாலே, தான் அநாதி₃காலமாக இழந்ததனால் ஏற்பட்ட வருத்தத்தை வெளிப்படுத்துகிறார் "ஆலைநீள்" என்னும் ஏழாம் திருமொழியில், தே₃வகீ பா₄வனையில் இப்படிப்பாடிய பின்பு, ஸ்ரீகௌஸல்யா பா₄வனையை அடைந்து, திருக்கண்ணபுரத்திலே ஸ்ரீராமனுக்குத் தாலாட்டுப்பாடுகிறார் "மன்னுபுகழ்" என்னும் எட்டாம் திருமொழியில். கௌஸல்யா பா₄வனையில் இப்படி அநுப₄வித்த பின்பு தசரத பா₄வனையை அடைந்தவராய், "இளமையில்

* திருவாய் 6-2. / பெரியதிருமொழி 10-8.

அநுப₄வித்த இராமனுடைய யௌவநப் பருவ வீர சரித்திரங்களை அநுப₄விக்க முடியாதபடி நானே அவனைக் காட்டிற்கு ஓட்டும்படி ஆகிவிட்டதே" என்னும் "தசரதன் புலம்பல்" பாசுரத்தின் மூலம் தன் இழவைப் பேசுகிறார் "வன்தாளினிணை" என்னும் ஒன்பதாம் திருமொழியில். கீழ்த் திருமொழிகளில் பிறந்த இழவுகள் எல்லாம் தீர, சக்ரவர்த்தித் திருமகன் நித்யவாஸம் பண்ணுகிற திருச்சித்திர கூடமாகிற திருப்பதியிலே, திருவவதாரம் தொடங்கித் தன்னடிச் சோதிக்குச் சென்றது ஈறாக, ஸ்ரீவால்மீகி ப₄க₃வான் பேசி அநுப₄வித்தாற்போலே தம்முடைய ஞானத் தெளிவாலே ஸமகாலத்திற்போலே அநுப₄வித்துப் பிரபந்தத்தைத் தலைக்கட்டுகிறார் "அங்கணெடு மதிள்" என்னும் பத்தாம் திருமொழியில். இப்படிச் சக்ரவர்த்தித் திருமகனாகிற பெருமாளிடமே தம் வாழ்க்கையிலும், ப்ரப₃ந்த₄த்திலும் மிகுந்த ஈடுபாட்டைக் காட்டுகையாலே, "குலசேகரப் பெருமாள்" என்று வழங்கப்படுபவரானார். x "படியாய்க்கிடந்துன்பவளவாய் காண்பேனே" என்று—எம்பெருமானை அநுப₄வித்துக் கைங்கர்யம் செய்யும்போது தமக்கு ப்ரத₄ாந போ₄க₃மில்லை என்பதை "படியாய்க்கிடந்து" என்றும், அவனுக்கே ப்ரத₄ாநபோ₄க₃ம் என்பதை "உன்பவளவாய்" என்றும், அவனுடைய போ₄க₃த்தை வளர்ப்பதற்குறுப்பான அப்ரத₄ானபோ₄க₃ம் தமக்கு உண்டு என்பதை "காண்பேனே" என்றும் ப்ராப்யத்தை நிஷ்கர்ஷித்துத் திருவேங்கடமுடையானிடம் பிரார்த்தி₂க்கையாலே ப₄க₃வத்ஸன்னிதி₄கள் எல்லாவற்றிலும் எம்பெருமான் திருமுன்பேயுள்ள வாயிற்படி குலசேகரன்படி என்று வழங்கப்படுகிறது.

ஸ்ரீ குலசேகரப் பெருமாள் வைபவம் நிறைவு பெற்றது.

ஸ்ரீ குலசேகரப் பெருமாள் திருவடிகளே ஶரணம்.



x பெரு·திரு 4·9.

# திருமழிசைப்பிரான் வைபவம்



திருமழிசைப்பிரான் — திருமழிசை

மக$_2$ாயாம் மகரே மாஸே சக்ராம்ஶம் ப$_4$ார்க்க$_3$வோத்$_3$ப$_4$வம்।
மஹீஸாரபுராதீ$_4$ஶம் ப$_4$க்திஸாரமஹம் ப$_4$ஜே ||

[தையில் மகத்தன்று சக்கரத்தாழ்வானின் அம்சமாக ப$_4$ார்க்க$_3$வ மஹர்ஷிக்குப் பிறந்தவராய், திருமழிசைக்குத் தலைவரான ப$_4$க்திஸாரர் என்னும் திருமழிசையாழ்வாரிடம் நான் ப$_4$க்தி செலுத்துகிறேன்.]

*ஶ*க்திபஞ்சமயவிக்$_3$ரஹாத்மநே / *ஶ*ுக்திகாரஜதசித்த ஹாரிணே |
முக்திதா$_3$யகமுராரிபாத$_3$யோர் ப$_4$க்திஸாரமுநயே நமோ நம: ||

[ஐந்து *ஶ*க்திகள் எனப்படும் அப்ராக்ருதமான பஞ்சபூ$_4$தங்களாலான (பரமபுருஷனுடைய) திருமேனியை உள்ளே உடையவரும், சிப்பியில் வெள்ளிபோல் (காண்பார்) நெஞ்சை ஈர்ப்பவரும் (*ஶ*ுக்திஹாரனிடமிருந்து வெல்லப்பட்டதாய், மார்பில் த$_4$ரிக்கப்படும் ஹாரத்தையுடையவரும் என்று பாட$_2$பே$_4$த$_3$ம்), முக்தியளிக்கும் முராரியின் திருவடியிணைகளில் ப$_4$க்தியின் ஸாரமாயிருப்பவருமான முனிவருக்கு என்றும் நமஸ்காரம்.]

ஸித்$_3$த$_4$ார்த்தி$_2$ந்யுஷ்ணரஶ்மெள மகரமதி$_4$க$_3$தே
த்$_3$வாபரே ஜ்ஞாநத$_4$ாரா-
க்ஷோதே$_3$ ஸம்வத்ஸரௌகே$_4$ க$_3$தவதி ச தி$_3$நே
ஸப்தவிம்ஶே மக$_2$ாக்$_2$யே |
நக்ஷத்ரே ப$_4$ாநுவாரே முநிவரதநயோ ப$_4$க்திஸாரோ முநீந்த்$_3$ர:
ஶ்ரீமாந் ப்ராபாவதாரம் ஜக$_3$து$_3$பக்ருதயே
பர்வணேऽந்யேத்$_3$யுரத்ர ||

[சென்ற துவாபரயுகத்தில் 'ஜ்ஞாநத$_4$ாராக்ஷோத$_3$' என்னும் பத$_3$த்தின் எழுத்துக்களால் கடபயாதி$_3$ ஸங்க்$_2$யைப்படி ஏற்பட்ட 862900 வருஷங்கள் சென்ற பிறகு ஸித்தார்த்தி வருஷத்தில், சூரியன் மகரராசியை அடைந்தவுடன் (அதாவது தை மாதத்தில்), இருபத்தேழு தேதிகளும் கழிந்தபின், மகம் என்னும் பெயருள்ள நட்சத்திரத்தில், ஞாயிற்றுக்கிழமையில் பூர்ணிமைக்கு மறுதினம், இந்தத் திருமழிசையிலே, (ப$_4$ார்க்க$_3$வ) மஹரிஷிக்குத் திருக்குமாரராய், ஞானவைராக்யச் செல்வங்களையுடையவராய், ப$_4$க்தியே வடிவெடுத்தது போலிருக்கையாலே ப$_4$க்திஸாரர் என்று பெயர்பெற்றவரான முனிவர் தலைவர் உலகங்களுக்கு உதவுவதற்காகத் திருவவதாரம் செய்தருளினர்.]

முற்கூறிய தனியன்களிலும், வைப$_4$வ *ஶ்*லோகத்திலும் முன்னோர்கள் அநுஸந்தி$_4$த்த ரீதியில் சென்ற துவாபரயுக$_3$த்தில் 862900 வருடங்கள் கழிந்த பின்பு ஸித்$_3$த$_4$ார்த்தி$_2$ வருடத்தில்


/ (பா) ஶுக்திஹாரஜிதசித்தஹாரிணே.

தை மீ 28உ கிருஷ்ணபக்ஷ ப்ரதமையில் மக நக்ஷத்திரத்தோடு கூடிய ஞாயிற்றுக்கிழமையில் பார்க்கவமஹர்ஷிக்குத் திருக் குமாரராய் அவதரித்தவர் திருமழிசையாழ்வார். இவருடைய வைபவம் குருபரம்பரை முதலான நூல்களில் உள்ளபடி எழுதப்படுகிறது.

முன்னொரு காலத்தில் அத்ரி, வஸிஷ்டர், ப்ருகு, பார்க்கவர், புலஸ்த்தியர், அங்கிரஸ் முதலிய ப்ரஹ்ம ரிஷிகள் பலரும் ஸத்யலோகத்தையடைந்து, உலகின் தலைவனை நான்முகனை அடிதொழுது, "உலகில் தவம் இயற்றுவதற்குத் தலைசிறந்த இடம் எது?" என்று வினவினர். உடனே பிரமன் தேவசிற்பியான விச்வகர்மாவை வரவழைத்து, ஒரு துலாக் கோலின் ஒரு தட்டில் பூமியின் மற்றப் பகுதிகளையும், மற்றொரு தட்டில் திருமழிசை என்னும் தலத்தையும் வைத்து நிறுக்கச் சொல்ல, அவன் அவ்வண்ணமே செய்தபோது, திருமழிசையை வைத்த தட்டு கனம் மிகுதியாலே தாழ்ந்து நிற்க, மற்றைத்தட்டு இலேசுபட்டு மேல் ஓங்கி நிற்பதைக்கண்டு உலகில் திருமழிசையே தலைசிறந்த தலம் என உணர்ந்து, நான்முகனிடம் விடைகொண்டு தவம் செய்வதற்காகத் திருமழிசைக்குச் சென்றனர். இவ்விஷயம் "உலகும் மழிசையும்" என்னும் திருச்சந்தவிருத்தத் தனியனில் உணர்த்தப்படுகிறது. அவ்விடத் தில் தவம் புரிந்த மஹர்ஷிகளில் பார்க்கவர் என்கிற முனிவர் தலைவர் தீர்க்கஸத்ரம் என்னும் பெரிய வேள்வியைச் செய்து ஸ்ரீமந்நாராயணனை ஆராதித்து, பின்பு அவனைக் குறித்துப் பெருந்தவம் இயற்றுகையில், அதனைக்கண்டு தன் பதவிக்கு ஆபத்து வருமோ என்று அஞ்சிய இந்திரன், அரம்பை, மேனகை, ஊர்வசி, திலோத்தமை முதலிய அப்ஸரஸ்த்ரீகளை அவர் தவத்தைக் கெடுக்க ஏவினன். அவர்கள் பலவாறு முயன்றும் எம்பெருமானுடைய திருவடித்தாமரைகளில் ஈடுபட்ட அவருடைய நெஞ்சை ஈர்க்க இயலாமல் வெட்கமும், அச்சமும் கொண்டு மீண்டு சென்றனர். ஆனால் அவர்களில் மிக வல்லமையுடைய கனகாங்கி என்னும் கட்டழகி, காமத்தை வளர்க்கும் தென்றல், திங்கள் (சந்திரன்) முதலானவற்றைத் துணைகொண்டு அம்முனிவர் முன்னிலையில் ஆடல் பாடல் முதலானவற்றைச் செய்ய, பகவத்ஸங்கல்பத்தால் அம்முனிவர்

அவளிடம் தம் நெஞ்சைப் பறிகொடுத்தார். அவளைக்கண்டு காமுற்று யோகம்விட்டு போகம் விரும்பிச் சிலகாலம் தம்மை மறந்து அவளிடம் வசப்பட்டிருந்தார். அக்காலத்தில் கருவுற்ற அவளது வயிற்றிலிருந்து, ஸுதர்ஶநம் என்னும் திருவாழி யாழ்வானின் அம்ஶமாக, முற்கூறியபடி தையில் மகத்தில் ஒரு பிண்டரூபமாகக் குழந்தை பிறந்தது. அக்காரணத்தாலேயே அவள் அதை வெறுத்து ஒரு பிரப்பம் புதரில் எறிந்துவிட்டுத் தன்னுலகம் சென்று விட்டாள். பின்பு தம் வஶமடைந்த பார்க்கவ முனிவர் தாம் நிலைதவறியது குறித்து வருந்தி மீண்டும் தவம்புரியத் துவங்கினர். இது நிற்க; பிரப்பம் புதரில் எறியப் பட்ட ருஷிகர்ப்பமான பிண்டம் விரைவிலேயே ஓர் ஆண் குழந்தை வடிவமாகப் பரிணமித்து உயிர்பெற்றுப் பசிதாகங் களாலே தனியே அழுதுகொண்டிருக்க, அந்தத் தலத்தில் கோயில்கொண்டு எழுந்தருளியிருக்கிற ஜகந்நாதப் பெருமாள் பிராட்டியுடன் எழுந்தருளி, அக்குழந்தையைக் குளிரக் கடாக்ஷித்து, அதன் பசிதாகங்களைத் தவிர்த்து, ஆராவமுதான தமது திருமேனியைக் காட்டித் தேற்றி மறைந்து செல்ல, பெருமானது பிரிவை ஆற்றாமல் அக்குழந்தை மீளவும் மிகுதியாக அழத்தொடங்கிற்று. அச்சமயத்தில் அங்கு பிரம்பறுக்கவந்த திருவாளன் என்னும் பிரம்பறுப்பான் அக்குழந்தையைக் கண்டு பெருமகிழ்ச்சிகொண்டு வீட்டிற்கு எடுத்துச்சென்று, பிள்ளை யில்லாதிருந்த தன்மனைவி பங்கயச்செல்வியிடம் கொடுக்க, அப்பிள்ளையின்பால் உண்டான பேரன்பினால் அவளுக்கும் பால் சுரக்க, அக்குழந்தை அதனையும் பருகாமல் பசிதாகம் இல்லாமல் உலகப் பொருள்களில் ஒட்டற்று, பகவத்குணங்களே தாரகமாய் மல மூத்ராதிகள் அற்ற பரிஶுத்தமான திருமேனியோடு ''அப்ராக்ருத ஶரீரமோ இது!'' என்று அனைவரும் அதிஶயிக்கும்படி வளர்ந்து வந்தது.

''உண்ணும் சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையுமெல்லாம் கண்ணன் எம்பெருமான்'' என்ற நம்மாழ்வாரைப்போலே வளர்ந்து வந்த இக்குழந்தையைப்பற்றிக் கேள்விப்பட்ட அவ்வூரில் உள்ள வயது மிகுந்த வேளாளன் ஒருவன் தனது மனைவியோடு இவரைக்காண வந்து, தான் காய்ச்சிக் கொண்டு வந்திருந்த பசுவின்பாலை அமுது செய்தருளும்படி பிரார்த்தித்

தான். அவரும் இவர்களுடைய ப₄க்திக்கு இரங்கி அமுது செய்தருளினர். அந்த த₃ம்பதிகள் தினந்தோறும் இவருக்குப் பால்காய்ச்சி ஸமர்ப்பித்துக் கொண்டிருந்தார்கள். பிள்ளையில்லா திருந்த அவர்களுடைய குறையைத் தீர்க்கத் திருவுள்ளம்பற்றிய ப₄ார்க்க₃வ குமாரரும், ஒருநாள் அவர்கள் ஸமர்ப்பித்த பாலில் தாம் உண்டு மிகுந்ததொரு பகுதியை அவர்களை உண்ணச் செய்தார். அதனைப்பருகியவுடன் அவர்கள் முதுமை நீங்கப் பெற்று இளமை அடைந்தனர். அப்பாலின் மகிமையாலே அவர்களுக்கு ஒரு குழந்தை பிறந்தது. அக்குழந்தைக்குக் கணிகண்ணன் என்று பெயர் வைத்து அன்போடு வளர்த்து, ப₄ார்க்க₃வ குமாரர் முன்னிலையிலே கொண்டுவந்துவிட, அவரது கடாக்ஷத்தாலே நல்லறிவு பெற்ற கணிகண்ணன் அவருக்கு ஶிஷ்யனாகி ப₄ாக₃வத நிஷ்ட₂னாய் விளங்கினான்.

ப₄ார்க்க₃வ குமாரர் ஏழு பிராயமளவும் பிரம்பறுப்பானிடம் இருந்து வளர்ந்து, பின்பு அஷ்டாங்க₃ யோக₃த்தால் முழுமுதற் கடவுளை அடைய விரும்பிப் பல தலங்களுக்குச் சென்று, வேதத்தை ஒப்புக்கொள்ளாத புறச்சமயங்கள், வேதத்தை ஒப்புக்கொண்டும் அதற்கு அவப்பொருள் கூறும் குத்₃ருஷ்டி மதங்களான அகச்சமயங்கள் ஆகிய ஒவ்வொரு மதத்திலும் அந்தந்த மதத்திற்குத் தக்க ஒழுக்கத்தோடு அவற்றில் ஊன்றி நின்று ஆராய்ந்து பார்த்து, அவற்றிலுள்ள குறைபாடுகளைக் கண்டு அவற்றிலிருந்து விலகி, கடைசியில் சைவ சமயத்தைச் சார்ந்து நின்று ஆராய்ந்து கொண்டிருந்தார்.

அப்போது முதலாழ்வார்களில் மூன்றாமவரான பேயாழ்வார் ப₄ார்க்க₃வ குமாரரைப்பற்றிக் கேள்விப்பட்டு அங்கு எழுந் தருளி, அவரைச்சீர்திருத்தி ஸ்ரீவைஷ்ணவராக்குவதற்காக அவர் இருக்குமிடத்திற்கு அருகிலேயே ஓர் ஆஶ்ரமத்தை அமைத்துக் கொண்டார். அதில் சில செடிகளைத் தலைகீழாக நட்டு, ஓட்டைக்குடத்தை அறுந்த தாம்பால் கட்டிக் கிணற்றிலிருந்து நீர் எடுத்து, அந்தச் செடிகளுக்கு நீர் வார்க்கத் தொடங்கினர். பரிஹஸிக்கத்தக்க அச்செயலைக்கண்ட ப₄ார்க்க₃வகுமாரர் பெரிதாகச் சிரித்து "இச்செயலைச் செய்யும் நீர் பித்தரோ பேயரோ?" என்ன, அதைக் கேட்ட பேயாழ்வார், 'நான்

செய்யும் செயல் பித்தர்செயல் என்னில், நீர் செய்யும்செயல் பெரும்பித்தர்செயலன்றோ' என்றார். அது என்ன? என்று மழிசையார் கேட்க, "உலகையெல்லாம் படைத்தளித்தழிக்கும் முழுமுதற்கடவுள் ஸ்ரீமந்நாராயணனே என்பது நாலுவேதங் களிலும், மநு முதலான ஸ்ம்ருதிகளிலும், ஸ்ரீராமாயணம் மஹா பாரதம் முதலான இதிஹாஸங்களிலும், உலகமெல்லாம் கொண்டாடும் ஸ்ரீவிஷ்ணுபுராணம் முதலான ஸாத்விக புராணங் களிலும் ஆயிரக்கணக்கான வாக்யங்களிலே முழங்கப்பட்டிருக்க, அப்பிரமாணங்களிலே உற்பத்திவிநாசங்கள் (ஆக்கமும், அழிவும்) உள்ளவனுகப் பேசப்பட்டிருக்கும் சிவனைப் பற்றிநின்று மோக்ஷமடைய எண்ணி முயல்வது பெரும்பித்தர் செயலன்றோ. அறுதல் தாம்பால் ஓட்டைக் குடத்தைக்கொண்டு நீர் வார்க்கப் பெற்ற இத்தலைகீழான செடி தளிர்க்குமன்று கிடீர், நீர் சிவனிடமிருந்து மோக்ஷத்தைப் பெறுவது!" என்று பேயாழ்வார் கூறினார். அதன்மேல் இருவர்க்கும் வாதம் ஏற்பட, முற்கூறிய ஆயிரக்கணக்கான வசநங்களையும், நியாயங்களையும் காட்டிப் பேயாழ்வார் மழிசையாரை வெற்றிகொண்டு, மனம் திருந்திய அவருக்குப் பஞ்ச ஸம்ஸ்காரங்களோடு மந்த்ரார்த்தங்களையும் உபதேசித்தார். அதுமுதல் பரம வைஷ்ணவரான திருமழிசை யாழ்வார் "சாக்கியங்கற்றோம் சமண்கற்றோம் சங்கரனார், ஆக்கிய ஆகமநூல் ஆராய்ந்தோம்—பாக்கியத்தால், செங்கட் கரியானைச் சேர்ந்தோம் யாம் தீதிலமே எங்கட்கரியதொன்றில்" என்று அநுஸந்தித்துக்கொண்டு திருமழிசைக்கு வந்து யோகநிலையில் நின்று திருமகள் கேள்வனை த்யானித்துக்கொண்டிருந்தார். அந்நாட்களில் ஒருநாள் ருஷபவாஹனத்தில் ஏறி, பார்வதியும் சிவனும் ஆகாய மார்க்கமாய்ச் செல்லுகையில், உமாதேவி இவருடைய தேஜஸ்ஸைக் கண்டு வியப்புற்று 'இவர் ஆர்?' என்று வினவ, சிவபிரான் "இம்மஹாநுபாவர் நம் அடியாராய் இருந்து இப்போது நம்மைவிட்டு நாராயணனுக்கு அடிமைப் பட்டிருப்பவர்" என்று சொன்னவுடன், அம்பிகை "அத்தகைய பெரியவனுக்கு. நாமும் காட்சி தந்து ஏதேனும் வரமளித்துச் செல்வோம்" என்று கூற, அவள் விருப்பப்படி திருமழிசைப் பிரான்முன் தோன்றினார் முக்கட்பிரான். திருமழிசையார் சிவனைப் பார்த்தும் பாராதவர்போல் உபேக்ஷித்து, ஒரு கந்தைத்

துணியைத் தைத்துக்கொண்டு வீற்றிருந்தார். இதைக்கண்ட உமாபதி "உனக்கு அருள்செய்ய வந்த நம்மை, நீ அநாத₃ரம் செய்வது தகுதியோ?" என்று கேட்க, மழிசைப்பிரான் "உம்மால் ஆகவேண்டுவது எனக்கு ஒன்றுமில்லையாதலால் நான் உதா₃ஸீநனாய் இருந்தேன்" என்று உரைத்தார். அதற்குப் பின்பும் சந்த்₃ரஶேக₂ரர் 'நம் வரவு வீண்போகக்கூடாது. நீ விரும்பிய வரத்தைப்பெற்று வாழ்வாய்" என்று நிர்ப்ப₃ந்த₄மாகக்கூற, அதுகேட்ட ஆழ்வார் "மோக்ஷலோகமான பரமபத₃த்தை அருளவல்லீராகில் அருள்வீர்'' என்று கேட்டார். அதற்கு மஹாதே₃வர் "அது நம்மால் இயலாது, மோக்ஷத்தைத் தரவல்லவன் முகுந்த₃னே. அதுதவிர வேறுவரம் வேண்டுவாய்" என்று கூற, திருமழிசையாழ்வார் புன்முறுவல் செய்து "அந்த முக்தியைப் பெறுவதற்கு ஸாத₄னங்களை அநுஷ்டி₂ப்பதற்கு உறுப்பாக நீண்ட ஆயுளையேனும் எனக்குத்தரவேணும்" என்று வரம் கேட்டார். அதுகேட்ட கைலாசநாதர் "அது கர்மானுகு₃ணமாக ஏற்கனவே வரம்புகட்டப்பட்டுவிட்டது. அதை வளரச்செய்ய என்னாலாகாது, வேறு வரம் வேண்டுவாய்" என்று விளம்பினார். திருமழிசைப்பிரான் இகழ்சி தோன்ற நகைத்து, "நான் துணிதைக்கும் இந்த ஊசியின்பின்னே நூல்வரும்படி வரம் தந்தருளீர்" என்னும் பரிஹாஸ வார்த்தையைச் சொல்ல, அதுகேட்டுக் கடும் சினம் கொண்ட கண்ணுதலோன் 'செருக்குடைய உன்னை அனங்க₃னைப்போலே இப்போதே பொசுக்கி விடுகிறேன் பார்" என்று கூறி நெற்றிக்கண்ணைத் திறந்துவிட, அதிலிருந்து ஊழிகால நெருப்புப்போலே அக்₃னி கிளர்ந்து எழுந்தது. இது கண்ட திருமழிசைப்பிரான், "இந்திரன்போல் உடல் முழுதும் கண் காட்டினாலும் அஞ்சுவேனல்லேன்'' என்று சொல்லித் தமது வலத்திருவடியில் பெருவிரலில் உள்ளதொரு கண்ணைத் திறந்துவிட, அதிலிருந்து ஒரு பெரும் தீ எழுந்து ஊழிகால நெருப்பினும் பலமடங்கு பெரியதாகி, நெற்றிக்கண்ணிலிருந்து கிளர்ந்த நெருப்பை அடக்கி, முக்கண்ணனையும் சுடத்தொடங்கிற்று. அதுகண்ட க₃ங்கா₃த₄ரர் அத்தீயிலிருந்து தப்புவதற்காகத் தன் சடையிலிருந்த பல மேக₄ங்களை ஏவி ஊழிகாலத்திற்போலே மழை பொழியும்படி நியமித்தார். அவ்வண்ணமே அம்மேகங்களும்

மழை பொழிந்ததனால் பெருவெள்ளம் ஏற்படவும், பரம பா₄க₃வதரான திருமழிசையாழ்வார் சிறிதும் அசையாமல் எம்பெருமானை த்₄யானித்துக்கொண்டு வீற்றிருந்தார். அதைக் கண்ட திரிபுராந்தகர் ஆழ்வாருக்கு "ப₄க்தி ஸாரர்" என்று விருது அளித்து அவரை மிகக்கொண்டாடிக் கைலாயம் சேர்ந்தார். இந்த வ்ருத்தாந்தத்தை ஆழ்வாரே

*"பிதிருமனமிலேன் பிஞ்ஞகன் தன்னோடெதிர்வன்*
*அவன் எனக்கு நேரான்"* [நான்-திருவ 84]

*"மற்றுத் தொழுவார் ஒருவரையும் யானின்மை*
*கற்றைச் சடையான் கரிக்கண்டாய்"* [நான்-திருவ 26]

என்னும் தமது பாசுரங்களில் உணர்த்தியிருக்கிறார்.

அதற்குப்பின் ஆழ்வார் முன்போலவே யோக₃த்தில் எழுந்தருளியிருக்கையில், *ஶா*க்திஹாரன் என்னும் ஸித்₃த₄ புருஷன் ஒருவன் தன் அஷ்டமஹாஸித்₃தி₄யின் வலிமையாலே ஒரு புலியை அடக்கி அதை வாஹனமாகக்கொண்டு ஆகா*ஶ*த்தில் சென்று கொண்டிருந்தான். இவர் தலைக்குமேல் செல்லுகையில், இவருடைய யோக₃ப்ரப₄ாவத்தாலே அந்த வாஹனம் தடைபட்டு நின்றுவிட்டது. இதன் காரணத்தை ஆராய்ந்த அவன், கீழே ஒரு யோகி₃ இருப்பதைப் பார்த்து வியப்புற்று, அவருடைய *ஶ*க்தியைச் சோதிப்பதற்காகக் கீழே இறங்கி, "முனீந்திரரே! நீர் உடுத்திருக்கும் கந்தைத் துணியை எறிந்து விட்டு இந்தப் பீதாம்ப₃ரத்தை உடுத்தும்" என்று அக்கணத்தி லேயே தன்னால் உண்டாக்கப்பட்டதொரு பொன்னாடையை ஆழ்வாரிடம் நீட்டினான். அதைத் திரஸ்கரித்த ஆழ்வார், தம் ஸங்கல்ப மாத்திரத்தாலே மாணிக்கமயமானதொரு கவசத்தை உண்டாக்கி அவனிடம் காட்டினார். ஸூர்யன்போல் ஒளிவீசும் அதைக்கண்டு வெட்கம் அடைந்த புலிவாஹனன், தன் கழுத்தில் இருந்ததொரு மணிமாலையை எடுத்து "இதனை ஜபமாலையாக த₄ரித்துக்கொள்ளும்" என்று கொடுக்க முற்பட, மழிசைக் கிறைவர் தம் கழுத்திலிருந்த துளஸிமணிமாலைகளையும், தாமரை மணிமாலைகளையும் எடுத்துக் காட்டினார். அவை மிகச்சிறந்த நவரத்னமாலைகளாக விளங்கக்கண்ட வ்யாக்₄ரவாஹனன் மிகவும்

வெட்கப்பட்டு "எல்லாச் சித்தர்களையும் வென்று வந்த என்னை நீர் வென்றதனால் உம்மைக்காட்டிலும் சிறப்புடைய ஸித்₃த₄ புருஷன் உலகெங்கிலும் இல்லை" என்று சொல்லித் துதித்து ஆழ்வாரைப் பிரதக்ஷிண நமஸ்காரங்களைச்செய்து வேறுவழியாகச் சென்றுவிட்டான். மேலும் அவர் அங்கு யோகம் செய்து கொண்டிருக்கையில், 'கொங்கண ஸித்தன்'' என்னும் ரஸவாதி₃ ஒருவன் அவர் பெருமையைக் கேள்வியுற்று அவரிடம் வந்து, கோடி இரும்பைப் பொன்னாக்கவல்ல ரஸகு₃ளிகையைக் காட்டி "இதைப்பெற்று மகிழ்வீர்'' என்ன, அதுகேட்ட மழிசைப் பிரான் அதை விலக்கி, தமது பொன்னொத்த மேனியின் புழுதியை எடுத்துத் திரட்டி ''இக்கு₃ளிகை பலகோடிக் கற்களைப் பொன்னாக்கவல்லது. இதைக்கொண்டு நீ பிழைத்துப் போ'' என்று கொடுக்க, அவன் அதனை உடனே பரிசோதித்துப் பார்த்து அப்படியே இருக்கக் கண்டு பெருவியப்புற்று, ஆழ்வாரைத் தண்டனிட்டுச் சென்றான். இந்த வ்ருத்தாந்தங்களிலிருந்து, எம்பெருமான் அருளாலே ஆழ்வாருக்கு எல்லா ஸித்₃தி₄களும் கைவந்திருந்தன என்றும். ஆழ்வார் அவற்றை ஒரு பொருளாக மதிக்கவில்லை என்றும் விளங்குகிறது. அதற்குப்பின் இப்படிப் பிறரால் இடையூறுகள் நேராமல் இருப்பதற்காகத் திருமழிசையை விட்டுப் புறப்பட்டு ஒரு மலைக்குகையில் இருந்து ஆழ்வார் யோகா₃ப்₄யாஸம் செய்து கொண்டிருக்கையில், தி₃வ்ய தே₃ஶயாத்ரை செய்து கொண்டு வருகிற முதலாழ்வார்கள் மூவரும் அவ்விடத்தை அடைந்து, உள்ளே எழுந்தருளியிருக்கிற இவருடைய திருமேனியொளியை வெளியிலிருந்து கண்டு வியப்புற்று, மலைமுழைஞ்சில் புகுந்து குஶலப்ரஶ்நம் பண்ண, அவரும் விரைவில் எழுந்து தண்டனிட்டுக் குஶலப்ரஶ்நம் செய்தார். நால்வரும் தேனும் பாலும் கன்னலும் அமுதுமொத்துக்கூடி அங்கேயே சில காலமிருந்து, எம்பெருமானுடைய கு₃ணங்களை ஒருவர்க்கொருவர் கூறுதல், கேட்டல், சிந்தித்தல், துதித்தல், அநுப₄வித்தல் முதலியன செய்துகொண்டு தவம் செய்திருந்தார்கள். அதன்பிறகு நால்வரும் பேயாழ்வாருடைய திருவவதார ஸ்த₂லமான மாடமாமயிலைக்கு வந்து, அவ்வாழ்வார் அவதரித்த அல்லிக் குளக்கரையில் சில ஆண்டுகள் யோக₃ம் செய்தபின்னர் முதலாழ்வார்கள் மூவரும் தி₃வ்ய தே₃ஶயாத்திரைக்குப் புறப்பட்டனர்.

அதற்குப்பின் திருமழிசையாழ்வார் திருமழிசைக்குச் சென்று திருமண்காப்புச்சாத்திக் கொள்வதற்காகத் திருமண் வேண்டி வழக்கமான இடத்தில் ஶோதி₄த்தபோது திருமண் கிடைக்காமையாலே கவலையுற்றார். அப்போது திருவேங்கடமுடையான் இவரது கனவிலே தோன்றி "கச்சிவெஃகாவையடுத்த பொற்றாமரைப் பொய்கையிலே திருமண் உள்ளது" என்று அருளிச்செய்ய, இவர் கவலை நீங்கப்பெற்று உடனே அங்கே சென்று திருமண் கண்டு களித்து, எடுத்து வந்து த₄ரித்துக்கொண்டு, திருமழிசையிலேயே ப₄க₃வத₃னுப₄வம் செய்கின்றவராய்ச் சில காலம் கழித்தார். பிறகு மழிசைப் பதியிலிருந்து காஞ்சீபுரத்தைச் சேர்ந்து, அங்கு திருவெஃகாவில் அரவணைமேல் பள்ளிகொண்டிருக்கிற பெருமாளுக்குத் தொண்டு செய்துகொண்டு பல வருஷங்கள் எழுந்தருளியிருந்தார். அப்போது கணிகண்ணன் வந்து தனது ஆசார்யரான இவர்க்குப் பலவிதமாகத் தொண்டு செய்துகொண்டு உஞ்சவ்ருத்தி செய்து வாழ்க்கையை நடத்தி வந்தான். அக்காலத்தில்—தலை நரைத்து, உடல் தளர்ந்து, பருவம் முதிர்ந்த கிழவி ஒருத்தி திருமழிசையாழ்வார் உள்ள இடத்தில் திருவலகிடுதல், மெழுகுதல், கோலமிடுதல் முதலான கைங்கர்யங்களை தினந்தோறும் செய்து கொண்டிருந்தாள். ஒருநாள் அவர் திருக்கண்விழித்த காலத்திலே அவரைச் சரணடைந்து வரம் கேட்டு, தே₃வப்பெண்போலே மாறாத இளமையை உடைய ஸௌந்த₃ர்யத்தைப் பெற்றாள். அந்நகரத்து அரசனான பல்லவராயன் அவளுடைய வடிவழகைக் கண்டு காதலுற்று, ஏராளமான ஆடை ஆப₄ரணம் முதலானவற்றைப் பரிசாகக்கொடுத்து அவளை மணம் புணர்ந்து பட்டமஹிஷியாக்கிக்கொண்டு அவளோடு வாழ்ந்துவந்தான். அப்படி வாழ்ந்து வருகையில், தனது இளமை நாளுக்கு நாள் குறைவதையும் அவளது பருவம் மாறாமலிருப்பதையும் கண்டு வியப்புற்று, அதற்குக் காரணத்தை அவளிடம் வினவினான். ஆழ்வாருடைய அருளே காரணம் என்று அவள்வாயிலாக உணர்ந்து அவ்வருளைத்தான் பெறுவதற்கு உபாயத்தைக் கேட்டான். அதற்கு அவ்வணங்கு "தினந்தோறும் நமது அரண்மனைக்கு உஞ்சவ்ருத்திக்கு வருகிற கணிகண்ணர் என்பவர் அந்த யோகிக்கு அந்தரங்க₃ ஶிஷ்யராவர். அவரைப் புருஷகாரமாகக் கொண்டு மழிசைக்கிறைவரை அநுவர்த்தித்தால் நீர் விரும்பியது கிட்டும்" என்று கட்டுரைத்தாள். அவ்வாறே

அரசன் மறுநாள் கணிகண்ணர் வரும்போது அவரை உபசரித்து, "உமது ஆசார்யரை நான் ஸேவிப்பதற்காக இங்கு அழைத்து வரவேணும்" என்று ப்ரார்த்தி₂க்க, அவர் "நம் ஆசார்யர் எங்கும் எழுந்தருளார்" என்று கூறிவிட, அவன் "என்னையாவது அங்கு அழைத்துச் சென்று அவருடைய கருணைக்கு இலக்காக்கி அவரது அருளால் என்னை மாறாத இளமைப் பேறு உடையவனாக ஆக்கவேணும்" என்று வேண்ட, கணிகண்ணர் அதற்கும் உடன்படவில்லை. "உன்னைப்போலே இம்மைப் பயனையே நச்சிநிற்பாரை ஆழ்வார் கண்ணெடுத்தும் காணமாட்டார்" என்றும் கூறிவிட்டார். பின்பு அரசன் வருந்தி நிற்கையில் அமைச்சர்கள் வந்து தேற்றி 'தெய்வப் புலமையுடைய இக்கணி கண்ணன் வாயினால் பாடினாலே பல அற்புதங்கள் நிகழ்கின்றன. இவனால் பாடப்பெற்றால் விரும்பியது கைகூடலாம்' என்று கூறினார்கள். அவ்வண்ணமே மன்னவன் அடுத்தநாள் கணி கண்ணர் வந்தபோது "எனக்கு மாறாத இளமை வரும்படி கவிபாட வேணும்" என்றுகேட்க, அதற்கு அவ்வச்சுதனடியார் "நான் நாராயணனைத் துதிப்பேனேயொழிய 'நாக்கொண்டு மானிடம் பாடேன்'" என்று உறுதியாகச் சொல்லிவிட்டார். அரசன் மேலும் இவரை நிர்ப்ப₃ந்தி₄க்க, கணிகண்ணரும் "ஆடவர்கள் எங்ஙனகல்வாரருள் சுரந்து, பாடகமுமூரகமும் பாம்பணையும் — நீடியமால், நின்றானிருந்தான் கிடந்தான் இதுவன்றோ மன்றார் பொழிற்கச்சி மாண்பு." என்று கச்சி நகரைக் கவிபாட, அரசனும் "நான் என்னைப்பாடு என்றால் நீ நகரைப்பாடுகிறாயே. எனது ராஜ்யத்திலிருந்து நீ வெளியே போ" என்று அதட்டித் துரத்திவிட்டான். உடனே கணிகண்ணன் மழிசைக்கிறைவரையடைந்து, நடந்த செய்தியை விண்ணப்பித்து, "அடியேனுக்கு விடை தந்தருளவேணும்" என்ன, ஆழ்வார் "நானும் பெருமாளை எழுந்தருளப்பண்ணிக் கொண்டு கூட வருகிறேன்" என்று கூறித் திருக்கோயிலினுட் சென்று அடியவர்க்கு எளியவனான எம்பெருமானைத் திருவடிதொழுது,

*கணிகண்ணன் போகின்றான் காமரு பூங்கச்சி*
*மணிவண்ணா நீகிடக்க வேண்டா — துணிவுடைய*
*செந்நாப் புலவனும் போகின்றேன் நீயுமுன்றன்*
*பைந்நாகப் பாய் சுருட்டிக் கொள்.*

என்று வேண்டியவுடன், அவ்வெம்பெருமானும் ஆழ்வார் விரும்பியபடி நாகத்தணையைச் சுருட்டிக்கொண்டு, ஆழ்வார்

பின்னே எழுந்தருளினன். மூவரும் அவ்வூரைவிட்டு அகன்று ஒருநாளிரவு ஓரிடத்தில் தங்கினர்கள். இப்படி எம்பெருமானும், ஆழ்வாரும், அவரடியானும் நீங்கியதால், அவ்வூரிலுள்ள மற்ற ஆலயங்களிலுள்ள தெய்வங்களும் அவர்களைப் பின்தொடர, இராமனைப்பிரிந்த அயோத்திநகர்போலக் கச்சிநகர் வாட்ட முற்றது. பல உத்பாதங்கள் நிகழ்ந்தன. இதுகண்டு கலங்கிய மன்னவனும் மந்திரிகளும் அவர்கள் இருக்குமிடம் தேடிவந்து, கணிகண்ணன் காலிலே விழுந்து கச்சிக்குத்திரும்பி எழுந்தருள வேணுமென்று பிரார்த்தித்தார்கள். கணிகண்ணனும் ஆழ்வாரைப் பிரார்த்திக்க, ஆழ்வாரும் அடியார்க்கு எளியனான அரவணையானை,

> "*கணிகண்ணன் போக்கொழிந்தான் காமரு பூங்கச்சி*
> *மணிவண்ணா நீகிடக்க வேண்டும்—துணிவுடைய*
> *செந்நாப் புலவனும் போக்கொழிந்தேன் நீயுமுன்றன்*
> *பைந்நாகப் பாய்படுத்துக் கொள்"*

என்று பிரார்த்திக்க, அவனும் உடன்பட்டு ஆழ்வாரோடும் கணிகண்ணனோடும் திருவெஃகாவை அடைந்து, ஆழ்வார் சொன்னவண்ணம் செய்த நீர்மை அனைவரும் எக்காலத்திலும் அறியலாம்படி, முன்புபோல் வலத்திருக்கையைக் கீழ்வைத்துக் கொண்டு படுக்காமல், இடத்திருக்கை கீழ்ப்படத் தலைமாடு கால்மாடாக மாறிக் கண்வளர்ந்தருளினன். இப்படி ஆழ்வார் சொன்னவண்ணம் செய்தபடியாலே அப்பெருமானுக்கு "சொன்னவண்ணம் செய்த பெருமாள்" எனத் தமிழிலும், "யதோ₂க்தகாரீ" என்று வடமொழியிலும் அன்று முதல் திருநாமம் வழங்கலாயிற்று. அம்மூவரும் ஓர் இரவு தங்கியிருந்த ஊர் "ஓரி(ரவிரு)க்கை" என்று அன்றுமுதல் இன்றளவும் வழங்கப்படுகிறது. அம்மூவரும் திரும்பியபின்பு கச்சிநகரம் முன்போலவே பொலிவுபெற்றது. அரசனும் ப₄ாக₃வதர்களுடைய பெருமையை உணர்ந்து ஆழ்வார்க்கும் கணிகண்ணர்க்கும் அடியானாக வாழ்ந்து பேறு பெற்றான்.

அதன்பிறகு ஆழ்வார் திருக்குடந்தைக்குப் புறப்பட்டார். செல்லும் வழியில் "பெரும்புலியூர்" என்கிற கிராமத்தில் ஓர் அந்தணர் வீட்டுத் திண்ணையில் சிறிது பொழுது களைப்பாறி யிருக்கையில், அவ்வீட்டில் வேதம் ஓதிக்கொண்டிருந்த அந்தணர்கள் அந்த மஹாயோகீஶ்வரர் பெருமையை அறியாமல், வெளித் தோற்றத்திலிருந்து அவரைத் தாழ்ந்த சாதியினராக

அறுதியிட்டு, அவர் செவியில் வேதச்சொல் படக்கூடாதென்று வேதம் ஓதுவதை நிறுத்திவிட்டார்கள். அக்குறிப்பை அறிந்த இவர் அவ்விடத்தைவிட்டு எழுந்திருந்து செல்லத் தொடங்கினார். மறுபடியும் வேதம் ஓதுவதைத் தொடங்க முற்பட்ட அந்தணர்கள், அந்த ப₄ாக₃வதாபசாரத்தாலே, விட்ட இடம் தோன்றாது தடுமாறி நின்றார்கள். அதைக்கண்ட ஆழ்வார் தாம் தம் வாயால் வேத₃த்தை உச்சரிக்கக் கூடாதாகையாலே, அவர்களுக்கு விட்ட இடத்தை நினைவூட்டுவதற்காக, அருகில் இருந்த கருப்பு நெல்லை எடுத்து அதைத் தம்முடைய நகத்தாலே பிளந்து, அச்செயலாலே அவர்களுக்கு விட்ட வாக்கியத்தை உணர்த்தியருளினார். அவர்களும் "க்ருஷ்ணாநாம் வ்ரீஹீணாம் நக₂நிர்பி₄ந்நம்" (யஜுர்-காண்ட 1-8-9) (நகத்தால் உரிக்கப்பெற்ற கருப்பு நெற்களிலுள்ள அரிசி) என்கிற விட்டஇடம் தோற்ற, ப₄க₃வத்₃ ப₄க்தர்களுக்குத் தாழ்ந்த ஜாதி அழிந்துவிடும் என்று உணர்ந்து, ஆழ்வாரைத் தண்டனிட்டு உபசரித்துப் பேறு பெற்றார்கள்.

அப்பொழுது அவ்வூர்த் திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமான் இவர் உபாத₃ானத்திற்காக எந்த எந்த வீதியில் ஸஞ்சரிக்கிறாரோ, அந்தந்த முகமாகத் திரும்பியருளினான். இவ்வாச்சரியத்தை அர்ச்சகர் மூலமாய் அறிந்த அவ்வூரார் அனைவரும், அவ்வூரில் யாக₃ம் செய்துகொண்டிருந்த பெரும் புலியூர் அடிகளிடம் சென்று இவருடைய பெருமையைக் கூற, அதுகேட்ட தீ₃க்ஷிதரும் பேரானந்தம் கொண்டு, ஆழ்வாரை எதிர்கொண்டழைத்து, அவருக்கு அக்₃ரபூஜையும் செய்தார். த₄ர்மபுத்ரருடைய யாக₃த்தில் கண்ணனுக்கு அக்₃ரபூஜை செய்யப் பட்டபோது *சிசு*பாலன் பழித்ததுபோலே, அந்த யாக₃த்தில் அத்₄வர்யு முதலான சடங்கிகள் ஆழ்வாருடைய ஜாதியைப் பார்த்துப் பலவாறு பழிக்கத் தொடங்கினர். அதுகண்ட தீ₃க்ஷிதர் மிகவும் வருந்துவதைக் கண்ட ஆழ்வார் 'இவருக்காகவாவது நம் பெருமையைக் காட்டியே தீரவேணும்' என்று அறுதியிட்டுத் தனக்கு அந்தர்யாமியான அற்புதன் அநந்தசயனனைக் குறித்து,

*"அக்கரங்க ளக்கரங்க ளென்றுமாவ தென்கொலோ*
*இக்குறும்பை நீக்கியென்னை யீசனுக்க வல்லையேல்*
*சக்கரங்கொள் கையனே சடங்கர்வா யடங்கிட*
*உட்கிடந்த வண்ணமே புறம்பொசிந்து காட்டிடே"*

என்று விண்ணப்பம் செய்தருள, எம்பெருமான் அரவத்தமளியோடும் அழகிய பாற்கடலோடும் அரவிந்தப் பாவையும் தானுமாய் இவருடைய திருமேனியிலே அவர்கள் அனைவரும் காணக் காட்சி தந்தருள, பழித்த சடங்கிகள் அனைவரும் எம்பெருமானை ஆழ்வாருடைய திருமார்பிலே கண்ணாரக்கண்டு, அவர் திருவடிகளிலே விழுந்து க்ஷமைகொண்டு, ஆழ்வாருக்கு ப்₃ரஹ்மரத₂ம் பண்ணி கெ₃ளரவித்துத் திருமாலடியாரைப் பூசிக்கும் பேறுபெற்றார்கள். அதற்குப்பின் ஆழ்வாரும் அவர்களுக்குப் பற்பல உபதேசங்களைச் செய்தருளி வாழ்வித்து, செழுமாமணிகள் சேரும் திருக்குடந்தைக்கு எழுந்தருளினார்.

அங்கு சென்றவுடன் தாம் செய்த நூற்றுக்கணக்கான ப்ரப₃ந்த₄ங்களைத் திருக்காவேரி வெள்ளத்திலே எறிந்துவிட, மற்ற ப்ரப₃ந்த₄ங்களெல்லாம் வெள்ளத்தோடு செல்லும்போது, நான்முகன் திருவந்தாதி, திருச்சந்தவிருத்தம் என்னும் இரு தி₃வ்ய ப்ரப₃ந்த₄ங்கள் மாத்திரம் ப்ரவாஹத்தை எதிர்த்துவந்து, ஆழ்வார் திருவடிகளை அடைந்தன. உலகம் உய்வதற்கு அவ்விரு தி₃வ்யப்ரப₃ந்த₄ங்களே போதும் என அறுதியிட்ட ஆழ்வார், பரமஸாத்விகரான முமுக்ஷுக்களுக்கு அவற்றை உபகரித்தருளி உலகை உய்யக்கொண்டார். திருக்குடந்தையில் அரவணைமேல் பள்ளிகொண்டிருக்கும் ஆராவமுதனுடைய ஏரார் கோலத்தையும் கண்டு அவ்வநுப₄வம் உள்ளடங்காமல் "காவிரிக் கரைக் குடந்தையுள் கிடந்தவாறெழுந்திருந்து பேசு." [திருச்சந்த-61] என்று விண்ணப்பம்செய்ய, எம்பெருமானும் ப₄க்தபராதந்த்ரயாலே அர்ச்சாவதார ஸமாதி₄யையும் கடந்து எழுந்திருக்கப் புக, ஆழ்வாரும் அந்த நீர்மைக்குத் தோற்று "வாழி கேசனே" என்று மங்களாசாஸனம் பண்ண, எம்பெருமானும் கிடந்தவாறு எழுந்திருக்க முற்பட்ட அந்த உத்தா₂னஶாயித் திருக்கோலத்துடனே ஸேவை ஸாதித்தருள, அந்த எம்பெருமானுடைய திருமேனியையே த்₄யானம் செய்துகொண்டு பல வருஷங்கள் யோக₃த்தில் எழுந்தருளியிருந்து, அந்த தி₃வ்யதே₃ஶத்திலேயே திருநாட்டுக்கு எழுந்தருளினார். ஆராவமுதன், அர்ச்சாரூபியாகத் திருக்குடந்தையில் எழுந்தருளியிருக்கும் ஆழ்வார் அமுதுசெய்த ப்ரஸாத₃த்தையே அமுதுசெய்வது என்னும் நியமத்தை மேற்கொள்வதன்மூலம் தனது ப₄க்த பாரதந்த்ரியத்தைக் காட்டியருளினான் என்றும், அதனாலேயே திருமழிசையாழ்வாருக்குத் *திருமழிசைப்பிரான்*

என்றும், ஆராவமுதனுக்கு *ஆராவமுதாழ்வார்* என்றும் திருநாமங்கள் வழங்கிவருகின்றன என்றும் பெரியோர்கள் பணிப்பர்.

இனி, இவருடைய தி₃வ்யப்ரப₃ந்த₄ங்களின் ஸாரப்பொருள் கூறப்படுகிறது. இவருடைய தி₃வ்யப்ரப₃ந்த₄ங்கள் ப₄க₃வத் பரத்வத்தை நிர்த்த₄ாரணம்செய்து பா₃ஹ்யகுத்₃ருஷ்டி மதங்களை நிரஸநம்செய்வதிலே ஊற்றமுடையவையாயிருக்கும். அதனாலேயே இவருக்கு "உறையிலிடாதவர்" என்று ஆசார்ய ஹ்ருத₃யத்தில் திருநாமம் சாற்றினர் அழகியமணவாளப் பெருமாள் நாயனர். "வையம்தகளியா" [முதல் திருவ-1] என்றும், "அன்பே தகளியா...ஞானச் சுடர்விளக்கேற்றினேன்" [இர திருவ 1] என்றும், பொய்கை பூதத்தாழ்வார்கள் விளக்கேற்றிக்காட்ட, "திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன்' [மூன் திருவ-1] என்று பேயாழ்வார் தாங்கள் எம்பெருமானை அநுப₄வித்தபடிக்குப் பாசுரம் இட்டருளினராகையாலே முதலாழ்வார்களின் மூன்று திருவந்தாதிகளும் ப₄க₃வத₃நுப₄வ பரமாயிருக்கும். இவர் அவ்வநுப₄வமாகிற பயிருக்குக் களை பிடுங்குகிருர் தமது இரு தி₃வ்யப்ரப₃ந்த₄ங்களாலும். ப₄க₃வத₃னுப₄வத்திற்குக் களையாவது — இதர தே₃வதைகளிடத்தில் பரத்வ பு₃த்₃தி₄பண்ணுகையேயாகும். இந்தக் களையிருந்தால் வைஷ்ணவப் பயிர் வளராதாகையால், "நான்முகனை நாராயணன் படைத்தான்" என்று முதற் பாசுரம் தொடங்கி, "இனியறிந்தேன் ஈசற்கும் நான்முகற்கும் தெய்வம்" என்னும் கடைசிப் பாசுரம் வரையில் முதற்ப்ரப₃ந்த₄மான நான்முகன் திருவந்தாதியிலும். "அன்று நான்முகற் பயந்த ஆதி தேவனல்லையே" [திருச்சந்த-5] "ஒன்றிரண்டு கண்ணினனு முன்னையேத்த வல்லனே" [திருச்சந்த-7] என்று தொடங்கி, "காணிலும்" [திருச்சந்த-69] "குந்தமோடு" [70] "வண்டுலாவு" [71] "போதில் மங்கை"[72] "கேடில் சீர்"[108] "சலங்கலந்த" [113] என்பது ஈருக, சரம ப்ரப₃ந்த₄மான திருச்சந்த விருத்தத்திலும் ஐயம் திரிபற ப₄க₃வத் பரத்வநிர்ணயம்செய்த இவ்வாழ்வார் ஸ்ரீவைஷ்ணவவுலகுக்கு மஹோபகாரகராவார். "தெரித்தெழுதி, வாசித்தும் கேட்டும் வணங்கி வழிபட்டும், பூசித்தும் போக்கினேன் போது" [நான்-திருவ 63] என்று தம் காலக்ஷேப ப்ரகாரத்தை அநுஸந்தி₄க்கும் இவ்வாழ்வாரின் அருளிச்செயல், நமக்குக் காலக்ஷேபத்திற்கு (போதுபோக்கிற்கு) வழிகாட்டியாகக் கொள்ளத்தக்கது.

**திருமழிசையாழ்வார் வைபவம் முற்றிற்று.**

**திருமழிசையாழ்வார் திருவடிகளே சரணம்.**

கோத3ண்டே3 ஜ்யேஷ்ட2நக்ஷத்ரே மண்ட3ங்கு3டி3புரோத்3ப4வம் |
சோளோர்வ்யாம் வநமாலாம்ஶம் ப4க்தபத்3ரேணுமாஶ்ரயே ||

[சோழதே3ஶத்தில் மண்டங்குடி எனும் நகரில் மார்கழி மாதத்தில் கேட்டை நக்ஷத்திரத்தில் 'வைஜயந்தி' எனும் வனமாலையின் அம்ஶமாக அவதரித்த தொண்டரடிப்பொடியாழ்வாரை ஆஶ்ரயிக்கிறேன்.]

சோளக்ஷிதௌ த4நுஷி மாஸி மஹேந்த்3ரதாரே
||ய: ப்ராது3ராஸ முரஜித்3வநமாலிகாம்ஶ: |
†ரங்கே3ஶகேளிஸக2மூர்த்4வஶிக2ம் த்3விஜேந்த்3ரம்
ப4க்தாங்க்4ரிரேணுமநகா4த்மகு3ணம் ப்ரபத்3யே ||

[சோழதேசத்தில் (திருமண்டங்குடியில்) மார்கழி மாதத்தில் இந்திரனை தேவதையாகக் கொண்ட கேட்டைநட்சத்திரத்திலே, பகவானுடைய வநமாலையின் அம்ஶமாய், ஸ்ரீரங்கநாதனுக்கு இனிய தோழராய், (ஊர்த்4வபுண்ட்3ரத்தைப்போல்) உயரநோக்கிய பூர்வசிகையை உடையவராய், அந்தணர் தலைவராய், குற்றமற்ற ஆத்ம கு3ணங்களை உடையவராய் அவதரித்த தொண்டரடிப் பொடியாழ்வாரை ஶரணமடைகிறேன்.]

தே3ஹஶ்ரீஶரது3த்தரே ப்ரப4வநாம்ந்யப்3தே3 கலௌ பா4ஸ்கரே
சாபக்3ராஹிணி பூ4மிஸூநுதி3வஸே ஜ்யேஷ்டா2பி4தே4 ஶ்ரீமதி |
ருக்ஷே க்ருஷ்ணசதுர்த்த3ஶீ திதி2யுதே
ப4க்தாங்க்4ரிரேணுஸ்ஸுதீ4:
ரங்கே3ஶாங்க்4ரி ஸரோருஹைக ஹ்ருத3ய: ப்ராபாவதாரம் பு4வி ||

[கலியுகத்தில் 'தே3ஹஶ்ரீ:' என்ற பதத்தால் கடபயாதி3 ஸங்க்2யைப்படி கிடைத்த இருநூற்றெண்பத்தெட்டு வருடங்கள் சென்றபின் பிரபவ வருஷத்தில், உத3யசூரியன் த4நூ ராசியிலிருக்கும் மார்கழி மாதத்தில், செவ்வாய்க்கிழமையில், கேட்டையென்னும் பெயருடைய அழகிய நட்சத்திரத்தில், கிருஷ்ணபக்ஷ சதுர்த்தசி திதியில், ஸ்ரீரங்கநாதனின் திருவடித் தாமரையிணையையே நெஞ்சிலிறுத்திய தொண்டரடிப்பொடிகள் இப்புவிதனில் அவதரித்தார்.]

|| (பா) ப்ராது3ர்ப3பூ4வ.   † (பா) ரங்கே3ஶகேளிரதம்.

தத்ரோத₃பூ₄த் ‡ப₄ாக₃வதாத் த்₃விஜேந்த்₃ராத்
மாஹேந்த்₃ரபே₄ மாஸி ச மார்க்க₃ஶீர்ஷே।
ஶ்ரீவிப்ரநாராயண நாமதே₄ய:
§முராரிவக்ஷோவநமாலிகாம்ஶ:॥ [தி₃வ்யஸூரிசரிதம்6-5]

[அந்தத் திருமண்டங்குடியில், மார்கழி மாதத்தில் கேட்டை நட்சத்திரத்தில் பரம பாகவதரான அந்தணர் தலைவர் ஒருவருக்குப் புத்திரராய், (ஸ்ரீரங்கநாத பக்தராய்) முராரியின் திருமார்பிலுள்ள வனமாலையின் அம்ஶமாய் ஸ்ரீ விப்ரநாராயணரென்னும் பெயருடையவர் அவதரித்தார்.]

முற்கூறிய தனியன்களிலும், வைப₄வ ஶ்லோகங்களிலும் முன்னோர்கள் அநுஸந்தி₄த்த ரீதியில் கலி பிறந்தபின் 289-ஆவது வருடமான ப்ரப₄வ வருஷத்தில் மார்கழி மாதத்தில் கேட்டை நக்ஷத்திரத்தோடு கூடிய கிருஷ்ணபக்ஷ சதுர்த₃ஶியில் செவ்வாய்க் கிழமையில் சோழநாட்டுத் திருப்பதியான புள்ளம்பூதங்குடிக்கு அருகிலுள்ள மண்டங்குடி என்னும் தொன்னகரத்தில் எம்பெருமானுடைய வநமாலையின் அம்ஶமாய், பூர்வஶிக₂ ஸ்ரீவைஷ்ணவ குலத்திலே அவதரித்தவர் தொண்டரடிப்பொடியாழ்வார். எம்பெருமானுடைய ஜாயமான கால கடாக்ஷத்தாலே இளமைப் பருவம் தொடங்கி ஶுத்₃த₄ ஸாத்விகராயிருந்த இவருக்கு வேதம் வல்ல தந்தையார் 'விப்ரநாராயணன்' என்று திருநாமமிட்டு, சௌளம் உபநயனம் முதலான வைதி₃க ஸம்ஸ்காரங்களை உரிய காலத்திலே செய்வித்து, வேத ஶாஸ்த்ரங்களையும் பயிலுவிக்கையாலே எல்லா ஶாஸ்த்ரங்களையும் இளமையிலேயே கரைகண்ட இவர் நைஷ்டி₂க ப்₃ரஹ்மசாரியாய் இருக்கத் துணிவுகொண்டு அரங்கனூர்க்கு ஆட்செய்ய எண்ணியவராய்த் திருவரங்கத்துக்கு எழுந்தருளினார். அரவரசப் பெருஞ்சோதி அநந்தனென்னும் அணிவிளங்குமுயர் வெள்ளையணையின் மேலே, குடதிசை முடியை வைத்துக் குணதிசை பாதம்நீட்டி, வட திசை பின்பு காட்டித் தென் திசை இலங்கை நோக்கிப் பள்ளிகொண்டருளும் பெரிய பெருமாளைப் பெருங்காதலோடு இவர் ஸேவிக்க, அவரும் "குழலழகர் வாயழகர் கண்ணழகர்" என்று சொல்லப்பட்ட தம்முடைய வடிவழகை யெல்லாம் காட்டி, தம்மிடம் ஒப்பற்ற

‡ (பா) ப₄ாக₃வதோ த்₃விஜேந்த்₃ர:. § (பா) ஸ்ரீரங்க₃ப₄க்தோ.

ப₄க்தி உடையராம்படி கடாக்ஷித்தருளினார். ஸ்ரீவிப்ரநாராயணரும் —புண்ட₃ரீக மஹரிஷியைப் போலேயும், க்ருஷ்ணாவதாரத்தில் மாலாகாரரைப் போலேயும், செண்பக மல்லிகையோடு செங்கழுநீர் இருவாட்சி எண்பகர் பூவும் தொடுத்துச் சாத்திய பெரியாழ்வாரைப் போலேயும், துளவத்தொண்டு செய்யத் திருவுள்ளம் பற்றித் திருநந்தவனம் சமைத்துக் காலந்தோறும் பலவகைப் பூமாலைகளையும், திருத்துழாய் மாலையையும் கட்டி எடுத்துக்கொண்டு வந்து பெரிய பெருமாளுக்கு ஸமர்ப்பித்து வாழ்ந்து வந்தார்.

இவ்வண்ணம் இருக்கையில், வட திருக்காவேரியின் வட கரையிலுள்ள திருக்கரம்பனூர் (உத்தமர் கோவில்) என்கிற திவ்ய தேசத்தில் ஒரு தெய்வப் பெண்ணின் அம்ஸமாகப் பிறந்து ஒப்பற்ற எழில் வாய்ந்த " தே₃வதே₃வி " என்னும் க₃ணிகை (தாசி) ஒருத்தி தமக்கையோடும் தோழிமாரோடும் உறையூருக்குச் சென்று சோழ அரசன் முன்னிலையில் ஆடல் பாடல்களை நிகழ்த்தி, ஏராளமான பரிசுகளைப் பெற்று மீண்டும் வரும்போது, விப்ரநாராயணருடைய பூம்பொழிலில் ஒரு மரத்தடியிலே தங்கினாள். நந்தவனத்தின் அழகிலே ஈடுபட்டுக் கொண்டு அவர்கள் அங்கேயிருக்கையில், எம்பெருமானுக்குப் பூக்கொய்ய வந்த விப்ரநாராயணரையும் கண்டார்கள். உடல் முழுதும் வளர்ந்த மயிரையும் மீசையையும் உடையவராய், பன்னிரு திருமண்காப்பாலும், துளஸீ நளிநாக்ஷ மாலையாலும் அலங்கரிக்கப்பட்ட ப்₃ரஹ்மசாரியான அவர் பூச்செடிகளுக்குப் பாத்திகட்டுதல், நீர் வார்த்தல் முதலான கார்யங்களைச் செய்து கொண்டு, முன்னே நிற்கும் இவர்களைக் கண்ணெடுத்தும் பாராமலிருந்தார். இதைக்கண்ட தே₃வதே₃வி தன் தமக்கையிடம் "இவன் அலியோ? பித்தனோ? நாம் வந்து முன்னே நிற்கும் போதும் காணாது நிற்கிறானே" என்று கேட்டாள். தமக்கையும் "இவர் அலியும் அன்று, பித்தருமல்லர், அரங்கனின் கைங்கர்யத்தில் ஈடுபட்டு மஹா வைராக்₃யமுடைய நைஷ்டி₂க ப்₃ரஹ்ம சாரியாகையாலே, நம்மைப் போன்றவர்களுடைய வடிவழகைக் காறி உமிழ்ந்திருப்பர். நீ இவரை மயக்கிவிட்டாயானால் நான் உனக்கு ஆறுமாதம் தாஸியாக இருப்பேன்" என்று பதிலுரைத்து ஆணையிட்டாள். அதைக்கேட்ட தே₃வதே₃வியும் "இவரை

நான் வசப்படுத்தாவிட்டால் உனக்கு ஆறுமாதம் தாஸி யாவேன்'' என்று பதில் ப்ரதிஜ்ஞை பண்ணித் தன்னுடைய அலங்காரங்களை யெல்லாம் கழற்றிக்கொடுத்துத் தோழிகளையும் தமக்கையையும் அனுப்பிவிட்டு, ஸாத்விக வேஷத்தோடு கூடியவளாய், விப்ரநாராயணருடைய திருவடிகளிலே விழுந்து ஸேவிக்க, அவரும் "பெண்ணே! நீ யார்?'' என்று கேட்க, அவளும் "ஸ்வாமிந்! அடியேன் முன்வினைப்பயனாலே தாஸி குலத்தில் பிறந்தவள்; என் தாயார் என்னைக் குலத்தொழில் செய்து பணம் ஸம்பாதிக்கச் சொல்லி நிர்ப்பந்தப்படுத்தினாள். அடியேன் 'பல பாபங்களைச் செய்து இக்குலத்தில் பிறந்தது போதாமல், மேன்மேலும் பாபங்களைச் செய்து படுகுழியில் விழவேணுமோ ?' என்று சொல்லிப் பணத்தாசை பிடித்த அவளைக் கைவிட்டுப் பெரிய பெருமாளுக்குத் துளவத்தொண்டு செய்யும் உம்மை ஆஶ்ரயித்து உஜ்ஜீவிக்க வந்தேன். வேறு புகலற்ற அடியேன்பால் இரக்கம் கொண்டு, நந்தவனத்தைப் பாதுகாக்கும் கைங்கர்யத்தில் ஏவினால், தேவரீர் மாலை ஸமர்ப்பிக்கக் கோவிலுக்குச் செல்லும் போதும், மாதுகரம் (பிக்ஷை) பண்ண எழுந்தருளும்போதும் இத்தோட்டத்தைக் காத்துநிற்கிறேன்'' என்று கூற, அவரும் இரங்கித் தாம் பிக்ஷை எடுத்துவந்த அமுதைத் தம்முடைய திருவாராதனப் பெருமாளுக்கு அமுது செய்யப்பண்ணித் தாமும் அமுது செய்து, உண்டு மிகுந்த அன்னத்தை இவளுக்குக் கொடுத்துவந்தார்.

அவளும் பூச்செடிகளுக்குப் பாத்திகட்டுதல், நீர் வார்த்தல், அவற்றைக் கண்ணும் கருத்துமாகக் காத்துநிற்றல் முதலான கைங்கர்யங்களை ஆறுமாதகாலம் செய்துவந்தாள். இப்படி யிருக்கையில், மழைகாலத்தில் ஒருநாள் பெருமழை பொழிய, விப்ரநாராயணர் பர்ணசாலையின் உள்ளேயிருக்க, அவள் வெளி யில் இருந்து நனைவதைப்பார்த்து இரக்கங்கொண்டு 'உள்ளே வா' என்று அழைக்க, அவள் உள்ளே புகுந்தவுடன் ஈரப்புடவை யுடன் உடல் நடுங்குவதைக் கண்டு, தம்முடைய உத்தரீயத்தை (மேல் வஸ்திரத்தைக்) கொடுத்தருள, அவளும் தரித்துக் கொண்டு வந்து இவரைப்பார்த்து "திருவடிகளைப் பிடிக்கிறேன்'' என்ன, இவரும் இசைய, அவள் திருவடிகளைப்பிடிக்கும்போது,

நெருப்பிலிட்ட நெய்யைப்போலே இவர்மனம் உருகத் தொடங்கிற்று. அதையே பற்றாசாகக்கொண்டு தனது மென்மொழிகளாலும், மேனிமினுக்கினாலும் விப்ரநாராயணரைக் கவர்ந்து, அவரைத் தன் வஶப்படுத்திப் பெரிய பெருமாளையும் மறக்கச் செய்து, சிலகாலம் சென்றவுடன் அவரைவிட்டுத் திருக்கரம்பனூரிலுள்ள தன் வீட்டிற்குச் சென்றுவிட்டாள். இவர் அவள் பிரிவை ஆற்றாதவராய் அவளிருக்குமிடம் சென்று, அவளது வீட்டு வாயிலில் தியங்கி நின்றார். பொருளற்ற இவரைப் பொருட்படுத்தாமல் அவள் கதவை அடைத்தபோது, இவர் அவள்வீட்டுத் திண்ணையிலேயே வருந்தி முடங்கிக் கிடந்தார்.

அந்த ஸமயத்திலே—பெரிய பெருமாளும், பெரிய பிராட்டியாரும் அவ்வீதிவழியே எழுந்தருளாநிற்க, பிராட்டி இவரிடம் இரங்கி "நமக்கு அந்தரங்கரான இவரை தேவரீருடைய மாயையான (ஆஶ்சர்ய ஶக்தியான) ப்ரக்ருதிக்கு வஶப்படும்படி விடலாமோ? இவரை மறுபடியும் தேவரீர் திருவடிகளுக்கு அந்தரங்கராம்படி கடாக்ஷித்தருளவேணும்." என்று பெரிய பெருமாளிடம் புருஷகாரம் பண்ண, பெருமாளும் அதற்கு இசைந்து, தம்முடைய திருவாராதன பாத்திரமான ஒரு பொன் வட்டிலை எடுத்துக்கொண்டு, மனிதவுருவோடு கூடியவராய் தேவதேவியின் வீட்டு வாயிலில் நின்று 'கதவைத்திற' என்ன, அவளும் 'நீர் யார்?' என்று கேட்க, "நான் அழகிய மணவாளன் என்னும் பேருடையவன், விப்ர நாராயணருடைய தோழன். அவரால் அனுப்பப்பட்டு வந்தேன்" என்ன, அவளும் கதவைத் திறந்து வந்த காரியத்தை வினவ, பெருமாளும் "விப்ரநாராயணர் உனக்கு இந்தப் பொன் வட்டிலைத் தந்தார்" என்ன, அவளும் உகந்து 'அவரை உள்ளே வரச்சொல்லும்' என்ன, பெருமாளும் விப்ரநாராயணரிடம் சென்று "தேவதேவி உம்மை உள்ளே வரச்சொன்னாள்" என்ன, இவரும் மிக உகந்தவராய் உள்ளே புகுந்தார். பெருமாளும் கோயிலுக்குச் சென்று திருவநந்தாழ்வான் மேல் சாய்ந்தருளினார்.

மறுநாள் போது விடிந்தவுடன், பொன்வட்டிலைக் காணாத அர்ச்சக பரிசாரகர்கள் ராஜகார்யஸ்த்தர்களுக்கு அறிவிக்க, அவர்கள் உறையூரில் சோழ ராஜாவுக்கு அறிவிக்க, அரசனும்

அர்ச்சக பரிசாரகர்களை விசாரித்து தண்டிக்க முற்பட, அப்பொழுது தேவதேவியின் வேலைக்காரி ஒருத்தி ஒரு காரியமாக அங்கு வந்தவள், தன்னோடு தொடர்புடையவன் ஒருவன் தண்டிக்கப்படுவதைக் கண்டு விசாரித்துக் கோயில் பொன்வட்டில் களவாடப்பட்டதை அறிந்து, "விப்ரநாராயணர் எங்கள் தேவ தேவிக்கு ஒரு பொன்வட்டில் கொடுத்திருக்கிறார். அதை அவள் மெத்தைத் தலையணையின் கீழே வைத்திருக்கிறாள்." என்று கூறினாள். இதுகேட்ட அர்ச்சக பரிசாரகர்கள் ராஜசேவகர் களிடம் சொல்ல, அவர்கள் தேவதேவியின் வீட்டை சோதித்து வட்டிலைக் கைப்பற்றி தேவதேவியையும் விப்ரநாராயணரையும் அரசன்முன் அழைத்துச் செல்ல, அரசன் தேவதேவியிடம் வட்டில் வந்த வழியைக் கேட்டான். அதற்கு அவள் "விப்ர நாராயணருடைய தூதன் அழகிய மணவாளன் அவர் அனுப்பியதாகக் கொடுத்தான். பெருமாளுடையது என்று எனக்குத் தெரியாது" என்று பதில் உரைத்தாள். அடுத்தபடி அரசன் விப்ரநாராயணரை இதுபற்றி விசாரிக்க, அவர் "நமக்கு ஒரு தூதனும் இல்லை. நான் வட்டிலைக் கண்டதுமில்லை" என்ன, தேவதேவி 'இவர்தாம் அனுப்பினார்' என்ன, அவர் 'இல்லை' என்ன, இப்படி இருவர் கட்சியையும் கேட்டு, தேவதேவிக்கு அபராதம் விதித்து அத்தொகையோடு வட்டிலைப் பெருமாளுக்கு ஸமர்ப்பிக்கச் செய்து, "விப்ரநாராயணருக்கு நாம் தக்க தண்டனை விதிக்கும் வரையில் அவர் காவலில் இருக்கட்டும்" என்று உத்தரவிட்டான்.

அன்றிரவு பிராட்டி பெருமாளுடன் ஏகாந்தமாக வார்த்தை சொல்லும்போது, "ஸ்ரீ விப்ரநாராயணரை இனியும் லீலைக்கு விஷயமாக்காமல் இரக்கத்திற்கு விஷயமாக்கிக் கைக்கொள்ள வேணும்" என்று புருஷகாரம் பண்ண, பெருமாளும் இசைந்து அரசனின் கனவில் எழுந்தருளி "விப்ரநாராயணருடைய முன்வினைப் பயனைக்கழிப்பதற்காக நாமே பொன்வட்டிலைச் சென்று கொடுத்து, அவருக்குச் சிறைவாஸம் வரும்படி பண்ணினோம். ஆகையால் அவரை விடுதலை செய்து நமது திருமாலை கைங்கர்யத்திற்கு அனுப்பவேணும். தேவதேவியின் அபராதத் தொகையும் நமக்குத் தேவையில்லை" என்று நியமித்தருள, சோழ அரசனும் வியப்புடன் எழுந்திருந்து, விப்ர நாராயணரைச் சிறையிலிருந்து வரவழைத்துப் பல உபசாரங்

களைச் செய்து தண்டனிட்டு விடுதலை செய்தான். இவரும் தம் இழிசெயலை நினைத்து அநுதாபம் கொண்டு, 'மாதரார் கயற்கண் என்னும் வலை'யிலிருந்து மீண்டு. தாஸியோடு தொடர்பு கொண்டிருந்ததற்குப் ப்ராயச்சித்தமாக அச்சுதனடியார் களுடைய ஸ்ரீபாத தீர்த்தத்தைப் பருகிப் பரிஶுத்தியடைந் தார். அதற்குப்பின்—கிராமம் குலம் முதலானவற்றால் வரும் அனர்த்தப் பேர்களை அடியோடு விட்டு, துளவத் தொண்டில் ஈடுபட்ட அடியார்களின் அடிப்பொடியே தமக்கு உஜ்ஜீவநம் என்று அறுதியிட்டு 'தொண்டர் அடிப்பொடி' என்றே திருநாமத்தையும் கொண்டார். ஸ்ரீராமபிரானையல்லதறியாத திருவடியை (அனுமனை)ப் போலவும், இளையபெருமாளைப் போலவும் அரங்கனையல்லது அறியாதவராய், "கண்டியூர் அரங்கம் மெய்யம் கச்சி பேர் மல்லை"[திருக்குறு-19] என்று திவ்ய தேஶங் கள் தோறும் மண்டித் திரியும் மற்றை ஆழ்வார்களைப் போலல் லாமல், பெரிய பெருமாளிடமே பாதிவ்ரத்யமுடையவரானார். பெரிய பெருமாளும் இவருக்கு மயர்வறமதிநலம் அருளி, தம்முடைய ஸ்வரூப ரூப குண விபூதி சேஷ்டிதங்கள் அனைத்தையும் கையில் கனியென்னக் காட்டிக்கொடுத்தார். இவரும் பெரிய பெருமாளை அநுபவித்து, அவ்வநுபவம் உள்ளடங்காமல் சேதநர் உய்வதற்கு உறுப்பான அர்த்தங் களையெல்லாம் உள்ளடக்கி, "திருமாலை" "திருப்பள்ளியெழுச்சி" என்கிற இரு திவ்யப்ரபந்தங்களை அருளிச்செய்து உலகத்தை வாழ்வித்தருளினார். தேவதேவியும் இவருடைய பெருமையைக் கண்டு மனம் திருந்தி, தன் சொத்து முழுவதையும் நம் பெருமாளுக்கு ஸமர்ப்பித்துக் கோயிலில் திருவலகிடுதல் முதலான கைங்கர்யங்களைச் செய்து வாழ்ந்து உய்ந்து போனாள்.

இனி, இவருடைய திவ்யப்ரபந்தங்களுக்குச் சுருக்கமாகப் பொருள் விவரிக்கப்படுகிறது. முதல் ப்ரபந்தமான திருமாலை ஸ்ரீஶௌனக பகவான் அருளிய விஷ்ணுதர்மத்தின் ஸாரமானது. முதல் இரண்டு பாசுரங்களில், பெரிய பெருமாளின் திருநாமத்தைக் கற்றதனால் தமக்குண்டான பெருமையை அவரிடமே அருளிச்செய்து, திருநாம ஸங்கீர்த்தனச்சுவை தவிர, பரமபத இன்பமும் தமக்கு வேண்டியதில்லை என்றார். மூன்றாம் பாசுரத்தில் 'ஸம்ஸாரத்தில் பிறவியும் தமக்கு வேண்டியதில்லை' என்று கூறி, மூன்றாவது விபூதியான ஸ்ரீரங்கத்தில் வாழ்ச்சியே போதுமானது என்று அறுதியிட்டார். அதற்குமேல் பதினொரு

பாட்டாலே ஸ்வரூபத்திற்குத் தகுந்ததாய், மிக எளியதான பகவத்விஷயத்தை ஸம்ஸாரிகள் இழப்பதைக் கண்டு பொறுக்க மாட்டாமல், பெரிய பெருமாளுடைய பெருமையை அவர்களுக்கு உபதேசித்தார். ஸம்ஸாரிகள் அதை ஏற்காமையாலே, பெரிய பெருமாள் தமக்கு ஐயப்பாடு அறுப்பது முதலாக, பரமபக்தி ஈறாக நிர்ஹேதுகமாக விளைத்த மஹோபகாரங்களை மேல் பத்துப்பாட்டாலே அருளிச்செய்தார். அதற்குமேல் பத்துப்பாட்டுக்களாலே, ஒரு தேசவிசேஷத்தில் சென்று அநுபவிப்பதற்கு உறுப்பான ஸாதநாந்தரங்கள் எதுவுமே தம்மிடம் இல்லை என்று உபாய சூந்யதையை அருளிச்செய்தார். முப்பத்தைந்தாம்பாட்டில் "ஒரு கைம்முதலுமற்ற நாம் பகவத்விஷயத்தை இழக்கவேண்டியதே" என்று அகலப்புகுந்த தம்மைத் தன் செல்லாமையைக் காட்டிப் பெரிய பெருமாள் சேர்த்துக்கொண்டமையை அருளிச்செய்தார். மேல் இரண்டு பாட்டுக்களாலும் விசேஷ கடாக்ஷம் பண்ணவேணுமென்று கதறி. அது பெறுமல் பெரு வருத்தமுற்றதை அருளிச்செய்தார். திருமாலைக்கே உயிர்ப்பாட்டான முப்பத்தெட்டாம் பாசுரத்தில் —ப்ராப்ய ப்ராபக நிஷ்கர்ஷம் செய்து, ப்ராப்ய த்வரையையும் உடைய ரஹஸ்ய த்ரயநிஷ்டர்களிடத்திலே பெரிய பெருமாளுக்குள்ள ஈடுபாட்டைக் காட்டினார். மேல் ஐந்து பாட்டுக்களாலே இத்தகைய பாகவதர்களுடைய பெருமையையும், அவர்களைக் குறைய நினைப்பாருடைய தாழ்வையும் காட்டினார். நாற்பத்து நாலாம் பாட்டில் "பிரமன் சிவன் முதலான ஸ்வப்ரவ்ருத்தி நிஷ்டர்கள் பெறமுடியாத பேற்றைத் தன்னையே உபாயமாகக்கொண்ட கஜேந்த்ரனுக்கு அருளியதை அருளிச்செய்தார். நாற்பத்தைந்தாம்பாட்டில் இப்ரபந்தம் கற்றார்க்குப் பலம் சொல்லித் தலைக்கட்டினார். இது திருமாலையின் சுருக்கமான பொருள்.

திருமாலையில் தொண்டரடிப்பொடியாழ்வாருக்கு "ஆதலால் பிறவி வேண்டேன்" (3) என்னும்படி ப்ரக்ருதி ஸம்பந்தம் தாழ்ந்தது என்னும் ஞானத்தையும், "போனகம் செய்த சேடம் தருவரேல் புனிதம்" (41) என்னும்படி பாகவத சேஷத்வ மளவாக ஸ்வரூப யாதாத்ம்ய ஞானத்தையும், "காவலிற் புலனைவைத்து" (1) என்னும்படி இந்த்ரிய நிக்ரஹத்தையும், "குளித்து மூன்றனலை" (25) என்னும்படி அநந்யோபாயத்வ ஜ்ஞானத்தையும், "உன்னருளென்னும் ஆசை தன்னால்"

(33) என்னும்படி உபாயயாதா₂த்ம்ய ஜ்ஞானத்தையும் விளைத்து, ஸம்ஸாரமாகிற பெருந் தூக்கத்திலிருந்து அவரை எழுப்பிய பெரிய பெருமாள் "சோம்பரையுகத்திபோலும்"(38) என்கிறபடியே மிகவும் உகந்து, இவரை இவ்வளவு தூரம் புகுர நிறுத்தின தன்பெருமையை அநுஸந்தி₄த்துக்கொண்டு "எல்லாரையும் இவரைப்போலே நம்மிடம் ஈடுபடச் செய்ய வழி என்ன ?" என்று சிந்தித்துக்கொண்டு யோக₃நித்₃ரை (அறி துயில்) செய்யத் தொடங்கினர். அப்படி உறங்கும் பெரிய பெருமாளை "உத்திஷ்ட₂ புருஷ ஹரீ லோஹிதபிங்க₃ளாக்ஷி' [தைத்திரீயநாராயணவல்லீ] [செந்தாமரைபோல் சிவந்த கண்ணனே ! புருஷனே ! ஹரியே ! எழுந்தருளாய்] என்று பரம புருஷனுக்கு அஸாதா₄ரணமான இரண்டு திருநாமங்களையும், புண்ட₃ரீகாக்ஷத்வமாகிற லிங்க₃த்தையுமிட்டு அழைத்து, அவ னுக்குத் திருப்பள்ளியெழுச்சி பாடின வேதபுருஷனைப் போல வும், "கௌஸல்யா ஸுப்ரஜா ராம" (ரா-பா₃-23-2) என்ற விஶ்வாமித்ர மஹர்ஷியைப் போலவும், "உம்பர் கோமானே! உறங்காதெழுந்திராய்" (திருப்பாவை-17) என்ற ஆண்டாளைப் போலவும், "அரங்கத்தம்மா பள்ளியெழுந்தருளாயே" என்று தம்முடைய ப்ராப்யத்வரையாலே பாசுரந்தோறும் திருப்பள்ளி யுணர்த்தி, "அடியார்க்காட்படுத்தாய்" (திருப்பள்ளி-10) என்று ப்ராப்யத்தின் எல்லையான பா₄க₃வத கைங்கர்யத்தைப் பிரார்த்தி₂த்துத் தலைக்கட்டுகிறுர் தமது சரம ப்ரப₃ந்த₄மான திருப்பள்ளியெழுச்சியிலே.

திருமங்கையாழ்வார், இவர் நந்தவனமிருக்குமிடத்தை ஒதுக்கித் திருமதிள் கட்டினர் என்றும், இவர் தாம் பூக்கொய் யும் ஆயுத₄த்திற்கு 'அருள்மாரி' என்னும் திருமங்கையாழ்வார் திருநாமத்தை இட்டார் என்றும் ஐதிஹ்யங்கள் வழங்குகை யாலே, இவ்விருவரும் ஸமகாலத்தவர் என்றும், "*அன்பர் தாள்தூளி நற்பாணன் நற்கலியன்*" என்று உபதேசரத்தின மாலையில் மாமுனிகள் இவர்கள் தோற்றத்தின் அடைவை அருளிச்செய்கையாலே மூவருமே ஒரு காலத்திலிருந்தவர்கள் என்றும் விளங்குகிறது. தொண்டரடிப்பொடியாழ்வார் பரம பதித்ததும் திருவரங்கத்திலேயேயாகும்.

**தொண்டரடிப்பொடியாழ்வார் வைபவம் முற்றிற்று.**

**தொண்டரடிப்பொடியாழ்வார் திருவடிகளே ஶரணம்.**

# ❖ திருப்பாணாழ்வார் வைபவம் ❖



திருவுறையூர்—திருப்பாணாழ்வார்

வ்ருஶ்சிகே ரோஹிணீஜாதம் ஶ்ரீபாணிம் நிசுளாபுரே।
ஶ்ரீவத்ஸாங்கம் கா₃யகேந்த்₃ரம் முநிவாஹநமாஶ்ரயே॥

[கார்த்திகை மாதத்தில் ரோஹிணீ நக்ஷத்திரத்தில், நிசுளாபுரி என்னும் உறையூரில். ஸ்ரீவத்ஸம் என்னும் மறுவின் அம்சமாய் அவதரித்தவராய், வீணையைக் கையிலேந்திப் பெரிய பெருமாளை மனமுருகப் பாடுபவராய், லோகஸாரங்க$_3$ மஹாமுனிவரை வாஹநமாகக் கொண்டவரான திருப்பாணாழ்வாரை ஆச்ரயிக்கிறேன்.]

ஸ்ரீலோகஸாரங்க$_3$ மஹாமுநீந்த்$_3$ர
ஸ்கந்த$_4$ாதி$_4$ரூட$_4$ம் கலயாமி நித்யம் ।
களங்கஹீநம் கமநீயப$_4$க்தம்
கவீச்வரம் க$_3$ாயகஸார்வபௌ$_4$மம் ॥

[ஸ்ரீலோகஸாரங்க$_3$ மாமுனிகளுடைய திருத்தோள்மேல் ஏறி எழுந்தருளியவராய், குற்ற மற்றவராய், பரமபுருஷனிடம் அழகியதான அன்பையுடையவராய், கவிகளில் தலைவராய், பாடவல்லார்களில் தலைசிறந்தவரான திருப்பாணாழ்வாரை எப்போதும் ஏத்துகின்றேன்.]

ஸ்ரீவேலாப்$_3$த$_3$ விநிர்க்க$_2$மே கலியுகே$_3$
ஸம்வத்ஸரே து$_3$ர்மதௌ
ப$_4$ாநௌ வ்ருச்சிகப$_4$ாஜி பஞ்சமதி$_3$நே
வாரே பு$_3$த$_4$ஸ்யோத்தமே ।
ரோஹிண்யா ஸஹிதே லஸத்யுடு$_3$பதௌ
க்ருஷ்ணே த்$_3$விதீயே திதௌ$_2$
ஸஞ்ஜஜ்ஞே முநிவாஹநச்சரணயோர்
யோ ரங்கி$_3$ணோऽந்தர்த்த$_3$தே$_4$ ॥

[ஸ்ரீரங்க$_3$நாத$_2$னுடைய திருவடிகளிலேயே மறைந்தவரான திருப்பாணாழ்வார் — கலியுக$_3$த்தில். 'ஸ்ரீவேலா' என்னும் எழுத்துக்களால் (கடபயாதி$_3$ ஸங்க்$_2$யைப்படி) கிடைக்கும் முந்நூற்று நாற்பத்திரண்டு வருடங்கள் சென்றவளவில், து$_3$ர்மதி வருஷத்திலே உத$_3$யஸூர்யன் வ்ருச்சிகராசியை அடையும் கார்த்திகை மாதத்தில் ஐந்தாம் தேதியில், சிறந்ததான புதன்கிழமையில், சந்திரன் ரோஹிணியுடன் கூடியவனாய் விளங்குகையில் கிருஷ்ணபக்ஷ த்$_3$விதீயையில் அவதரித்தருளினார்.]

அத₂ தத்ர குலேऽந்திமே ரமா-
ரமணோரஸ்ஸ்தி₂தலாஞ்ச₂நாம்ஶஜ :।
ஸமஜாயத பாணஸம்ஜ்ஞகஸ்
ஸூகவி: கார்த்திகமாஸி வைத₄பே₄ ॥
[தி₃வ்யஸூரிசரிதம் 7-17]

[பின்பு. அந்தப் பாணர் குலத்திலே, ஸ்ரீமந்நாராயணனுடைய திருமார்பில் விளங்கும் ஸ்ரீவத்ஸத்தின் அம்ஶமாயிருப்பவராய், நற்கவிஞராயிருப்பவரான திருப்பாணாழ்வார் கார்த்திகையில் ரோஹிணியில் அவதரித்தருளினார்.]

முற்கூறிய தனியன்களிலும், வைப₄வ ஶ்லோகங்களிலும் முன்னோர்கள் அநுஸந்தி₄த்த ரீதியில், கலி பிறந்த 343-ஆவது வருஷமான து₃ர்மதி வருஷத்தில் கார்த்திகை மாதத்தில் ஐந்தாம் தேதியில் க்ருஷ்ணபக்ஷ த்₃விதீயையோடு கூடிய ரோஹிணீ நக்ஷத்திரத்தில் புதன்கிழமையில் உறையூரில் அவதரித்தவர் திருப்பாணாழ்வார்.

நீளாதே₃வியின் அவதாரமான கமலவல்லி நாச்சியாரைப் பெற்றெடுத்து, அழகிய மணவாளனுக்குப் பாணிக்₃ரஹணம் பண்ணிக்கொடுத்த சோழராஜா உறையூரில் அரசாட்சிசெலுத்தும் காலத்திலே "குலந்தாங்கு சாதிகள் நாலிலும் கீழ் இழிந்து" என்று சொல்லப்பட்ட பஞ்சம வர்ணத்திலே நம்பாடுவானைப் போலே அவதரித்த இவ்வாழ்வாரும், திருக்குறுங்குடியிலே கா₃ந கைங்கர்யம் செய்த அவரைப்போலே வீணையைக் கையிலேந்தி, 'பூ₄லோக வைகுண்ட₂த்தைத் தாழ்ந்த சாதியில் பிறந்த நம் காலால் தீண்டலாகாது' எனக் கருதி, காவேரியின் தென்கரையிலிருந்துகொண்டு நித்யஸூரிகள் ஸாமகா₃னம் செய்வது போலே தினந்தோறும் பெரிய பெருமாளைப்பாடி உகப்பித்து வந்தார். பாணர் குலத்தில் அவதரித்தமையால் திருப்பாணர் என அழைக்கப்பட்டார். இப்படிப் பெரிய பெருமாளிடத்திலே பரப₄க்தி பரஜ்ஞான பரமப₄க்திகளையுடையவராய், வேறொன்றும் அறியாதவராய்க் கண்ணை மூடிக்கொண்டு பெரிய பெருமாளை இவர் ஒருநாள் பாடிக்கொண்டிருக்கையில், பெருமாளுக்குத் திருமஞ்சன தீர்த்த₂ம் கொண்டுவருவதற்காக விடியற்காலையில் திருமஞ்சனக் குடத்தை எடுத்துக்கொண்டு அங்கு வந்த லோகஸாரங்க₃ மஹாமுனிவர் இவரைக்கண்டு "தூரப் போ" என்று சொல்ல, கா₃நத்தில் ஆழ்ந்த இவருக்கு அச்சொல் காதில்

படாமலிருக்க, முனிவரும் ஒரு கல்லை எடுத்து வீசி எறிய, அக்கல் இவர் முகத்திலே பட்டு இரத்தம் வர்ஷிக்க, இவரும் கண்களை விழித்துப்பார்த்துக் கலங்கி, 'மஹாப$_4$ாக$_3$வதரிடத்தில் அபசாரப்பட்டோமே' என்று தூரப்போய் நிற்க, முனிவரும் நீராடி நித்ய கர்மானுஷ்ட$_2$ானம் செய்து திருமஞ்சனம் எடுத்துக் கொண்டு, ச$_2$த்ரம் சாமரம் வாத்$_3$யகே$_4$ாஷம் முதலானவற்றுடன் ஸன்னிதி$_4$க்குச் சென்றார். திருப்பாணாழ்வார் முகத்தில் பட்ட அடி அரங்கனுடைய நெஞ்சில் பட்டபடியாலே, பெருமாள் மிகவும் வருத்தமுற்றிருக்க, அதுகண்ட ஸ்ரீரங்க$_3$நாச்சியார் "நமக்கு அந்தரங்க$_3$ரான இப் பாண்பெருமாளை வெளியில் நிற்க விடாமல் உள்ளே அழைத்துக்கொள்ளவேணும்" என்று விண்ணப்பம் செய்தாள். பெரிய பெருமாளும் திருக்காப்புச் சேர்த்துக்கொண்டு 'நம்முடைய ப$_4$க்தரை நீர் இப்படிச் செய்யலாமோ?' என்று லோக ஸாரங்க$_3$ முனிவரை மிகவும் கோபித்துத் திருக்காப்பு நீக்காமல் இருந்துவிட்டார். "மஹா ப$_4$ாக$_3$வதரிடத்தில் அபசாரப்பட்டு விட்டோமே" என்று மிகவும் கவலைகொண்ட லோக ஸாரங்க$_3$ முனிவருடைய கனவிலே அன்றிரவு காட்சியளித்த அரங்கன், ப$_4$ாக$_3$வதாபசாரத்திலிருந்து ஈடேற வழிகேட்ட இவரிடம் "நமக்கு அந்தரங்க$_3$ரான பாண்பெருமாளை நீர் தாழ்வாக நினையாமல், உம்முடைய தோளிலே ஏற்றிக்கொண்டு நம்மிடம் அழைத்து வாரும்" என்று நியமித்தான்.

அவரும் விடியற்காலையில் எழுந்திருந்து ஸ்வப்நத்தை அநுஸந்தி$_4$த்து மிகவும் உகந்தவராய், எம்பெருமானுடைய நியமனத்தைச் சிரமேற்கொண்டு திருக்காவேரியிலே நீராடி நித்யானுஷ்ட$_2$ானங்கள் செய்து, அதிதூ$_3$ரத்திலே வீணையும் கையுமாய் மரங்களும் இரங்கும் வகையாகப் பாடிக் கொண்டிருக்கும் திருப்பாணாழ்வார் இருக்குமிடம் சென்று, அவருடைய திருவடிகளிலே தாளும் தடக்கையும் கூப்பிப் பணிந்து, "நம்பெருமாள் தேவரீரை எழுந்தருளப்பண்ணிக் கொண்டு வரவேணும் என்று அடியேனை நியமித்தருளினார்." என்று விண்ணப்பம் செய்ய, ஆழ்வாரும் குலங்களாய ஈரிரண்டில் ஒன்றிலும் பிறவாத தமது நைச்யத்தை அநுஸந்தி$_4$த்துப் பின்வாங்க, மாமுனிகள் எம்பெருமானுடைய நியமனத்தைக் கூறி மிகவும் நிர்ப$_3$ந்தி$_4$க்க, அப்போதும் இசையாமல் "திருவரங்கப் பெருநகரை அடியேன் எப்படி மிதிப்பது?" என்று தயங்க,

முனிவரும் "அப்படியானால் அடியேனுடைய தோளின்மேலே எழுந்தருளும். பெருமாள் நியமித்தபடியே எழுந்தருள்வித்துக் கொண்டு போகிறேன்" என்று கூற, ஆழ்வாரும் ப$_4$க$_3$வத்$_3$ ப$_4$ாக$_3$வத நியமனத்தைத் தட்டமாட்டாமல் அத்யந்த பரதந்த்ரராய் இசைந்து நின்றார். லோக ஸாரங்க$_3$ மஹா முநீந்த்$_3$ரரும், முக்தனை ஆதிவாஹிகர்கள் எழுந்தருள்வித்துக் கொண்டு பரமபத$_3$த்தில் திருமாமணி மண்டபத்திற்குச் செல்லுவது போலே, ஆழ்வாரைத் தம் திருத்தோள்களின் மேலே எழுந்தருள்வித்துக்கொண்டு, பூ$_4$லோக வைகுண்ட$_2$த்திலே அழகிய மணவாளன் திருமண்டபத்திற்குள்ளே புக, பெரிய பெருமாளும், நித்ய த$_3$ரித்$_3$ரனுக்கு நிதி$_4$காட்டுவாரைப்போலே தன்னுடைய தி$_3$வ்ய மங்க$_3$ள விக்$_3$ரஹத்தைக் காட்டிக்கொடுக்க, ஆழ்வாரும் கண்களாரக் கண்டு பாத$_3$ாதி$_3$ கேஶாந்தம் அநுப$_4$வித்து, அவ்வநுப$_4$வம் உள்ளடங்காமல், திருப்பாத$_3$ கேஶத்தை விருப்பாலுரைத்து அநுப$_4$வித்த பெரியாழ்வாரைப் போலே, 'அமலனாதிபிரான்' என்கிற தி$_3$வ்யப்ரப$_3$ந்த$_4$த்தில் பத்துப்பாசுரங்களாலே தம் அநுப$_4$வத்தை உலகுய்ய வெளி யிட்டருளி, திருமணத் தூணுக்குள்ளே உகப்போடு நிற்க, பெரிய பெருமாளும் 'வேர்ச்சூடுமவர்கள் மண்பற்றுக் கழற்றாதாற் போலே" ஆழ்வாரைத் திருமேனியோடு அங்கீ$_3$கரித்தருள, ஆழ்வாரும் அனைவரும் காணும்படி அணியரங்கன் திருவடி களிலே ஆண்டாளைப்போலே அந்தர்ப$_4$வித்தருளினார் (மறைந் தருளினார்).

இனி, அமலனாதிபிரானின் ஸாரார்த்த$_2$ம் சுருக்கமாக விவரிக்கப்படுகிறது. கைக் குழந்தைக்குத் தாய் முலைபோலே ஶேஷபூ$_4$தனுக்கு த$_4$ாரக போஷக போ$_4$க்$_3$யமாய் இருக்கும் திருவடிகளின் அழகு தம்மை அடிமை கொண்டதைப் பேசினார் முதற்பாசுரத்தில். கடலிலே அகப்பட்ட துரும்பு கடலலை களால் அலைக்கப்பெற்று ஓரலையிலிருந்து மற்றோர் அலைக்குச் செல்வதுபோலே, கடல்வண்ணனுடைய திருவடிகளிலிருந்து சிவந்த ஆடையின்மேல் தம் சிந்தை சென்றதைப் பேசினார் இரண்டாம் பாசுரத்தில். திருப்பீதாம்ப$_3$ரத்தின் அழகு திருநாபீ$_4$ கமலத்திலே வீசினபடியைப் பேசினார் மூன்றும் பாசுரத்தில். திருநாபீ$_4$ கமலத்தோடு சேர்ந்த திருஉத$_3$ர ப$_3$ந்த$_4$த்தை அநுப$_4$வித்தார் நாலாம் பாசுரத்தில். "எனக்குத் தஞ்சமான பெரியபிராட்டியார் இருக்கும் திருமார்பன்றோ என்னை ஸ்வரூ

பானுரூபமான கைங்கர்யம் கொண்டது" என்றார் ஐந்தாம் பாசுரத்தில். "எல்லா உலகையும் அமுது செய்தருளின கண்டத்தின் அழகு என்னை உண்டாக்கிற்று" என்பதன் மூலம் திருமார்பின் அழகு திருக்கழுத்திலே ஏற்றினபடியைப் பேசினார் ஆறும் பாட்டில். தெப்பக்கட்டையைப் பற்றிக்கொண்டு நீந்தப் புக்கவன் 'தெப்பத்தை இழந்தேன்' என்பதுபோலே, சிந்தையைக்கொண்டு ஒவ்வொரு அவயவமாக அநுபவித்து வந்தவர் வாயின் அழகைக்கண்டவுடன் 'சிந்தையிழந்தேன்' என்கிறார் ஏழாம் பாசுரத்தில். திருக்கண்கள் என் அறிவையும் அழித்துவிட்டன என்கிறார் எட்டாம் பாசுரத்தில். திருமேனி, தன்னிடம் உள்ளதையெல்லாம் காட்டி, என்னிடம் உள்ளதை யெல்லாம் கொண்டுசென்றது என்றார் ஒன்பதாம் பாசுரத்தில். இவ்வொன்பது பாசுரங்களும் ஆழ்வார் கர்ப்பக்ருஹத்தில் புகுவதற்கு முன்பு பெரிய பெருமாளுடைய வடிவழகை அவர் ஞான ஸாக்ஷாத்காரமாகக் காட்டியருள, நெஞ்சென்னும் உட்கண்ணால் கண்டு பாடியவை. லோகஸாரங்க மஹா முனிகளின் தோளில் எழுந்தருளியிருப்பவராய் கர்ப்பக்ருஹத்தில் புகுந்து, பெரிய பெருமாளைக் கட்கண்ணாலே கண்டு, 'பெரிய பெருமாளது அழகைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணா' என்று பெரிய பெருமாளோடு அந்தர்பவித்தபடியைப் பேசினார் பத்தாம் பாசுரத்தில். இப்பத்துப் பாசுரங்களிலும் ரஹஸ்ய த்ரயத்தின் அர்த்தமும், அர்த்த பஞ்சகங்களும் நிறைந்திருக்கின்றன. ப்ரமாண ஸாரமான ப்ரணவத்தில் அடங்கியுள்ள அகார உகார மகாரங்களிலே முதல் மூன்று பாசுரங்களைத் தொடங்குவதின் மூலம் இப்ரபந்தம் ப்ரணவ ஸாரமாயிருப்பது என்று ஆழ்வாரே உணர்த்தினார். ப்ரமேயஸாரம் எம்பெருமானுடைய திருக்கமலபாதப் பாதுகையே என்பதை ஐந்து ஆறு ஏழாவதான நடுப்பாசுரங்களில் முதல் எழுத்துக்களாலே உணர்த்தினார். இவ்வண்ணமாக எல்லாப் பொருள்களையும் தன்னுட்கொண்டிருப்பது இந்த திவ்யப்ரபந்தம். இதன் அரும்பொருள்கள் பெரியவாச்சான்பிள்ளை, அழகிய மணவாளப் பெருமாள் நாயனார், ஸ்ரீவேதாந்த தேசிகர் என்னும் மூன்று மஹாசார்யர்கள் அருளிய வ்யாக்யானங்களிலே காணத்தக்கவை.

திருப்பாணாழ்வார் வைபவம் முற்றிற்று

திருப்பாணாழ்வார் திருவடிகளே ஶரணம்.

# மதுரகவியாழ்வார் வைபவம்



திருக்கோளூர்–மதுரகவியாழ்வார்

மேஷே சித்தாஸமுத்3பூ4தம் பாண்ட்3யதே3ஶே க3ணாம்ஶகம்।
ஸ்ரீபராங்குஶஸத்3ப4க்தம் மது4ரம் கவிமாஶ்ரயே ॥

[சித்திரையில் சித்திரை நக்ஷத்திரத்திலே, குமுத3ன் என்னும் நித்யஸூரிக3ணாதி4பருடைய அம்ஶமாகப் பாண்டிய தே3ஶத்தில் அவதரித்தவரும், ஸ்ரீ பராங்குஶரென்னும் நம்மாழ்வாரிடத்திலே மிகவும் ஈடுபட்டவருமான மது4ரகவியை ஆஶ்ரயிக்கிறேன்.]

பாண்ட்₃யக்ஷமாயாம் ப்ரதி₂தாவதாரம்
||சைத்ரஸ்த₂சித்ரோடு₃ஜமூர்த்₄வகூட₃ம் ।
க₂க₃ராம்ஶப₄ராஜம் மது₄ரம் கவீந்த்₃ரம்
ஶட₂ாரிப₄க்தம் ஶரணம் ப்ரபத்₃யே ॥

[பாண்டிய தேசத்தில் திருக்கோளூரில் பிரஸித்₃த₄மான அவதாரத்தை உடையவரும், சித்திரை மாதத்தில் சித்திரை நட்சத்திரத்தில் பிறந்தவரும், உயரநோக்கிய பூர்வஶிகையை உடையவரும், புள்ளரையனை பெரியதிருவடியின் அம்ஶ முடையவரும், நம்மாழ்வாருடைய ப₄க்தருமான மதுரகவி யாழ்வாரைத் தஞ்சமாக அடைகிறேன்.]

ஹஸ்தஸ்த₂தாளத்₃விதயம் ப்ரபத்₃யே
ஶட₂ாரிவாக்₃வ்யாஸமுதா₃ர கீர்த்திம் ।
மாது₄ர்யஸம்ஶ்லிஷ்டகவித்வயுக்தம்
மஹத்த்வஸம்ப₄ாவித பு₃த்₃தி₄தத்வம் ॥

[திருக்கைகளில் இரண்டு தாளங்களையுடையவரும். (வடமொழி வேதத்திற்கு) வியாஸர்போலே, நம்மாழ்வாருடைய தமிழ் வேதத்திற்கு ப்ரவர்த்தகரும், சிறந்த புகழையுடையவரும், இனிமையோடு கூடிய கவிதை இயற்ற வல்லவரும், மஹத்தாய் (1. மஹான் என்னும் தத்துவமாய்; 2. சிறந்ததாய்) இருக்கும் தன்மையோடு கூடிய பு₃த்₃தி₄ (அறிவு) என்னும் தத்துவத்தை யுடையவராய் இருப்பவருமான ஸ்ரீ மதுரகவியாழ்வாரை ஶரண மடைகிறேன்.]

யாதே ஸம்வத்ஸரௌகே₄ ஹஸத₃க₃த₃ஜநே
த்₃வாபரஸ்யேஶ்வராப்₃தே₃
சைத்ரே மாஸே த்₃விஸப்தோத்தரதி₃வஸவரே
ஶுப்₄ரபக்ஷே ச ருச்யே।
சித்ராக்₂யே ப₄ார்க்க₃வீயே கு₃ணவதி ச
தி₃நே ப்ராது₃ராஸீச்ச₂ட₂ாரே:
அந்தேவாஸீ த்₃விஜேந்த்₃ரோ மது₄ரகவிரஸௌ
மாத்₃ருகு₃ஜ்ஜீவநாய ॥

---

|| (பா) 'சைத்ரஸ்த₂சித்ரோடு₃ஜமூர்த்₄நிகூட₂ம்'

[த்₃வாபரயுக₃த்தில் "ஹஸத₃க₃த₃ஜந" என்னும் எழுத்துக்களால் கிடைத்த எட்டு லக்ஷத்து எண்பத்து மூவாயிரத்து எண்ணூற்றெழுபத்தெட்டு வருடங்கள் கழிந்தவளவில், ஈச்வரவருடத்தில் சித்திரை மாதத்தில், பதினாலு நாட்களுக்கு மேற்பட்ட பதினைந்தாவது நாளில் அழகான சுக்லபக்ஷத்தில், சித்திரை நக்ஷத்திரத்தில், வெள்ளியினுடையதான நல்ல தினத்தில் நம்மாழ்வாருடைய சீடராய், வேதியர்தலைவரான இந்த மதுரகவியாழ்வார், நம்மனைவரையும் உய்விப்பதற்காக அவதரித்தார்.]

**க₃ணேஶ: குமுதே₃ா நாம்நா /கவிர்மது₄ரஸம்ஜ்ஞக: ।**
**சைத்ரமாஸி ஶுபே₄ சித்ராதாரகாயாமஜாயத ॥**

[*தி₃வ்யஸூரிசரிதம் 4-53*]

[குமுத₃ர் என்னும் பெயரையுடைய (நித்யஸூரி) க₃ணங்களின் தலைவர் — சித்திரை மாதத்தில் நல்லதான சித்திரை நட்சத்திரத்தில் (மதுரகவியாழ்வாராக) அவதரித்தார்.]

முற்கூறிய தனியன்களிலும், வைப₄வ ச்லோகங்களிலும் முன்னோர்கள் அநுஸந்தி₄த்த ரீதியில் துவாபரயுகத்தில் 883879-ஆவது வருஷமான ஈச்வர வருஷத்தில் சித்திரை மாதத்தில் பதினைந்தாம் தேதியில் ஶுக்ல பக்ஷத்தில் சித்திரை நக்ஷத்திரத்தில் வெள்ளிக்கிழமையில் திருக்குருகூர் என்னும் ஆழ்வார் திருநகரிக்கு அருகில் உள்ள 'திருக்கோளூர்' என்னும் தி₃வ்ய தே₃ஶத்தில் ஜைமினி ஸாமவேத₃த்தை அத்₄யயனம் செய்யும் பூர்வஶிகை₂யையுடைய ஸ்ரீவைஷ்ணவ ப்₃ராஹ்மண குலத்தில் அவதரித்தவர் மதுரகவியாழ்வார். ஸூர்யோதயத்திற்கு முன் கிழக்கு திக்கில் காணப்படும் அருணோத₃யம் போலே, வகுளபூ₄ஷண ப₄ாஸ்கரர் அவதரிப்பதற்குமுன்னே க₃ருட₃னுடைய அம்ஶமாகவும் குமுத₃ன் என்னும் க₃ணாதி₄பருடைய அம்ஶமாகவும் இவர் அவதரித்தார். உரிய காலங்களிலே ஜாத கர்மம், நாமகரணம், அன்னப்ராஶநம், சௌளம், உபநயனம் முதலான ஸம்ஸ்காரங்கள் செய்விக்கப்

/ (பா) நித்யஸூரிர் மஹாத்₃யுதி:-சைத்ரே மாஸி ததஶ்சித்ரா

பெற்று, வேத₃ ஶாஸ்த்ரங்களையும் பயின்று செவிக்கினிய செஞ்சொற்களாலே கவிதை பாட வல்லவராகையாலே 'மதுரகவி' என்று புகழ்பெற்றார். ஜ்ஞான ப₄க்தி வைராக்₃யங்களின் மிகுதியினாலே, முக்தியளிக்கும் நகர்களாகக் கீர்த்திபெற்ற அயோத்₄யை, மதுரை மாயை, காஶீ காஞ்சீ, அவந்தீ, துவாரகை என்னும் ஏழு நகரங்களையும் மற்றுமுள்ள தி₃வ்ய தே₃ஶங்களையும் ஸேவித்து வர எழுந்தருளினார். வடநாட்டுத் திருப்பதிகளை ஸேவித்து வருகையில், அயோத்தி நகரையடைந்து அங்கு அர்ச்சாரூபியாய் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ ராமபிரானையும், ஸீதாப் பிராட்டியையும் ஸேவித்துச் சிலகாலம் அங்கு எழுந்தருளியிருக்கையில், திருக்கோளூர்ப் பெருமாளைத் திசை நோக்கித் தொழக் கருதித் தெற்கு தி₃க்கில் கண் செலுத்தின போது காட்டுத் தீ போன்றதொரு பெரிய தேஜஸ் இவர் கண்ணுக்குப் புலப்பட்டது. மேலும் இரண்டு மூன்று நாட்கள் இப்படியே கண்டு '' இது ப்ராக்ருதமான தேஜஸ் அன்று. அப்ராக்ருதமான தி₃வ்ய தேஜஸ்ஸாக இருந்தது. இது யாது என்று ஆராய்வோம்'' என்று பகலெல்லாம் கண்வளர்ந்தருளி, இரவில் அந்தத் தேஜஸ்ஸே குறியாக மிக விரைவில் தெற்கு நோக்கி எழுந்தருளினார். ஸ்ரீரங்கத்தில் வந்து ஆராய்ந்தவளவிலும், அதற்கும் தென்புறத்திலே சோதி தெரியவே, மேலும் தென்திசை நோக்கிச் சென்று திருக்குருகூர் வரையில் தென் திசையில் தெரிந்த சோதி, திருக்குருகூரிலே தென் திசையில் காணாமையாலே இந்தச் சோதி இவ்வூரிலேயே இருக்கவேண்டும் என்று நிர்ணயித்து, அவ்வூரில் ஆராய்ந்தவுடன், திருப்புளியாழ்வாரடியிலே பத்₃மாஸநம் இட்டு அமர்ந்திருப்பவராய், பரதத்வத்தைக் காட்டும் சிந்முத்₃ரையைக் கையாலே காட்டுபவராய், மஹா தேஜஸ்வியாய், பரமாசார்யரான பராங்குஶரென்னும் நம்மாழ்வாரைக் கண்டு 'இவ்ரே இச்சோதியுரு' என்று அறுதியிட்டார்.

இவருக்குக் காது கேட்குமோ, அறிவு உண்டோ, என்று பரீக்ஷிப்பதற்காக ஒரு குண்டுக்கல்லை எடுத்து அவர் முன்னே திடீரென்று போட்டார். அவ்வொலி கேட்டு நம்மாழ்வார் திடுக்கென்று கண்விழித்துக் கடாக்ஷித்தருள, ஸ்ரீமது₄ரகவிகளும்

'இவர் வாய் பேசுவாரோ' என்று அறிவதற்காக "செத்தத்தின் வயிற்றிலே சிறியது பிறந்தால் எத்தைத்தின்று எங்கே கிடக்கும்?" (அறிவற்ற உடலோடு அணுபரிமாணமான ஆத்மாவுக்குத் தொடர்பு உண்டானால், அவ்வாத்மா எதை அநுப₄வித்துக்கொண்டு எதை ஆஶ்ரயித்து இருக்கும்?) என்று கேட்டார். அதைக் கேட்ட நம்மாழ்வார் "அத்தைத் தின்று அங்கே கிடக்கும்" [அவ்வாத்மா அந்த உடலையே (அதாவது அதிலிருக்கும் இன்ப துன்பங்களையே) அநுப₄வித்துக்கொண்டு அவ்வுடலையே ஆஶ்ரயித்து இருக்கும்] என்று பதில் கூறினார். இதைக்கேட்ட ஸ்ரீமது₄ரகவியாழ்வார் "இவர் எல்லாமறிந்த ஞானியாயிருந்தார்; இவரை ஆஶ்ரயித்து உய்வோம்' என்று நினைத்து, ஆழ்வார் திருவடிகளிலே விழுந்து ஸேவித்து, அவரையே எல்லாமாகக்கொண்டு கைங்கர்யம் செய்து வந்தார். அப்போது எம்பெருமானாலே மயர்வற மதிநலம் அருளப்பெற்ற நம்மாழ்வார், அவனோடு மாநஸ ஸாக்ஷாத்காரத்தாலே உண்டான ஸம்ஶ்லேஷ விஶ்லேஷங்களாகிற (கூடுதல் பிரிதலாகிற) அநுப₄வங்களுக்குப் போக்குவீடாக ருக்₃வேத₃ஸாரமான திருவிருத்தத்தையும், யஜுர்வேத₃ஸாரமான திருவாசிரியத்தையும், அத₂ர்வணவேத₃ஸாரமான பெரிய திருவந்தாதியையும், ஸாமவேத₃ஸாரமாய், கடைசி ப்ரப₃ந்த₄மான திருவாய்மொழியையும் அருளிச்செய்து, அவற்றின் பொருளையும் மது₄ரகவியாழ்வாருக்கு உபதே₃ஶித்தருளி அவாவற்று வீடுபெற்றார். மது₄ரகவிகளும் இந்த தி₃வ்யப்ரப₃ந்த₄ங்களைப் பட்டோலை கொண்டார். ஆழ்வார் விஷயமாகத் தாம் பாடியருளிய "கண்ணிநுண்சிறுத்தாம்பு" என்னும் தி₃வ்ய ப்ரப₃ந்த₄த்தையும் ஆழ்வாருடைய தி₃வ்ய ப்ரப₃ந்த₄ங்களையும் கைத்தாளம் எடுத்து, பண் இசையோடு எப்போதும் பாடிக்கொண்டு அவற்றின் பொருளையும் உலகுக்கு உபதே₃ஶித்துக்கொண்டு வாழ்ந்து வந்தார். நம்மாழ்வார் பிரிவை ஆற்ற மாட்டாமல் அவர் அவதரித்த திருக்குருகூரில் அவருடைய அர்ச்சாவிக்₃ரஹத்தை ஏறியருளப்பண்ணி, அவருக்கு நித்ய பக்ஷ மாஸ அயந ஸம்வத்ஸர உத்ஸவங்களையெல்லாம் சிறப்பாக நடத்திக்கொண்டு "காரிமாறர் வந்தார், சடகோபர் வந்தார், பராங்குஶர் வந்தார், திருக்குருகூர்நம்பி வந்தார், திருவழுதி வளநாடர் வந்தார்,

திருநகரிப் பெருமாள் வந்தார். திருவாய்மொழிப்பெருமாள் வந்தார், நாட்கமழ் மகிழ்மாலை மார்பினர் வந்தார். வேதம் தமிழ்செய்த பெருமாள் வந்தார்'' என்று பல விருதுகளை முழங்கி, நாடெங்கும் அவர் திவ்யப்ரபந்தங்களைப் பரப்பி வந்தார். அதைக்கேட்ட அக்காலச் சங்கப் புலவர்கள், "எங்களோடே வாதுசெய்து ஜயித்து சங்கப்பலகை ஏறினாலொழிய இவ்விருது களை முழங்கவிட மாட்டோம்'' என்று தடுத்தார்கள். மதுரகவி களும், "இது நியாயமே. ஆனாலும் எங்களாழ்வார் உங்கள் சங்கப் பலகைக்கு எழுந்தருள முடியாதாகையால், அவருடைய திருவாய்மொழியில் "கண்ணன் கழலிணை" என்னும் துணுக்கை எழுதிய இந்த ஓலையை உங்கள் சங்கப் பலகையிலே வையுங்கள்; பலகை இதற்கு இடம் கொடுத்ததானால் அவரை ஏற்றுக் கொண்டதாகும்" என்று அவ்வோலையைக் கொடுத்தார். அவ்வண்ணமே முந்நூறு தமிழ்ப் புலவர்கள் ஏறியிருந்த சங்கப் பலகையிலே இவ்வோலையை வைத்தார்கள். உடனே அப்பலகை அந்த முந்நூறு புலவர்களையும் தான் மிதக்கும் பொற்றாமரைப் பொய்கையிலே கவிழ்த்துத் தள்ளி 'கண்ணன் கழலிணை' என்னும் ஆழ்வார் வாய்மொழி எழுதப்பெற்ற ஓலையை மாத்திரம் தரித்துக்கொண்டு மிதந்தது. நீரில் விழுந்த புலவர்கள் அமிழ்ந்து தடுமாறி எழுந்து மெள்ள நீந்திக் கரைசேர்ந்து "எம்பெருமானால் மயர்வற மதிநலம் அருளப்பெற்று நம்மாழ்வார் பாடிய பாசுரங்களை திருவாய்மொழி முதலான திவ்ய ப்ரபந்தங்கள்'' என்று உணர்ந்து கர்வமழிந்து, அவரிடம் முன்பு அபசாரப் பட்டதற்கு அநுதாபம் கொண்டு, அதற்குக் கழுவாயாக (ப்ராயச்சித்தமாக) ஒவ்வொருவர் ஒவ்வொரு துதிப்பாடலைப் பாடினார்கள். அப்பாடல்களின் முதற்பதங்களைச் சேர்த்தபோது,

> *"சேமங்குருகையோ செய்ய திருப்பாற்கடலோ*
> *நாமம் பராங்குசமோ நாரணமோ—தாமந்*
> *துளவோ வகுளமோ தோளிரண்டோ நான்கு*
> *முளவோ பெருமானுனக்கு?"*

என்னும் பாடலாய் அவை அமைந்திருந்தன. இதன்மூலம் ஸ்ரீமந்நாராயணனே நம்மாழ்வாராக அவதரித்திருக்கிறார் என்று உணரப்பெற்ற அவர்கள் ஆழ்வாரிடம் மிகவும் ஈடுபட்டு,

*ஈயாடுவதோ கருடற்கெதிரே? இரவிக்கெதிர்*
*மின்மினியாடுவதோ?*
*நாயோடுவதோ வுறுமிப்புலிமுன்?*
*நரிகேசரிமுன்நடையாடுவதோ?*
*பேயாடுவதோ அழகூர்வசிமுன்? பெருமான்*
*வகுளாபரணன்னருள்கூர்ந்*
*தோவாதுரையாயிர மாமறையின்*
*னொருசொற்பொருமோ வுலகிற்கவியே?*

என்னும் பாசுரத்தில் "தங்களுடைய கவிதைகளெல்லாம் ஆழ்வாருடைய வாக்கில் தோன்றிய தமிழ் மறையின் ஒரு சொல்லுக்கு ஈடாகாது" என்று அநுஸந்தி₄த்துத் தாங்களே ஆழ்வாருடைய விருதுகளை முழங்கிக்கொண்டு அவருக்குப் பலவிதமான சிறப்புக்களை நடத்திவைத்தார்கள். இவ்வண்ணம் மது₄ரகவியாழ்வார் ஆழ்வாருக்குக் கைங்கர்யம் செய்து கொண்டும், அவருடைய ஸ்ரீஸூக்திகளைப் பரவச்செய்து கொண்டும் இந்நிலவுலகிலே சிலநாள் வாழ்ந்திருந்து, "நம்புவார் பதி வைகுந்தம் காண்மினே" [கண்ணிநுண்-11] என்று தாம் அருளிச்செய்தபடியே, பரமபதமடைந்து அங்கும் தேவு மற்றறியாதவராய் நம்மாழ்வாருக்குத் தொண்டு செய்வதற்காகத் திருநாட்டுக்கு நடந்தருளினார்.

"உண்டபோது ஒரு வார்த்தையும் உண்ணாதபோது ஒரு வார்த்தையும் சொல்லுவார் பத்துப்பேருண்டிறே; அவர்கள் பாசுரங்கொண்டன்று இவ்வர்த்த₂ம் அறுதியிடுவது." "அவர்களைச் சிரித்திருப்பார் ஒருவர் உண்டிறே; அவர் பாசுரங் கொண்டு இவ்வர்த்த₂ம் அறுதியிடக்கடவோம்" [ஸ்ரீவசநபூ₄ஷணம் நாலாம் ப்ரகரணம் 408,409] என்று ஸ்ரீவசநபூ₄ஷண சூர்ணைகளிலும் அவற்றின் வ்யாக்₂யானங்களிலும் இவ்வாழ்வாருடைய பெருமைகள் விரிவாகக் காட்டப்பட்டன. அவை இங்கு அநுஸந்தி₄க்கத் தக்கவை.

இனி இவருடைய தி₃வ்ய ப்ரப₃ந்த₄மான "கண்ணிநுண் சிறுத்தாம்"பின் ஸாரார்த்த₂ம் விவரிக்கப்படுகிறது. ஆழ்வார்களுடைய தி₃வ்யப்ரப₃ந்த₄ங்களில் முதல் இரண்டு ஆயிரங்கள்

திருவஷ்டாக்ஷரத்திற்கு விவரணமாய் இருப்பவை. அதில் வேத₃த்துக்கு ஓம் என்னுமதுபோல் ஆதி₃யாய் இருக்கும் திருப்பல்லாண்டும், முதலாயிரத்திலுள்ள அமலனாதிபிரான் ஈறான மற்ற தி₃வ்ய ப்ரப₃ந்த₄ங்களும் திருவஷ்டாக்ஷரத்தில் முதல் பத₃மான ப்ரணவத்தின் பொருளை விவரிப்பவை. இந்தக் கண்ணிநுண் சிறுத்தாம்பு, திருவஷ்டாக்ஷரத்தின் இரண்டாம் பத₃மான நமஶ்ஶப்₃த₃த்தின் முடிந்த பொருளான ஆசார்ய ஶேஷத்வ பாரதந்த்ரியங்களை வெளியிடுகிறது. நாராயண நாம ப்ரப₄ாவத்தோடு தொடங்கி "அடிநாயேன் நினைந்திட்டேனே" என்று முடிவடையும் இரண்டாமாயிரம், திருவஷ்டாக்ஷரத்தில் மூன்றாவது பத₃மான 'நாராயணாய' என்னும் பத₃த்தை விவரிக்கிறது. "ஆசார்யனுடைய கைங்கர்யமே பரமபத₃த்திலும் நமக்குப் பேறு ஆகும். அதைப் பெறுவதற்கு உபாயமும் அவ்வாசார்யனுடைய அபி₄மானமே." என்பது கண்ணிநுண் சிறுத்தாம்பின் அரிய பெரிய ஸாரார்த்த₂மாகும்.

ஸ்ரீ மதுரகவியாழ்வார் வைப₄வம் முற்றிற்று

ஸ்ரீ மதுரகவியாழ்வார் திருவடிகளே ஶரணம்.



வ்ருஷபே$_4$ து விஶாக$_2$யாம் குருகாபுரி காரிஜம் ।
பாண்ட்$_3$யதே$_3$ஶே கலேராதெ$_3$ள ஶட$_2$ாரிம் ஸைந்யபம் ப$_4$ஜே ॥
[கலியுக$_3$த்தின் ஆதி$_3$யில் வைகாசி விசாகத்தில் பாண்டிய தே$_3$ஶத்தில் உள்ள திருக்குருகூரில் 'காரி' என்பவருக்குக் குமாரராய் 'ஸேனைமுதலியார்' எனப்படும் விஷ்வக்ஸேனரின் அம்ஶமாய் அவதரித்த ஶட$_2$கோபரை உபாஸிக்கிறேன்.]

தத: கலியுக$_3$ஸ்யாதெ$_3$ள வைஶாக$_2$யாம் விஶ்வப$_4$ாவந: ।
விஷ்ணுப$_4$க்திப்ரதிஷ்ட$_2$ார்த்த$_2$ம் ஸேநேஶோऽவதரிஷ்யதி ॥
ஸேநேஶகருணாலப்$_3$த$_4$ தி$_3$வ்யமந்த்ரத்$_3$வயம் முத$_3$ா ।
த்$_3$ராவிட$_3$ாம்நாயவக்தாரம் ஶட$_2$கோபகு$_3$ரும் ப$_4$ஜே ॥
வகுளாப$_4$ரணம் வந்தே$_3$ ஜக$_3$த$_3$ாப$_4$ரணம் முநிம் ।
யஶ்ஶ்ருதேருத்தரம் ப$_4$ாக$_3$ம் சக்ரே த்$_3$ராவிட$_3$ப$_4$ாஷயா ॥
வகுளாலங்க்ருதம் ஸ்ரீமச்ச$_2$ட$_2$கோபபத$_3$த்$_3$வயம் ।
அஸ்மத்குலத$_4$நம் போ$_4$க்$_3$யமஸ்து மே §மூர்த்த$_4$பூ$_4$ஷணம் ॥

[பின்னிரண்டு ஶ்லோகங்களும் பராங்குஶாஷ்டகத்தில் உள்ளன.]

[அதன்பின் கலியுகத்தின் முதல்வருஷத்தில், வைகாசி விசாகத்தில், உலகங்களையெல்லாம் ரக்ஷிக்கும் சேனைமுதலியார், விஷ்ணு ப$_4$க்தியை நிலைநிறுத்துவதற்காக (அம்சாவதாரமாக) அவதரிக்கப்போகிறார். சேனைமுதலியாருடைய அருளினால் த்$_3$வயமெனும் தி$_3$வ்யமந்திரத்தை உபதேசிக்கப்பெற்றவரும், திராவிட வேத$_3$த்தை அருளியவருமான சடகோபமுனிவரை தியானிக்கிறேன். யாவரொரு ஆழ்வார் - வேதத்தின் உத்தர காண்ட$_3$மாகிய உபநிஷத்தைத் தமிழ்மொழியினால் வெளியிட்டருளினாரோ, உலகுக்கெல்லாம் அலங்காரபூ$_4$தராய், மகிழ்மாலை மார்பினரான அந்த நம்மாழ்வாரை வணங்குகிறேன். மகிழ மலர்களால் அலங்கரிக்கப்பட்டதும், எமது குலச்செல்வமும், பரமபோ$_4$க்$_3$யமுமான ஆழ்வார் திருவடியிணையானது என் சென்னிக்கு அலங்காரமாயிடுக.]

லாபே$_4$ கலேர்வாஸர ஏவ ராதே$_4$
மாஸே விஶாகே$_2$ மஹநீயதாரே ।

§ (பா) 'மூர்த்$_4$நி ஸந்ததம்'

ஶுக்ரஸ்ய வாரேऽஜநி விஶ்வதித்₂யாம்
பராங்குஶோऽயம் ப₄க₃வாந் குஶரே ||

[கலிபிறந்தபின் "லாப₄" என்னும் எழுத்துக்களிலிருந்து (கடபயாதி₃ ஸங்க்₂யைப்படி) கிடைக்கும் நாற்பத்துமூன்றுவது நாளில் வஸந்தருதுவில், வைகாசி மாஸத்தில், விஶாக₂மெனும் சிறந்த நட்சத்திரத்தில், வெள்ளிக்கிழமையில், சதுர்த்த₂சி திதி₂யில் கடகலக்₃னத்தில் பராங்குஶர் அவதரித்தார்.]

ஶ்ரீவிஜ்ஞாநதி₃நோத்தரேऽஹநி கலௌ
வர்ஷே ப்ரமாத்₂யாஹ்வயே
மாஸே மாத₄வநாம்நி பா₄ர்க்க₃வதி₃நே
ருக்ஷே விஶாக₂ாபி₄தே₄ |
லக்₃நே ஶுத்₃த₄சதுர்த்த₃ஶீ திதி₂யுதே
ஶ்ரீமத்குஶரேऽபி ச
க்ஷித்யாம் ப்ராது₃ரபூ₄த் பராங்குஶகவிர்
பா₄க்₃யோத₃யோऽஸ்மாத்₃ருஶாம் ||

[கலியுக₃த்தில், பிரமாதி₂ என்கிற முதல்வருடத்தில், வைகாசி மாதத்தில் வெள்ளிக்கிழமையில் விஶாக₂நட்சத்திரத்தில், சுக்ல பக்ஷம் சதுர்த்த₃சியுடன் கூடிய அழகிய கடகலக்₃னத்தில், "ஸ்ரீவிஜ்ஞாந" என்னும் எழுத்துக்களால் ஏற்படும் நாற்பத்திரண்டு தினங்கள் சென்றபின், நாற்பத்துமூன்றுவது நாளில், நம்மைப்போன்றவர்களின் நல்வினைப்பயனாக நம்மாழ்வார் பூ₄மிதனில் அவதரித்தருளினார்.]

ராதே₄ கலிதி₃நே லாபே₄ வைஶாகே₃ காவ்யவாஸரே |
லக்₃நே கர்க்கடகேऽஸூத தநயம் நாத₂நாயிகா ||
[தி₃வ்யஸூரிசரிதம் 4-29]

[லாப₄' என்னும் எழுத்துக்களால் கிடைக்கும் நாற்பத்து மூன்றுவது கலிதி₃னத்தில், வஸந்தருதுவில், வைகாசி விசாகத்தில், வெள்ளிக்கிழமையில், கடகலக்₃னத்தில், உடையநங்கை சடகோபரெனும் பிள்ளையைப் பெற்றெடுத்தாள்.]

முற்கூறிய தனியன்களிலும், வைப₄வ ஶ்லோகங்களிலும் முன்னோர்கள் அநுஸந்தி₄த்த ரீதியில், கலிபிறந்து நாற்பத்திரண்டு

தி₃னங்கள் சென்றபின் நாற்பத்து மூன்றுவது நாளில், ப்ரமாதி₂ வருஷத்தில், வைகாசி ஶுக்லபக்ஷ சதுர்த்த₃ஶியில், விஶாக₂ நக்ஷத்திரத்தோடு கூடிய வெள்ளிக்கிழமையில் அவதரித்தவரும், மற்ற ஆழ்வார்கள் அனைவரையும் அவயவங்களாகக் கொண்டவரும், ப்ரபன்ன ஜநகூடஸ்த₂ருமான நம்மாழ்வாருடைய வைப₄வம் இனி விவரிக்கப்படுகிறது.

"தாம்ரபர்ணீ நதீ₃ யத்ர" (பா₄க₃வதம் 11-5-39) என்று இவருடைய அவதாரம் ஸ்ரீபா₄க₃வதத்திலும் உணர்த்தப் பட்டது. "எந்தை தந்தை தந்தை தந்தை தந்தைக்கும் மூந்தை" [திருவாய் 3—3—2] "கேசவன் தமர் கீழ்மேல் எமர் ஏழெழு பிறப்பும்" [திருவாய் 2—7—1] என்று இவ்வாழ்வார் தாமே அருளிச்செய்தபடி "ஏழ்படிகால் தொடங்கி வந்து வழி வழியாட்செய்யும்" ஶுத்₃த₄ ஸ்ரீவைஷ்ணவ பரம்பரையில் அவதரித்தவர் இவ்வாழ்வார். பாண்டிய நாட்டில் தாம்ரபர்ணிக் கரையில் உள்ள திருக்குருகூரிலே வேளாள வருணத்தில் திருமாலுக்கே தொண்டு பூண்டொழுகும் குலத்தில் பிறந்த திருவழுதிவளநாடர் என்னும் பரம பா₄க₃வதர் ஒருவர் வாழ்ந்து வந்தார். அவர் குமாரர் அறந்தாங்கியார் என்பவர். அவர் பிள்ளை சக்ரபாணியார். அவர்பிள்ளை அச்சுதன். அவர் குமாரர் செந்தாமரைக் கண்ணர். அவர்பிள்ளை செங்கண்ணர். அவர் பிள்ளை பொற்காரியார். அவர்குமாரர் காரியார். அவருடைய திருக்குமாரராய் 'மாறன்' என்றும் 'சடகோபன்' என்றும் 'பராங்குஶன்' என்றும் பேர் பெற்றவராய் உலகுய்ய வந்து அவதரித்தவர் நம்மாழ்வார்.

பொற்காரியார் தமது பிள்ளையான காரியாருக்குத் திருமணம் செய்யக்கருதி, மலைநாட்டில் 'திருவண்பரிசாரம்' என்னும் திருப்பதியில் உள்ள "திருவாழ்மார்பர்" என்னும் திருமாலடியாருடைய திருக்குமாரத்தியான 'உடைய நங்கையாரை' மணம் பேசி முடித்து, அவ்வூரிலேயே மிகச் சிறப்பாக இருவர்க்கும் விவாஹ மஹோத்ஸவத்தை நடத்தி வைத்தார். அந்த தம்பதிகள் திருக்குருகூரில் சில வருஷங்கள் இல்லறம் நடத்தி வந்தனர். ஒருநாள் மாமனரான திருவாழ்மார்பரது வேண்டுகோளுக்கிணங்க, காரியார் தம்முடைய பத்தினியான

உடைய நங்கையாருடன் திருவண்பரிசாரத்துக்குச் சென்று, அங்கு சிலகாலம் வாழ்ந்திருந்து, மறுபடியும் திருக்குருகூருக்குத் திரும்பிவரும் வழியில், திருக்குறுங்குடியிலே கோயில்கொண்டு எழுந்தருளியிருக்கும் நம்பி எம்பெருமானை ஸேவித்து "அடியோங்களுக்கு ஒரு மகப்பேற்றை (ஸந்தானத்தை) அளித்தருளவேணும்" என்று ப்ரார்த்தித்தார். திருக்குறுங்குடி நம்பியும் "நாமே வந்து பிறக்கிறோம்" என்று அர்ச்சக முகத்தாலே வரம் அளித்தருளினார். நம்பியிடமிருந்து மாலை ப்ரஸாதங்களைப் பெற்றுக்கொண்டு, காரியார் திருக்குருகூருக்கு எழுந்தருளி வாழ்ந்துவருகையில் உடையநங்கையார் கருத்தரிக்க, எம்பெருமான் பாரெல்லாம் உய்யும்படி ஸேனை முதலியாரை நம்மாழ்வாராக வந்து அவதரிக்கும்படி நியமிக்க, முற்கூறியபடி கலி பிறந்த நாற்பத்து மூன்றாவது நாளில் கலிதோஷத்தை அகற்றுவதற்காக விஷ்வக்ஸேனரின் அம்சமாக நம்மாழ்வார் அவதரித்தருளினார்.

இப்படித் திருக்குறுங்குடி நம்பியின் அம்சமாகவும், ஸேனை முதலியாருடைய அம்சமாகவும் ஆழ்வார் அவதரிப்பதற்கு முன்னமே "சென்றால் குடையாம்" [முதல் திருவ-53] என்ற ரீதியில் தொடர்ந்து அடிமை செய்யும் திருவநந்தாழ்வான் இவர் மீது மழை வெய்யில் முதலியன படாமல் ரக்ஷிப்பதற்காகத் திருக்குருகூரில் ஒரு புளியமரமாக அவதரித்து வளர்ந்திருந்தான்.

நம்மாழ்வார்—பிறந்த அன்று தொடங்கி அழுவது, தாய்ப் பாலுண்பது முதலிய உலக நடைக்கு ஒத்த செயல்கள் எதையும் செய்யாமல் இருந்த போதிலும், பகவதநுபவத்தாலே வாட்டமில்லாது வளர்ந்து வந்தார். அவ்வதிசயத்தைக் கண்ட தாய் தந்தையர் எம்பெருமான் மேலே பாரத்தை வைத்துப் பிறந்தபின் பன்னிரண்டாம் நாள் திருக்குருகூரில் கோயில்கொண்டு எழுந்தருளியிருக்கும் பொலிந்து நின்ற பிரான் ஸன்னிதிக்குக் குழந்தையை எடுத்துச் சென்று, பிரானை ஸேவிக்கப்பண்ணி வைத்து, அப்பெருமான் திருமுன்பே அந்த தெய்வக் குழந்தைக்கு, உலக நடைக்கு மாறாக இருந்ததனால் 'மாறன்' என்று திருநாமம் சாத்தினார்கள். அருகிலே திருவநந் தாழ்வான் அவதாரமாயிருந்த திருப்புளியாழ்வாரடியிலே ஆணிப்

பொன்னால் செய்த வண்ணச் சிறுத்தொட்டிலிலே கண்வளர்த்தி இவரைத் தங்கள் பிள்ளையாகக் கருதாமல் "எங்கள் குடிக்கரசே" என்று போற்றி வந்தார்கள். எம்பெருமானும் ஸேனை முதலியாரை அனுப்பி, அவருக்குப் பஞ்சஸம்ஸ்காரங் களையும் செய்வித்து எல்லா அர்த்த₂ங்களையும் உபதே₃ஶிக்கச் செய்து மயர்வற மதிநலம் அருளினான்.

க₃ர்ப₄த்தில் இருக்கும்போது குழந்தைகளின் அறிவை மறைக்கும் ஶட₂வாயுவை — பிறக்கும்போதே தம்மை மேலிடாதபடி ஹுங்காரத்தாலே ஓட்டியவராகையாலே, இவருக்கு "ஶட₂கோபர்" என்னும் பெயரும் வழங்கலாயிற்று.

"நம்பெருமாள் நம்மாழ்வார் நஞ்சீயர் நம்பிள்ளை,என்பர் அவ ரவர்தம் ஏற்றத்தால்—அன்புடையோர், சாற்று திருநாமங்கள்" என்று மாமுனிகள் உபதேசரத்தின மாலையில் அருளிச்செய்த படியே, நம்பெருமாளாகிற ஸ்ரீரங்க₃நாத₂னால் "நம் ஆழ்வார்" என்று அபி₄மானிக்கப் பெற்றதால், இவர் நம்மாழ்வார் என்னும் திருநாமத்தையும் பெற்றார். திருவுள்ளம் உகந்து பொலிந்து நின்றபிரான் ப்ரஸாதி₃த்தருளிய மகிழமாலையை த₄ரித்ததனால் "நாட்கமழ் மகிழ்மாலை மார்பினன்" [திருவாய் 4—10—11] என்று தாமே அருளிச்செய்தபடியே, "மகிழ்மாலை மார்பினர்" என்றும் "வகுளாப₄ரணர்" என்றும் பேர் பெற்றார். பிற மதங்களாகிற யானைகளைத் தமது தி₃வ்யப்ரப₃ந்த₄ங்களில் அருளிய தத்வார்த்த₂ங்களால் செருக்கடக்கி, அவற்றுக்கு அங்குஶம் (மாவெட்டி) என்னும் கருவிபோலே இருக்கையால் "பராங்குஶர்" என்றும் புகழ் பெற்றார்.

இத்தகைய ஆழ்வார் இவ்வுலகில் தம்மைப் போன்ற ப₄க₃வத₃நுப₄வமுடைய ஶிஷ்யனைக் காணாமையாலே, பதினாறு வயது வரை வாய் திறவாமலே இருந்தார். அப்போது மது₄ரகவியாழ்வார் இவரை ஸந்தி₄த்து வாய்திறக்கவைத்து இவருக்கு ஶிஷ்யரானது முதலான வ்ருத்தாந்தங்கள் மது₄ரகவி யாழ்வார் வைப₄வத்திலே காட்டப்பட்டன. பரவாஸு தே₃வனும், வ்யூஹமூர்த்திகளும், விப₄வமூர்த்திகளும், அந்தர் யாமி எம்பெருமானும், தி₃வ்ய தே₃ஶங்களில் எழுந்தருளி

யிருக்கும் அர்ச்சா மூர்த்திகளும் திருப்புளியாழ்வார் அடியிலே எழுந்தருளியிருக்கும் ஆழ்வாருடைய நெஞ்சென்னும் உட் கண்ணுக்கு ஸேவை ஸாதித்தார்கள். அவ்வெம்பெருமான் களுடைய ஸ்வரூப ரூப கு₃ண விபூ₄திகளை அநுப₄வித்து அவ்வநு ப₄வத்தாலுண்டான ப்ரீதி உள்ளடங்காமல் வழிந்து, திருவிருத்தம், திருவாசிரியம், பெரியதிருவந்தாதி, திருவாய் மொழி என்னும் நாலு தி₃வ்ய ப்ரப₃ந்த₄ங்களாக வெளிப் பட்டது. இதில் நூறு பாசுரங்கள் கொண்ட திருவிருத்தம் ருக்₃வேத₃ஸாரம் என்றும், ஏழு பாசுரங்கள் கொண்ட திருவாசிரியம் யஜுர்வேத₃ ஸாரம் என்றும், எண்பத்தேழு பாசுரங்கள் கொண்ட பெரிய திருவந்தாதி அத₂ர்வணவேத₃ ஸாரம் என்றும், ஆயிரத்து நூற்றிரண்டு பாசுரங்களும், நூறு திருவாய்மொழிகளும் (பதிகங்களும்), பத்து பத்துக்களும் (ஶதகங்களும்) கொண்ட ஒப்புயர்வற்ற தி₃வ்ய ப்ரப₃ந்த₄மான திருவாய்மொழி. வேத₃ங்களுள் ஒப்புயர்வற்றதான ஸாம வேத₃த்தின் ஸாரம் என்றும் முன்னோர்கள் அருளிச்செய்வர். ஆழ்வாருடைய திருவாய்மொழியை அநுப₄விப்பதற்காக நித்யஸூரிகளும் ஶ்வேத த்₃வீப வாஸிகளும், இவ்வுலகிலுள்ள ஸ்ரீ வைஷ்ணவ ஶ்ரேஷ்ட₂ர்களும், திருப்புளியாழ்வாரடியிலே கூடினார்கள். அந்த மெய்யடியார்கள் கூட்டத்தைக் கண்டு 'பொலிக பொலிக பொலிக" [திருவாய் 5-2] என்னும் திருவாய்மொழியிலே அவர்களுக்குப் பல்லாண்டு பாடி "கலியும் கெடும் கண்டுகொண்மின்" என்னும் பாசுரப் பகுதியாலே வரப்போகும் மஹாசார்யரான எம்பெருமானார் காலம் தொடங்கி ஸ்ரீ வைஷ்ணவர்கள் திரள் லக்ஷோபலக்ஷமாகப் பெருகப் போவதை முன்கூட்டியே உணர்த்தியருளினார். பிறந்தது முதல் இவ்வுலக வாழ்க்கையில் ஈடுபடாமல், தாய்ப்பாலும் குடிக்காமல், திருத்துழாய் மணத்தோடேயே முளைப்பதுபோலே எம்பெரு மான் அருளிய மயர்வற்ற மதிநலங்களாகிற ஜ்ஞாந ப₄க்தி களுடன் இவர் அவதரிக்கையாலே, "வாஸுதே₃வஸ் ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுது₃ர்லப₄:" [கீ₃தை 6-19] ['வாஸுதேவனே பரமப்ராப்யமும், ப்ராபகமும், த₄ாரக போஷக போ₄க்₃யங்களு மாவான்' என்று என்னைப் பற்றுகின்றவனே மஹாத்மா; அவன் மிகவும் கிடைத்தற்கு அரியவன்] என்று கீ₃தையில் கண்ணனாலும் கொண்டாடப்பட்டவர் இவரே என விளங்கும். இதனாலேயே இவர் ப்ரபந்நஜந கூடஸ்த₂ராகவும், ஆழ்வார் களில் தலைவராகவும், மற்றையாழ்வார்களை அவயவங்களாகக்

கொண்டவராகவும் முன்னோர்களால் கொண்டாடப்படுகிறார். இவர்க்கு பூ₄தத்தாழ்வாரை ஶிரஸ்ஸாகவும், பொய்கை பேயாழ்வார்களைக் கண்களாகவும், பெரியாழ்வாரை முக₂மாகவும், திருமழிசையாழ்வாரைக் கழுத்தாகவும், குலசேகராழ்வாரையும் திருப்பாணாழ்வாரையும் கைகளாகவும், திருமங்கையாழ்வாரைக் கொப்பூழாகவும், மது₄ரகவியாழ்வாரைத் திருவடிகளாகவும், எம்பெருமானாரைத் திருவடிநிலைகள் என்னும் பாது₃கையாகவும் வழங்குவது மரபு. இப்படி ஒப்புயர்வற்ற இவ்வாழ்வார் எம்பெருமானுடைய திருவடிநிலையாகவே இருப்பதுபற்றி எல்லா விஷ்ணு ஆலயங்களிலும் பெருமாளுடைய பாது₃கை "ஶடாரி" என்றும் "ஶட₂கோபன்" என்றும் வழங்கப்படுகிறது. இப்படிப்பட்ட பெருமைகளையுடைய இவ்வாழ்வார் வாழ்நாள் முழுதும் வேறு எதிலும் சிந்தை செலுத்தாது எம்பெருமானோடு கூடி மகிழ்ந்தும், அவனைப் பிரிந்து துன்புற்றும், பரப₄க்தி பரஜ்ஞான பரமப₄க்திகள் வளரப் பெற்று முப்பத்தைந்து திருநக்ஷத்திரம் இந்நிலவுலகில் வாழ்ந்திருந்து 'சூழ்விசும்பணிமுகில்' [திருவாய் 10-9] என்னும் திருவாய்மொழியில் எம்பெருமான் தமக்குக் காட்டியபடியே அர்ச்சிராதி₃க₃தியாலே சென்று நித்யஸூரிகளெல்லாம் எதிர்கொள்ள வைகுந்தமாநகர்புக்குத் திருமாமணி மண்டபத்திலே எம்பெருமானுக்கும் நித்யபோ₄க்₃யவஸ்துவாய் அந்தமில் பேரின்பத்தை அடைந்தருளினார்.

இனி இவருடைய தி₃வ்ய ப்ரப₃ந்த₄ங்களின் பொருள் சுருக்கமாக விவரிக்கப்படுகிறது. இவருடைய தி₃வ்ய ப்ரப₃ந்த₄ங்கள் நாலுமே ரஹஸ்ய த்ரய விவரணமாகவும், அர்த்த₂ பஞ்சக விவரணமாகவும் இருப்பதால் தமிழ்வேத₃ம் என்று குலாவப்படுகின்றன. முதல் ப்ரப₃ந்த₄மான திருவிருத்தம் 'அடியேன் செய்யும் விண்ணப்பமே' என்று ஶேஷத்வ ஸ்வரூபத்தை விளக்கிக்கொண்டு தொடங்கி அதை விஶேஷமாக விளக்கிக் கொண்டு சென்று "ஞானப்பிரானையல்லால் இல்லை நான்கண்ட நல்லதுவே" என்று உபாயம் எம்பெருமானே என்று நிஷ்கர்ஷித்துத் தலைக்கட்டுகையால், முதல் ரஹஸ்யமான திருவஷ்டாக்ஷரத்தில் ஸ்வரூபத்தை விளக்கும் முதல் பத₃மான ப்ரணவத்தையும், உபாயத்தை நிஷ்கர்ஷிக்கும் இரண்டாவது பத₃மான நமஶ் ஶப்₃த₃த்தையும் விவரிப்பதாகிறது. இரண்டாவது ப்ரப₃ந்த₄மான திருவாசிரியம், "செக்கர்மா முகிலுடுத்து [1] என்று

தொடங்கி எம்பெருமானுடைய ஸ்வரூப ரூப குண விபூதிகளை யும், ''நேரிய காதல் அன்பில் இன்பீன் தேறல் அமுதவெள்ளம்'' [2] என்று ஸ்வயம்ப்ரயோஜந பக்தியையும், ''தனிமாத் தெய்வத்தடியவர்க்கு இனி நாம் ஆளாகவே இசையுங்கொல்'' [3] என்று சரம பர்வமான பாகவதர்கள் விஷயத்தில் கைங்கர்யமாகிற பரம புருஷார்த்தத்தையும். ''மாயக்கடவுள் மாமுதல் அடியே—ஊழிதோறூழியோவாது வாழியவென்று யாம் தொழ இசையுங்கொல்'' [4] என்று ப்ரதமபர்வமான எம் பெருமான் விஷயத்தில் மங்களாஶாஸனமும் கைங்கர்யமுமாகிற புருஷார்த்தங்களையும் விரிவாக விளக்குகையாலே முதல் ரஹஸ்ய மான திருமந்த்ரத்தில் புருஷார்த்தத்தை விளக்கும் மூன்றுவது பதமான 'நாராயணாய' என்னும் நலந்தரும் சொல்லை விவரிப்ப தாகிறது. ஆக, முதல் இரண்டு ப்ரபந்தங்களாலே முதல் ரஹஸ்யமான திருமந்திரம் விளக்கப்பட்டது. மூன்றுவது ப்ரபந்தமான பெரிய திருவந்தாதி ''நெறிகாட்டி நீக்குதியோ'' [6] 'ஓரைவரையே மாறுகக் காத்தானை'' [19] ''நாய்தந்து மோதாமல் நல்குவான்'' [23] ''மனத்தலை வன் துன்பத்தை மாற்றினேன், வானோர் இனத்தலைவன் கண்ணனால் யான்.'' [25] ''அருளென்னும் தண்டாலடித்து'' [26] ''அசுரர்களை நேமியால் பாறு பாறாக்கினான்'' [33] ''வினையார் தர முயலும் வெம்மையேயஞ்சி–நாயகத்தான் பொன்னடிக்கள் ஏத்தினேன்'' [45] ''நீங்காத மாகதியாம் வெந்நரகில் சேராமல் காப்பதற்கு நெஞ்சே! நீ செங்கண்மால் கதியா நினை'' [46] ''வானோ மறிகடலோ'' [54] ''வரவாறொன்றில்லையால் வாழ்வினிதால் –மாயவர்தாம் காட்டும்வழி'' [56] ''மாடே வரப்பெறுவர்'' [59] ''வெந்நரகில் சேராமல் காப்பதற்கு இல்லை காண் மற்றோரிறை'' [60] ''கலந்து நலியும் கடும் துயரை மலங்க அடித்து மடிப்பான்'' [65] ''அகம் சிவந்த கண்ணினராய்'' [66] ''நின்னன்றி மற்றிலேன் கண்டாய் எனதுயிர்க்கு ஓர்துணை'' [77] ''உயப்போம் நெறியிதுவே கண்டாய்'' [83] ''எப்போதும் கைகழலாநேமியான் நம்மேல் வினைகடிவான்'' [87] என்று பற்பல பாசுரங்களில் உபாயாந்தரங்கள் தன்னைவிட்டு நீங்குவ தற்காக அவனால் ஏற்படுத்தப்பட்டவையாகையாலே கைவிடத் தக்கவை என்றும், அவனே உபாயம் என்றும், அவனை உபாயமாகக் கொண்டார்க்குப் பாபங்கள் பறந்தோடிப்போம் என்றும், அநிஷ்ட நிவ்ருத்தியும் இஷ்டப்ராப்தியுமான

இரண்டையும் தன் அடியார்க்குச் செய்யும் உபாயமாயிருக்கும் அவனைப் பற்றினார்க்கு வருத்தமில்லை என்றும் விரிவாகச் சொல்லுகையாலே, இவ்வர்த்த2ங்களைச் சுருங்கச் சொல்லும் சரம ஶ்லோகத்தை விவரிக்கிறது.

நாலாவது ப்ரப3ந்த4மான திருவாய்மொழி மந்த்ரரத்நமான த்3வயத்தை விவரிக்கிறது. "த்3வயார்த்த2ம் தீ3ர்க்க4 ஶரணாக3தி என்றது ஸாரஸங்க்3ரஹத்திலே" [ஆசார்யஹ்ருத3யம் 210]" என்னும் ஆசார்ய ஹ்ருத3ய சூர்ணையிலும், அதற்கு மாமுனிகள் அருளிய வ்யாக்2யாநத்திலும் — திருவாய்மொழியானது பத்துப் பத்துக்களாலும், த்3வயத்திலுள்ள பத்து அர்த்த2ங்களையும் விவரிக்கையாலே தீ3ர்க்க4ஶரணாக3தியாய் இருப்பது என்று பிள்ளைலோகாசாரியர் ஸாரஸங்க்3ரஹம் என்னும் ரஹஸ்யத்திலே விளக்கியருளினார் என்று காட்டப்பட்டது. ஆக இவ்வண்ணமாக, நம்மாழ்வார் அருளிய நாலு தி3வ்யப்ரப3ந்த4ங்களும் ரஹஸ்யத்ரய விவரணமாயிருக்கின்றன என்று விளங்குகிறது. முதல் மூன்று ப்ரப3ந்த4ங்களிலும் சுருக்கமாகச் சொல்லப்பட்ட அர்த்த2பஞ்சகத்தையும் திருவாய்மொழியில் இருபது பதிகங்களாலே தெளிவாக்கி, மற்ற எண்பது பதிகங்களாலே விஸ்தரிக்கிறார் என்கிற அர்த்த2ம் "மூன்றில் சுருக்கிய [211]" என்று தொடங்கும் ஆசார்ய ஹ்ருத3ய சூர்ணையிலும், அதன் வ்யாக்2யானங்களிலும் காணலாம். திருவாய்மொழியின் பத்துப் பத்துக்களிலும் முறையே 1. பரத்வம் 2. காரணத்வம் 3. வ்யாபகத்வம் 4. நியந்த்ருத்வம் 5. காருணிகத்வம் 6. ஶரண்யத்வம் 7. ஶக்தத்வம் 8 ஸத்யகாமத்வம் 9. ஆபத்ஸக2த்வம் 10. ஆர்த்திஹரத்வம் என்னும் கு3ணங்களோடு கூடிய எம்பெருமான் ஆழ்வாருக்குப் பிறப்பித்த நிலைகள் என்னென்ன என்பதை "பரத்வ காரணத்வ" [218] என்று தொடங்கும் ஆசார்யஹ்ருத3ய சூர்ணையிலும், அதன் வ்யாக்யாநத்திலும் காணலாம். நம்மாழ்வாருடைய நாலு தி3வ்யப்ரப3ந்த4ங்களின் பொருட்பெருமைகள் முழுவதையும், அவற்றுக்குப் பிள்ளான் நஞ்சீயர் பெரியவாச்சான்பிள்ளை தெள்ளார் வடக்குத் திருவீதிப்பிள்ளை முதலான பூர்வாசார்ய வ்யாக்2யாநங்களிலும் மாமுனிகளின் வ்யாக்2யாநத்தோடு கூடிய ஆசார்யஹ்ருத3யம் என்னும் அத்3பு4த க்3ரந்த2த்திலும் விஸ்தாரமாகக் காணலாம்.

**நம்மாழ்வார் வைப4வம் முற்றிற்று.**

**நம்மாழ்வார் திருவடிகளே ஶரணம்.**

# திருமங்கையாழ்வார் வைபவம்



**திருவாலிதிருநகரி — திருமங்கையாழ்வார்**

**வ்ருஶ்சிகே க்ருத்திகாஜாதம் சதுஷ்கவி ஶிக$_2$ாமணிம் ।**
**ஷட்ப்ரப$_3$ந்த$_4$க்ருதம் ஶார்ங்க$_3$மூர்த்திம் கலிஹமாஶ்ரயே ॥**

[கார்த்திகை மாதத்தில் கார்த்திகை நக்ஷத்திரத்தில் அவதரித்தவராய், நாலுகவிப் பெருமாளாய், ஆறு தி$_3$வ்யப்ரப$_3$ந்த$_4$ங்களை அருளிச்செய்தவராய், ஶார்ங்க$_3$த்தின் அம்ஶமானவரான கலிகன்றி என்னும் திருமங்கையாழ்வாரை ஆஶ்ரயிக்கிறேன்.]

**பரகால ஹரிம் வந்தே$_3$ ஹரிபாத$_3$ கு$_3$ஹாஶயம் ।**
**உந்மத்த ப்ரதிகூலேப$_4$ கும்ப$_4$ ஸம்பே$_4$த$_3$ விப்$_4$ரமம் ॥**
**நாத$_3$ ப்ரஸப$_4$ஸந்த்ரஸ்த ஶைவஶாக்யாதி$_3$ து$_3$ர்த்$_3$விபம் ।**
**பரகாலம்ருகே$_3$ந்த்$_3$ரம் த்வாம் ப்ரபத்$_3$யேऽச்யுதவந்தி$_3$நம் ॥**

[பரமபுருஷனுடைய திருவடிகளாகிற கு$_3$ஹையிலே சயனித்திருப்பவரும், மத$_3$ங்கொண்ட புறச்சமயிகளாகிற யானைகளின் மத்தகத்தைப் பிளப்பதை விளையாட்டாகக் கொண்டவருமான பரகாலர் என்னும் (திருமங்கையாழ்வாராகிய) சிங்கத்தைத் தொழுகின்றேன். சைவர், பௌ$_3$த்$_3$த$_4$ர் முதலானவராகிய தீய யானைகளைத் தம் கர்ஜனையால் மிகவும் பயப்படச் செய்தவராய், அச்சுதனையே தொழுமவரான பரகாலச் சிங்கமாகிற உம்மை ஶரணமடைகிறேன்.]

**ஸூத$_4$ாக$_3$ாநாப்$_3$த$_3$ாநாம் கலியுக$_3$ப$_4$வாநாமபக$_3$மே**
**நளே வர்ஷே மாஸே ஶரதி$_3$ சரமே தை$_3$வதகு$_3$ரோ: |**
**தி$_3$நே தாரே வஹ்நேஶ்ஶிஶிரகிரணே பூர்ணிமஹூஷி**
**க்ஷிதாவாவிர்பூ$_4$த: கலிரிபுரமேயாத்மமஹிமா ||**

[கலியுகத்தில், 'ஸூத$_4$ாக$_3$ாந' என்பதால் (கடபயாதி$_3$ஸங்க்$_2$யைப் படி) கிடைத்த முந்நூற்றுத் தொண்ணூற்றேழு வருஷங்கள் சென்றபின் நளவருஷத்தில், ஶரத்$_3$ருதுவில் இரண்டாவதான கார்த்திகை மாதத்தில், வியாழக்கிழமையில், அக்$_3$னியின் நட்சத்திரமான கார்த்திகை நட்சத்திரத்தில், சந்திரன் நிறைந்து விளங்கும் பௌர்ணமியில், அளத்தற்கரிய பெருமையுடைய கலிகன்றியான திருமங்கையாழ்வார் இப்புவியில் அவதரித்தருளினர்.]

**ஸமஜாயத தத்ர ஶாப$_3$ரப்ரமுக$_2$: கஶ்சந நீலநாமக: |**
**புருஷோத்தமகார்முகாம்ஶஜஸ் ஸ்பு$_2$ரிதே கார்த்திக**
**க்ருத்திகோடு$_3$நி ||**

[தி$_3$வ்யஸூரிசரிதம் 7-34]

[அந்தத் திருக்குறையலூரிலே, கள்ளர் தலைவராய், புருஷோத்தமனின் சார்ங்கமென்னும் வில்லின் அம்ஶமாயிருப்பவராய், நீலன் என்னும் திருநாமத்தையுடையவரான திருமங்கையாழ்வார், விளங்காநிற்கும் கார்த்திகையில் கார்த்திகை நட்சத்திரத்தில் அவதரித்தருளினர்.]

முற்கூறிய தனியன்களிலும் வைப$_4$வ ஶ்லோகங்களிலும், முன்னோர்கள் அநுஸந்தி$_4$த்த ரீதியில், கங்கையில் புனிதமாய

காவிரிநதி பல கால்களாகப் பரந்து பொன்கொழிக்கும் பெருமைபெற்ற சோழமண்டலத்திலே, திருமங்கை என்னும் நாட்டிலே, திருவாலிதிருநகரி என்ற திவ்யதேஶத்திற்கு மிக அருகிலுள்ள திருக்குறையலூரிலே, நான்காம் வருணத்தில், கள்ளர்குடியிலே, சோழ அரசனுக்கு சேனைத்தலைவராய் இருந்த ஒருவருடைய குமாரராய், கலிபிறந்து முந்நூற்றுத்தொண்ணூற் றெட்டாவது ஆண்டான நளவருஷத்தில் கார்த்திகை மாதத்தில் பௌர்ணமியும் கார்த்திகை நக்ஷத்திரமும்கூடிய வியாழக்கிழமையில் ஶார்ங்கம் என்னும் விஷ்ணுதநுஸ்ஸின் அம்ஶமாக அவதரித்தவர் இவ்வாழ்வார்.

இவர் பிறக்கும்போதே நீலமேக வண்ணனான கண்ணன் (எம்பெருமான்)போலே கருமைநிறமுடையவராய் இருந்தபடி யால், இவருக்குத் தந்தை 'நீலன்' என்று திருநாமம் இட்டார். வளர்ந்தபின் தமது குடிக்கு ஏற்ப, ஆயுதவித்யைகளில் தேர்ச்சி பெற்று சோழராஜனிடம் ஸேநாதிபதியாய் அமர்ந்து, பல போர்களில் வெற்றிபெற்று 'பரகாலன்' (எதிரிகளுக்கு யமன் போன்றவன்) என்று புகழ்பெற்றார். இவருடைய வீரத்தை மதித்த அரசன் இவரைத் திருமங்கை நாட்டிற்கு மன்னனாக்கித் தனக்குக் கீழே சிற்றரசனாக இருக்கும்படி முடிசூட்டினான். அதனால் 'திருமங்கைமன்னன்' என்று பெயர்பெற்றார். இவ்வாறு குறுநிலமன்னராயிருந்து, இயல் இசை நாடகம் என்னும் முத்தமிழிலும் ஈடுபாடுடையவராய், நான்கு புருஷார்த்தங்களில் மூன்றாவதான காமபுருஷார்த்தத்திலேயே கண்செலுத்துபவராய் இருந்தார்.

அந்நாட்டில் "திருவெள்ளக்குளம்" (அண்ணன்கோயில்) என்னும் திருப்பதியில் உள்ளதொரு தாமரைப்பொய்கையில் தேவர்மாதர் பலர் வந்து, நீர்விளையாட்டு விளையாடிச் சென்றார்கள். அவர்களில் ஒருத்தியான "திருமாமகள்" என்பவள் தன் இச்சையால் தெய்வவடிவத்தை விட்டு மானிட வுருக்கொண்டு தனியே குமுதமலர் கொய்துநின்றாள். அப்படி நிற்பவளை அங்குவந்த வைணவ வைத்தியன் ஒருவன் விசாரிக்க, அவள் "என்னுடன் வந்த தோழிகளால் கைவிடப்பட்ட என்னை நீர் பாதுகாத்தருளும்" என்று வேண்ட, குழந்தையற்ற

மருத்துவன் அவளைத் தன் மாளிகைக்கு அழைத்துச்சென்று மனைவியிடம் ஒப்பித்து, குமுதமலர் கொய்துநின்றதால் "குமுத வல்லி" என்று நாமகரணம் செய்து வளர்த்துவந்தான். அவளுக்கு விவாஹத்திற்குரிய பிராயம் வந்தவுடன் "வடிவழகும் குணங்களும் மிக்க இவ்வணங்குக்குத் தக்க கணவனைத் தேட வேணுமே" என்று கவலைப்பட்டான். காமபுருஷார்த்தத்திலேயே மண்டியிருந்த நீலனார் இவளுடைய ரூபலாவண்யத்தையும் ஸௌந்தர்யத்தையும் கேள்விப்பட்டு, திருவெள்ளக்குளத்திற்கு வந்து அந்த வைணவனகத்தில் புகுந்து அவனோடு பேசிக்கொண்டிருக்கையில், அங்கு வந்த குமுதவல்லியைக் கண்டு, காதல் மிகக்கொண்டு "இவளை எனக்கு மனைவியாக்க வேண்டும்" என்று வரித்து ஆடையாபரணங்களைப் பரிசுகளாக அளித்து, அவள் தந்தையை வணங்கிக் கேட்டார். தாய் தந்தையர் இசைந்த பின்பும், குமுதவல்லி குறுக்கிட்டு "தப்த சக்ராங்கநம், திருமண்காப்பு முதலான பஞ்சஸம்ஸ்கார முடைய ஒரு வைணவர்க்கேயன்றிப் பிறர்க்கு வாழ்க்கைப் படமாட்டேன்" என்று தன் கருத்தைத் தெரிவித்தாள். அது கேட்டவுடன் மங்கைமன்னன் விரைவில் திருநறையூருக்குச் சென்று, அங்கு எழுந்தருளியுள்ள நம்பி என்னும் திருநாம முடைய எம்பெருமானைப் பிரார்த்தித்து, அப்பெருமானிடமிருந்து பஞ்சஸம்ஸ்காரங்களையும் பெற்றுப் பரம வைஷ்ணவராய்த் திருவெள்ளக்குளத்திற்கு வந்து சேர்ந்தார். மீண்டும் குமுதவல்லி "நீர் ஒரு வருஷகாலம் தினந்தோறும் ஆயிரத்தெட்டு ஸ்ரீவைஷ்ணவர்களை அமுதுசெய்வித்து, அவர்களுடைய போனகம்செய்த சேடத்தையும் ஸ்ரீபாததீர்த்தத்தையும் உட்கொண்டாலன்றி உம்மை நான் கணவராக ஏற்கமாட்டேன்" என்று நியமம் கூறினாள். அவளிடம் கொண்ட வேட்கை (காதல்) மிகுதியால், பரகாலன் அதற்கும் உடன்பட்டு ஶபதம் செய்துகொடுக்க, அதன்பின் இருவர்க்கும் திருமணம் நிறைவேறிற்று.

அதற்குப்பின் மங்கைமன்னன் ஒப்புக்கொண்ட நியமத்தின்படி தினந்தோறும் ஆயிரத்தெட்டு பாகவதர்களுக்குத் ததீயாராதநம் செய்துவந்தார். அதற்கு ஏராளமான தநம்

வேண்டியிருந்தமையால், அரசனுக்குச் செலுத்தவேண்டிய பகுதிப் பணத்தையும் செலவிட்டுவிட்டார். இதுபற்றிச் செவியுற்ற அரசன் "திரை" வாங்கிவருவதற்காக ஏவலாளரை அவரிடம் அனுப்பினன். அவரும் அவர்களிடம் நாளை, மறுநாள் என்று தவணை சொல்லித் தாமதப்படுத்தி வந்தார். அதுகேட்ட அரசன் சில வீரர்களை அனுப்பி, இறைப்பொருள் இறுக்கும்படி நிர்ப₃ந்த₄ப்படுத்தினன். நீலனர் வெகுண்டு அவர்களை விரட்டியடித்தார். அதையறிந்து சீற்றமுற்ற அரசன் தனது ஸேனைத்தலைவனை யழைத்து "நீ சென்று பரகாலனைப் பிடித்து வா" என்று அனுப்பினன். அவன் வந்து இவரை வளைத்துப் பிடிக்கத் தொடங்க, இவர் "ஆடல்மா" என்னும் தம் குதிரைமேல் ஏறிக்கொண்டு, தமது ஸேனையோடு முன் சென்று அவனேடு சண்டையிட்டு, அவனைப் புறமுதுகிட்டு ஓடச் செய்தார். அதையறிந்த அரசன் தனது கடல்போன்ற ஸேனையுடன் வந்து இவரை வளைக்க, இவரும் தம் படை வலிமையாலும் தோள்வலிமையாலும் அவனுடைய ஸேனைக் கடலை மந்தர மலைபோல் கடையத் தொடங்கினர். அதுகண்டு அரசன் தந்திரமாக அவருடைய வீரத்தைப் பாராட்டுவதுபோல் அழைத்து, அவரைத் தன் மந்திரியின் வசத்திலாக்கி "என்னுடைய கப்பப் பணத்தை மாத்திரம் தந்துவிட்டு விடுதலை பெற்றுச் செல்லும்" என்று கூறிச் சென்றுவிட்டான். அவ்வமைச்சன் இவரைப் பிடித்து ஒரு தே₃வாலயத்தில் சிறை வைக்க, அங்கு இவர் உணவில்லாமல் மூன்று நாள் பட்டினி கிடக்கையில், காஞ்சி வரதராஜப் பெருமாள் இவர் கனவில் தோன்றி "காஞ்சிக்கு வந்தால் வேண்டிய பொருள் தருகிறேம்" என்று சொல்லி மறைந்தார். இவரும் மந்திரியிடம் "காஞ்சிக்கு வந்தால் நிதி₄ எடுத்துத் தருவேன்" என்று கூற, அமைச்சரும் அரசனது அனுமதி பெற்று, இவரை கச்சிக்கு அழைத்துச் சென்றன். அங்கு இவர் நிதி₄ தேடிக் காணுமையால் கவலைப் பட்டு மயங்கி நிற்கையில், பேரருளாளனை தேவப்பெருமாள் மறுபடியும் இவர் கனவில் தோன்றி வேக₃வதிக் கரையில் நிதி₄ உள்ள இடத்தைக் காட்ட, இவரும் தெளிந்து எழுந்து, குறிப்பிட்ட இடத்திலிருந்து நிதி₄ எடுத்து அரசனுக்கு உரிய கடமைப் பொருளைச் செலுத்தி எஞ்சிய த₄நத்தைத் ததீ₃யாராத₄

நத்திற்கு வைத்துக் கொண்டார். மந்திரி அந்த திரவியத்தை அரசனிடம் கொடுத்து, நடந்த செய்தியைச் சொல்ல, அரசன் வியப்புற்று இவரை வரவழைத்து விசேஷமாக கௌரவித்து, தன் பிழை பொறுக்குமாறு பிரார்த்தித்து, அப்பொருள் முழுவதையும் ப₄ாக₃வதாராத₄நத்திற்குப் பயன் படுத்தும்படி இவரிடமே கொடுத்தனுப்பினான். அப்பொருள் முழுவதையும் ததீ₃யாராத₄நத்திலேயே செலவிட்டார் மங்கைமன்னன். மேலும் ததீ₃யாராத₄நம் செய்யப் பணமில்லாமையாலே, 'தீய வழிகளில் பணத்தைத் தேடிக் குவித்து வைத்துக் கொண்டிருப்பவர் களிடமிருந்து வழிபறித்தாவது இக்கைங்கர்யத்தைத் தொடர்ந்து நடத்தவேணும்' என்று துணிவு கொண்டு, நீர்மேல் நடப்பான் (நீர்மேல் நடக்கும் வித்தை கற்றவன்), நிழலில் ஒதுங்குவான் (ஒருவனுடைய நிழலிலேயே அவனுக்குத் தெரியாமல் ஒதுங்கி நின்று செல்லும் வித்தை கற்றவன்), தாளூதுவான் (எந்தத் தாழ்ப்பாளையும்(பூட்டையும்)வாயால் ஊதியே திறக்கவல்லவன்), தோலாவழக்கன் (வழக்கில் என்றும் தோல்வியறியாதவன்) என்னும் நால்வரை உற்ற துணைவராகக் கொண்டு, காட்டு வழிகளில் பதுங்கியிருந்து, அவ்வழியாக வரும் த₄னிகர்களைக் கொள்ளையடித்து,அப்பணத்தைக்கொண்டு திருமாலடியார்களைப் பூசிக்கும் நோன்பை நோற்றுவந்தார். இப்படித் ததீ₃யாராத₄நம் செய்து, அடியார்களுடைய ஸ்ரீபாத₃ தீர்த்த₂த்தையும், போனகம் செய்த சேடத்தையும் உண்டுவந்த மாஹாத்மியத்தினால் தனக்கென வாழும் நிலை கழிந்து அடியார்களுக்காகவே வாழும் நிலையை அடைந்தார்.

இத்தகைய நிலையை அடைந்த சேதநனை அநாதி₃காலமாக எதிர் சூழல்புக்குத் தேடித்திரியும் எம்பெருமான், இந்நிலையை அடைந்த இவரை ஆட்கொள்ளத் திருவுள்ளம் பற்றினான். இவர் தன்னை வழிபறிக்குமாறு பிராட்டியும் தானுமாய்ப் புதுமண அந்தண த₃ம்பதிக் கோலம் பூண்டு, விசேஷமான ஆடையாப₄ரணங்களை அணிந்து, இவர் பதுங்கி நிற்கும் வழியிலே வந்தான். திருவாலி திருநகரிக்கு அருகில் திருமணங்கொல்லையில் திருவரசுமரத்தின் கீழே பதுங்கியிருந்த பரகாலர் 'இன்று நமக்கு நல்ல வேட்டை' என்று களித்து,

அவர்களை வளைத்து ஆடை அணிகளையெல்லாம் பறிக்கையில், அம்மணமகன் காலில் அணிந்திருந்த கணையாழி மோதிரத்தைக் கழற்ற முடியாமையால், அதையும் விடாமல் பற்களாலே கடித்து வாங்க, அம்மிடுக்கை நோக்கி அந்தண உருவில் வந்த எம்பெருமான் "கலியனே"(ப₃லமுடையவனே) என்று இவரை அழைத்தருளினான். அதனால் இவருக்குக் கலியன் என்றும் பேராயிற்று.

அதற்குப்பின் இவர் அவ்வந்தணனிடமிருந்து அபஹரித்த பொருள்களையெல்லாம் சுமையாகக் கட்டிவைத்து எடுக்கப் பார்க்க, அச்சுமை மிகுந்த ப₃லமுடைய கலியனுக்கும் எடுக்க வொண்ணுதபடி மலைபோலே நிலையாயிருக்க, அதுகண்ட ஆலிநாடர் வியப்புற்று அவ்வந்தணனை நோக்கி "நீ என்ன மந்த்ரவாத₃ம் பண்ணினாய்? அம்மந்திரத்தை எனக்குச் சொல்லு" என்று தன் கையில் உள்ள வாளைக்காட்டி அச்சுறுத்திக் கேட்டார். அப்போது அவ்வந்தணன் "அம்மந்திரத்தை உமக்குச் சொல்லுகிறேம், வாரும்" என்று அருகில் அழைத்து, எல்லா வேதங்களுக்கும் ஸாரமாய், பிறவிப் பிணியறுத்துப் பரமபத₃ம் அளிப்பதாய், மந்திரங்களுக்கு அரசான திருவஷ்டாக்ஷர மஹாமந்திரத்தை, ப₃த₃ரிகாஶ்ரமத்திலே நரநாரணனாய்த் தனக்குத்தானே உபதே₃ஶித்த குறைதீர இவர் செவியிலே உபதே₃ஶித்து, உடனே "கருமுகில் தாமரைக்காடுபூத்து நீடு இருசுடர் இருபுறத்தேந்தி ஏடவிழ் திருவொடும் பொலிய ஓர் செம்பொற்குன்றின்மேல் வருவபோல் கலுழன் (கருடன்) மேல் வந்து தோன்றினான்."

இப்படி எம்பெருமானிடமிருந்தே திருமந்திரோபதே₃ஶம் பெற்றதாலும், அவனுடைய தி₃வ்யமங்க₃ளவிக்₃ரஹத்தை ஸேவித்ததாலும், காலில் உள்ள கணையாழியைக் கழற்றும் போது அவனுடைய தேனேமலரும் திருப்பாத₃த் தாமரை யிலே வாய்வைத்ததாலும், கலியன் அஜ்ஞான இருள் ஒழிந்து மயர்வற்ற மதிநலம் உடையவராகி, எம்பெருமானைப் பரிபூர்ண மாக அநுப₄வித்து, அவ்வநுப₄வம் வழிந்து வெளிப்பட்ட தி₃வ்யப்ரப₃ந்த₄ங்களைப் பாடவல்லவரானார். உடனே "வாடி

னேன் வாடி" என்று தொடங்கி, தம்மை உய்வித்த திருவஷ்டாக்ஷரமந்த்ரத்தின் பெருமையை 'நான் கண்டு கொண்டேன் நாராயணாவென்னும் நாமம்" என்று ஒருகால் சொன்னாற்போலே ஒன்பதின்கால் சொல்லிப் பெரியதிருமொழி யில் முதல் திருமொழியைப் பாடியருளினார். இப்படித் திருமந்த்ர ப்ரபாவத்தைப் பாடியருளியபின்பு, அந்தத் திருமந்த்ரத்தினால் சொல்லப்படுபவன் வாழுமிடமாய், பாரததேசத்திலுள்ள அர்ச்சாவதார ஸ்தலங்களுக்கெல்லாம் வடக்கு எல்லையிலே உள்ளதாய், 'மாநஸ ஸரோவரம்' என்னும் கடல்போன்ற ஏரிக் கரையிலே உள்ளதாய், பரிமளவல்லீ ஸமேதனாய்ப் 'பரம புருஷன்' என்னும் திருநாமத்தோடு அநந்தஶயநனாய் எம்பெரு மான் எழுந்தருளியிருக்கும் இடமான 'திருப்பிரிதி' என்னும் திவ்யதேஶத்தையும், அத்திருமந்த்ரத்தைத் தானே சிஷ்யனு மாய்த் தானே ஆசார்யனுமாய் நின்று வெளியிட்டருளிய நர நாராயணர்கள் எழுந்தருளியிருந்த இடமான வதரியையும் வதரியாச்சிரமத்தையும் எம்பெருமான் காட்ட, நெஞ்சென்னும் உட்கண்ணால் கண்டு அடுத்த மூன்று திருமொழிகளாலே மங்களாசாஸனம் செய்தருளினார். இப்படி இரண்டொரு திவ்ய தேஶங்களை மங்களாஶாஸநம் செய்வதில் திருப்தியடையாத இயல்புடையவராகையாலே பாரத தேஶத்திலுள்ள திருப்பதி கள் பலவும் பாடத் திருவுள்ளங்கொண்டு முதலில் வடநாட்டுத் திருப்பதிகளை மங்களாஶாஸநம் செய்யலுற்று, முந்திய மூன்று திருமொழிகளில் வடக்கிலிருந்து தெற்காக மங்களாஶாஸநம் செய்யப்பெற்ற திருப்பிரிதியையும் வதரியையும் அடுத்துத் தெற்கேயுள்ள சாளக்கிராமத்தை ஐந்தாம் திருமொழியாலும், அதற்குத் தெற்கேயுள்ள நைமிசாரணியத்தை ஆறாம் திருமொழியாலும், அதற்குத் தெற்கேயுள்ள 'சிங்கவேள்குன்றம்' என்னும் அஹோபிலத்தை ஏழாம் திருமொழியாலும், அதற்குத் தெற்கேயுள்ளதாய்த் தமிழ்நாட்டின் வட எல்லையில் இருப்பதான திருவேங்கடத்தை முதல்பத்தில் எட்டுமுதல் பத்துவரையுள்ள திருமொழிகளாலும். இரண்டாம் பத்து முதல் திருமொழியாலும் மங்களாஶாஸநம்செய்து வடநாட்டுத் திருப்பதி யநுபவத்தைத் தலைக்கட்டினார். அதற்குமேல் வடநாட்டுக்குத் தெற்கேயுள்ள தொண்டை நாட்டுத் திருப்பதிகளை அநுபவிக்கத் தொடங்கி,

(2-2) திருமொழியாலே திருவெவ்வுளூரையும், (2-3) திருமொழியாலே திருவல்லிக்கேணியையும், (2-4) திருமொழியாலே திருநீர்மலையையும், (2-5, 6) திருமொழிகளாலே திருக்கடல்மல்லையையும், (2-7) திருமொழியாலே திருவிடவெந்தையையும், (2-8) திருமொழியாலே திரு அட்டபுயகரத்தையும், (2-9) திருமொழியாலே திருப்பரமேச்சுரவிண்ணகரத்தையும் மங்களாசாஸநம் செய்து தொண்டைநாட்டுத் திருப்பதியநுபவத்தைத் தலைக்கட்டினார்.

(2-10) திருமொழியாலே திருக்கோவலூரையும், (3-1) திருமொழியாலே திருவயிந்திரபுரத்தையும் மங்களாசாஸநம் செய்து தொண்டைநாட்டுக்குத் தெற்கேயுள்ள நடுநாட்டுத் திருப்பதியநுபவத்தைத் தலைக்கட்டினார்.

நடுநாட்டுக்குத் தெற்கேயுள்ள சோழநாட்டுத் திருப்பதியநுபவத்தை அதற்கு மேலே தொடங்கி, (3-2,3) திருமொழிகளாலே திருச்சித்திரகூடத்தையும், (3-4) திருமொழியாலே திருக்காழிச்சீராமவிண்ணகரத்தையும், (3-5, 6, 7) திருமொழிகளாலே திருவாலியையும், (3-8) திருமொழி தொடங்கி (4-8) திருமொழி ஈறாக உள்ள பதினொரு திருமொழிகளாலே முறையே 1. திருமணிமாடக்கோயில் — 2. திருவைகுந்தவிண்ணகரம் — 3. திருஅரிமேயவிண்ணகரம்—4. திருத்தேவனார் தொகை—5. திருவண்புருடோத்தமம்—6 திருச்செம்பொன்செய்கோயில்—7. திருத்தெற்றியம்பலம்—8. திருமணிக்கூடம்—9. திருக்காவளம்பாடி—10. திருவெள்ளக்குளம்—11. திருப்பார்த்தன்பள்ளி என்னும் பதினொரு திருநாங்கூர்த் திருப்பதிகளையும்,(4-9) திருமொழியாலே திரு இந்தளூரையும், (4-10) திருமொழியாலே திருவெள்ளியங்குடியையும், (5-1) திருமொழியாலே திருப்புள்ளம்பூதங்குடியையும், (5-2) திருமொழியாலே திருக்கூடலூரையும், (5-3) திருமொழியாலே திருவெள்ளறையையும், (5-4, 5, 6, 7, 8) திருமொழிகளாலே ஆராமம் சூழ்ந்த அரங்கத்தையும், (5-9) திருமொழியாலே திருப்பேர் நகரையும், (5-10) திருமொழியாலே திருநந்திபுரவிண்ணகரத்தையும், (6-1, 2, 3) திருமொழிகளாலே திருவிண்ணகரையும், (6-4) தொடங்கி (7-3) முடிய பத்துத் திருமொழிகளாலே தனக்குப் பஞ்சஸம்ஸ்காரம் செய்த நம்பி எழுந்தருளியிருக்கும் திருநறையூரையும், (7-4) திருமொழியாலே திருச்சேறையையும், (7-5, 6, 7, 8) திரு

மொழிகளாலே திருவழுந்தூரையும், (7-9) திருமொழியாலே சிறுபுலியூர்ச் சலசயனத்தையும், (7-10) திருமொழியாலே திருக்கண்ணமங்கையையும், 8-ஆம் பத்து முழுவதாலும் தாம் மிகவும் ஈடுபட்ட திருக்கண்ணபுரத்தையும், (9-1) திருமொழியாலே திருக்கண்ணங்குடியையும், (9-2) திருமொழியாலே திருநாகையையும் மங்களாஶாஸநம் செய்து சோழநாட்டுத் திருப்பதியநுபவத்தைத் தலைக்கட்டினார்.

அதற்குமேல் சோழ நாட்டுக்குத் தெற்கேயுள்ள பாண்டி நாடு மலைநாட்டுத் திருப்பதிகளை அநுபவிக்கத் தொடங்கி (9-3, 4) திருமொழிகளாலே திருப்புல்லாணியையும், (9-5, 6) திருமொழிகளாலே திருக்குறுங்குடியையும், (9-7) திருமொழியாலே திருவல்லவாழையும், (9-8 9) திருமொழிகளாலே திருமாலிருஞ்சோலையையும், (9-10) திருமொழியாலே திருக்கோட்டியூரையும் மங்களாசாஸநம் செய்து பாண்டிநாட்டு மலைநாட்டுத் திருப்பதி யநுபவத்தைத் தலைக்கட்டியருளினார்.

(10-1) திருமொழியிலே 'பரமபதத்திற்குச் செல்லக் காலம் நெருங்கிற்று' என்று எண்ணிய ஆழ்வார், புதுமணப் பெண் புக்கசத்திற்குப் போகும்போது பிறந்த ஊரில் உள்ள உறவு முறையாரிடம் சொல்லிக்கொள்வது போலே, பல திருப்பதிகளைச் சேர்த்து அநுபவித்தார். இப்படி அர்ச்சாவதாரங்களை ஸேவித்த பின்பு விபவாவதாரங்களை அநுபவிக்கத் தொடங்கி (10-2, 3) திருமொழிகளாலே ராமாவதாரத்தை ராக்ஷஸ பாவனையாலும், (10-4 5) திருமொழிகளாலே க்ருஷ்ணாவதாரத்தை யஶோதாபாவனையாலும் அநுபவித்தார். (10-6) திருமொழியாலே மற்றை அவதாரங்களின் மேன்மையோடு கிருஷ்ணாவதாரத்தின் எளிமையைச் சேர்த்து அநுபவித்தார். (10 7, 8, 9) திருமொழிகளாலே கிருஷ்ணாவதாரத்தை யஶோதாபாவனையாலும், கோபிமார் பாவனையாலும் ஊடல் கூடல் உணர்தல் புணர்தல் முதலானவற்றைத் தலைமகள் பாசுரமாகவும், தாய்ப் பாசுரமாகவும் அநுபவித்தார். (10-10) (11-1, 2, 3) ஆகிய திருமொழிகளில் தலைமகனைப் பிரிந்த தலைவியின் பாசுரமாக அநுபவித்தார். (11-4)ல் விபவாவதாரங்களின் மஹிமையை அநுபவித்தார். (11-5)ல் விபவாவதாரங்களில் எம்பெருமானுடைய ஸௌலப்யத்தையும் பரத்வத்தையும், எதிரெதிராகக் கூறும் இரண்டு தோழியர் பாசுரமாக அநுபவித்தார். (11-6) திருமொழியில் ப்ரளயாபத்தில் பாதுகாத்த எம்பெருமானையே

ஆஶ்ரயிக்கும்படி உலகினர்க்கு உபதேஶித்தார். (11-7) திருமொழியில் எம்பெருமான் திறத்தில் ஈடுபடாத அவயவங்கள் பயனற்றவை என்றார். கடைசித் திருமொழியான (11-8)ல் தேஹ ஸம்பந்தத்தை அறுத்துத் தந்தருளவேணும் என்று எம்பெருமானைப் ப்ரார்த்தித்துப் பெரிய திருமொழியைத் தலைக்கட்டினார்.

இரண்டாவது ப்ரபந்தமான திருக்குறுந்தாண்டகத்திலே பசி மிகுதியாகும்வரையில் சோறிடத் தாமதம் செய்யும் தாயைப் போலே, தன்னை அநுபவிப்பதற்கு உறுப்பான பெருவிடாய் பிறப்பதற்காக எம்பெருமான் முகங்காட்டாதொழிய, அவனை விட்டுக் கணமும் தரிக்கவொண்ணுமல், பெருவிடாய்ப்பட்டவர்கள் நீரிலே விழுந்து நீரைக் குடிப்பது, நீரை வாரி இறைத்துக் கொள்வது முதலான செயல்களைச் செய்வதுபோலே எம்பெருமானை வாயாலே பேசியும் தலையாலே வணங்கியும் நெஞ்சாலே நினைத்தும் தரிக்கப்பார்த்தார்.

பெருவிடாய்ப்பட்டவர் குடித்த தண்ணீர் மேலும் விடாயைப் பிறப்பிப்பது போலே, திருக்குறுந்தாண்டகத்தில் அநுபவம் விடாயை மேலும் மிகுதியாகப் பிறப்பிக்க,மூன்றாவது ப்ரபந்தமான திருவெழுகூற்றிருக்கையிலே ஆராவமுதனை ஆர்த்தியோடு ஶரணம் புகுந்தார்.

இப்படி ஶரணம் புகுந்தும் அவனைப் பெறாமையாலே கண்ணுஞ்சுழலையிட்டு "இரண்டு தலையையும் அழித்தாகிலும் அவனை முகங்காட்டச் செய்வோம்" என்று உறுதிபூண்டு மடலெடுக்கத் தொடங்கினார் இரண்டு திருமடல்களிலும். நாலாவது ப்ரபந்தமான சிறிய திருமடலிலே "அவதாரங்களில் உண்டான நீர்மையை அழிக்கிறேன்" என்றார். அதற்கு முகங்காட்டாமையாலே "நீர்மைக்கு எல்லை நிலமான கோயில்களில் நின்ற நீர்மையையும் அழிக்கிறேன்" என்றார் ஐந்தாம் ப்ரபந்தமான பெரிய திருமடலிலே. "இனி முகங்காட்டாதொழியில் சேதனர் அனைவரும் ஈஶ்வரன் உண்டு என்பதில் நம்பிக்கையிழந்து விடுவர்" என்று எண்ணி எம்பெருமான் முகங்காட்ட, தான் அவனைப் பெற்றபடியைச் சொல்லி, சரமப்ரபந்தமான திருநெடுந்தாண்டகத்தைத் தலைக்கட்டினார்.

'ஶுகர்' முதலான மஹரிஷிகளும், முதலாழ்வார்களும் பரத்வத்திலே ஊன்றியிருப்பர்கள். 'ஸநகர்' முதலானாரும்,

திருமழிசைப்பிரானும் அந்தர்யாமியிடம் ஊன்றியிருப்பர்கள். 'வால்மீகி' முதலான மஹரிஷிகளும், குலசேகரப் பெருமாளும் ஸ்ரீராமாவதாரத்திலே ஊன்றியிருப்பர்கள். பராசரர், அவர் குமாரர் வ்யாஸர் முதலான மஹரிஷிகளும், நம்மாழ்வாரும், பெரியாழ்வாரும், ஆண்டாளும், க்ருஷ்ணாவதாரத்திலே ஊன்றி யிருப்பர்கள். நாரதாதிகளும், தொண்டரடிப்பொடியாழ் வாரும், திருப்பாணாழ்வாரும் கோயிலிலே (திருவரங்கத்திலே) ஊன்றியிருப்பர்கள். ஸ்ரீசௌனக பகவானும், கடைசியாழ்வா ரான இத்திருமங்கையாழ்வாரும் அர்ச்சாவதாரத்திலே ஊன்றி யிருப்பர்கள்.

நம்மாழ்வார் அருளிச்செய்த நாலு ப்ரபந்தங்களும் நாலு வேதங்களை ஒக்கும் என்றும், இத்திருமங்கையாழ்வார் அருளிச் செய்த ஆறு ப்ரபந்தங்களும் அவ்வேதத்தின் ஆறு அங்கங்களையொக்கும் என்றும், மற்றை எண்மருடைய நன்மாலைகள் அவ்வேதத்தின் உபாங்கங்களையொக்கும் என்றும் ஆசார்யர்கள் அருளிச்செய்வர்.

இனி, திருமங்கைமன்னன் மயர்வற மதிநலம் அருளப் பெற்று ஆழ்வாரான பின்பு நடந்த செய்திகள் விவரிக்கப்படு கின்றன. இவர் சோழநாட்டுத் திருப்பதிகளை மங்களாசாஸநம் செய்து வருகையில் சீர்காழியிலே இவருடைய சிஷ்யர்கள் வழக் கப்படி "நாலுகவிப் பெருமாள் வந்தார். அருள்மாரி வந்தார், அரட்டமுக்கி வந்தார், அடையார் சீயம் வந்தார். ஆலிநாடர் வந்தார், மங்கைவேந்தர் வந்தார், பரகாலர் வந்தார்" முதலான விருதுகளை ஆழ்வாருக்குமுன்னே எடுத்து ஏத்திக்கொண்டு செல் கையில், அவ்வூரில் இருந்த "திருஞானசம்பந்த நாயனார்" என்கிற சிவபக்தருடைய அடியார்கள் வந்து "எங்கள் நாயனார் இருக்கு மிடத்தில் நீங்கள் விருது ஊதிச்செல்லலாகாது" என்று தடுக்க, ஆழ்வாரும் "உங்கள் நாயனாருடன் தர்க்கம் செய்வோம்" என்று அங்குள்ள வைஷ்ணவியாயிருக்கும் அம்மையாருடைய வெண் ணெயுண்ட தாடாளப்பெருமாளை எழுந்தருள்வித்துக்கொண்டு சம்பந்தர் இருக்குமிடம் செல்ல, அவரும் இவரைக் குறித்து ஒரு கவி சொல்ல, இவர் அதிலே குற்றம் சொல்ல, 'அப்படியானால் நீர் ஒரு கவிசொல்லும்' என்று சம்பந்தர் கேட்க, ஆழ்வாரும் "ஒரு குறளாய் இருநிலம்" (பெரியதிரு 3-4) என்னும் திருமொழியை அருளிச்செய்து, அதில் சாற்றுப் பாசுரத்தில் தம் பெருமை யெல்லாம் தோன்ற "ஆலிநாடன், அருள்மாரி, அரட்டமுக்கி,

அடையார் சீயம், கொங்குமலர்க்குழலியர்வேள், மங்கை வேந்தன், கொற்றவேல் பரகாலன், கலியன் சொன்ன சங்க முகத் தமிழ்மாலை'' என்று அருளிச்செய்ய, சம்பந்தரும் இதைக் கேட்டு மறுமொழி சொல்ல இயலாமல், ''உமக்கு இவ் விருதுகளெல்லாம் பொருந்தும்'' என்று ஆழ்வாரை வணங்கிச் சென்றார். சம்பந்தர் தமது வேலாயுத₄த்தை இவருக்குக் காணிக்கையாக ஸமர்ப்பித்துச் சென்றார் என்றும், அவ்வெற்றி தோற்றத் திருநாமப் பாசுரத்திலே தமது விருதுகளை ஆழ்வார் பொறித்து வைத்திருக்கிறார் என்றும் கூறுவர்.

திருவரங்கச் செல்வனாரான அழகிய மணவாளனுக்கு விமானம் மண்டபம் கோபுரம் மதிள் முதலான கைங்கர்யங் களைச் செய்யவேணும் என்று திருவுள்ளம்பற்றிய ஆழ்வார், அதற்காக நாகப்பட்டிணத்தில் உள்ள பு₃த்₃த₄விஹாரத்திலுள்ள ஸ்வர்ணமயமான பு₃த்₃த₄ப்ரதிமையை எடுத்து வந்து எல்லாப் பொருள்களுக்கும் உண்மையான ஸ்வாமியான அரங்கனுக்கு முற்கூறிய கைங்கர்யங்களைச் செய்ய உறுதிபூண்டார்.

பரகாலர் தம் பரிவாரங்களுடன் புறப்பட்டு நாகப் பட்டிணம் அடைந்து அங்கு மிகவும் விசித்திரமான ஶில்ப வேலைகளையுடைய பு₃த்₃த₄விஹாரத்தைக்கண்டு அதனுள் நுழை வதற்கு எங்கும் வழி காணாமையால் அவ்வாலயம் முழுவதையும் ஆராய்ந்து வருகையில், அதன் ஶிக₂ரத்திலே சக்கர உருவிலுள்ள ஒரு யந்திரம் இடைவிடாது சுழன்றுகொண்டிருப்பதைப் பார்த்து, அதை நிறுத்துவதற்காகப் பல வாழைத் தண்டுகளைக் கொணர்ந்து, சிறுசிறு துண்டுகளாக்கி அச்சக்கரத்தில் இடை விடாது கொடுத்துவர, அதன் நூல்கள் நடுவில் சுற்றிக்கொண்ட தனால் அந்தச் சக்கரப்பொறி அசையாமல் நின்றுவிட்டது. அதற்குப்பின் ஆழ்வார் தமது சீடர்களுள் ஒருவரை அவ் வழியாக ஆலயத்தினுள் இறங்கச்செய்து விக்₃ரஹத்தை எடுத்து வரச்சொன்னார். அவரும் அதைக் கவரத் தொடங்குகையில் அந்த பி₃ம்ப₃ம் மந்திர ப₃லத்தால் அவர் கைக்கு அகப்படாத படி அவ்வாலயம் முழுவதும் திரிந்து ஓடத்தொடங்கியது. வெளியிலிருந்த திருமங்கைமன்னன் சொல்லிக்கொடுத்த உபாயத்தின்படி அவ்வுருவத்தை சிஷ்யர் அபரிஶுத்₃த₄மாக்கி விட்டார். உடனே அது ஶக்தி குன்றி ''ஈயத்தாலாகாதோ இரும்பினாலாகாதோ, பூயத்தால் மிக்கதொரு பூதத்தா லாகாதோ, தேயத்தேய் பித்தளை நற்செம்புகளாலாகாதோ,

மாயப்பொன் வேணுமோ மதித்தென்னைப் பண்ணுகைக்கே.''
என்று ஊளையிட்டுக்கொண்டு விழுந்தது. (இப்பாட்டின் முடிவில் ''மதித்துன்னைப் பண்ணுகைக்கே'' என்று சொல்லி ஆழ்வார் சிஷ்யர் வியப்புற்று அதைக் கவர்ந்தார்' என்றும் பாட₂பே₄த₃ம் உண்டு). பின்பு சீடர் அந்தப் பொற் ப்ரதிமையை எடுத்துக் கொடுக்கத் திருமங்கையாழ்வார் மிக உகந்து அதை ப₄ங்க₃ப்படுத்தி நாகப்பட்டிணத்திலிருந்து இரவோடு இரவாக எடுத்துச்சென்றார்.

விடியும் ஸமயத்தில் திருக்கண்ணங்குடி என்கிற தி₃வ்ய தே₃ஶத்தை அடைந்து அங்கு உழுது சேறாயிருக்கும் ஒரு வயலிலே அந்த விக்₃ரஹத்தைப் புதைத்துவைத்துவிட்டு, அருகில் இருந்த உறங்காப் புளியின் கீழ் இருந்தார்கள். அந்த வயலுக்குச் சொந்தக்காரனும் நாற்றுச் சுமையை எடுத்துக்கொண்டு விடிந்தவுடன் வயலை உழுதுநடுவதற்காக வந்தான். இவர் அவனைத் தடுத்து ''இது எங்கள் பாட்டன் தேடிய வயல்'' என்று வழக்கிடத் தொடங்கினார். அவன் திடுக்கிட்டு எதிர்வழக்கிட்டான். அதற்குப் பரகாலர் ''நாளைக் காலை பத்திரம் கொண்டு வருகிறேன். இல்லாவிட்டால் நீ உழுதுகொள்'' என்று கூற, அவனும் ஸம்மதித்து மீண்டுசென்றான். இவர்களும் இரவோடிரவாகப் புதைக்கப்பட்டிருந்த பொன் விக்₃ரஹத்தை எடுத்துக்கொண்டு ஸ்ரீரங்கம் சேர்ந்து அதை உருக்கி விற்று,

*''ஜித பா₃ஹ்ய ஜிநாதி₃ மணி ப்ரதிமா:*
*அபி வைதி₃கயந்நிவ ரங்க₃புரே ।*
*மணி மண்டப வப்ர க₃ணாந் வித₃தே₄*
*பரகாலகவி: ப்ரணமேமஹி தாந்''* ॥ [ர-ஸ்த1-36]

[சமணர் முதலானோரின் ரத்தினம் பொன் முதலானவற்றாலான பி₃ம்ப₃ங்களைத் தம் தோள்வலியாலே வென்று கொண்டுவந்து, அவற்றையும் வைதி₃கமாக்குகிறவர்போலே அவற்றைக் கொண்டு மணிமண்டபங்களையும் திருமதிள்களையும் ஏற்படுத்தினார் பரகால கவி. அவற்றை வணங்குகிறோம்.] என்று ஸ்ரீரங்கராஜ ஸ்தவத்தில் ப₄ட்டர் அருளிச்செய்தபடியே, அப்பொருளைக்கொண்டு ஸ்ரீரங்க₃த்தில் திருமதிள், மண்டபம், கோ₃புரம் முதலான கைங்கர்யங்களைச் செய்வித்து வருகையில், தொண்டரடிப்பொடியாழ்வார் திருமாலை சேர்த்து வந்த இடம் நேர்பட, அவ்வாழ்வாரிடமுள்ள கௌ₃ரவ பு₃த்₃தி₄யாலே, அதையழித்து மதிளைக்கட்டாமல் அதை ஒதுக்கிக் கட்டச்செய்தார்.

திவ்ய தேசங்களுக்குப் பதிகங்கள் பாடி வருகையில் "பெரும்புறக்கடலை" (பெரியதிரு 7-10) என்று தொடங்கும் திருக்கண்ணமங்கைப் பதிகத்தை ஆழ்ந்த பொருள் பொதிந்த அடுக்குமொழிகளாலே அழகுறப் பாடி முடித்து, அத்திரு மொழியின் ஆழ்ந்த பொருள்களை அறியவேண்டும் என்னும் முகக்குறிப்பைத் திருக்கண்ணமங்கைக் கண்ணனுடைய திருமுகமண்டலத்திலே கண்டு "வெண்சங்க மொன்றேந்திய கண்ணா! நின்றனக்கும் குறிப்பாகில் கற்கலாம் கவியின் பொருள் தானே" என்று ஆழ்வார் அருளிச்செய்ய, "அப்படியே கற்கிறோம். இப்போது அர்ச்சாவதாரத்தில் இயலாதாகையால், பிறிதொரு காலத்தில் உம்மை ஆசார்யனாகக் கொண்டு கவிப் பொருள்களைக் கற்போம்" என்று பரம ரஸிகனை அப்பெருமான் அருளிச்செய்தான் என்றும். அதன்படியே—கலிகன்றியான ஆழ்வார் தமது அவதாரத் திருநக்ஷத்திரமான கார்த்திகையில் கார்த்திகை நாளிலேயே திருக்கலிகன்றி தாஸராம் நம்பிள்ளையாக அவதரித்தபோது. திருக்கண்ணமங்கைக் கண்ணனும் தனது அவதாரத்திருநக்ஷத்திரமான ஆவணியில் ரோகிணியிலேயே 'க்ருஷ்ணன்' (கண்ணன்) என்னும் திருநாமத்தோடு பெரிய வாச்சான்பிள்ளையாக அவதரித்துப் பரகால கவியின் பாடல் களோடு மற்றையாழ்வார்களின் பாசுரங்களையும் அவற்றின் அரும் பொருள்களையும் நம்பிள்ளையிடம் வரியடைவே கற்று உலகுய்ய வ்யாக்யானங்களிட்டு வெளிப்படுத்தினன்—என்றும் பெரியோர்கள் பணிப்பர்.

திருமங்கையாழ்வார் தமது ஆறு திவ்ய ப்ரபந்தங்களையும் அருளிச்செய்த பின்பு ஸ்ரீரங்கத்திற்கு எழுந்தருளித் திருநெடுந் தாண்டகத்தை தேவ கானத்தில் இசைத்துப்பாட, அதனுல் திருவுள்ள முகந்த பெரிய பெருமாள் "உமக்கு வேண்டிய வரம் பெற்றுக்கொள்ளும்" என்று நியமித்தருளினர். பரகாலரும் "தேவரீர் மார்கழி மாதத்தில் கண்டருளுகிற அத்யயந உத்ஸவத்தில் நம்மாழ்வார் அருளிச்செய்த த்ராவிட வேதத்தை யும் திருச்செவி சாத்தியருளவேணும்" என்று பிரார்த்திக்க, பெருமாள் அவ்வண்ணமே அருள்புரிந்தார். அவ்வாணையின்படி மங்கை மன்னன் ஆழ்வார்திருநகரியிலிருந்து அர்ச்சா ரூபியான நம்மாழ்வாரை வருடந்தோறும் ஸ்ரீரங்கத்திற்கு எழுந்தருளச் செய்து அவர் முன்னிலையிலே உபய வேத பாராயணத்தையும் சிறப்பாக நடக்கச் செய்து, பத்துநாள் மஹோத்ஸவமாகக்

கொண்டாட ஏற்பாடு செய்தார். உத்ஸவம் முடிந்த பின்பு பராங்குசரை மீண்டும் குருகூர்க்கு எழுந்தருளப் பண்ணுவித்து வந்தார். இப்படிப் பத்துநாள் விழாவாகத் தொடங்கிய திருவத்யயந உத்ஸவம், ஆசார்யர்கள் காலத்தில்—மற்றை யாழ்வார்களுடைய திவ்ய ப்ரபந்தங்களுக்காகப் பத்துநாள் பகல்பத்து உத்ஸவமும், இருபதுநாள் உத்ஸவம் முடிந்தபின்பு இயற்பா உத்ஸவமும் சேர்க்கப்பட்டு இருபத்தொருநாள் உத்ஸவமாக வளர்ந்தது. பட்டர் காலத்திலே திருநெடுந்தாண்டகத்திற்குள்ள சிறப்பை நோக்கிப் பகல் பத்துக்கு முந்தின நாள் திருநெடுந்தாண்டக உத்ஸவமும் சேர்க்கப்பெற்று இப்போது உள்ளபடி நடந்துவருகிறது என்னும் விஷயம் பெரியவாச்சான்பிள்ளை அருளிய கலியனருள் பாடு முதலான க்ரந்தங்களிலிருந்து விளங்குகிறது. பிற்காலத்தில் ஆழ்வார்திருநகரியிலிருந்து நம்மாழ்வாரை எழுந்தருளப் பண்ணுவதில் பல சிரமங்கள் ஏற்பட்டபடியாலே, ஸ்ரீரங்கத்திலே ஆழ்வார்களுடைய உத்ஸவ விக்ரஹங்கள் ப்ரதிஷ்டை செய்விக்கப்பெற்றுத் திருவத்யயநோத்ஸவம் மிகச் சிறப்பாக நடைபெற்று வருவது அனைவரும் அறிந்ததே.

தமது பரம பாவநமான திவ்ய ப்ரபந்தங்களாலும், துஷ்டர்களிடமிருந்து பொருள்களைப் பறித்து பகவத் பாகவத கைங்கர்யம் செய்வதே நல்லொழுக்கங்களில் தலை யானது என்று நடந்துகாட்டியதின் மூலமும் கலிதோஷத்தைக் கடிந்து நலிந்ததினால் கலிகன்றி என்று புகழ்பெற்ற திருமங்கை யாழ்வார் தமது சரம காலத்தில் தாம் மிகவும் ஈடுபட்ட நம்பி யெம்பெருமான் எழுந்தருளியிருக்கும் திருக்குறுங்குடிக்குக் குமுதவல்லியாரோடு எழுந்தருளி, பரம விரக்தராய்ச் சிலகாலம் நம்பியின் வடிவழகை அநுபவித்துக் கொண்டிருந்து அங்கேயே திருநாட்டுக்கு எழுந்தருளினார்.

திருமங்கையாழ்வார் வைபவம் முற்றிற்று.

திருமங்கையாழ்வார் திருவடிகளே ஶரணம்.

ஸாதுர்ஶந பத்ராதிபனான க்ருஷ்ணஸ்வாமி தாஸன் இயற்றிய ஆழ்வார்கள் வைபவம் நிறைவுற்றது.

# ஆசார்யர்கள் வைபவம்

## ஸ்ரீமந்நாதமுனிகள் வைபவம்



நாதமுனிகள் — காட்டுமன்னார்குடி

நமோऽசிந்த்யாத்$_3$பு$_4$தாக்லிஷ்ட ஜ்ஞாநவைராக்$_3$ய ராஶயே।
நாத$_2$ாய முநயேऽக$_3$ாத$_4$ப$_4$க$_3$வத்$_3$ப$_4$க்திஸிந்த$_4$வே ॥

[ஸ்தோத்ரரத்னம் 1]

[இப்படிப்பட்டதென்று நினைக்கமுடியாததும் ஆஶ்சர்யமானதும், (பகவானுடைய அருளாலே) எளிதாகக் கிடைத்ததுமான ஞானத்தினுடையவும், வைராக்$_3$யத்தினுடையவும் குவியல்

போன்றவராகவும், ப₄க₃வானை மனனம் செய்பவராகவும், ஆழ்ந்த ப₄க₃வத்₃ப₄க்திக்குக் கடலாகவுமிருக்கிற நாத₂முனிகளுக்கு நமஸ்காரம் செய்கிறேன்.]

*"ஏகோ ஹ வை நாராயண ஆஸீத், ந ப்₃ரஹ்மா நேஶாந:"* [மஹோபனிஷத்] [நாராயணன் ஒருவனே முதலில் இருந்தான்; பிரமனுமில்லை; சிவனுமில்லை] என்கிறபடியே ப்ரளயகாலத்தில் லீலாவிபூ₄தி அழிந்துகிடந்தபோது, *"ஸ ஏகாகீ ந ரமேத"* [மஹோபனிஷத்] [அவன் ஒருவனுயிருந்து இன்புறவில்லை] என்கிறபடியே அசித்ஸமராய்க் கிடந்த ப₃த்₃த₄சேதனரைக்கண்டு வருந்தி, 'இவர்கள் உய்யும் வழியென்ன?' என்று ஆராய்ந்து, "ஒன்றியொன்றி உலகம் படைத்தான்" என்கிறபடியே உலகைப் படைத்து, இச்சேதனர்க்குக் கரணகளேப₃ரங்களை (சரீரேந்திரியங்களைக்) கொடுத்து, இருட்டில் விளக்குப்போலே அஞ்ஞானவிருளைப் போக்கும் *ஶா*ஸ்த்ரத்தைக் கொடுத்து அதிலும் திருந்தாமையாலே, கிணற்றில் விழுந்த குழந்தையை எடுக்கத் தானே கிணற்றில் குதிக்கும் தாயைப்போலே, தானே பல அவதாரங்களையெடுத்தும் திருந்தாமையாலே, மானைக்கொண்டு மானைப்பிடிப்பாரைப்போலே சேதனரைத் திருத்தச் சேதனரான ஆழ்வார்களையும், ஆசாரியர்களையும் அவதரிக்கச்செய்யத் திருவுள்ளங்கொண்டான் *ஶ்ரீ*ய:பதியான ஸர்வே*ஶ்*வரன்.

உயிர்களாகிற பயிர்களைச் செழிப்பிக்கத் திருவுள்ளங்கொண்ட பத்தியுழவனுகையாலே, பெரும்புறக்கடலான தன்னிடமுள்ள கருணையாகிற நீரைப்பருகும் காளமேகமாக நம்மாழ்வாரையும், அம்மேகம் பொழியும் நீரைத்தாங்கும் மலையாக நாதமுனிகளையும், அம்மலையிலிருந்து இழியும் அருவிகளாக உய்யக்கொண்டார் மணக்கால் நம்பிகளையும், அவ்வருவிகளிலிருந்து பெருகும் பேராருக ஆளவந்தாரையும், அவ்வாற்றிலிருந்து வெட்டப்பட்ட கால்வாய்களாகப் பெரியநம்பிகள் முதலான ஐந்து ஆசார்யர்களையும், அவ்வாய்க்கால்களின்மூலம் அந்நீர் தேங்கும் பெரிய ஏரியாக எம்பெருமானரையும், அவ்வேரியிலிருந்து உயிர்களாகிற பயிர்களுக்கு நீரைப்பாய்ச்சும் மதகுகளாக எழுபத்துநாலு ஸிம்ஹாஸநாதி₄பதிகளையும் அவதரிப்பித்தருளினன். இங்கு கூறப்பட்ட இவ்வுருவகத்தையே எம்பெருமானருடைய சிஷ்யரான எம்பார் என்னும் பேராசிரியர்.

"லக்ஷ்மீநாத₂ாக்₂யஸிந்தெ₄ள ஶடா₂ரிபுஜலத₃:
ப்ராப்ய காருண்யநீரம்
நாத₂ாத்₃ராவப்₄யஷிஞ்சத் தத₃நு
ரகு₄வராம்பே₄ாஜசக்ஷுர்ஜ₂ராப்₄யாம் |
க₃த்வா தாம் யாமுநாக்₂யாம் ஸரிதமத₂
யதீந்த்₃ராக்₂யபத்₃மாகரேந்த்₃ரம்
ஸம்பூர்ய ப்ராணிஸஸ்யே ப்ரவஹதி
ப₃ஹுதா₄ தே₃ஶிகேந்த்₃ரப்₄ரமௌகை₄: ||"

[லக்ஷ்மீநாத₂னுகிற பெருங்கடலில், சடகோபராகிய மேகம், கருணைநீரைப்பருகி நாத₂முனிகளாகிற மலையிலே பொழிந்தது; அந்நீர் புண்ட₃ரீகாக்ஷரென்னும் உய்யக்கொண்டார். ராமமிஶ்ரர் எனும் மணக்கால்நம்பி ஆகிய இரு அருவிகளின் மூலம் யாமுநாசார்யர் எனும் ஆளவந்தாராகிற பேராற்றை அடைந்து, (அதிலிருந்து பெரியநம்பிகள் முதலான ஐந்து ஆசார்யர்களாகிற கால்வாய்கள் மூலம்) யதிராஜராகிற பெரிய ஏரியை அடைந்து (எழுபத்து நாலு) ஆசார்யர்களாகிற மதகுகளாலே உயிர்களாகிற பயிர்களின் பொருட்டுப் பெருகுகிறது] என்னும் ஶ்லோகமாக அருளிச்செய்தார்.

ஆசார்யர்களில் முதல்வரான ஸ்ரீமந்நாத₂முனிகள் ஸேனை முதலியாருடைய முக்கியமான படைத்தலைவரான க₃ஜாநநர் என்னும் யானைமுக₂முடைய நித்யஸூரியினுடைய அம்ஶமாய், சோழதேசத்தில் வீரநாராயணபுரத்தில் (காட்டுமன்னார் கோவிலில்) (கி-பி 823) சோபக்ருத்-ஆ ஆனி-மீ 7-ஆம் தேதி புதன்கிழமை பௌர்ணமி திதி அனுஷநக்ஷத்திரத்தில் ஈஶ்வர ப₄ட்டாழ்வாருக்குக் குமாரராக ஶட₂மர்ஷண கோத்ரத்திலே (சொட்டைக்குலத்திலே) அவதரித்தார். இவருக்குத் திருத்தகப்பனார் இட்ட திருநாமம் ஸ்ரீரங்க₃நாத₂ன் என்பது. இவர் யோக₃ாப்₄யாஸம் கைவந்தவராகையாலே ஸ்ரீரங்க₃நாத₂முநிகள் என்றும், சுருக்கமாக நாத₂முனிகள் என்றும் வழங்கப்பட்டார். இவர் தம் திருத்தகப்பனாரான ஈஶ்வர ப₄ட்டாழ்வாரோடும், தம் திருக்குமாரரான ஈஶ்வரமுனிகளோடும் ஸகுடும்ப₃மாகக் காட்டுமன்னார் நியமனத்தோடு வடநாட்டு யாத்திரைபுறப்பட்டு, வடதிசை மதுரை, சாளக்கிராமம், வைகுந்தம், துவ்ரை, அயோத்தி முதலான வடநாட்டு

திவ்யதேசங்களை ஸேவித்துவிட்டு, யமுனைக்கரையிலே ஸ்ரீகோவர்த்தனபுரம் என்கிற கிராமத்திலே எழுந்தருளியிருந்தார். "தூயபெருநீர் யமுனைத்துறைவன்' என்கிற எம்பெருமானுக்குக் கைங்கர்யம் செய்துகொண்டு சிலவருஷங்கள் அங்கேயே எழுந்தருளியிருந்தார்கள். ஒருநாள் காட்டுமன்னனார் நாதமுனிகளுடைய கனவிலே எழுந்தருளி, "வீரநாராயணபுரத்திற்கு வருவீர்"என்று நியமித்தருள,அவர்களும்—யமுனைத்துறைவரிடம் நியமனம் பெற்றுக்கொண்டு, பல திவ்யதேசங்களை ஸேவித்துக்கொண்டு வீரநாராயணபுரத்திற்குக் குடும்பத்தோடு எழுந்தருளினார்கள். மன்னனாருக்குச் சில வருஷம் கைங்கர்யம் செய்துகொண்டிருக்கும்போது, ஸேவார்த்திகளாக வந்த சில ஸ்ரீவைஷ்ணவர்கள் "ஆராவமுதே" என்கிற திருவாய்மொழியை மன்னனார் திருமுன்பே அநுஸந்தித்தருள, அதைக்கேட்ட நாதமுனிகள் மிகவுகந்து, "இத்திருவாய்மொழியின் திருநாமப்பாட்டிலே (சாற்றுப்பாட்டிலே) 'ஓராயிரத்துள் இப்பத்தும்' என்று அருளிச்செய்யப்பட்ட ஆயிரம் பாட்டும் உங்களுக்கு வருமா? என்று கேட்டார். "இப்பத்துப் பாட்டுத்தவிர மற்றவை கிடைக்கவில்லை" என்று கூறிச் சென்றார்கள். உடனே நாதமுனிகள் "குருகூர்ச்சடகோபன்" என்று ஆழ்வாரால் அருளிச்செய்யப்பட்ட திருக்குருகூருக்குச் சென்று ஸ்ரீ மதுரகவிகளுடைய சிஷ்யரான ஸ்ரீ பராங்குசதாஸரை விசாரித்தார். அவரும் "திருவாய்மொழியும், மற்ற திவ்யப்ரபந்தங்களும் நீண்ட காலத்துக்கு முன்பே மறைந்துவிட்டன, எங்களுடைய ஆசார்யரான ஸ்ரீமதுரகவிகள் ஆழ்வார் விஷயமான 'கண்ணிநுண் சிறுத்தாம்பு' என்கிற திவ்யப்ரபந்தத்தை எங்களிடம் அளித்து 'இதை ஒருமுகமாக ஆழ்வார் திருமுன்பே இருந்து ஆழ்வார் திருவடிகளை த்யானித்துக்கொண்டு நியமத்துடன் பன்னீராயிரம் உரு அநுஸந்தித்தால் ஆழ்வார் ப்ரஸன்னராவார்' என்று அருளிச்செய்தார்" என்று நாதமுனிகளிடம் கூறினார். நாதமுனிகளும் கண்ணிநுண் சிறுத்தாம்பை அவரிடம் பிரார்த்தித்து உபதேசம்பெற்று ஆழ்வார் திருமுன்பே அதை நியமத்தோடு பன்னீராயிரம் உரு அநுஸந்தித்தார். ஆழ்வாரும் அவர் நெஞ்சிலே தோன்றி "உமக்கு என்னவேணும்?" என்று கேட்க, "திருவாய்மொழி முதலான திவ்யப்ரபந்தங்களை

அடியேனுக்கு இரங்கியருளவேணும்" என்று நாத₃முநிகள் விண்ணப்பம்செய்ய, ஆழ்வாரும் அவருக்கு மயர்வற மதிநல மருளி, ரஹஸ்யத்ரயத்தையும், திருவாய்மொழி முதலான தி₃வ்யப்ரப₃ந்த₄ங்களையும், அவற்றின் பொருளையும், அஷ்டாங்க₃ யோக₃ரஹஸ்யத்தையும் அநுக்₃ரஹித்தருளினார். அதற்குப்பின் சில காலம் நாத₃முநிகள் ஆழ்வார்திருநகரியிலே தி₃வ்ய ப்ரப₃ந்த₄ங்கள் முதலானவற்றை அநுஸந்தி₄த்துக்கொண்டு எழுந்தருளியிருந்தார். ஒருநாள் இவரை வீரநாராயணபுரத்திற்கு வரச்சொல்லி மன்னனார் கனவிலே நியமித்தருள, இவரும் ஆழ்வாரிடம் விடைகொண்டு வீரநாராயணபுரம் சென்று, மன்னனார் நியமனத்தாலே தமது மருமக்களான மேலையகத் தாழ்வாரையும். கீழையகத்தாழ்வாரையும் கூட்டிக்கொண்டு தி₃வ்யப்ரப₃ந்த₄ங்களுக்கு தே₃வகா₃னத்தாலே ராக₃ம் தாளம் முதலானவற்றை அமைத்து, இயலும் இசையும் ஆக்கிப் பாடச்செய்து பரப்பிவந்தார். இவருடைய முக்கிய சிஷ்யர்கள் உய்யக்கொண்டாரும், குருகைக் காவலப்பனுமாவர். அவர்கள் மூலமாக தி₃வ்யப்ரப₃ந்த₄த்தையும் யோக₃ரஹஸ்யத்தையும் ப்ரசாரம் செய்வித்து, பிறக்க இருக்கும் தம்முடைய பேரனை யமுனைத்துறைவனுக்கு இவற்றை அளிக்கும்படி நியமித்து விட்டு, குருகைக்காவலப்பன் கோவிலிலே பரமபதி₃த்தருளினார்.

த₄ாது வருஷம் (கி. பி. 917) மாசி மாதம் ஶுக்லபக்ஷ ஏகாத₃ஶி இவருடைய தீர்த்த₂தி₃னம். சுமார் தொண்ணூற்று மூன்று (93) திருநக்ஷத்திரங்கள் எழுந்தருளியிருந்தார்.

இவர் அருளிச்செய்த க்₃ரந்த₂ம் 'ந்யாய தத்வம்' என்பது. இதிலிருந்து சில பகுதிகள் எம்பெருமானார், ஶ்ருதப்ரகாசிகா ப₄ட்டர், ஸ்ரீவேதா₃ந்த தே₃ஶிகர் முதலான ஆசார்யர்களால் எடுத்துக்காட்டப்பட்டுள்ளன. க்₃ரந்த₃ம் இப்போது இல்லை. யோக₃ரஹஸ்யம், புருஷநிர்ணயம், என்னும் இரு க்₃ரந்த₂ங்களை யும் இவர் செய்ததாகப் பெரிய திருமுடியடைவில் உள்ளது. இவையும் இப்போது இல்லை. இவர் நம்மாழ்வாரிடம் ப₄விஷ்ய தா₃சார்ய விக்₃ரஹத்தைப்பெற்ற செய்தி முதலானவை உய்யக் கொண்டார் வைப₄வத்தில் விளக்கப்படும்.

ஸ்ரீமந்நாதமுனிகள் வைபவம் முற்றிற்று.

# உய்யக்கொண்டார் வைபவம்



திருவெள்ளறை — உய்யக்கொண்டார்

நமஸ்யாம்யரவிந்தா3க்ஷம் நாத2ப4ாவே வ்யவஸ்தி2தம் ।
ஶுத்3த3ஸத்த்வமயம் ஶௌரேரேவதாரமிவாபரம் ॥

[யதிராஜஸப்ததி 6]

[நாத2ப4ாவத்தில் — பரத்வத்தில் — நிலைநிற்கும் புண்ட3ரீகாக்ஷனை எம்பெருமானைப்போலே, நாத2ப4ாவமாகிற நாத2முனிகளின் நினைவில் நிலைநிற்பவரும், ஶுத்3த4ஸத்த்வமயராயிருப்பவரும், ப4க3வானுடைய மற்றொரு அவதாரம் போன்றுள்ளவருமான புண்ட3ரீகாக்ஷரை (உய்யக்கொண்டாரை) வணங்குகிறேன்.]

நம: பங்கஜ நேத்ராய நாத2 ஶ்ரீபத3பங்கஜே ।
ந்யஸ்த ஸர்வப4ராயாஸ்மத்குலநாத2ாய தீ4மதே ॥

[நாத2முனிகளின் திருவடித்தாமரையில் தன் ஸர்வ ப4ாரங்களையும் வைத்தவராய், நம் குலநாத2ரான புண்ட3ரீகாக்ஷராம் பேரறிவாளர்க்கு நமஸ்காரம்.]

நாத₃முனிகளுடைய ப்ரத₂மசிஷ்யரான உய்யக்கொண்டார், நாத₂முனிகள் அவதரித்து அறுபத்துமூன்று வருஷங்களுக்குப் பின்பு பராப₄வ வருடத்தில் (கி.பி 886) சித்திரை மாதம் கார்த்திகை நக்ஷத்திரம் ஶுக்லபக்ஷப்ரத₂மை புதன்கிழமையிலே 'ஜயத்ஸேநர்' என்னும் நித்யஸூரியின் அம்ஶமாக ஸ்ரீரங்க₃த்திற்கு வடக்கேயுள்ள 'திருவெள்ளறை' என்னும் திவ்யதேசத்திலே பூர்வஶிக₂ ஸ்ரீவைஷ்ணவ ப்₃ராஹ்மண குலத்திலே அவதரித்தார்.

ஆசார்ய பரம்பரையிலே நாதமுனிகளாகிற மலையிலிருந்து பெருகுகிற அருவி ஸ்தானத்திலே அமைந்தவர் உய்யக்கொண்டார் என்னும் மஹாசார்யர். இவருடைய வைப₄வத்தைச் சுருக்கமாக அநுப₄விப்போம்.

## அவதார ஸ்த₂லம்

த₃க்ஷிணதே₃ஶம் முழுவதும் காடாயிருந்த காலத்திலே, ஸ்ரீராம பிரானுக்கும் முன்னேயே, சரணமடைந்த புருவுக்காகத் தன் உடலையே தியாகம்செய்யத் துணிந்தவனாகப் பிரஸித்திபெற்றவனை சிபிச்சக்ரவர்த்தியால், கங்காயமுனைகளின் மத்தியப்பிரதேசத்திலிருந்து மூவாயிரத்து எழுநூறு பூர்வசிக ஸ்ரீவைஷ்ணவ ப்₃ராஹ்மண குடும்பங்கள் திருவெள்ளறையில் கோயில்கொண்டு எழுந்தருளியிருந்த புண்ட₃ரீகாக்ஷப் பெருமாளுக்குக் கைங்கர்யம் செய்வதற்காக ப்ரதிஷ்டை செய்விக்கப்பட்டனர். இப்படி ஆதிகாலத்தில் ஏற்பட்ட திவ்யதேஶமாகையாலே இன்றும் ஜனங்களால் 'ஆதி திருவெள்ளறை' என்று வழங்கப்படுகிறது இத்தலம். பெரியாழ்வாராலும், திருமங்கையாழ்வாராலும் மங்களாசாஸனம் செய்யப்பெற்ற பெருமையை உடையது இந்த தி₃வ்யதே₃ஶம்.

## அவதார குலம்

சோழதேசத்திற்கு ஆதிகாலத்தில் வந்தவர்களாகையாலே அன்றும் இன்றும் இக்குலத்தைச் சேர்ந்தவர்கள் சோழியர்கள் என்று அழைக்கப்படுகின்றனர். மிகவுயர்ந்த பரமபதத்திலிருக்கும் ஸ்ரீமந் நாராயணன் கீழிருக்கும் தேவர்களில் உயர்ந்தவனாயிருப்பது போலவும், ஸம்ஸாரி சேதனர்களிடையே உயர்ந்த உலகிலிருக்கும் தேவர்கள் தாழ்ந்தவுலகிலிருக்கும் மனிதர் முதலானோரைக் காட்டிலும் சிறந்தவராயிருப்பது போலவும், விராட்புருஷனின் உத்தமாங்க₃மான முக₂த்திலிருந்து உண்டான ப்₃ராஹ்மணன், கீழுள்ள அவயவங்களான கைகள், துடைகள், கால்கள் ஆகியவற்றிலிருந்து உண்டான மற்ற வர்ணங்களைக் காட்டிலும் சிறந்தவனாயிருப்பதுபோலவும், ஸம்ஸாரத்தையளிக்கும் குறுக்கே படரும் நாடிகளைக் காட்டிலும், மோக்ஷமளிக்கும் ஊர்த்₄வமுக₂மான ஸுஷும்நாநாடி சிறந்ததாயிருப்பது போலவும், குறுக்கே வளரும் திர்யக்குகளைக் காட்டிலும் உயரவளரும் மனிதர்

சிறந்தவராயிருப்பதுபோலவும், குறுக்கே படரும் திர்யக்புண்ட்ரங்களைக் காட்டிலும் உயரநோக்கியிருக்கும் ஊர்த்வபுண்ட்ரம் சிறந்ததாயிருப்பதுபோலவும், பக்கம்நோக்கியும் கீழ்நோக்கியுமிருக்கும் மற்ற சிகைகளைக் காட்டிலும் உயரநோக்கியிருக்கும் ஊர்த்வஶிகை சிறந்ததாகும். ஆத்மோஜ்ஜீவனத்துக்கு ப்ராஹ்மணஜாதிவர்ணம் போலே சிகையின் உயர்வும் அப்ரயோஜகம் என்பது ஒருபுறமிருந்த போதிலும், அந்தந்த வஸ்துக்களுக்குள்ள உயர்வு தாழ்வுகள் இயல்வானவையன்றோ. ஆழ்வார்களுடைய சிறப்புக்களைப் பேசவந்த தனியன்களில் அவர்கள் புரஶிகர்களாகில் அது குறிப்பிட்டுக் கூறப்படுவதிலிருந்தும் இந்த சிகையின் ஏற்றம் விளங்கும். ஆழ்வார்களில் ப்ராஹ்மணர்களாயிருந்த மதுரகவிகள், பெரியாழ்வார், தொண்டரடிப்பொடிகள் ஆகிய மூவரும் புரஶிகர்கள் என்பதிலிருந்தும் ஆதிகாலத்தில் தமிழ்நாட்டில் புரஶிகர்களே மிகுந்திருந்தனர் என்பது விளங்கும். இத்தகைய பூர்வசிக ஸ்ரீவைஷ்ணவ ப்ராஹ்மணோத்தமகுலத்திலே அவதரித்தருளியவர் பரமாசார்யரான உய்யக்கொண்டார்.

## ஸம்ஸ்காரங்கள்

நமது ஸ்ரீ வைஷ்ணவ பரம்பரையில் தேஹஜன்மத்தைக் காட்டிலும், ஜ்ஞாநஜந்மமே சிறந்ததாகக் கருதப்படுகிறதாகையால், உய்யக்கொண்டாரின் ஆசார்ய சிஷ்யர்களைப் பற்றிக் குறிக்கப் பட்டுள்ளதுபோலே பெற்றோரைப்பற்றியும் மக்களைப்பற்றியும் விபரங்கள் ப்ராசீன க்ரந்தங்களில் குறித்துவைக்கப்படவில்லை. ''நல்லார்கள் வெள்ளறை'' ''சதுரர்கள் வெள்ளறை'' என்று பெரியாழ்வாரால் மங்களாசாஸனம் செய்யப்பெற்ற மஹனீயர்கள் வாழ்ந்த திவ்ய தேசமாகையாலே, பரமபுருஷனுக்கு மங்களாஶாஸன கைங்கர்யங்கள் செய்துவந்த பரமைகாந்திகளான பெற்றோர்களுக்குப் புத்திரரத்னமாய் இவர் அவதரித்தார் என்று கொள்ளலாம். அத்தகைய பெற்றோர்—குழந்தை பிறந்தவுடன் ஜாதகர்மம் செய்து,

''ஶுத்தஸத்த்வமயம் ஶௌரேரவதாரமிவாபரம்''

[யதிராஜஸப்ததி 6]

என்று ஸ்ரீ வேதாந்ததேசிகர் அருளிச்செய்தபடியே, இவருடைய ஶுத்தஸத்த்வமயமான திருமேனியையும், திருக்கண்களையும் கண்டு 'அப்புண்டரீகாக்ஷனே இக்குழந்தையாய் அவதரித்தான்போலும்!' என்று அறுதியிட்டு, புண்டரீகாக்ஷன் என்றே திருநாமமிட்டு, உரிய காலத்தில் அந்நப்ராஶனம், சௌளம், உபநயனம் முதலான ஸம்ஸ்காரங்களைச் செய்து ஸதாசார்யனை ஆஶ்ரயிப்பிக்க அவகாசம் பார்த்து நின்றனர்.

### ஸதா₃சார்யஸமாச்ரயணம்

அக்காலத்திலே, காட்டுமன்னார்குடியென்னும் வீரநாராயண புரத்திலே க₃ஜமுக₂ரென்னும் நித்யஸூரியின் அம்சமாக அவதரித்தவராய், ஜ்ஞானவைராக்₃யராசியாய் ஆழ்ந்த ப₄க₃வத்₃ப₄க்திக்கடலாய், பரமயோகி₃யாய், நம்மாழ்வாரிடமிருந்தே யோக₃த₃சையில் நாலாயிர தி₄வ்யப்ரப₃ந்த₃ங்களையும் அவற்றின் அர்த்த₂த்தையும், ரஹஸ்யங்களையும் உபதேசம் பெற்றவராய் எழுந்தருளியிருந்த நாத₂முனிகள் என்னும் ஸ்ரீரங்கநாத₂முனிகளிடத்திலே நமது புண்ட₃ரீகாக்ஷரை ஆச்ரயிப்பித்தனர். இவரும், "நம: பங்கஜநேத்ராய நாத₂ஸ்ரீபத₃ பங்கஜே ந்யஸ்தஸர்வப₄ராய" [நாத₂முனிகளுடைய திருவடித் தாமரையிலே தம்முடைய எல்லா ப₄ாரங்களையும் வைத்தவரான புண்ட₃ரீகாக்ஷருக்கு] "நமஸ்யாம்யரவிந்தா₃க்ஷம் நாத₂ப₄ாவே வ்யவஸ்தி₂தம்" [நாத₂முனிகளின் நினைவின்படி நின்றவரான புண்ட₃ரீகாக்ஷருக்கு] என்கிறபடியே நாத₂முனிகளையல்லது அறியாதவராய் கு₃ருகுலவாஸம் செய்துவந்தார்.

### புண்ட₃ரீகாக்ஷர் உய்யக்கொண்டாரானது

ஸ்ரீமந்நாத₂முனிகளின் சிஷ்யர்களில் ஸ்ரீ புண்ட₃ரீகாக்ஷரும், குருகைக்காவலப்பனும் முக்கியமானவர்கள். ஸ்ரீமந்நாத₂முனிகளிடம் இரண்டு நிதி₄கள் இருந்தன. ப₄க₃வத்ப்ராப்திக்கு உறுப்பான ப₄க்தியோகம் ஒன்று; ப₄க₃வத்ஸ்வரூபரூபகு₃ண விபூ₄திகளைத் தெளியப் பேசும் நாலாயிரம் பாசுரங்களடங்கிய திவ்யப்ரபந்தங்கள் மற்றொன்று. முதல் நிதி₄யாலே சேதனன் தான் ஒருவன் மோக்ஷமடையமுடியும். இரண்டாவதாலே உலகையே உய்விக்கமுடியும். இவற்றில் எது வேண்டும்? என்று குருகைக்காவலப்பனை வினவினார் ஸ்ரீமந்நாதமுனிகள். ப₄க்தியோகத்தைப்பெற்று உய்ந்து போகிறேன் என்றார் அவர்; அப்படியே உபதேசம் பெற்று உஜ்ஜீவனமடைந்தார். 'நீரும் யோக₃த்தையே பெற்றுப்போகிறீரோ?' என்று ஸ்ரீபுண்ட₃ரீகாக்ஷரையும் வினவினார் ஸ்ரீமந்நாத₂முனிகள். 'பிணங்கிடக்க மணம் புணர்வாருண்டோ? உலகமே ஆத்மநாசமடைந்து பிணக்காடாயிருக்கும் போது, அடியேன் ஒருவன் எம்பெருமானோடு ஆத்மவிவாகம் செய்துகொண்டு மோக்ஷமடைவது சரியாகுமோ? அடியேன் எப்படியானாலும் பரவாயில்லை; உலகம் உய்யும்படி திவ்யப்ரபந்தங்களை உபதேசிப்பீர்' என்றார் அப்பெரியவர். இதைக்கேட்ட ஸ்ரீமந்நாதமுனிகள் அவரை வாரியணைத்து. "புண்ட₃ரீகாக்ஷரே! நீரே உலகையும், உலகையுடையவனை நாராயணனையும் அவனைச் சொல்லும் அருளிச்செயல்களையும், அதைப்பெற்ற என்னையும் உய்யக்கொண்டவர், உம்மாலேயே நான் அரும்பாடுபட்டுப்பெற்ற அத்தமிழ்மறைகள் உலகெங்கும் பரவி அனைவரையும் உய்விக்கப்போகின்றன. இன்று முதல் நீர் 'உய்யக்

கொண்டார்' என்னும் திருநாமத்தாலே பிரசித்திபெற்று விளங்கக் கடவீர்'' என்று அருளிச்செய்து திவ்யப்ரபந்தங்களை உய்யக் கொண்டார்க்கு உபதேசித்தருளினார். உய்யக்கொண்டாருடைய இத்தகைய சுயநலம்பேணாத பரந்த மனப்பான்மையாலே இன்று நாம் அருளிச்செயல்களாலே உய்ந்துபோகிறோம். இதனாலேயே இவர் ஸ்ரீவைஷ்ணவ ஸமூஹம் முழுவதற்கும் பரமாசார்யராய், வாக்ய குருபரம்பரையிலும், ஶ்லோககுருபரம்பரையிலும் நாதமுனிகளுக்கு முன் அநுஸந்திக்கப்படுகிறார்.

## பவிஷ்யதாசார்ய விக்ரஹத்தைப் பெற்றது

நாதமுனிகள் யோகதசையிலே நம்மாழ்வாரிடம் திருவாய்மொழி யுபதேசம் பெறும்போது, ''பொலிக பொலிக'' என்னும் திருவாய்மொழி வந்தவுடன், இந்தத் திருவாய்மொழியில் ''கலியும் கெடும் கண்டு கொண்மின்'' என்று நான் சொன்னதை மெய்யாக்க ஓர் மஹானுபாவர் அவதரிக்கப்போகிறார் என்றார் ஆழ்வார். அவரை ஸேவிக்கவேண்டு மென்று நாதமுனிகள் விரும்ப, ஆழ்வாரும் அப்படியே ஸேவை ஸாதிக்க ''தேவரீரைக் காட்டிலும் அழகிய இந்தத் திருமேனியை அடியேன் எப்போதும் ஸேவிக்க வழியிடவேணும்' என்று நாதமுனிகள் பிரார்த்திக்க, ஆழ்வாரும் சில்பிகளை ஸ்வப்நமுகேந நியமித்து பவிஷ்யதாசார்யராகிய எம்பெருமானாருடைய விக்ரஹத்தைச் செய்வித்து நாதமுனிகளிடம் கொடுத்தருளி, 'இவரை நம்முடைய அடியாக நினைத்திரும்' என்று அருளினார் என்று சரமோபாய நிர்ணயத்திலே நாயனாராச்சான்பிள்ளை அருளிச்செய்வர். தம்முடைய சரமதசையிலே நாதமுனிகள் தம்முடைய ப்ரதானசிஷ்யரான உய்யக்கொண்டாரை அழைத்தருளி, 'ஒருவர்க்கும் வெளியிடாதே கிடீர்!' என்று சூழறவுகொண்டு, ஆழ்வார் தமக்கு ப்ரஸாதித்தருளிய பவிஷ்யதாசார்ய விக்ரஹத்தை ப்ரஸாதித்தருளி, 'இதை என்னுடைய பௌத்ரனுக்கு நாம் விரும்பின விஷயம் என்று காட்டிக் கொடும்' என்று அருளிச்செய்து, சடகோபன் பொன்னடியான அவ்விக்ரஹத்தை தியானம் பண்ணிக்கொண்டு, 'ஆழ்வார் திருவடிகளே சரணம்' என்று பரமபதித்தருளினார் என்றும் அருளிச்செய்வர். உய்யக்கொண்டாரும் தம் சரம தசைவரையில் நாதமுனிகளுக்குப் பௌத்ரர் அவதரிக்காமையாலே, தம் ப்ரதானசிஷ்யரான மணக்கால் நம்பியிடம் அவ்விக்ரஹத்தை அளித்து நாதமுனிகளுக்குப் பிறக்கப் போகும் பௌத்ரரான யமுனைத்துறைவரிடம் அதை அளிக்கும்படி நியமித்தருளினார் என்றும் அவரும் அவ்வண்ணமே அளித்தார் என்றும் அருளிச்செய்வர்.

## உய்யக்கொண்டாரின் சிஷ்யர்கள்

''உய்யக்கொண்டார் ஸ்ரீபாதத்தை ஆஶ்ரயித்தவர்கள் ஐவர். அவர்களாகிறார் — மணக்கால்நம்பி, திருவல்லிக்கேணிப் பாண்

பெருமாளரையர், சேட்டலூர் செண்டலங்காரர், புண்டரீகதாஸர், உலகப்பெருமாள் நங்கை'' என்று குருபரம்பராஸாரத்திலே ஸ்ரீ வேதாந்ததேசிகர் அருளிச்செய்வர். ஆருயிரப்படி குருபரம்பராப்ர பாவத்திலும் இப்படியே காண்கிறது. பன்னீராயிரப்படி குருபரம் பராப்ரபாவத்திலும், பெரிய திருமுடியடைவிலும் கோமடம் திருவிண்ணகரப்பன் என்பவரும் சிஷ்யராகக் கூறப்படுகிறார். இவர்களில் மணக்கால்நம்பி ப்ரதானமானவர். இவர்க்கு இயற்பெயர் 'ஸ்ரீராமன்' என்பதேயாகும். இவர் பன்னிரண்டு வருடங்கள் உய்யக் கொண்டார் திருவடிகளில் ஸர்வவித கைங்கர்யங்களையும் செய்து கொண்டிருந்தவர். ஒரு சமயம் உய்யக்கொண்டார் தேவிகளான ஆண்டாள் பரமபதித்தவளவிலே, திருமாளிகைக் கைங்கர்யமெல்லாம் தாம் ஒருவராகவே செய்து வந்தார் மணக்கால்நம்பி. அப்போது ஒருநாள் உய்யக்கொண்டாருடைய சிறுமிகளான பெண்பிள்ளைகள் இருவரையும் நீராட்டி அழைத்துக்கொண்டு வருகிற வழியிலே வாய்க்கால் சேருயிருக்கக்கண்டு அவர்கள் திகைத்துநிற்க, தாம் படியாய்க்கிடந்து அவர்களைத் தம் முதுகிலே அடியிட்டு எழுந்தருள் வித்துக்கொண்டுபோக, ஆசார்யபுத்ரிகளின் மணற்கால் பொலியநின்ற திருமேனியை உடையராயிருந்தமையாலே, அன்றுமுதல் இவர்க்கு மணற்கால்நம்பி என்றும், இவர் அவதரித்த ஊருக்கு மணற்கால் என்றும் திருநாமம் ஏற்பட்டது என்று பெரியோர்கள் அருளிச் செய்வர். இத்தகைய ஆசார்யநிஷ்டையாலே உய்யக்கொண்டா ருடைய பரமானுக்ரஹத்திற்குப் பாத்திரமானுர் மணக்கால்நம்பி.

### சரமதசை

உய்யக்கொண்டார் திருநாட்டுக்கு எழுந்தருளுகிறபோது, 'இனி தர்ஶநப்ரவர்த்தகராவார் ஆர்? என்று மணக்கால்நம்பி விண்ணப்பம் செய்ய, ''மற்ற முதலிகளையும் கூட்டிக்கொண்டு 'நீரே இத்தர்ஶனத்தை நடத்தக்கடவீர். பின்பு நாதமுனிகளின் திருக்குமாரரான ஈஶ்வர முனிகளுக்கு ஒரு குமாரர் அவதரிப்பார். அவருக்கு யமுனைத் துறைவர் என்று திருநாமம் சாத்தச்செய்து, பவிஷ்யதாசார்ய விக்ரஹத்தையும் அவரிடம் கொடுத்து, அந்த பவிஷ்யதாசார்யரைத் தேடிக் கண்டுபிடித்து அவரிடம் தர்ஶநநிர்வாகத்தை ஒப்படைக்க வேண்டியது அவரது கடமை என்று நாதமுனிகள் நியமித்ததாகச் சொல்லி, அவருக்கு எல்லா அர்த்தங்களையும் உபதேசியும்'' என்று நியமித்தருளி, ஸ்ரீமந்நாதமுனிகளின் திருவடிகளை தியானித்துக் கொண்டு பத்மாஸனத்தில் எழுந்தருளியிருப்பவராய் அணையிலே சாய்ந்தருளித் திருநாட்டுக்கு எழுந்தருளினுர். உய்யக்கொண்டார்-க்ரந்தம் எதுவும் அருளியதாகத் தெரியவில்லை.

உய்யக்கொண்டார் வைபவம் முற்றிற்று.

திருச்சி மாவட்டம், லால்குடி வட்டம் லால்குடி (திருத்தவத்துறை) அருகில் அன்பில் திவ்யதேசத்திற்கு போகும் வழியில் மணக்கால் அக்ரஹாரத்தில் ஸ்ரீவரதராஜப்பெருமாள் திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் மணக்கால்நம்பிகள் (வைகானஸ ஆகம பூஜை)



மணக்கால்நம்பி மூலவர்





மணக்கால்நம்பி உத்ஸவர்

# மணக்கால்நம்பி வைபவம்

**அநுஜ்ஜி2தக்ஷமாயோக3மபுண்யஜநபா3த4கம் |**
**அஸ்ப்ருஷ்டமத3ராக3ம் தம் ராமம் துர்யமுபாஸ்மஹே ||**
*[யதிராஜஸப்ததி 7]*

[(பரசுராமனைப்போல்) பொறுமையை (பூ4மியை) விடாதவராய், (ராமனைப்போல்) புண்யஜனங்களை (ராக்ஷஸர்களை) பா3தி4க்காத வராய், (ப3லராமனைப்போல்) மது4பானமத3ம் இல்லாதவரான நாலாவது ராமனை (மணக்கால் நம்பியை) உபாஸிக்கிறோம்.]

**ப4க3வத்3ப4க்திது3க்3த4ாப்3தி4க்ருதக3ாட4ாவக3ாஹநம் |**
**நிர்முக்ததாபத்ரிதயம் ஸ்ரீராமம் ஶரணம் ஶ்ரயே ||**

[பகவத் பக்தியாகிற பாற்கடலில் குடைந்தாடப் பெற்றவராய், (அதனால்) ஆத்4யாத்மிகம், ஆதி4தை3விகம், ஆதி4பௌ4திகம் என்னும் மூன்று தாபங்களும் நீங்கப்பெற்றவரான ஸ்ரீராமன் என்னும் மணக்கால் நம்பியை ஆஶ்ரயிக்கிறேன்.]

உய்யக்கொண்டாருடைய ப்ரத4ான சிஷ்யரான 'ஸ்ரீராம மிஶ்ரர்' என்னும் 'மணக்கால் நம்பி' உய்யக்கொண்டார் அவதரித்து நாற்பத்து மூன்று வருடங்களுக்குப் பின்பு (கி.பி 929) விரோதி4 வருஷத்திலே மாசி மாதம் மக நக்ஷத்திரத் திலே ஶுக்லபக்ஷம் சதுர்த3சி கூடிய புதன்கிழமையில் காவேரிக் கரையில் (லால்குடிக்கு அருகில்) இவர் திருநாமத்தையிட்டு மணக்கால் என்று வழங்கப்படும் கிராமத்தில் ஸ்ரீவைஷ்ணவ ப்3ராஹ்மண குலத்தில் குமுத3ாக்ஷர் என்னும் நித்யஸூரியின் அம்ஶமாக அவதரித்தவர். இவருக்கு 'மணக்கால்நம்பி' என்கிற பெயர் வந்ததற்குக் காரணம் உய்யக்கொண்டார் வைப4வத்தில் காட்டப்பட்டது. இவர், தம் ஆசார்யரான உய்யக்கொண்டாரின் நியமனப்படி நாத2முனிகளின் பேரரான ஆளவந்தாரைத் திருத்திப் பணிகொண்டு, அவருக்கு 'ரஹஸ்ய த்ரய'த்தையும், தி3வ்ய ப்ரப3ந்த4ங்களையும், அவற்றின் பொருளையும், ப4விஷ்ய த3ாசார்ய விக்3ரஹத்தையும் அளித்தருளினர். இதுபற்றிய விரிவு ஆளவந்தார் வைப4வத்தில் காணலாம். அவதாரஸ்த2லத்தில் எழுந்தருளியிருக்கும் மணக்கால் நம்பி த்ரித3ண்ட3த்துடன் ஸேவை ஸாதி3க்கையால், கடைசியில் துரீயாஶ்ரமஸ்வீகாரம் செய்துகொண்டிருக்கவேண்டும் என விளங்கும். இவரும் க்3ரந்த2ம் எதுவும் அருளியதாகத் தெரியவில்லை.

மணக்கால்நம்பி வைபவம் முற்றிற்று.



# ஆளவந்தார் வைபவம்





ஆளவந்தார் — காட்டுமன்னார்கோயில்

யத்பதா₃ம்போ₄ருஹத்₄யாந வித்₄வஸ்தாஶேஷகல்மஷ: ।
வஸ்துதாமுபயாதோऽஹம் யாமுநேயம் நமாமி தம் ॥
[கீ₃தாபா₄ஷ்யமங்க₃ளம்]

[எவருடைய திருவடித்தாமரைகளை தியானிப்பதால் எல்லா தோ₃ஷமும் நீங்கப்பெற்று, யான் ஒரு பொருளாக ஆனேனோ, அத்தகைய யமுனைத் துறைவரை வணங்குகிறேன்.]

மணக்கால் நம்பி அவதரித்து நாற்பத்தேழு வருடங்களுக்குப் பின்பு 'தா₄து' வருடத்திலே (கி. பி. 976) ஆடி மாதம் பௌர்ணமி உத்தராடம் கூடிய வெள்ளிக்கிழமையில் நாத₂முநிகளுடைய குமாரரான ஈஶ்வர முனிகளுக்கும் அவருடைய த₄ர்மபத்நியான ஸ்ரீரங்க₃நாயகிக்கும் குமாரர் நாத₂முநிகள் அவதரித்த வீரநாராயண புரத்திலே அவதரித்தருளினர். நாத₂முனிகள் நியமனப்படி அவர்

கைங்கர்யம் செய்த வட நாட்டு கேூரவர்த்துனபுரத்திலுள்ள எம்பெருமானின் "யமுனைத் துறைவன்" என்னும் திருநாமம் இவருக்குச் சாத்தப்பட்டது. ஈஶ்வர முனிகளால் உரிய காலத்தில் அன்ன ப்ராஶநம், சௌளம், உபநயனம், முதலான ஸம்ஸ்காரங்கள் யாமுனருக்குச் செய்யப்பெற்றன. வேதாூத்யயநம் செய்யும்போது 'ஏகஸந்தை க்ராஹி'யாய் மஹாமேதா விலாஸத்தையுடையவராய் இருந்தார். உரிய காலத்தில் இவருக்கு விவாஹமும் செய்விக்கப் பெற்றது.

மஹா பாஷ்ய பட்டர் என்பவரிடம் இவர் ஶாஸ்த்ராப்யாஸம் செய்துவந்தார். அக்காலத்தில் ராஜபுரோஹிதனுயிருந்த ஆக்கி யாழ்வான் என்பவன் தன் வித்யா கர்வத்தாலே அந்நாட்டில் உள்ள எல்லா வித்வான்களிடமும் கப்பம் வாங்கிவந்தான். அவன் ஒருநாள் கப்பம்கேட்டு மஹாபாஷ்ய பட்டருக்கு ஓலை அனுப்ப, பட்டர் கப்பம் செலுத்த வழியில்லாமல் திகைத்து நிற்பதைப்பார்த்து, யமுனைத் துறைவர் அவ்வோலையைக் கிழித்தெறிந்து விட்டார். அதைக்கேட்ட ஆக்கியாழ்வான் "ஓலையைக் கிழித்தவன் வெறும் கவியோ, அல்லது தந்த்ரம் (மீமாம்ஸாதி ஶாஸ்த்ரம்) கரைகண்டவனோ?" என்று கேட்டனுப்பினன். அதற்கு "யாம் கவிகள் மாத்திரமேயல்லோம்; யாம் மீமாம்ஸா ஶாஸ்த்ரக்கடலை மாத்திரம் கரைகண்டவர்களல்லோம். ஆனல் எதிர்வாதம் புரியுமவர்களாகிற யானைகளின் மிக்க ஆடம்பர மாகிற மத்தகத்தைப் பிளக்க வல்லமையுடையோம்" என்று பதில் எழுதியனுப்பினர் யமுனைத்துறைவர். இதைக்கண்டு வியப்புற்ற அரசன் யமுனைத்துறைவரை உடனே ராஜஸபைக்கு வரச்சொல்லி ஓலை அனுப்பினன். அவ்வோலையையும் யமுனைத்துறைவர் கிழித்துவிட, அதைக்கேட்ட அரசன் 'இவர் ஸாமான்யரல்லர்' என்று அறிந்து, இவர் வருவதற்குப் பல்லக்கை அனுப்பினன். யாமுநேயரும் அப் பல்லக்கில் ராஜஸபைக்கு எழுந்தருளி, "மலையரசன் மகளான பார்வதியின் தளிரடிவைப்பினுலே சிறந்து விளங்கும் தாழ்வரைகளை யுடைய இமயமலை முதல், அரக்கனல் அபஹரிக்கப்பட்ட சீதா பிராட்டியின் திருமுகத்தாமரை மலர்வதற்குக் காரணமான ஸேது வரையிலும், சந்திரஸூர்யர்களிருவரையும் தலையலங்காரமாகவுடைய உதயகிரிக்கும் அஸ்தமநகிரிக்கும் நடுவிலும், பூர்வமீமாம்ஸை உத்தரமீமாம்ஸை என்னும் இரண்டு சாஸ்திரத்திலும் விஶேஷமான பயிற்சியினுலே மயர்வற்ற நெஞ்சையுடைய என்னைப்போன்ற மற்றொருவன் தேடப்படட்டும். (தேடினுலும் கிடைக்கமாட்டான்)" என்னும் பொருளுள்ள ஶ்லோகத்தை எழுதியனுப்பினர். அதற்குப்பின்

ஆக்கியாழ்வானுக்கும் யமுனைத் துறைவர்க்கும் மத்₄யஸ்த்த₂ர்களான வித்₃வான்கள் முன்னிலையில் தர்க்கம் நடந்தது. அப்போது அங்கு ஸிம்ஹாஸநத்திலிருந்த ராஜமஹிஷியும் ராஜாவும் ஒருவர்க்கொருவர் பின்வருமாறு சபதம் செய்துகொண்டனர். ''யாமுநேயர் தோற்றாராகில் நான் மஹிஷீபதவியைத் துறந்து உமக்கு வேலைக்காரியாவேன்'' என்றாள் ராஜமஹிஷி. ''ஆக்கியாழ்வான் தோற்றானாகில் யமுனைத் துறைவர்க்கு நான் பாதி ராஜ்யம் தருவேன்'' என்றான் அரசன்.

இளம் பிள்ளையான இவரை ஶாஸ்திரவிவாத₃மில்லாமலே லௌகிக விஷயங்களிலேயே தோற்கடித்து விடலாம் என்று எண்ணிய ஆக்கியாழ்வான் ''லௌகிகங்களிலே நீர் இல்லை என்பதை நான் உண்டு என்பேன். நீர் உண்டு என்பதை நான் இல்லை என்பேன். வென்றவன் தோற்றவன் தலையிலே அடிக்கவேண்டியது'' என்று கூறினான். அதற்கு இசைந்த யமுனைத்துறைவர் ''(1) உன் தாய் மலடியல்ல. (2) அரசன் தா₄ர்மிகன். (3) ராஜபத்நீ பதிவ்ரதை.'' என்று மூன்று வாக்கியங்களைச் சொல்லி அவனை மறுக்கச் சொன்னார். அவன் அவற்றை மறுக்க இயலாமல் மௌனியாய் இருந்தான். பின்பு ஶாஸ்த்ரவிசாரமும் நடந்தது. அதிலும் தோல்வியுற்றான் ஆக்கியாழ்வான். ''நீர் சொன்ன மூன்று லௌகிக வாக்யங்களையும் உம்மால் மறுக்க முடியுமோ?'' என்று யமுனைத்துறைவரை ராஜாவும் ராஜமஹிஷியும் கேட்டனர். 'முடியும்' என்று சொல்லி யாமுநேயர் பின் வருமாறு மறுத்துக் காட்டினார்.

1. ''ஒரு மரமும் தோப்பல்ல, ஒரு பிள்ளையும் பிள்ளையல்ல'' என்கிற உலக வழக்கின்படி, நிலையற்றதான இவ்வுலகில் ஒரு பிள்ளையைப் பெற்ற தாய் ''இப்பிள்ளை நமக்குத் தக்கவேணுமே, நம்மை ரக்ஷிக்க வேணுமே'' என்று கலங்கிக்கொண்டேயிருப்பாளாகையால், அவள் பிள்ளைபெற்றும் மலடியேயாவாள். இம்முறையில் ஒரு பிள்ளைபெற்ற உம்முடைய தாயார் மலடியேயாகையால், முதல்வாக்கியம் மறுக்கப் பட்டது.

2. குடிகள் செய்யும் பாபம் அரசனைச் சேருமாகையாலே, பரம தா₄ர்மிகனான இவ்வரசனும் குடிகள் செய்யும் பாபத்திலே பங்கு பெறுகிறானாகையாலே, இரண்டாவது வாக்கியமும் மறுக்கப்பட்டது.

3. ''ஸோம: ப்ரத₂மோ விவிதே₃, க₃ந்த₄ர்வோ விவித₃ உத்தர:, த்ருதீயோ அக்₃நிஷ்டே பதி:, துரீயாஸ்தே மனுஷ்யஜா:'' [ஸோமன் முதல்நாள் உன்னைப் புணருகிறான். க₃ந்த₄ர்வன் அடுத்த

நாள் உன்னை மணம் புணருகிறான். மூன்றாவது நாள் அக்₃நியானவன் உனக்குப் பதியாகிறான். நாலாவது நாளிலேயே கைப்பிடித்த மனிதன் உனக்குக் கணவனாகிறான்.] என்கிற வேத₃ வாக்யத்தின்படி வைதி₃க முறையில் மணம் செய்துகொண்ட எல்லா ஸ்திரீகளுக்குமே மணமான முதல் மூன்று நாட்களில் தேவதைகளோடு தொடர்பு உண்டாகையால் பாதிவ்ரத்யத்தில் குறையுண்டு. அக்குறை பரமவைதி₃கமான முறையில் அரசனைக் கைப்பிடித்த ராஜபத்னிக்கும் உண்டாகையாலே மூன்றாவது வாக்கியமும் மறுக்கப்பட்டது.

இவ்வண்ணமாக லௌகிக வாத₃த்திலும் ஶாஸ்த்ர வாத₃த்திலும் ஆக்கியாழ்வானை வெற்றிகொண்ட பின்பும், ராஜபுரோஹிதனுமாய் பிராயத்தில் முதிர்ந்தவனுமான ஆக்கியாழ்வானை முதலில் பண்ணின ப்ரதிஜ்ஞைப்படி தலையிலே அடிப்பதற்கு மறுத்துவிட்டார் யமுனைத் துறைவர். இவருடைய பண்பையும், ஶாஸ்த்ரப் புலமையையும், லோகானுப₄வத்தையும், கண்டு வியப்புற்ற வித்₃வான்கள் அனைவரும் இவருக்கு ப்₃ரஹ்மரத₂ம் பண்ணிப் பெருமைப்படுத்தினர். ராஜ மஹிஷியும் "என்னை ஆளவந்தீரோ" என்று யமுனைத்துறைவரைத் தன் பிள்ளையைப்போலே எடுத்தணைத்துக்கொண்டு தன் ப₄ர்த்தாவுடன் அரண்மனைக்குள் புகுந்தாள். அரசனும் தன் ப்ரதிஜ்ஞைப்படி இவருக்குப் பாதிராஜ்யம் கொடுத்தான். இவரும் தம் பத்னியோடுகூடி அரசாட்சி செலுத்திக்கொண்டு அரச பே₄ாக₃த்திலே ஆழ்ந்திருந்தார்.

உய்யக்கொண்டார் நியமனத்தாலே யமுனைத்துறைவரை த₃ர்ஶன ப்ரவர்த்தகராக்க ஆசைகொண்ட மணக்கால் நம்பி, கட்டும் காவலுமாய் இருந்த அரண்மனைக்குள் சென்று ஆளவந்தாரைக் காணமுடியவில்லை. திருமடைப்பள்ளியில் பணிபுரிவோரிடமிருந்து 'தூதுளைக் கீரையே ஆளவந்தார் விரும்பி அமுது செய்யும் கரியமுது' என்று அறிந்து, மடைப்பள்ளிக்கு ஆறுமாதகாலம் தூதுளைக்கீரையை அளித்துவந்தார். அப்போதும் இவரைப்பற்றி ஆளவந்தார் விசாரிக்காமையாலே வருந்தி, நாலு நாள் தூதுளையைக் கொடுப்பதைத் தவிர்த்திருந்தார். ஆளவந்தார் அமுதுசெய்யும்போது "நாலு நாளாகத் தூதுளை இல்லாமல் இருப்பதேன்?" என்று கேட்டருள, அவர்களும் "ஆறு மாதமாக வயது முதிர்ந்த அந்தணர் ஒருவர் அளித்துவந்தார். நாலு நாளாக அளிக்கவில்லை" என்று கூறினார்கள். ஆளவந்தாரும் கேட்டு வியப்புற்று, "அடுத்தபடி அவர் வந்தால் நமக்குத் தெரிவியுங்கள்" என்று நியமித்துவிட்டார். மறுநாள் நம்பியும் "இன்னமும் முயற்சி செய்து பார்ப்போம்" என்று தூதுளை எடுத்துவந்து திருமடைப் பள்ளியில் கொடுத்தார். அவர்களும் நம்பியை ஆளவந்தாரிடம் அழைத்துச் சென்றனர். ஆளவந்தாரும் அவரைக் கண்டு வணங்கி ஆஸனமிட்டு, "நீர் இத்தனைநாளும் தூதுளை கொண்டு வந்து

இடுகிறது எதற்காக? உமக்கு வேண்டிய த₄நதா₄ந்யங்களை அளிக்கிறேம்'' என்று நம்பியைக் கேட்க, நம்பியும் ''நமக்கு இவை யொன்றும் வேண்டா. உமது பாட்டனர் தேடிவைத்த நிதி₄ ஒன்று என்னிடம் இருக்கிறது. அதை உம்மிடம் அளிப்பதற்கு நான் இங்கு வந்து போவதைத் தடைசெய்யாமல் இருக்கும்படி உத்தரவிடவேணும்'' என்று அருளிச்செய்ய அதன்படியே அரண்மனைச் சேவகர்களிடம் கட்டளையிட்டார் ஆளவந்தார். அன்றுமுதல் தினந்தோறும் நம்பி அரண்மனைக்கு எழுந்தருளி, கீதையின் செம்மைப் பொருள் தெரியும்படி பதினெட்டு அத்தியாயமும் அருளிச்செய்ய, ஒருநாளைக்கொருநாள் ஆர்த்தி விஞ்சப்பெற்ற ஆளவந்தார், ''இவ்வெம்பெருமானை அடையும் உபாயம் எது?'' என்று நம்பியைக் கேட்க, நம்பியும் தனியே அழைத்துச் சென்று, மெய்ம்மைப் பெருவார்த்தையான சரமஶ்லோகத்தின் பொருளை ஆளவந்தாருக்கு அருளிச்செய்து ''அவனை அடைவதற்கு அவனே உபாயம்'' என்னும் உறுதியை அவருக்கு உண்டாக்கினர். அருளிச்செயல்களையும், அவற்றின் அரும்பொருள்களையும் அவருக்கு உபதே₃ஶித்தருளினர். அதற்குப்பின் திருவரங்கம் திருப்பதிக்கு அவரை அழைத்துச் சென்று பெரிய பெருமாளைத் திருவடி தொழச் செய்து, ''உங்களுடைய பாட்டனர் தேடிவைத்த பெருநிதி₄ இதுவே காணும்'' என்று காட்டிக்கொடுக்க, பெரியபெருமாளிடம் ஈடுபட்ட ஆளவந்தார் ராஜ்யம் முதலான எல்லாவற்றையும் துறந்து துரீயாஶ்ரமத்தை ஏற்றுக்கொண்டு, ஸ்ரீரங்க₃த்தில் த₃ர்ஶன நிர்வாஹம் செய்து வந்தார். அக்காலத்திலே பெரியநம்பி, திருக்கோட்டியூர்நம்பி, பெரிய திருமலைநம்பி, திருமாலையாண்டான் முதலான ஸ்ரீவைஷ்ணவ ப்₃ராஹ்மணோத்தமர்களும், திருக்கச்சிநம்பி, மாறனேரிநம்பி முதலான ப₄ாக₃வதோத்தமர்களும், அவரை ஆஶ்ரயித்திருந்தார்கள்.

அப்போது மணக்கால்நம்பி ''தேவரீருடைய பாட்டனரான நாத₃முனிகள் அஷ்டாங்க₃யோக₃ ரஹஸ்யத்தைக் குருகைக்காவலப்பனிடம் சேமித்து வைத்திருக்கிறர். அவரிடம்சென்று அந்நிதி₄யைப் பெற்றுக்கொள்ளும்'' என்று நியமித்தருளினர். ஆளவந்தாரும் குருகைக்காவலப்பன் யோக₃ம் செய்யுமிடத்தில், அவருடைய யோக₃த்தைக் கலைக்கக்கூடாது என்னும் திருவுள்ளத்தால் ஓசைப்படுத்தாமல் சுவருக்குப் பின்புறம் நிற்க, அப்பனும் பின்புறம் திரும்பிப் பார்த்து ''இங்கு சொட்டைக் குலத்தவர் யாரேனும் வந்ததுண்டோ?'' என்று கேட்டருள, ஆளவந்தாரும் ''அடியேன் யமுனைத்துறைவன் விடைகொண்டிருக்கிறேன்'' என்று வணங்கிநின்று ''அடியேன் வந்தது எப்படித் தெரிந்தது?'' என்று கேட்க ''பிராட்டியோடு பே₄ாக₃ ரஸத்தை அனுப₄விப்பதிற்காட்டிலும் என்னேடு கலந்திருப்பதை விரும்பும் எம்பெருமான், என்னையும் உபேக்ஷித்துப் பின்புறம் திரும்பிப் பார்த்ததனல், நாத₃முனிவம்ஶஸ்த₂ர் ஒருவர் வந்திருக்கவேணும்

என்று உணர்ந்தேன்'' என்று அருளிச்செய்தார். ஆளவந்தாரும் 'யோக3ரஹஸ்யத்தை அருளிச்செய்யவேணும்' என்று ப்ரார்த்தி2க்க, அப்பனும் தாம் பரமபதம் செல்லவிருக்கும் நாளைக் குறிப்பிட்டு, ''அதற்கு முன் வந்தால் உபதே3ஶிக்கிறோம்'' என்று திருமுகம் எழுதிக்கொடுத்து ஆளவந்தாரைக் கோயிலுக்கு அனுப்பினார்.

கோயிலில் த3ர்ஶனம் நிர்வஹித்து வரும்போது நம்பெருமாள் திருவத்4யயநோத்ஸவத்திலே அரையர் ஸேவையில் ''கெடுமிடர்'' [திருவாய் 10-2] என்கிற திருவாய்மொழியை அபி4நயித்துப் பாடி வருகிற திருவரங்கப் பெருமாளரையர் ஆளவந்தார் திருமுக மண்ட3லத்தைப் பார்த்து ''நடமினோ நமர்களுள்ளீர் நாமுமக்கு அறியச்சொன்னோம்'' [திருவாய் 10-2-8] என்று பலகாலும் பாடியருள, ஆளவந்தாரும் பெரியபெருமாளுடைய நியமனம் பெற்றுத் திருவனந்தபுரத்திற்கு எழுந்தருளி, அநந்தபத்3மநாப4னைத் திருவடி தொழுது குருகைக்காவலப்பன் எழுதிக்கொடுத்த திருமுகம் நினைவுக்கு வருகையாலே அதை எடுக்கச் செய்து பார்க்கையில், அப்பன் பரமபத3ம் செல்லும் தினம் அன்றேயாயிருக்கக்கண்டு ''ஒரு புஷ்பக விமானம் பெற்றிலோமே'' என்று மிகவருந்திக் கோயிலுக்கு எழுந்தருளினார். ஆளவந்தார் வைப4வத்தில் எஞ்சிய பகுதிகள் அடுத்துள்ள அவருடைய சிஷ்யர்கள் வைப4வத்திலும், எம்பெருமானார் வைப4வத்திலும் சுருக்கமாகக் காணலாம்.

ஆளவந்தார் அருளிச்செய்த க்3ரந்த2ங்கள் எட்டு. 1. ஆத்ம ஸித்3தி4. 2. ஸம்வித்ஸித்3தி4. 3. ஈஶ்வரஸித்3தி4 என்னும் ஸித்3தி4 த்ரயம். வேதா3ந்த தத்வ விசாரபரமான இவை எம்பெருமானாருக்கு ஸ்ரீபா4ஷ்யம் முதலானவற்றை அருளிச்செய்வதற்குக் கைகொடுத்தன. 4 கீ3தார்த்த2ஸங்க்3ரஹம். இது எம்பெருமானாருடைய கீ3தாபா4ஷ்யத்திற்கு அடிப்படையாய் அமைந்தது. 5. ஆக3ம ப்ராமாண்யம். இது பாஞ்சராத்ர ஆக3மத்தின் ப்ராமாண்யத்தை ஸமர்த்தி2ப்பதாய், பாஞ்சராத்ராதி4கரணம் முதலானவற்றை விவரிக்கும்போது ஸ்ரீபா4ஷ்யகாரர்க்கு உதவிற்று. 6. மஹாபுருஷநிர்ணயம். ஸ்ரீமந்நாராயணனின் பரத்வத்தை ஸ்தா2பிக்கும் க்3ரந்த2மான இது-வேதா3ர்த்த2ஸங்க்3ரஹம் முதலான பல க்3ரந்த2ங்களை அருளிச்செய்யும்போது எம்பெருமானார்க்குப் பயன்பட்டது. 7. ஸ்தோத்ரரத்னம். எம்பெருமானைப் பற்றிய தன்னிகரில்லாத துதிநூல் இது. 8. சது:ஶ்லோகீ. மிகச் சுருக்கமாய், மிக ஆழ்ந்த பொருளை உடைய இத்துதிநூல் பிராட்டியைப்பற்றியது. இவ்விரண்டு துதிநூல்களும், உடையவராலே க3த்3யம் முதலானவற்றில் ஆர்வத்தோடு கையாளப்பட்டவை. இவற்றில் ஸித்3தி4த்ரயத்தில் ஒரு பகுதியும், மஹாபுருஷநிர்ணயம் முழுவதும் இப்போது கிடைக்கவில்லை. மற்றவை உள.

ஆளவந்தார் வைப4வம் முற்றிற்று.

# பெரியநம்பி வைபவம்



ஸ்ரீரங்கம்—பெரியநம்பிகள்

தயாநிக்₄நம் யதீந்த்₃ரஸ்ய தே₃ஶிகம் பூர்ணமாஶ்ரயே ।
யேந விஶ்வஸ்ருஜோ விஷ்ணோரபூர்யத மநோரத₂: ॥

[யதிராஜஸப்ததி 9]

[ஒன்றியொன்றி உலகம் படைத்த விஷ்ணுவின் (சேதநலாப₄) மநோரத₂ம் எவராலே நிறைவேற்றிவைக்கப்பட்டதோ, கருணை நிரம்பியவரும், யதிராஜருடைய ஆசார்யருமான அத்தகைய பெரியநம்பிகளை ஆஶ்ரயிக்கிறேன்.]

கமலாபதி கல்யாணகு₃ணாம்ருதநிஷேவயா।
பூர்ணகாமாய ஸததம் பூர்ணாய மஹதே நம: ॥

[ஸ்ரீமந்நாராயணனுடைய கல்யாண கு₃ணங்களாகிற அமுதத்தைப் பருகுகையால் எப்போதும் விருப்பம் நிறைவேறப்பெற்றவராயிருக்கும் பெரியநம்பிகளுக்கு நமஸ்காரம்.]

ஆளவந்தார் அவதரித்து இருபத்தொரு வருடங்களுக்குப் பிறகு (கி. பி. 997—998) ஹேவிளம்பி வருஷத்தில் மார்கழியில் கேட்டையில் புதன்கிழமையில் ப்₃ருஹச்சரண ப்₃ராஹ்மணகுலத்தில் பா₄ரத்₃வாஜகோ₃த்ரத்தில் யஜுஶ்ஶாகை₂யில் ஸ்ரீபராங்குஶ தா₃ஸர் என்னும் திருநாமம் உடையவராய், குமுத₃ர் என்னும் நித்யஸூரியின் அம்ஶமாக அவதரித்தவர் பெரியநம்பி. எம்பெருமானாருக்கு ஸமாஶ்ரயணம் செய்த முக்₂யாசார்யராகையாலே ஆளவந்தாருடைய சிஷ்யர்களுக்குள் பெருமை பெற்றவராய், பெரியநம்பி என்று அழைக்கப்பெற்றார். ஆளவந்தார் நியமனத்தின் பேரில் இவரே ஸ்ரீ ராமானுஜரைத் திருவரங்கத்துக்கு அழைத்து வந்தார். ஆளவந்தார் காலத்திற்குப் பின் ஆளவந்தாருடைய மற்ற சிஷ்யர்களாலே ப்ரார்த்தி₂க்கப் பெற்ற இவரே ஸ்ரீராமானுஜர்க்கு ஸமாஶ்ரயணம் செய்து அழைத்து வருவதற்காக ஸ்ரீகாஞ்சிக்குப் புறப்பட்டார். தேவப் பெருமாளின் நியமனம் பெற்றுப் பெரியநம்பியை ஆஶ்ரயிப்பதற்காக ஸ்ரீராமானுஜர் திருவரங்கத்தை நோக்கிப் புறப்பட்டார். இருவரும் மது₄ராந்தகம் ஏரிகாத்த பெருமாள் கோயிலிலே சந்திக்க, அங்கு ஸ்ரீராமானுஜ ஸமாஶ்ரயணம் நடைபெற்றது. எம்பெருமானார் மேல்நாட்டுக்கு எழுந்தருளியபோது, கூரத்தாழ்வானோடு க்ரிமிகண்ட₂னுடைய ஸபைக்குச் சென்று, நம் த₃ர்ஶநத்திற்காகத் தம் த₃ர்ஶநத்தையும் (கண்களையும்), உயிரையும் த்யாக₃ம் செய்த மஹாநுபா₄வர் இவர். இவர் தம் குமாரரான புண்ட₃ரீகாக்ஷரையும், பெண்ணான அத்துழாயையும் உத்தாரகரான எம்பெருமானார் திருவடிகளிலே ஆஶ்ரயிப்பித்தார். ஆளவந்தாருடைய சிஷ்யராய், சதுர்த்த₂வர்ணத்தைச் சேர்ந்தவரான மாறனேரி நம்பிக்கு ப்₃ரஹ்மமேத₄ஸம்ஸ்காரம் செய்து பெருமைபெற்றவர் இவர். இது இவருடைய வைப₄வத்தின் சுருக்கம். யதிராஜ வைப₄வத்தில் இதன் விரிவு காணலாம்.

பெரியநம்பி வைப₄வம் முற்றிற்று.

ஸ்ரீவல்லப₄பத₃ாம்போ₄ஜ தீ₄ப₄க்த்யம்ருதஸாக₃ரம்।
ஸ்ரீமத்₃கோ₃ஷ்டீ₂புரீபூர்ணம் தே₃ஶிகேந்த்₃ரம் ப₄ஜாமஹே॥

[ஸ்ரிய:பதியின் திருவடித்தாமரையில் ஞானமும், ப₄க்தியுமாகிற அமுதங்களுக்குக் கடல்போன்றவரும், திருக்கோட்டியூர் நம்பியென்னும் பெயருடையவருமான ஆசார்யோத்தமரை ஆஸ்ரயிக்கிறோம்.]

ஆளவந்தார் அவதரித்துப் பதினொரு வருடங்கள் கழிந்த பின் (கி. பி. 987) ஸர்வஜித் வருஷத்திலே வைகாசி ரோகிணியில் காஶ்யப கோ₃த்ரத்தில் ருக்ஶாகை₂யில் பெரியாழ்வாருக்குப் பரம ஆப்தரான செல்வநம்பியின் வம்ஶத்திலே ஸ்ரீபுண்ட₃ரீகர் என்னும் நித்யஸூரியின் அம்ஶமாய், பூர்வஶிக₂ ஸ்ரீவைஷ்ணவ ப்₃ராஹ்மண குலத்திலே குருகேஶர் (திருக்குருகைப்பிரான்) என்னும் திருநாமமுடையவராய் அவதரித்தவர் திருக்கோட்டியூர் நம்பி. நாத₂முனிகளிடமிருந்து உய்யக்கொண்டார் மணக்கால் நம்பிகளின் மூலம் கிடைத்த ப₄விஷ்ய த₃ாசார்ய விக்₃ரஹத்தை ஆளவந்தார் தம் சரம த₃ஶையிலே இவரிடம் ப்ரஸாதி₃த்து, அது வந்த வழியையும் அருளிச்செய்து, ரஹஸ்யார்த்த₂ங்கள் அனைத்தையும் ஸ்ரீராமானுஜர்க்கு உபதே₃ஶிக்கும்படியும், நம் த₃ர்ஶநத்தை அவர் திருநாமத்தாலே விளங்கவைக்கும்படியும் நியமித்துச் சென்றார். அதன்படியே மஹா தீ₃ர்க்க₄த₃ர்ஶியான திருக்கோட்டியூர் நம்பி—அநுவ்ருத்தி ப்ரஸந்நாசார்யர்களுடைய பரம்பரை தம்முடன் முடிவுபெற்று, எம்பெருமானார் தொடங்கி க்ருபாமாத்ர ப்ரஸந்நாசார்யர்களுடைய பரம்பரை வளரவேணும் என்னும் திருவுள்ளத்தாலே ஸ்ரீராமானுஜரைப்பதினெட்டுமுறை திருக்கோட்டியூருக்கு நடக்கச் செய்து, வேறு எவர்க்கும் உபதே₃ஶிக்கக் கூடாது என்று ப்ரதிஜ்ஞை பெற்றுக்கொண்டு, அவருக்குத் திருமந்த்ரார்த்த₂த்தை உபதே₃ஶித்தார். ஸ்ரீராமானுஜர் தம் காரேய் கருணையினாலே ஆசார்ய நியமனத்தையும் மீறி "நமக்கு நரகம் வந்தாலும் வரட்டும்; பலர் உஜ்ஜீவித்தால் போதும்" என்னும் திருவுள்ளத்துடன் பலர்க்குத் திருமந்த்ரார்த்த₂த்தை உபதே₃ஶித்ததைக் கண்டு "எம்பெருமானாரே!" என்று ஸ்ரீராமானுஜரை அணைத்துக்கொண்டு 'எம்பெருமானார் த₃ர்ஶனம்'

என்று எம்பெருமானார் திருநாமத்தாலே த₃ர்ஶநம் விளங்கும்படி அநுக்₃ரஹித்து, அவருக்குத் தாமே சரமஶ்லோகார்த்த₂த்தை உப தே₃ஶித்து, அதைத்தக்க அதி₄காரிகளுக்கு உபதே₃ஶிக்கும்படி நியமித்தருளினார். திருமாலையாண்டானை எம்பெருமானாருக்குத் திருவாய்மொழி காலக்ஷேபம் சொல்லும்படி நியமித்தவரும் இவரே. ஆளவந்தாரிடம் கேட்காத அர்த்த₂ங்களை விஶ்வாமித்ர ஸ்ருஷ்டியாக எம்பெருமானார் கூறியதாலே கோபமடைந்து, திருமாலையாண்டான் திருவாய்மொழி காலக்ஷேபத்தை நிறுத்தியபோது, ப₄விஷ்யதா₃சார்யரான எம்பெருமானாருடைய பெருமையைத் திருமாலையாண்டானுக்கு எடுத்துரைத்து, மறுபடியும் காலக்ஷேபம் தொடங்கும்படி செய்தவரும் இவரே. 'ஸ்ரீரங்க₃த்தில் உள்ளார் விஷம் இட்டமையாலே எம்பெருமானார் உபவாஸம் இருக்கிறார்' என்று கேள்விப்பட்டுத் திருக்கோட்டியூரிலிருந்து பதறிவந்து. எம்பெருமானார் சிஷ்யர்களில் கிடாம்பியாச்சானுக்கே எம் பெருமானார் திருமேனியில் பரிவு உள்ளதை ஶோதி₄த்து அறிந்து, அவரை உடையவர்க்கு மடைப்பள்ளி கைங்கர்யம் செய்யும்படி நியமித்தவரும் இவரே. இவற்றிலிருந்து இவர் பெரிய தீ₃ர்க்க₄த₃ர்ஶி என்பதும், எம்பெருமானாரிடம் பொங்கும் பரிவை உடையவர் என்பதும். தமக்குக் கெட்ட பெயர் ஏற் படுமானாலும். எம்பெருமானாருக்குச் சிறப்பு விளைப்பதில் ஊன்றி நின்றவர் என்பதும், ஆளவந்தார் சிஷ்யர்களில் தலைமை பெற்றவர் என்பதும் விளங்கும்.

இவர் குமாரத்தி தே₃வகிப் பிராட்டியார் சிறந்த ஜ்ஞாநா தி₄கை. எம்பெருமானாருடைய சிஷ்யை. "உந்துமதகளிற்றன்" (திருப்பாவை 18) பாட்டை எம்பெருமானார் அநுஸந்தி₄த்துக் கொண்டு மாது₄கரத்திற்கு (உஞ்சவ்ருத்திக்கு) எழுந்தருளும் போது திருக்கோட்டியூர் நம்பி திருமாளிகை வாசலிலே "செந்தாமரைக் கையால் சீரார் வளையொலிப்ப வந்து திறவாய் மகிழ்ந்து" என்று அநுஸந்தி₄த்தவுடன் தே₃வகிப்பிராட்டியார் கதவைத் திறக்க, அவளை நப்பின்னையாகவே எண்ணித் திருவடியில் விழுந்தார் எம்பெருமானார் என்னும் ஐதிஹ்யம்— வார்த்தாமாலை முதலான பல ப்ராசீந க்₃ரந்த₂ங்களில் விவரிக்கப் பட்டுள்ளது. நம்பி—தம் குமாரர் தெற்காழ்வானையும் உத்தாரக ரான எம்பெருமானாரை ஆஶ்ரயிக்கச் செய்தார்.

திருக்கோட்டியூர் நம்பி வைப₄வம் முற்றிற்று.

# திருமாலையாண்டான் வைபவம்



திருமாலையாண்டான் — திருமாலிருஞ்சோலை

ப₄க்தாம்ருதம் வாஞ்சி₂த பாரிஜாதம்
மாலாத₄ரம் யாமுநபாத₃ப₄க்தம் ।
ஸ்ரீப₄ாஷ்யகாரார்த்த₂ ஹிதோபதே₃ஶம்
ஸ்ரீஜ்ஞாநபூர்ணம் ஶிரஸா நமாமி ॥

[ப₄க்தர்களுக்கு அமுதம் போன்றவராய், கேட்பார்க்குக் கேட்டதைக் கொடுக்கும் கற்பகவ்ருக்ஷமாய், யாமுநாசார்யரின் திருவடியில் அன்புகொண்டவராய், ஸ்ரீப₄ாஷ்யகாரருக்குத் திருவாய்மொழியின் பொருளாகிற பரமஹிதத்தை உபதே₃சித்தவராய்,

ஜ்ஞாநபூர்ணர் (நல்லறிவு நிறைந்தவர்) எனும் திருநாமமுடைய திருமாலையாண்டானைத் தலையாலே வணங்குகிறேன்.]

திருக்கோட்டியூர்நம்பி அவதரித்ததற்கு அடுத்த வருஷமான 'ஸர்வதா₂ரி' வருஷத்தில் மாசி மாதம் மக₂ நக்ஷத்திரத்தில் அழகர்கோவிலான திருமாலிருஞ்சோலையில் வாமநர் என்னும் நித்யஸூரியின் அம்ஶமாகப் பூர்வஶிகா₂ ஸ்ரீவைஷ்ணவ ப்₃ராஹ்மண குலத்தில் காஶ்யபகோ₃த்ரத்தில் யஜுஶ்ஶாகை₂யில் அவதரித்தவர் திருமாலையாண்டான். திருமாலையாண்டான் என்பது இவர்களுக்கு வம்ஶபரம்பரையாய் வரும் பட்டப்பெயர். இவருடைய திருநாமம் 'ஜ்ஞாநபூர்ணர்' என்பது. இவருடைய மூதாதைகளில் ஒருவர் கண்ணுக்கினியான் ஸ்வாமி என்பவர். ஒருமுறை சில மலையாள மாந்த்ரிகர்கள் வந்து அஞ்ஜநமையைக் கண்ணில் இட்டுக்கொண்டு, அதன் மஹிமையாலே மறைந்துநின்று அழகருடைய தேஜஸ்ஸை ஆகர்ஷித்துக் கொண்டுபோக வந்திருந்தனர். அதையறிந்த இந்த ஸ்வாமி இந்த மாந்த்ரிகர்கள் பூ₃லி ப்ரஸாத₂த்தை உண்டே உயிர் த₄ரிக்கிறுர்கள் என்று அறிந்து, அந்த ப்ரஸாத₃த்தில் மிளகு அதி₄கமாகச் சேர்க்கும்படி செய்தார். அதை உண்டபின் மாந்த்ரிகர்களுக்குக் கண்ணீர் நிறைந்து அஞ்ஜநமை கரைகையாலே அவர்கள் வெளிப்பட்டு சிக்ஷிக்கப்பட்டார்கள் என்றும், அதனுல் அந்த ஸ்வாமிக்குத் 'திருமாலை ஆண்டான்' என்கிற பட்டப்பெயர் ஏற்பட்டு, அழகருக்குப் புரோஹிதராகவும் நியமிக்கப்பெற்று, பரம்பரையாக இன்றளவும் அப்பெருமைகள் அவருடைய வம்ஶஸ்த்தர்களால் அநுப₄விக்கப்பட்டு வருகிறது என்றும் அத்திருமாளிகைச் சரித்திரம் கூறுகிறது.

திருக்கோட்டியூர் நம்பியின் நியமனத்தால் எம்பெருமாஞர்க்குத் திருவாய்மொழியின் அர்த்த₂த்தைக் காலக்ஷேபம் ஸாதித்தார் ஜ்ஞாநபூர்ணரான திருமாலையாண்டான். "ஆளவந்தார் அருளிச்செய்தாராகத் திருமாலையாண்டான் அருளிச்செய்யும்படி" என்று ஈடு முதலான வ்யாக்₂யாநங்களில் அடிக்கடி வருவதைக் காணலாம். ஆளவந்தாரிடம் மிகவும் ஈடுபாடுள்ள சிஷ்யராகையாலே, அவர் அருளிச்செய்த அர்த்த₂ங்களுக்கு மாறுபட்டு எம்பெருமாஞர் சில அர்த்த₂ங்களை விஶ்வா

பேரருளாளன் பேரருளாலே காஞ்சிக்குத் திரும்பினுர். யாத₃வ ப்ரகாஶனேடு காசிக்குச் சென்ற கோ₃விந்த₃ர் கங்கையில் மூழ்கி எழும்போது அவருடைய உள்ளங்கையில் ஓர் லிங்க₃ம் அகப்பட்டது. யாத₃வப்ரகாஶனுல் "உள்ளங்கைக்கொணர்ந்த நாயனுர்" என்று பெயரிடப்பெற்று சைவராகி, அந்த லிங்க₃த்தை மது₄ரமங்க₃லத்தில் ப்ரதிஷ்டை₂செய்து காளஹஸ்திச் சிவன் கோயிலில் தொண்டு செய்துவந்தார் இவர். ஶ்ரீராமாநுஜருடைய ப்ரார்த்த₂னைக்கிணங்க மாதுலரான பெரியதிருமலைநம்பி காள ஹஸ்திக்குச் சென்று கோ₃விந்த₃ரை மறுபடியும் வைஷ்ணவ ராகத் திருத்தினுர். எம்பெருமானுர் முதல்முறை திருமலைக்குச் சென்றபோது கோ₃விந்த₃ரை த₃ானமாகப்பெற்று தம் சிஷ்ய ராக அழைத்துச்சென்ருர். கோ₃விந்த₃ர் பரமவைராக்₃யமுடைய வராயிருந்தபடியாலே ஸந்யாஸாஶ்ரமத்தைப் பெற்று "எம்பார்" என்னும் திருநாமத்தை அடைந்தார். "ராமானுஜ பத₃ச்சா₂யா" (ஶ்ரீராமானுஜருடைய திருவடி நிழலாயிருந்தவர்) என்று பெயர் பெற்று, எம்பெருமானுரைவிட்டுப் பிரியாமல் இருந்துவந்தார். திருவாய்மொழி முதலான தி₃வ்யப்ரப₃ந்த₄ங்களில் இவர் அருளிச்செய்திருக்கும் நிர்வாஹங்கள் இவர் பரம ரஸிகர் என்பதைக் காட்டுகின்றன. கூரத்தாழ்வான் திருக் குமாரரான ப₄ட்டர் அவதரித்தவுடன் அக்குழந்தையைக் கடாக்ஷிப்பதற்காக எடுத்துவரும்படி எம்பெருமானுரால் நிய மிக்கப்பெற்ற எம்பார், குலக்கொழுந்தான அக்குமாரரைத் தம் மார்பிலே அணைத்துக்கொண்டு குழந்தைக்கு ரக்ஷையாக த்₃வயாநுஸந்த₄ானம்செய்து கொண்டுவந்து எம்பெருமானுரிடம் காட்டினுர். எம்பெருமானுரும் "எம்பாரே! த்₃வயம் பரி மளியாநின்றது; என்செய்தீர்?" என்று கேட்க, அவரும் "குழந்தைக்குக் காப்பாக த்₃வயாநுஸந்த₄ானம் பண்ணிக் கொண்டு எடுத்துவந்தேன்" என்றுகூற, இவருடைய "ஹிதத் திற்கு நீர் முற்பட்டீராகையாலே, நீரே இவருக்கு ஆசார்யராகக் கடவீர்" என்று நியமித்தார் எம்பெருமானுர். அதன்படியே எம்பார் ப₄ட்டருக்கு ஆசார்யரானுர். இவர் வைப₄வத்தின் விரிவு யதிராஜ வைப₄வத்திலும், ப₄ட்டர் வைப₄வத்திலும் காணலாம்.

எம்பார் வைப₄வம் முற்றிற்று.

# திருக்குருகைப்பிரான்பிள்ளான் வைபவம்

த்₃ராவிட₃ாக₃மஸாரஜ்ஞம் ராமாநுஜபத₃ாஶ்ரிதம் ।
ஸுதி₄யம் குருகேஶார்யம் நமாமி ஶிரஸாऽந்வஹம் ॥

[திராவிடவேத₃த்தின் ஸாரத்தை அறிந்தவராய், எம்பெருமானாரின் திருவடிகளை ஆஶ்ரயித்தவராய், பேரறிவாளரான திருக்குருகைப்பிரான்பிள்ளானைத் தினந்தோறும் தலையால் வணங்குகிறேன்.]

பெரியதிருமலைநம்பிக்கு, "பிள்ளை திருமலைநம்பி" "ராமானுஜன்" "பிள்ளான்" என மூன்று குமாரர்கள். எம்பெருமானார் நம்பியிடம் கோ₃விந்த₃ரை யாசித்துப் பெற்றபோது, பெரியதிருமலைநம்பி தாமே தம் குமாரரான பிள்ளானை, அபி₄மான புத்திரராக வைத்துக்கொள்ளும்படி யதிராஜரிடம் அளித்தார். அவரும் பிள்ளானிடம் பேரபி₄மானம் கொண்டவராய்த் தமக்கு அவரை ஜ்ஞாநபுத்திரராகக்கொண்டு அவரைத் திருவாய்மொழிக்கு 'ஆறாயிரப்படி' வ்யாக்₂யாநம் செய்யும்படி நியமித்தார். நம்மாழ்வாருக்கும், தமது ஆசார்யரான திருக்கோட்டியூர் நம்பிக்கும் திருநாமமான "திருக்குருகைப்பிரான்" என்னும் திருநாமத்தை அவருக்கு இட்டு, "திருக்குருகைப்பிரான் பிள்ளான்" என்று அவரை அழைத்து, அவர் அருளிய ஆறாயிரப்படி வ்யாக்₂யாநத்தையும் அரங்கேற்றி, ஆளவந்தாரின் மூன்றாவது மனோரத₂த்தை நிறைவேற்றினார் யதிராஜர். எம்பெருமானாரை ஆஶ்ரயித்து, ஆழ்வான் காலத்திற்குப்பின் ஸ்ரீபா₄ஷ்யாதி₃களை எழுதுவதில் அவருக்கு உசாத்துணையாயிருந்து "எங்களாழ்வான்" என்று எம்பெருமானாரால் அபி₄மானிக்கப்பெற்று, எழுபத்துநாலு ஸிம்ஹாஸநாதி₄பதிகளில் ஒருவராக நியமிக்கப்பெற்றவராய், திருவெள்ளறையில் அவதரித்தவரான ஸ்ரீவிஷ்ணுசித்தர்—எம்பெருமானார் காலத்திற்குப் பின் பிள்ளானை ஆஶ்ரயித்திருந்து, அவரிடம் தி₃வ்யப்ரப₃ந்த₄ங்களுக்கு அர்த்த₂ம் கேட்டவர். பிள்ளான் ஐப்பசியில் பூராடத்தில் அவதரித்தவர். விஷ்ணுபுராணக் கணக்கிலே ஆறாயிரம் க்₃ரந்த₂ங்களுள்ளதாகத் திருவாய்மொழிக்கு இவர் அருளிய வ்யாக்₂யானம், ஒன்பதினாயிரப்படி தொடக்கமாக முப்பத்தாறாயிரப்படியீறாகவுள்ள திருவாய்மொழி வ்யாக்₂யானங்களுக்கு வழிகாட்டியாய் அமைந்தது. இவர் வேறு க்₃ரந்த₂ம் எதுவும் அருளியதாகத் தெரியவில்லை.

திருக்குருகைப்பிரான் பிள்ளான் வைப₄வம் முற்றிற்று.

# அருளாளப்பெருமாள் எம்பெருமானார் வைபவம்





அருளாளப்பெருமாள் எம்பெருமானார்
(பாண்டவதூதர் ஸந்நிதி, காஞ்சீபுரம்)

ராமாநுஜார்ய ஸச்சி₂ஷ்யம் வேத₃ஶாஸ்த்ரார்த்த₂ ஸம்பத₃ம் ।
சதுர்த்தா₂ஶ்ரம ஸம்பந்நம் தே₃வராஜமுநிம் ப₄ஜே ॥

[எம்பெருமானாருடைய நல்ல சீடராய், வேத₃ஶாஸ்த்ரார்த்த₂ப் பொருள்களைச் செல்வமாக உடையவராய், ஸந்யாஸாஶ்ரமத்தை உடையவரான தே₃வராஜமுனிவர் என்னும் அருளாளப் பெருமாள் எம்பெருமானாரை ஆஶ்ரயிக்கிறேன்.]

இவர் ஸகல ஶாஸ்த்ரங்களும் வல்லவராய், அக்காலத்தி லிருந்த அத்₃வைதிகளுக்கெல்லாம் தலைவராய் ''யஜ்ஞமூர்த்தி'' என்று பெயர் பெற்றிருந்தவர். எம்பெருமானார் இவரோடு பதினெட்டுநாள் வாத₃ப்போர்புரிந்து, அருளாளப்பெருமாளான 'வரத₃ன்'அருளாலே இவரை வெற்றிகொண்டு, அக்காரணத் தாலே " அருளாளப்பெருமாளெம்பெருமானார் " என்று இவருக்குத் திருநாமமிட்டார். இவருக்குத் தனியாக ஒரு மட மும் அமைத்துக்கொடுத்தார். ''எம்பெருமானார் மடம் எங்கே?'' என்று வெளியூரிலிருந்து வந்த சிலர் கேட்க, ''எந்த எம்பெரு மானார் மடம்?'' என்று உள்ளூரார் சிலர் பதில் கேள்வி கேட்க, இதைக் கேட்டு, " ஐயோ ! எம்பெருமானருக்குப் போட்டியாக வழங்கும்படி ஆகிவிட்டோமே'' என்று மனம் நொந்து, தமது மட₂த்தை இடித்துவிட்டு, எம்பெருமானார் மட₂த்திலேயே வாழத்தொடங்கிய இவரது ''ஆசார்யநிஷ்டை₂'' வியத்தற்குரியது. அநந்தாழ்வான், எச்சான் (யஜ்ஞேஶர்), தொண்டனூர்நம்பி, மருதூர்நம்பி ஆகியவர்களை எம்பெருமானார் இவர் திருவடிகளிலே ஆஶ்ரயிக்கச்செய்தார். இவர் ' ஞான சாரம் ' ''ப்ரமேயசாரம்'' என்னும் அத்₃பு₄தமான இரு தமிழ்ப் பிரபந்தங்களை அருளிச்செய்தார். இவற்றுக்கு மணவாள மாமுனிகள் வ்யாக்₂யானம் அருளியுள்ளார். 'கருமத்தால் ஞானத் தால் காணும் வகையுண்டே தருமத்தாலன்றி இறைதாள்கள் ?'' [ப்ரமயஸாரம்4] 'உள்ளபடியுணரில் ஒன்று நமக்குண்டென்று, விள்ள விரகிலதாய் விட்டதே !—கொள்ளக் குறையேதுமில் லார்க்குக் கூறுவதென் சொல்லீர் இறையேதுமில்லாத யாம்'' [ஷை 6] ''சாதகப் போல் நாதன் தனதருளே பார்த்திருத்தல் கோதி லடியார் குணம்'' [ஞான சாரம் 2] என்று நிர்ஹேதுகக்ருபையின் பெருமையையும், ''அற்றமுரைக்கில் அடைந்தவர்பால் அம் புயைகோன், குற்றமுணர்ந்து இகழும் கொள்கையனோ? — எற்றே தன், கன்றின் உடம்பின் வழுவன்றோ காதலிப்பது, அன் றதனை ஈன்றுகந்த ஆ'' [ஷை 25] என்று வாத்ஸல்யலக்ஷணத்தையும் இவர் அருளியிருப்பதையே நம்பிள்ளை, பெரியவாச்சான்பிள்ளை முதலான பேராசிரியர்கள் பின்பற்றினர்கள் என விளங்குகிறது.

அருளாளப்பெருமாள் எம்பெருமானார் வைபவம்

முற்றிற்று.

# சோமாசியாண்டான் வைபவம்

நௌமி லக்ஷ்மண யோகீ₃ந்த்₃ர பாத₃ஸேவைகத₄ாரகம் ।
ஸ்ரீராமக்ரதுநாத₂ார்யம் ஸ்ரீப₄ாஷ்யாம்ருதஸாக₃ரம் ॥

[ஸ்ரீராமாநுஜமுனிவரரின் திருவடிக்குற்றேவலையே த₄ாரகமாகக் கொண்டவரும், ஸ்ரீப₄ாஷ்யாம்ருதம் தங்கும் கடல்போன்றவருமான 'ஸ்ரீராமன்' என்னும் திருநாமமுடைய சோமாசியாண்டானை வணங்குகிறேன்.]

எம்பெருமானாருடைய முக்₂யஶிஷ்யர்களில் ஒருவரான இவரது இயற்பெயர் 'ஸ்ரீராமமிஶ்ரர்' என்பதேயாகும். இவரது கூடஸ்த₂ரோ, அல்லது இவரோ ஸோமயாக₃ம் செய்ததால் 'ஸோமயாஜியாண்டான்' அல்லது சோமாசியாண்டான் என்பது இவர் குலத்தவர்க்கெல்லாம் இன்றும் பட்டப்பெயராய் விளங்குகிறது. [இவர் குலத்தவரே ஸ்ரீரங்கம் வாக்ய பஞ்சாங்க₃ம் க₃ணிக்கும் மிராசு பெற்றவர்கள்.] இவரே 'ஸ்ரீப₄ாஷ்ய விவரணம்' என்னும் பெயர் கொண்ட ஸ்ரீப₄ாஷ்ய வ்யாக₃யானத்தை முதலில் இயற்றினர். ஷடர்த்த₂ஸங்க்ஷேபம் என்னும் இவரது நூலிலிருந்து ஸ்ரீவேத₃ாந்த தே₃ஶிகர் சில பகுதிகளை எடுத்திருக்கிறார். 'உப₄யாதி₄ஷ்ட₂ாநம் ச ஏகம் ஶேஷித்வம்'' [பிராட்டியும், பெருமாளுமாகிற மிது₂னத்தை ஆஶ்ரயமாகக்கொண்ட ஶேஷித்வம் ஒன்றே] என்னும் வாக்கியம் அவற்றில் ஒன்று. ஸகல சேதநரும் மிது₂நஶேஷபூ₄தர்களே என்பதை நிலைநாட்டும் வாக்யமிது. இவர் எம்பெருமானாரது வைப₄வத்தை விளக்கும் கு₃ரு கு₃ணாவளி என்னும் நூலை அருளிச்செய்திருக்கிறார் என்றும், அதில்

யஸ்ஸாபராத₄ாந் ஸ்வபத₃ப்ரபந்நாந்
ஸ்வகீயகாருண்ய கு₃ணேந பாதி ।
ஸ ஏவ முக்₂யோ கு₃ருரப்ரமேயஸ்
ததை₂வ ஸத்₃பி₄: பரிகீர்த்யதே ஹி ॥

[யாவரொரு ஆசார்யர் தன் அடியடைந்தவர்களைத் தன் கருணையினாலேயே ரக்ஷிக்கிறாரோ, அவரே அளத்தற்கரிய முக்₂யாசார்யராவார். நல்லோர்களால் அப்படியே சொல்லப்படுகிறதன்றோ.] என்று க்ருபாமாத்ர ப்ரஸந்நாசார்யரான எம்பெருமானாரின் பெருமையை அருளியிருக்கிறார் என்றும் நாயனாராச்சான்பிள்ளை தம் சரமோபாயநிர்ணயத்தில் எடுத்துக் காட்டியுள்ளார். இவரது க்₃ரந்த₂ங்களில் எதுவுமே இப்போது இல்லாவிடினும், ஶ்ருதப்ரகாஶிகை சரமோபாயநிர்ணயம் முதலான பின்வந்த ஆசார்யர்களின் க்₃ரந்த₂ங்களில் அவற்றின் விவரணம் உள்ளதாகையாலே குறையில்லை.

சோமாசியாண்டான் வைப₄வம் முற்றிற்று.

# *நடாதூராழ்வான் வைபவம்

எம்பெருமானாருக்கு இரு ஸஹோதரிகள். ஒருத்தியின் குமாரர் வாதூல கோத்ரத்தில் உதித்த முதலியாண்டான். மற்றொருத்தியின் குமாரர் ஸ்ரீவத்ஸகோத்ரத்தில் உதித்தவராய், "வரதவிஷ்ணு" என்னும் திருநாமம் உடையவராய், காஞ்சியில் அவதரித்த "நடாதூராழ்வான்" ஆவர். இவருடைய பேரராய் "வரதாசார்யர்" என்னும் திருநாமம் உடையவரான நடாதூரம்மாள் எங்களாழ்வானின் சிஷ்யராய் இருந்தவர். நடாதூராழ்வான் அருளிய க்ரந்தமான மாநயாதாத்ம்யநிர்ணயத்திலிருந்து சில பகுதிகள் வேதாந்ததேசிகரால் ந்யாயஸித்தாஞ்ஜநத்தில் எடுக்கப்பட்டுள்ளன. எம்பெருமானாரால் நியமிக்கப்பெற்ற நாலு ஸ்ரீபாஷ்ய ஸிம்ஹாஸநாதிபதிகளுள் இவரொருவர். இவருடைய மாநயாதாத்ம்ய நிர்ணயத்தில் 'அணுவான ஆத்மஸ்வரூபம் முக்தி தசையில் விபுவாகிவிடுகிறது' என்று வாதம் செய்திருப்பது ப்ரஹ்மஸூத்ரம் முதலானவற்றுக்கு முரண்படுகையால் அதிவாதமாகும் என்று ஸ்ரீவேதாந்ததேசிகர் ந்யாயஸித்தாஞ்ஜனத்தில் காட்டினார். "கைவல்யத்தில் எல்லாக்கர்மமும் நசிப்பதில்லையாகையால் அது *அழிவற்றதொரு ஐச்வர்யமே*" என்றும் இவர் ஸாதித்திருப்பதாக தேசிகன் அங்கு எடுத்துள்ளார். முக்யமுக்தியல்லவாகையால் இதற்கு ஐச்வர்யமென்று பெயர்வைக்கலாம் என்று இவர் திருவுள்ளம்பற்றினாலும், ஆழ்வார்களையும், எம்பெருமானாரையும் பின்பற்றி கைவல்யம் அழிவில்லாததே என்று காட்டியிருப்பது குறிக்கொள்ளத்தக்கது. இவற்றிலிருந்து எம்பெருமானார் சிஷ்யர்களிடையிலேயே சில விஷயங்களில் கருத்து வேற்றுமை உண்டென விளங்குகிறது. தம் காலத்தில் சிஷ்யர்களிடையேயிருந்த சில கருத்துவேற்றுமைகளை எம்பெருமானாரே தடைசெய்யாமல் விட்டிருந்தார் என ஸ்ரீதேசிகனும் அருளியுள்ளார். இவர் வைபவத்தின் விரிவு யதிராஜவைபவத்திலும், எங்களாழ்வான் வைபவத்திலும் காணலாம்.

நடாதூராழ்வான் வைபவம் முற்றிற்று.

---

* இவர் தனியன்களை, இவர் பேரரான நடாதூரம்மாளின் வைபவத்தின் தொடக்கத்தில் காணலாம்.

# வடுகநம்பி வைபவம்

ராமாநுஜார்ய ஸச்சிஷ்யம் ஸாலக்ராமநிவாஸிநம் ।
பஞ்சமோபாயஸம்பந்தம் ஸாலக்ராமார்யமாஶ்ரயே ॥

[எம்பெருமானாருடைய நல்ல சீடராய், ஸாளக்ராமம் என்னும் ஊரில் வாழ்ந்தவராய், ஐந்தாம் உபாயமான ஆசார்ய நிஷ்டை கைவரப்பெற்றவரான ஸாளக்ராம ஐயன் எனப்படும் வடுகநம்பியை ஆஶ்ரயிக்கிறேன்.]

மேல்கோட்டை திருநாராயணபுரத்திற்கு அருகில் ஸாலக்ராமம் என்னும் ஊரில், எம்பெருமானார் அவதரித்து முப்பது வருஷங்களுக்குப் பிறகு (கி. பி. 1047) ஸர்வஜித் வருஷம், மாசிப் புனர்பூசத்தில் அவதரித்தவர் ''ஆந்த்ரபூர்ணர்'' என்னும் ''வடுகநம்பி''.

விஶிஷ்டாத்வைத ஸ்ரீ வைஷ்ணவ தர்ஶந ஸ்தாபகரான எம்பெருமானாருடைய சரித்திரத்தை விளக்கும் பற்பல நூல்களில் தலைமை பெற்ற 'யதிராஜவைபவம்' என்னும் 114 அழகிய ஶ்லோகங்களில் அமைந்த நூலை அருளியவராய், எம்பெருமானாரிடம் சரமபர்வ நிஷ்டையை உடையவராயிருந்தவர் ஆந்த்ரபூர்ணர் எனப்படும் வடுகநம்பியேயாவர். யதிராஜவைபவத்தில் 113-வது ஶ்லோகத்தில் இது தெளிவாக விளங்குகிறது. சுருக்கமான இந்நூலை விவரிப்பவையாகவே குருபரம்பராப்ரபாவம், ப்ரபந்நாம்ருதம் முதலான நூல்கள் அமைந்திருக்கின்றன.

இந்நூலை அருளிய வடுகநம்பியின் ஆசார்யநிஷ்டை அதிவிலக்ஷணமானது. எம்பெருமானாரின் திருவடிநிலைகள் (பாதுகைகள்) மாத்திரமே இவருக்குத் திருவாராதனப்பெருமாள். ஒருசமயம், இவர் தம் திருவாராதனப்பெருமாளான உடையவர் திருவடிநிலைகளையும், உடையவர் திருவாராதனப் பெருமாளையும் ஒன்றாக எழுந்தருளப் பண்ணிக்கொண்டு வந்தார். உடையவர் '' வடுகா! இப்படிச் செய்துவிட்டாயே ! '' என்று வருத்தப்பட்டார். அதற்கு வடுகநம்பி ' உங்கள் பெருமாளைக் காட்டிலும், எங்கள் பெருமாளுக்கு என்ன குறை? '' என்று அருளிச்செய்தாராம். பெருமாளுடைய வடிவழகை உடையவர் ஸேவித்துக்கொண்டிருக்கும்போது, உடையவருடைய வடிவழகை இவர் ஸேவித்துக்கொண்டிருப்பராம். ஒரு நாள் ' பெரியபெருமாளுடைய திருக்கண்ணழகைப் பாராய் ' என்று உடையவர் அருளிச்செய்ய, '' என்னமுதினைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே ! '' என்று நம்பி அருளிச்செய்தாராம். உடையவரும் ' இப்படியொரு நிஷ்டையா ! ' என்று உகந்து, நம்பியைப் பூர்ணகடாக்ஷம் செய்தருளினாராம். எம்பெருமானார் தாம்

அமுது செய்தருளிய ஶேஷ ப்ரஸாத3ம் ப்ரஸாதி3க்கும்போது, இரண்டு திருக்கைகளாலும் ஏற்றுக்கொண்டு, ப்ரஸாத3ஸ்வீகாரம் பண்ணி, தம் தலையிலே திருக்கைகளைத் துடைத்துக்கொள்வாராம் வடுகநம்பி ; ஒருநாள் இதைக்கண்டு எம்பெருமானார் மிகவும் கோபிக்க, அன்று திருக்கை விளக்கிவிட்டு, மறுநாள் உடையவர் ப4க3வத்ப்ரஸாத3த்தைக் கோயிலிலே ப்ரஸாதி3க்க, அதை அமுது செய்தபின் திருக்கை விளக்கினாராம் வடுகநம்பி, உடையவர் இது கண்டு 'வடுகா! என்செய்தாய்?' என்ன, வடுகநம்பி "நேற்று அருளிச்செய்தபடி செய்தேன்" என்ன, உடையவரும் 'உமக்குத் தோற்றோம்' என்று அருளினாராம்.

ஒருநாள் பெருமாள் திருவீதி எழுந்தருளும்போது, 'வடுகா! பெருமாளை ஸேவிக்கவா" என்று உடையவர் அழைக்க, அப்போது உடையவருக்குப் பால்காய்ச்சிக் கொண்டிருந்த வடுகநம்பி, "உம்முடைய பெருமாளை ஸேவிக்க வந்தால், என்னுடைய பெருமாளுக்குப் பால் பொங்கிப்போமே" என்று அருளினார் என்னும் விஷயம் ஸுப்ரஸித்3த4ம். வைஷ்ணவரல்லாத தம்முடைய உறவினர்கள் சிலர் வந்து இவரகத்திலே தங்கிப்போக, அவர்கள் சென்றவுடன், அகத்தையெல்லாம் சுத்திபண்ணி, அவர்கள் தொட்ட பா4ண்ட3ங்களையும் உடைத்துப்போட்டு, அவர்கள் வந்து இருந்ததற்கு ப்ராயஶ்சித்தமாக முதலியாண்டானகத்தில் புழைக்கடையில் கழித்துக்கிடந்த பா4ண்ட3ங்களை எடுத்துவந்து தம்மகத்தில் உபயோக3ப்படுத்தினார் என்பதும் பிரஸித்3த4ம். உடையவர் ஸ்ரீபாத3 தீர்த்த2ம் தவிர வேறு ஸ்ரீபாத3தீர்த்த2ம் கொள்வதில்லை என்னும் நியதியும் இவருக்கு உண்டு. இத்தகைய ஆசார்யநிஷ்டை2யாலேயே, இவர் ஆழ்வானையும், ஆண்டானையும் 'இருகரையர்' என்று அருளிச்செய்வர் என்பது ஸ்ரீவசநபூ4ஷண ஸூத்ரஸித்3த4ம். அதாவது:– எம்பெருமானாரே ப்ராப்யப்ராபகங்களாயிருக்கும்போது, மது4ரகவியாழ்வாரைப்போலே தேவுமற்றறியாதவராயிருக்கவேண்டியிருக்க, 'ஆற்றில் ஒருகால் சேற்றில் ஒருகால்' என்பதுபோலே இவ்விருவரும் எம்பெருமானையும் பற்றிநிற்பதே! என்று அவர்களைச் சிரித்திருப்பர் என்று கருத்து.

இவ்வண்ணமாக எம்பெருமானாரைத் தவிரத் தேவுமற்றறியாதிருந்த இம்மஹாசார்யர் எம்பெருமானாரது வைப4வபரமான யதிராஜ வைப4வம் ஒன்றையே அருளிச்செய்துள்ளார். அதன் பொழிப்புரை இம்மலரிலும் தரப்பெற்றுள்ளது.

வடுகநம்பி வைப4வம் முற்றிற்று.

# பிள்ளையுறங்காவில்லிதாஸர் வைபவம்

ஜாக₃ருகத₄நுஷ்பாணிம் பாணௌ க₂ட்₃க₃ஸமந்விதம் ।
ராமாநுஜஸ்பர்ஶவேதி₃ம் ராத்₃த₄ாந்தார்த்த₂ ப்ரகாஶகம் ॥
ப₄ாகி₃நேயத்₃வயயுதம் ப₄ாஷ்யகாரப₄ரம்வஹம் ।
ரங்கே₃ஶமங்க₃ளகரம் த₄நுர்த்த₃ாஸமஹம் ப₄ஜே ॥

[உறங்காமலிருப்பவராய், வில்லைக் கையில் ஏந்தியவரும், மற்றொரு கையில் கத்தியோடு கூடியவரும், உடையவருக்கு (இரும்பைப் பொன்னாக்கும்) ஸ்பர்ஶவேதி₃யாயிருப்பவரும் ஸித்தாந்தப்பொருளை (தம் வாழ்விலேயே) வெளிப்படுத்தியவரும், இரு மருமக்களை உடையவரும், ப₄ாஷ்யகாரருடைய மடத்தின் பொறுப்பைச் சுமப்பவரும், திருவரங்கனுக்கு மங்களாஶாஸனம் செய்பவருமான பிள்ளையுறங்காவில்லிதாஸரை ஆஶ்ரயிக்கிறேன்.]

ஒருநாள் நடுப்பகலிலே காவேரி மணலிலே சதுர்த்த₂வர்ணத்தைச் சேர்ந்த த₄நுர்த்த₃ாஸர் என்பவர், பொன்னாச்சியார் எனும் தமது மனைவிக்கு வெயில்படாதபடி குடைபிடித்து அழைத்துச் செல்வதை எம்பெருமானார் கண்டார். 'இவ்வளவு ஈடுபாடு ஏன்?' என்று கேட்ட எம்பெருமானாரிடம் 'அவளுடைய கண்ணழகுக்குத் தோற்று ஈடுபடுகிறேன்' என்றார் த₄நுர்த்த₃ாஸர். 'இதைவிடச் சிறந்த கண்ணழகைக் காட்டுகிறேன் வாரும்' என்று அவரை அழைத்துச் சென்று, பெரியபெருமாளுடைய கண்ணழகைக் காட்டி, அவருக்கும் அவரைக் காட்டித்தந்த தமக்கும் த₄நுர்த்த₃ாஸரை அடிமையாக்கிக் கொண்டார் உடையவர். உறையூரிலே சோழராஜாவின் அரண்மனையில் மல்லர்களுக்குத் தலைவராயிருந்து ஸேவைசெய்து ஸம்பாதி₃த்த பணத்தையெல்லாம் உடையவருடைய மட₂த்துச் செலவுக்கு அளித்துவந்தார் த₄நுர்த்த₃ாஸர். இரவெல்லாம் உறங்காமலிருந்து ராஜஸேவைசெய்து, பகல் முழுதும் உறங்காமல் எம்பெருமானாருடைய மட₂த்திற்கு ஸேவை செய்து, இளையபெருமாளைப்போலே 'உறங்காவில்லி' 'பிள்ளை உறங்காவில்லித₃ாஸர்' என்று புகழ்பெற்றார் இவர். உடையவர் காவேரிக்குத் தீர்த்த₂மாடச் செல்லும்போது அந்தணர் குலத்தலைவரான முதலியாண்டான் கையைப்பிடித்துக்கொண்டு செல்வராம்; தீர்த்த₂மாடி வரும்போது இவருடைய கையைப்பிடித்துக்கொண்டு வருவராம். காவேரியில் தீர்த்த₂மாடுவதால் வரும் பரிஶுத்₃தி₄யைக்காட்டிலும், ப₄ாவஶுத்₃தி₄யுடைய இவருடைய கையைப்பிடித்துக்கொண்டு வருவதால் ஏற்படும் பரிஶுத்₃தி₄ அதி₄கம் என எம்பெருமானார் கருதினார். இரும்பைத் தன் ஸ்பர்ஶத்தாலே பொன்னாக்கும் வேதகப்பொன்னான ஸ்பர்ஶவேதி₃யைப்போலே, தம்முடைய வர்ணாஶ்ரமங்களில் உயர்த்தியால் உண்டா

க்கூடிய அஹங்காரமாகிற அபரிஶுத்₃தி₄ இவருடைய கரஸ்பர்ஶத்தால் நீங்குவதாகத் திருவுள்ளம்பற்றினர் உடையவர். ''யாக₃ாநுயாக₃ உத்தரவீதிகளில் காயாந்நஸ்த₂லஶுத்₃தி₄பண்ணின வ்ருத்₃த₄ சாரம்'' [ஆசார்யஹ்ருத₃யம் 85] என்னுமிடத்தில் யாக₃மாகிற திருவாராத₄னத்திற்கு முன் உறங்காவில்லியின் ஸ்பர்ஶத்தாலே உடையவர் காயஶுத்₃தி₄ பண்ணிக்கொண்ட இச்செய்தி அநுஸந்தி₄க்கப்பட்டுள்ளது. இதனலே ராமாநுஜஸ்பர்ஶவேதி₃ என்று புகழ்பெற்றார் இவ்வுறங்காவில்லி. உடையவர் இவருக்கு அளிக்கும் இப்பெருமையை சிஷ்யர்களில் சிலர் தாழ்வாகப்பேசினர் என்றும், அவர்களைத் தெளிவிக்க ஒரு நாடகத்தை நடத்திக்காட்டினர் ராமாநுஜர் என்றும் கூறுவதுண்டு. அதாவது:— அந்த சிஷ்யர்களின் வஸ்த்ரங்களில் அவர்களறியாமல் ஒரு சிறு பகுதியைக் கிழித்துவிடச் சொன்னர். அவர்கள் அதைப் பார்த்தபின்பு கோபத்தாலே அப்படிக்கிழித்தவர்களை நிந்தி₃த்தனர். அன்றிரவே உறங்காவில்லியின் வீட்டிற்குச் சிலரை அனுப்பி, அவரது மனைவி பொன்னச்சியார் அணிந்துகொண்டிருந்த நகைகளை உறங்கும்போது எடுத்துவரச்சொன்னர். அவர்கள் நகையை எடுத்துக் கொள்ளும்போது விழித்த பொன்னச்சியார், ராமாநுஜ சிஷ்யர்களே நகைகளை எடுத்துக்கொள்கிறார்கள் என்றறிந்து ஒரு பக்கத்து நகைகளை எடுக்கும் வரையில் உறங்குபவள்போலே கிடந்து, அதற்குப் பின் 'மறுபுறம் நகைகளையும் எடுத்துக்கொள்ளட்டும்' என்னும் எண்ணத்துடன் புரண்டுபடுக்கப்புக, அவள் விழித்துக்கொண்டுவிட்டாள் என்றெண்ணி, அந்த ஶிஷ்யர்கள் ஓடிச்சென்று உடையவரிடம் அந்த நகைகளை அளித்தனர். இரவு ராஜஸேவை முடிந்து வந்த உறங்காவில்லி நடந்த செய்தியை அறிந்து, 'ஸ்ரீவைஷ்ணவர்கள் நகையை எடுத்துக்கொள்ளும்போது அவர்களே உன்னைப்புரட்டி மறுபுறமுள்ள நகைகளை எடுத்துக்கொள்ளும்படி அசேதனம்போலேயிராமல், நீ ஸ்வாதந்த்ர்யம் காட்டினதாலன்றோ, அவர்கள் அந்த நகைகளை எடுத்துக்கொள்ளாமல் ஓடிவிட்டார்கள்' என்று அவளை நிந்தி₃த்து, இவளுக்குத் தக்கத₃ண்ட₃னை அளிக்கவேணும் என்று எம்பெருமானரைப் பிரார்த்தி₂த்தார். அபவாத₃ஞ்சொன்ன சீடர்கள் வெள்கிப்போய்த் தலைகுனிந்தனர். அவர்களைத் திருத்துவதற்காகத் தான் ஆடச்செய்த நாடகமே இது என்று தெளிவுபடுத்தி நகைகளைத் திருப்பியளித்தார் உடையவர். நம்பெருமாள் புறப்பாடுகளிலே அவருக்கு ஏதாவது குறைநேர்ந்தால் தன்னை முடித்துக்கொள்வதற்காகக் கத்தியும் கையுமாகக் கூடச்செல்வராம் உறங்காவில்லி. ஆழ்வார்களைப்போன்ற இவருடைய பரிவு இதனல் விளங்குகிறது. வண்டர், சுண்டர் என்னும் இரு மருமக்கள் உறங்காவில்லிக்கு இரு கைகள்போல் உதவிவந்தனர்.

பிள்ளையுறங்காவில்லிதா₃ஸர் வைப₄வம் முற்றிற்று.

## பெண் சிஷ்யர்கள் நிஷ்டை.

1. தேவகிப்பிராட்டியார். திருக்கோட்டியூர் நம்பி தம் குமாரத்தியாரை உடையவர் திருவடிகளிலே ஆஸ்ரயிப்பித்தவளவிலே, உடையவர் அப்பெண்பிள்ளையை ஏகாந்தத்திலே அழைத்தருளித் தம் திருவடிகளிரண்டையும் காட்டி, ''பெண்ணே! இத்தையே தஞ்சமாக நினைத்திரு'' என்று அருளிச்செய்தார். அந்தப் பெண்ணும், ''மேவினேனவன் பொன்னடி மெய்ம்மையே' என்று, தேவரீர் எங்கே எழுந்தருளியிருந்தாலும், அடியேனுக்கு தேவரீருடைய திருவடிகளே தஞ்சம்; தேவரீருக்கு ஆசார்யரான எங்கள் அய்யர் நினைத்திருக்கும்படி கண்டால், தேவரீருக்கு அநந்யார்ஹஶேஷபூதையான அடியேன் நினைத்திருக்கச் சொல்லவேணுமோ?'' என்று சொன்னாளாகப் பிள்ளை அருளிச்செய்வர். திருக்கோட்டியூர் நம்பி தம்முடைய அந்திமதஶையிலே குமாரத்தியாரை அழைத்தருளி, ''பெண்ணே! நம் ப்ரயாணத்தில் நீ நினைத்திருப்பது என்?'' என்ன, ''அய்யரே! எங்களாசார்யரான எம்பெருமானாரோடு உண்டான ஸம்பந்தத்தாலே தேவரீருக்குப் பேறு முற்படப் பெற்றதே என்று நினைத்திருக்கின்றேன்'' என்ன, அவரும், ''வளர்த்ததனால் பயன் பெற்றேன்'' என்று அப்பெண்பிள்ளையை அழைத்தருளி, ஆளவந்தார் ப்ரஸாதலப்தமான விக்ரஹத்தை ஸாதித்து உள்ளிற்கருத்தும் வெளியாம்படி 'எம்பெருமானார் திருவடிகளே ஶரணம்' என்று திருநாட்டுக்கெழுந்தருளினர். இத்தால் எம்பெருமானாரிடத்திலே நிஸ்ஸம்ஶயமாக உத்தாரகத்வத்தை அறுதியிட்டார் என்னுமிடம் ஸித்தமாயிற்றதிறே.

2. பொன்னாச்சியார். 'இவ்வாத்மாவுக்கு ஆசார்யன் ஒருவனோ? பலரோ' என்று அநந்தாழ்வான் முதலானார் எம்பெருமானாரைக்கேட்க, அவரும் 'பொன்னாச்சியாரைக் கேளுங்கள்' என்று அருளிச்செய்ய, அவர்களும் அவளைக்கேட்க, அவரும் 'பெண்பிள்ளையான அடியேனுக்கு என்ன தெரியும்? எம்பெருமானாரே அருளிச்செய்யவேணும்' என்று அருளி, தம் திருக்குழற்கற்றையை உதறி ஒன்றாக முடிந்து, தரையிலே கிடந்த காவிநூலை எடுத்துத் தலையிலே வைத்துக்கொண்டு உள்ளே எழுந்தருளினார் என்றும், அச்செயலின் பொருளை ''அவர் திருக்குழற்கற்றையை உதறினதினால், இவ்வாத்மாவுக்கு ஒவ்வோராகாரத்தில் பார்க்கும் போது பலர் ஆசார்யரென்றும், ஒன்றாக முடிந்ததால் பேறளிக்கும் ஆசார்யன் ஒருவனே என்றும், காவிநூலைத் தலையிலே வைத்துக் கொண்டதாலே காவியுடுத்த நாமே அந்த உத்தாரகனான ஆசார்யன் என்றும் உணர்த்தினார்'' என்று எம்பெருமானார் விளக்கினார்.

சரமோபாயநிர்ணயத்தில் எடுக்கப்பட்டுள்ள இவ்வைதிஹ்யங்கள் தேவகிப்பிராட்டியார், பிள்ளையுறங்காவில்லிதாஸரின் பத்னியான பொன்னாச்சியார் ஆகிய பெண் சிஷ்யர்களின் ஆசார்யநிஷ்டையைக் காட்டுகிறது. த்ரிபுராதேவியார் போன்ற மற்றும் பலரும் உண்டு.

பெண் சிஷ்யர்கள் நிஷ்டை முற்றிற்று.

க்கூடிய அஹங்காரமாகிற அபரிஶுத்₃தி₄ இவருடைய கரஸ்பர்ஶத்தால் நீங்குவதாகத் திருவுள்ளம்பற்றினர் உடையவர். ''யாக₃ாநுயாக₃ உத்தரவீதிகளில் காயாந்நஸ்த₂லஶுத்₃தி₄பண்ணின வ்ருத்₃த₄ாசாரம்'' [ஆசார்யஹ்ருத₃யம் 85] என்னுமிடத்தில் யாக₃மாகிற திருவாராத₄னத்திற்கு முன் உறங்காவில்லியின் ஸ்பர்ஶத்தாலே உடையவர் காயஶுத்₃தி₄ பண்ணிக்கொண்ட இச்செய்தி அநுஸந்தி₄க்கப்பட்டுள்ளது. இதனாலே ராமாநுஜஸ்பர்ஶவேதி₃ என்று புகழ்பெற்றார் இவ்வுறங்காவில்லி. உடையவர் இவருக்கு அளிக்கும் இப்பெருமையை சிஷ்யர்களில் சிலர் தாழ்வாகப்பேசினர் என்றும், அவர்களைத் தெளிவிக்க ஒரு நாடகத்தை நடத்திக்காட்டினார் ராமாநுஜர் என்றும் கூறுவதுண்டு. அதாவது:— அந்த சிஷ்யர்களின் வஸ்த்ரங்களில் அவர்களறியாமல் ஒரு சிறு பகுதியைக் கிழித்துவிடச் சொன்னார். அவர்கள் அதைப் பார்த்தபின்பு கோபத்தாலே அப்படிக்கிழித்தவர்களை நிந்தி₃த்தனர். அன்றிரவே உறங்காவில்லியின் வீட்டிற்குச் சிலரை அனுப்பி, அவரது மனைவி பொன்னாச்சியார் அணிந்துகொண்டிருந்த நகைகளை உறங்கும்போது எடுத்துவரச்சொன்னார். அவர்கள் நகையை எடுத்துக் கொள்ளும்போது விழித்த பொன்னாச்சியார், ராமாநுஜ சிஷ்யர்களே நகைகளை எடுத்துக்கொள்கிறார்கள் என்றறிந்து ஒரு பக்கத்து நகைகளை எடுக்கும் வரையில் உறங்குபவள்போலே கிடந்து, அதற்குப் பின் 'மறுபுறம் நகைகளையும் எடுத்துக்கொள்ளட்டும்' என்னும் எண்ணத்துடன் புரண்டுபடுக்கப்புக, அவள் விழித்துக்கொண்டுவிட்டாள் என்றெண்ணி, அந்த ஶிஷ்யர்கள் ஓடிச்சென்று உடையவரிடம் அந்த நகைகளை அளித்தனர். இரவு ராஜஸேவை முடிந்து வந்த உறங்காவில்லி நடந்த செய்தியை அறிந்து, 'ஸ்ரீவைஷ்ணவர்கள் நகையை எடுத்துக்கொள்ளும்போது அவர்களே உன்னைப்புரட்டி மறுபுறமுள்ள நகைகளை எடுத்துக்கொள்ளும்படி அசேதனம்போலேயிராமல், நீ ஸ்வாதந்த்ர்யம் காட்டினதாலன்றோ, அவர்கள் அந்த நகைகளை எடுத்துக்கொள்ளாமல் ஓடிவிட்டார்கள்' என்று அவளை நிந்தி₃த்து, இவளுக்குத் தக்கத₃ண்ட₃னை அளிக்கவேணும் என்று எம்பெருமானாரைப் பிரார்த்தி₂த்தார். அபவாத₃ஞ்சொன்ன சீடர்கள் வெள்கிப்போய்த் தலைகுனிந்தனர். அவர்களைத் திருத்துவதற்காகத் தான் ஆடச்செய்த நாடகமே இது என்று தெளிவுபடுத்தி நகைகளைத் திருப்பியளித்தார் உடையவர். நம்பெருமாள் புறப்பாடுகளிலே அவருக்கு ஏதாவது குறைநேர்ந்தால் தன்னை முடித்துக்கொள்வதற்காகக் கத்தியும் கையுமாகக் கூடச்செல்வராம் உறங்காவில்லி. ஆழ்வார்களைப்போன்ற இவருடைய பரிவு இதனால் விளங்குகிறது. வண்டர், சுண்டர் என்னும் இரு மருமக்கள் உறங்காவில்லிக்கு இரு கைகள்போல் உதவிவந்தனர்.

பிள்ளையுறங்காவில்லிதா₃ஸர் வைப₄வம் முற்றிற்று.

ஸ்ரீராமானுஜரின் மாமாவான பெரியதிருமலைநம்பி — 'ப்ரணதார்த்திஹரர்' என்னும் திருநாமம் உடையவராய், ஆத்ரேய கோ₃த்ரத்தில் அவதரித்தவரான கிடாம்பியாச்சானுக்கு அத்தையின் கணவர் என்று யதிராஜவைப₄வத்திலிருந்து விளங்குகிறது. பெரிய திருமலைநம்பியின் நியமனத்தின்பேரில் கிடாம்பியாச்சான் எம்பெருமானுரை ஆஶ்ரயித்தார். எம்பெருமானுருடைய சிஷ்யர்களுக்குள்ளே அவருடைய திருமேனியில் மிகவும் பரிவுடையவர் இவரே என்று திருக்கோட்டியூர் நம்பியால் பரீக்ஷைசெய்து கண்டுபிடிக்கப்பெற்று, எம்பெருமானுருக்கு மடைப்பள்ளி கைங்கர்யத்தில் நியமிக்கப்பெற்றவர் இவர். இவருடைய பேரனை "கிடாம்பி அப்புள்ளார்" என்னும் ராமானுஜாசாரியரே ஸ்ரீவேதா₃ந்ததே₃சிகருக்கு மாமாவும் ஆசார்யரும் ஆவர். இப்படி ஆச்சான்மூலம் எம்பெருமானுரோடு தமக்கு ஸம்ப₃ந்த₄முள்ளதை "யதிவரனார் மடைப்பள்ளி வந்தமணம் எங்கள் வார்த்தையில் மன்னியதே" முதலான இடங்களில் ஸ்ரீவேதா₃ந்ததே₃சிகர் குறித்துள்ளார். வடுகநம்பி எம்பெருமானுருக்குப் பாலமுது காய்ச்சும் கைங்கர்யத்தைச் செய்ததுபோலே, கிடாம்பியாச்சான் மடைப்பள்ளி கைங்கர்யத்தைச் செய்துவந்தவர். திருமாலிருஞ்சோலை அழகர் திருமுன்பே "அக₃திம்" [ஸ்தோத்ரரத்னம் 48] [க₃தியற்றவனை] என்னும் ஆளவந்தாருடைய ஶ்லோகத்தை இவர் விண்ணப்பம்செய்ய, "நம்மிராமானுசனை ஆசார்யனாகப்பெற்று வைத்திருந்து 'அக₃திம்' என்று நீ சொல்லலாகாது" என்று அழகர் அருளிச்செய்ததாக ஈட்டில் ஐதிஹ்யம் உள்ளது. ததீ₃யாராத₄நத்தில் தீர்த்த₂ம் பரிமாறும்போது இவர் சரியாகப் பரிமாறுமை கண்டு எம்பெருமானுர் சிக்ஷிக்க "பணிமானம் பிழையாமே அடியேனைப் பணிகொண்ட" [திருவாய் 4-8-2] என்னும் பாசுரத்தை இவர் அநுஸந்தி₄த்தார் என்பது அப்பாசுரத்தின் ஈடு முதலானவற்றில் உள்ளது. இவர் ஸ்ரீப₄ாஷ்யத்தை ஸரஸ்வதியிடம் காண்பித்ததாகவும், திருமலையில் ஒரிடைச்சிக்குப் பரமபத₃மளித்ததாகவும் தனியனில் உள்ளது. இவர் க்₃ரந்த₂ங்கள் அருளிச்செய்ததாகத் தெரியவில்லை. ஆயினும் வேதா₃ந்த ஶாஸ்த்ரப்புலமையினாலே 'வேதா₃ந்தோத₃யநர்' என்று எம்பெருமானுர் இவருக்குப் பட்டமளித்ததாகத் தனியனிலிருந்தும் ஸ்ரீ தே₃ஶிக க்₃ரந்த₂ங்களிலிருந்தும் விளங்குகிறது. ந்யாயமதத்தைச் சேர்ந்தவர்களுக்குத் தலைவராய், 'குஸுமாஞ்ஜலி' எனும் தலைசிறந்த ந்யாயக்₃ரந்தத்தை இயற்றிய உத₃யநரை ஒத்த மேத₄ாவிலாஸத்தை உடைய வேதா₃ந்தி இவர் என்று கருத்து.

கிடாம்பியாச்சான் வைப₄வம் முற்றிற்று.

# திருவரங்கத்தமுதனர் வைபவம்

ஸ்ரீரங்கே₃ மீநஹஸ்தே ச ஜாதம் ரங்க₃ார்யநந்த₃நம் |
ராமாநுஜபத₃ாஸ்கந்த₃ம் ரங்க₃நாத₂கு₃ரும் ப₄ஜே ||

[ஸ்ரீரங்க₃த்தில் பங்குனி ஹஸ்தத்தில் அவதரித்தவராய், அணியரங்கத்தமுதனரின் குமாரராய், எம்பெருமானரின் திருவடியைப் பற்றியவரான திருவரங்கத்தமுதனரை ஆஶ்ரயிக்கிறேன்.]

ஸ்ரீரங்க₃த்தில் "அணியரங்கத்தமுதனர்" என்பவருக்குக் குமாரராக மூங்கில் குடியிலே பங்குனி ஹஸ்தத்தில் அவதரித்தவர் திருவரங்கத்தமுதனர். எம்பெருமானரை ஆஶ்ரயித்து அவருடைய நியமனத்தின்பேரில் கூரத்தாழ்வானிடம் ஸகலார்த்த₂ங்களையும் கேட்டவர் இவர். "ஸ்ரீரங்க₃ம் கோயில் நிர்வாஹம் இவரிடமே இருந்தது; அதைச் சீர்திருத்துவதற்காக எம்பெருமானர், கூரத்தாழ்வானை இவர்செய்யும் திருவத்₄யயனத்தில் நிமந்த்ரண ஸ்வாமியாய் இருக்கச்செய்து, அவர்மூலம் த்ருப்தி சொல்லும்போது ஸ்ரீரங்க₃நிர்வாஹத்தை த₃ானமாகப்பெற்று, திருவரங்கச்செல்வத்தைத் திருத்தினர்" என்பது கோயிலொழுகு முதலான பல பழைய நூல்களில் காணப்படும் வரலாறு. இராமானுச நூற்றந்தாதியை இவர் இயற்றி எம்பெருமானர் திருமுன்பே அரங்கேற்றம் செய்தருளினர்—என்பது "சரமோபாயநிர்ணயம்" முதலான பூர்வாசார்ய க்₃ரந்த₂ங்களில் ப்ரஸித்₃த₄ம். நூற்றெட்டுப் பாசுரங்கள் கொண்டதாய், ஒவ்வொரு பாசுரத்திலும் இராமானுசனின் திருநாமத்தோடு கூடியதான இந்த தி₂வ்யப்ரப₃ந்த₄ம், ப்₃ராஹ்மணர்க்கு நூற்றெட்டு முறை ஜபிக்கவேண்டிய "க₃ாயத்ரீ" மந்த்ரம்போலே, ப்ரபன்னர்க்கு தினந்தோறும் அநுஸந்தி₄க்கத்தக்கது என்னும் கருத்தாலே "ப்ரபன்ன க₃ாயத்ரீ" என்று புகழப்படுகிறது. எம்பெருமானரே திருவுள்ளமுகந்து இதை தி₃வ்யப்ரப₃ந்த₄ங்களோடு சேர்த்தருளினர் என்று யதிராஜ வைப₄வம் முதலான பல நூல்களிலிருந்து விளங்குகிறது.

திருவரங்கத்தமுதனர் வைப₄வம் முற்றிற்று.

# அநந்தாழ்வான் வைபவம்

அகி₂லாத்மகு₃ணாவாஸம் அஜ்ஞாநதிமிராபஹம் ।
ஆஶ்ரிதாநாம் ஸுஶரணம் வந்தே₃ऽநந்தார்யதே₃ஶிகம் ॥

[எல்லா ஆத்மகு₃ணங்கட்கும் இருப்பிடமானவரும், அஞ்ஞான இருளைப் போக்குகின்றவரும், அடியார்கட்கு நல்ல உபாயமான வருமான அநந்தாழ்வான் எனும் ஆசார்யரை வணங்குகிறேன்.]

ஸ்ரீமத்₃ராமாநுஜாசார்ய ஸ்ரீபத₃ாம்போ₄ருஹத்₃வயம் ।
ஸது₃த்தமாங்க₃ஸந்தா₄ர்யம் †அநந்தார்ய கு₃ரும் ப₄ஜே ॥

[ஸ்ரீமத்₃ராமாநுஜாசார்யருடைய திருவடித் தாமரையிணையா யிருப்பவரும், நல்லோர்களின் தலையாலே தாங்கப்படுபவருமான அநந்தாழ்வான் எனும் ஆசார்யரை ஆஶ்ரயிக்கிறேன்.]

யதீந்த்₃ரபாத₃ாம்பு₃ஜசஞ்சரீகம்
ஸ்ரீமத்₃த₃யாபாலத₃யைகபாத்ரம் ।
ஸ்ரீவேங்கடேஶாங்க்₄ரியுக₃ாந்தரங்க₃ம்
நமாம்யநந்தார்யமநந்தக்ருத்வ: ॥

[யதிராஜருடைய திருவடித்தாமரையில் வண்டு போன்றவரும், அருளாளப்பெருமாள் எம்பெருமானாரின் கருணைக்கு ஓர் இலக்காயிருப்பவரும், திருவேங்கடமுடையானுக்குத் திருவடிக் குற்றேவல் செய்பவருமான அநந்தாழ்வானுக்கு அநந்தமான தண்டன் ஸமர்ப்பிக்கிறேன்.]

"புஷ்பமண்டபமான திருமலையில் நித்யவாஸம் செய்து, சிந்துபூமகிழும் திருவேங்கடத்தானுக்குப் புஷ்பகைங்கர்யம் செய்வாருண்டோ?" என்று எம்பெருமானார் ஒருநாள் தம் காலக்ஷேப கோ₃ஷ்டி₂யிலே வினவ. மற்றுள்ளார் அனைவரும் எம்பெருமானாருடைய பிரிவை நினைத்து வாய்பேசாமலிருக்க, 'அடியேன் செல்கிறேன்' என்று பதிலளித்து, "நீரே ஆண் பிள்ளை" என்று எம்பெருமானாரால் பாராட்டப்பெற்றவர் அநந்தன் எனும் பெயருடைய இவ்வாசார்யர். இக்காரணத் தாலேயே இவர் குலத்தவர்கள் இன்றும் "அநந்தாண்பிள்ளை" என்னும் பட்டத்தோடு விளங்குகிறார்கள். எம்பெருமானார் நியமனத்தின்படி, "இராமானுசப்புத்தேரி" என்னும் ஏரியை

† 'அநந்தாக்₂யமஹம் ப₄ஜே' என்றும் பாட₂ம்.

யும், "இராமானுசன்" என்னும் திருநாமத்தில் நந்த₃வனமும் அமைத்துத் திருமலையப்பனுக்குப் புஷ்பகைங்கர்யம் செய்து வந்தவர் இவர். ஏரிகட்ட மண்வெட்டும்போது, க₃ர்ப்ப₄வதி யான அவர் பத்னிக்கு உதவி செய்ய, திருவேங்கடமுடையான் ஒரு சிறுவனாய் வந்து மண் கூடையைச் சுமக்கப் புகுந்தான். அதுகண்டு வெகுண்ட அநந்தாழ்வான். "கைங்கர்ய விக்₄ந காரீ! (கைங்கர்யத்திற்கு இடையூறு செய்பவனே!) கூடையைத் தொடாதே" என்று மண்வெட்டியையெடுத்து அவனை அடிக்கப்புக, திருவேங்கடச் செல்வன் ஓடிச்சென்று கோயிலிலே புகுந்தான் என்பர்கள். ஒருநாள் பூப்பறிக்கும்போது இவரைப் பாம்புகடிக்க, அருகிலிருந்தவர்கள் 'விஷவைத்₃யம் செய்து கொள்ளலாமே' என்று கூற, மறுத்துவிட்டார். திருவேங்கடமுடையான் திருமுன்பே சென்றவுடன், அப்பெருமான் "ஏன் விஷவைத்₃யம் செய்துகொள்ளவில்லை?" என்று கேட்டருள, இவர் "கடியுண்ட பாம்பு (தன் சரீரம்) வலிதாகில், திருக்கோனேரியிலே தீர்த்த₂மாடித் திருவேங்கடமுடையானை ஸேவிக்கிறேன்; கடித்த பாம்பு வலிதாகில், விரஜையிலே தீர்த்த₂மாடி ஸ்ரீ வைகுண்ட₂நாத₂னை ஸேவிக்கிறேன் என்றிருந்தேன்" என்று விண்ணப்பம் செய்தார். ஒருமுறை இவர் கட்டுச்சோறு கட்டிக்கொண்டு திருமலையை விட்டுக் கீழேயிறங்கி அவிழ்த்துப் பார்த்தவுடன், அச்சோறு நிறையச் சிற்றெறும்பாயிருக்க, "'எம்பெருமான் பொன்மலையில் ஏதேனுமாவேனே' என்னும் உறுதியுடைய நித்யமுக்த முமுக்ஷுக்களில் சிலராகவும் இச்சிற்றெறும்புகள் இருக்கலாம். இவர்களை இத்திருமலையை விட்டுப் பிரிக்கக்கூடாது" என்று எண்ணி, அக்கட்டுச்சோற்றைத் திரும்பவும் திருமலையிலே கொண்டுபோய் வைக்கச் செய்தார். எம்பெருமானார் தம் அந்திமத₃ஶையிலே இவரை அருளாளப்பெருமாளெம்பெருமானார் திருவடிகளிலே ஆஶ்ரயிப்பித்தார். இவர் அருளிய 'ஸ்ரீவேங்கடாசல இதிஹாஸமாலா' திருப்பதி தே₃வஸ்த₂ானத்தாரால் அச்சிடப்பட்டுள்ளது. "கோ₃தா₃ சது:ஶ்லோகீ" "ராமாநுஜ சது:ஶ்லோகீ" என்னும் துதிநூல்களும் இவர் அருளிச்செய்தவையாக வழங்குகின்றன.

அநந்தாழ்வான் வைபவ₄ம் முற்றிற்று.

# எங்களாழ்வான் வைபவம்



திருவெள்ளறை-எங்களாழ்வான்; திருவடியில் நடாதூரம்மாள்

ஸ்ரீவிஷ்ணுசித்தபத$_{3}$பங்கஜ ஸங்க$_{3}$மாய
சேதோ மம ஸ்ப்ருஹயதே கிமத: பரேண ।
நோசேந் மமாபி யதிஶேக$_{2}$ரப$_{4}$ாரதீநாம்
ப$_{4}$ாவ: கத$_{2}$ம் ப$_{4}$விதுமர்ஹதி வாக்$_{3}$விதே$_{4}$ய: ॥

[ஸ்ரீவிஷ்ணுசித்தரெனும் எங்களாழ்வானின் திருவடித் தாமரையில் பொருந்துவதற்கு என் நெஞ்சம் ஆசைப்படுகிறது. அத் திருவடி தவிர்ந்த மற்றென்றால் என்ன பயன்? அத்திருவடியை அடியேன் அடைந்திராவிடில் (அதிமந்த₃பு₃த்₃தி₄யுடைய) எனக்குங்கூட யதிராஜரின் ஸ்ரீஸூக்திகளின் கருத்து எப்படி வாக்குக்கு வசப்பட்டிருக்கும்?]

திருவெள்ளறையில் பூர்வசிக₂ ஸ்ரீவைஷ்ணவ ப்₃ராஹ்மண குலத்தில் "ஸ்ரீவிஷ்ணுசித்தர்" என்னும் திருநாமத்துடன் சித்திரையில் ரோகிணியில் அவதரித்தவர் இந்த மஹாசார்யர். கூரத்தாழ்வான் கண் இழந்தபின்பு, மேல்நாட்டிலிருந்து ஸ்ரீரங்க₃த்திற்குத் திரும்பிய யதிராஜர் ஸ்ரீபா₄ஷ்யத்தில், எஞ்சிய பகுதியைக் கூரத்தாழ்வானுக்கு பதிலாக இவரை உசாத் துணையாகக்கொண்டு எழுதுவித்தார் என்றும், அப்படி எழுதும் போது, ஆழ்வானுக்குத் துல்யமாயிருந்த இவருடைய மேத₄ா விலாஸத்தைக்கண்டு "எங்கள் ஆழ்வானே" என்று எம்பெருமானார் அபி₄மானித்தார் என்றும் கர்ணபரம்பரைச் செய்தி கூறும்.

> **"இன்னவாறு திருப்பதிகள் எங்கும்வாழ்வித்து எதிராசன்**
> **தன்னதாக்கித் தரிசனமும் தரணியெங்கும் விளங்குவித்து**
> **முன்னமுரைத்த பாடியத்தின் முற்றமூன்றத் தொருகூறு**
> **தன்னைச்சென்றுண் டாயிரத்தாங் கெழுபத்தேழில் சாற்றினான்"**

என்று ராமாநுஜார்ய தி₃வ்யசரிதையில் எம்பெருமானார் மேல் நாட்டிலிருந்து திரும்பிவந்து ஏழெட்டு வருடங்கள் கழிந்த பின்பே ஸ்ரீபா₄ஷ்யத்தில் மூன்றில் ஒரு பகுதியைப் பூர்த்தி செய்தார் என்று குறித்திருப்பது இக்கர்ணபரம்பரைச் செய்தியை வலியுறுத்துகிறது. ஸ்ரீபா₄ஷ்யத்தின் கடைசிப் பகுதியில் போ₃த₄ாயநவ்ருத்தியிலிருந்து எதையும் மேற்கோளாகக் காட்டாமலிருப்பதும் ஆழ்வான் அப்பகுதியை எழுதவில்லை என்பதை வலியுறுத்துகிறது. ஸ்ரீபா₄ஷ்யம் எழுதிக் கொண்டிருக்கையில் இடையில் க்ருமிகண்ட₂ன் உபத்₃ரவம் ஏற்பட்டதாகையால், பல வருடங்கள் கழிந்தபின்பே அதைப் பூர்த்திசெய்தது குறையாகாது.

74 ஸிம்ஹாஸநாதி₄பதிகளில் ஒருவராய் எம்பெருமானாரால் நியமிக்கப்பெற்ற இவர் ஸ்ரீ விஷ்ணுபுராணத்திற்கு "விஷ்ணு சித்தீயம்"என்னும் வ்யாக்₂யாநத்தையும், ஸித்₃தா₄ந்த ப்ரமேயங்களைச் சுருக்கி "ப்ரமேயஸங்க்₃ரஹம்" என்னும் க்₃ரந்த₂த்தையும், ப்₃ரஹ்மஸூத்ரத்தின் அதி₄கரணங்களின் ஸங்க₃தியை (தொடர்ச்சியை) விளக்கி "ஸங்க₃திமாலா" என்னும் க்₃ரந்த₂த்தையும், க₃த்₃ய வ்யாக்₂யானம் ஒன்றையும் வடமொழியில் அருளிச்செய்துள்ளார். இவற்றில் விஷ்ணுபுராண வ்யாக்₂யாநம் ஒன்றே இப்போது உள்ளது. மற்ற க்₃ரந்த₂ங்களிலிருந்து சில பகுதிகளை ஸ்ரீவேதா₃ந்ததே₃*ஶி*கர் ந்யாயஸித்₃தா₄ஞ்ஜநம், க₃த்₃யபா₄ஷ்யம் முதலான தமது க்₃ரந்த₂ங்களில் எடுத்துக் காட்டியுள்ளார். இவர் மணிப்ரவாளநடையில் அருளிய "ஸாரார்த்த₂ சதுஷ்டயம்" என்னும் ரஹஸ்யம் வார்த்தாமாலையில் ஒரு வார்த்தையாக உள்ளது. அதில் நம்பிள்ளை, பெரிய வாச்சான்பிள்ளை முதலானோர் நிலைநாட்டிய தென்னாசார்ய ஸம்ப்ரதா₃யக் கொள்கைகளையே இவரும் நிலைநாட்டியுள்ளார்.

நடாதூராழ்வானுடைய பேரரான "வாத்ஸ்யவரதா₃சார்யர்" என்னும் நடாதூரம்மாள் இவருடைய சிஷ்யர்களில் முதன்மையானவர். அவர் அருளிய "தத்வஸாரம்" என்னும் க்₃ரந்த₂த்தில் இவர் பெருமையைக் கூறும் "ஸ்ரீவிஷ்ணுசித்த" என்று தொடங்கும் முதல் *ஶ்*லோகமே இவருக்குத் தனியனாய் அமைந்துள்ளது. (இத்தனியன் தலைப்பில் கொடுக்கப் பட்டுள்ளது.)

நடாதூரம்மாள், தமது பிதாமஹரும், ஸ்ரீபா₄ஷ்ய ஸிம்ஹாஸநாதி₄பதிகளில் ஒருவருமான நடாதூராழ்வானிடம் ஸ்ரீபா₄ஷ்ய காலக்ஷேபம் செய்யத் தொடங்கியபோது "அகி₂ல பு₄வந" என்று தொடங்கும் ஸ்ரீபா₄ஷ்ய மங்க₃ள *ஶ்*லோகத்தின் விவரணத்திலேயே "'அகி₂லபு₄வந' என்று சொல்லுவானேன்? 'நிகி₂லபு₄வந' என்றோ, 'ஸகலபு₄வந' என்றோ சொல்லலாகாதோ?" என்று கேள்வி கேட்டார். வ்ருத்₃த₄ரான நடாதூராழ்வான், வாலிபரான தம் பேரனுக்குத் தக்கபடி காலக்ஷேபம் சொல்லுவது தம்மால் இயலாது என்று உணர்ந்து, "தினவுகெடச் சொல்லுவன் திருவெள்ளறைச் சோழியன். நீ திருவெள்ளறைக்குச் சென்று எங்களாழ்வானிடம் ஸ்ரீபா₄ஷ்ய காலக்ஷேபம் செய்துவருவாய்" என்று நியமித்துக் காஞ்சியி

லிருந்து அவரைத் திருவெள்ளறைக்கு அனுப்பினார். திருவெள்ளறைக்கு ஒருநாள் விடியற்காலையில் வந்து சேர்ந்த வாத்ஸ்யவரத₃ாசார்யர், எங்களாழ்வான் திருமாளிகைக் கதவைத் தட்டி அழைத்தார். உள்ளிருந்தபடியே விஷ்ணுசித்தர் "யார்?" என்று வினவினார். "நான்தான்" என்றார் வரத₃ர். "நான் செத்தபிறகு வா" என்று கூறிக் கதவைத் திறக்காமலே அவரைத் திருப்பி அனுப்பிவிட்டார் எங்களாழ்வான். "நான் என்னும் அஹங்காரம் செத்தபிறகு வா" என்று அவ்வாக்கியத்தின் உட்கருத்தை அறியாத வரத₃ர் காஞ்சிக்குச்சென்று பாட்டனாரிடம் இச்செய்தியைத் தெரிவித்தார். "'அடியேன்' என்று சொல்லவேண்டியிருக்க, 'நான்தான்' என்று கூறிய உனது மடமையைச் சுட்டிக்காட்டி, தினவுகெடச் சொல்லி விட்டார் பார்த்தாயா, மறுபடியும் அவரிடம் சென்று 'அடியேன்' என்று ஸ்வரூபத்துக்குப் பொருத்தமாக வார்த்தைசொல்லி, அவரிடம் ப்ரார்த்தி₂த்து ஸ்ரீபா₄ஷ்ய காலக்ஷேபம் கேட்டு வருவாய்" என்று மறுபடியும் அவரைத் திருவெள்ளறைக்கு அனுப்பினார் நடாதூராழ்வான். மறுபடியும் சென்ற வாத்ஸ்ய வரத₃ர் 'அடியேன்' என்று பதில் சொல்லி எங்களாழ்வானுடைய கடாக்ஷத்திற்குப் பாத்திரராகி, ஸ்ரீபா₄ஷ்ய காலக்ஷேபம் சொல்லும்படி அவரைப் ப்ரார்த்தித்தார், "எனக்குப் புத்ரனில்லை, ஒரே பெண்தான் இருக்கிறாள். அவளுக்குப் பிள்ளை பிறந்தால் அவனைக்கொண்டோ, அப்படிப் பிறக்காவிடில் சிஷ்யன் என்கிற முறையில் நீயேயோ எனக்குச் சரம கைங்கர்யம் செய்வதற்கு உனது தாய்தந்தையர் முதலானோரிடம் அநுமதிபெற்று வா" என்று எங்களாழ்வான் மறுபடியும் அவரைக் காஞ்சிக்குத் திருப்பி அனுப்பிவிட்டார். அப்படியே அநுமதிபெற்று மறுபடியும் வந்து திருவெள்ளறையிலேயே அவர் திருவடிகளில் ஶுஶ்ரூஷை செய்துகொண்டு நீண்டநாள் வாழ்ந்து, ஸ்ரீபா₄ஷ்யார்த்த₂ங்கள் அனைத்தையும் கசடறக் கற்றார் வாத்ஸ்ய வரத₃ாசார்யராகிய நடாதூரம்மாள். இப்படி அம்மாளுக்கு ஆசார்யரானமையாலே "அம்மாளாசாரியர்" என்று அழைக்கப்பெற்றார் எங்களாழ்வான். இன்றும் அவர் வம்சத்தில் உதித்தவர்கள் அப்பட்டத்தையிட்டு அழைக்கப் படுகின்றனர்.

எங்களாழ்வான் எம்பெருமானாரைக் காட்டிலும் மிகவும் இளையவராகவே இருக்கவேண்டும். கூரத்தாழ்வான் கண் இழந்து, எம்பெருமானார் திருநாராயணபுரத்திலிருந்து திரும்பி வந்தபின்பு ஆஶ்ரயித்தவராகையாலே, எம்பெருமானாருக்கும் இவருக்கும் சுமார் எண்பது பிராயம் வித்தியாசம் இருக்க வேண்டும். இவர் சுமார் நூறு வயது வாழ்ந்திருந்தார். ஆக கி. பி. பன்னிரண்டாவது நூற்றாண்டில் பெரும்பகுதி வாழ்ந்த மஹாசார்யர் இவர். அதனாலேயே ஈடு முதலான வ்யாக்₂யானங் களிலும் கு₃ருபரம்பராப்ரப₄ாவங்களிலும், நம்பிள்ளை காலம் வரையில் இவர் எழுந்தருளியிருந்ததாக ஐதிஹ்யங்கள் கூறுகின் றன. "ஸகல ஶாஸ்த்ரங்களும் வல்லவர் எங்களாழ்வான்" என்று நம்பிள்ளை அருளியதாக ஆறாயிரப்படி கு₃ருபரம்பரை கூறுகிறது.

எம்பெருமானார் தம் சரமகாலத்தில் இவரைப் பிள்ளான் திருவடிகளிலே ஆஶ்ரயிக்கச் செய்தார் என்று கு₃ருபரம்பரா ப்ரப₄ாவத்தில் அருளியிருப்பதும் இதை வலியுறுத்துகிறது. நஞ்சீயர் திருவாராத₄னப்பெருமாளான ஆயர்தேவு, எங்க ளாழ்வான் கனவில் வந்து "நான் ஜீயர் மகன் ஆயர்தேவு; எனக்கு வெண்ணெ, நாவற்பழம் முதலானவை கொடும்" என்று கேட்டதாகவும், எங்களாழ்வான் நஞ்சீயரிடம் சென்று, "ஜீயரே! உமது மகன் ஆயர்தேவு 'அதைக்கொடு, இதைக் கொடு' என்று கேட்டு என்னைக் குடியிருக்கவொட்டாமல் செய்கிறான்". என்று சொன்னதாகவும், அதைக்கேட்டு நஞ்சீயர், "யாருமறியாதபடி நமது திருவாராதனப்பெருமாளுக்கு 'ஆயர்தேவு' என்று பெயர் வைத்திருக்க, அதை உலகமறியச் செய்வதற்காக எம்பெருமான் இப்படிச் செய்வதே!" என வியந்ததாகவும் ஈட்டில் உள்ளது. இவர் சிலகாலம் ஸ்ரீவில்லி புத்தூருக்கு அருகிலிருந்த கொல்லகொண்டாவில் எழுந்தருளி யிருந்து ஸ்ரீப₄ாஷ்ய காலக்ஷேபம் ஸாதித்து வந்தார் என்று வரலாறு கூறுகிறது.

எங்களாழ்வானுக்குச் சரமத₃ஶையில் செங்கமலநாச்சியார் என்ற பெண்மூலம் அருகிலுள்ள ஆமூரில் பிறந்த தௌ₃ஹித்ர னுக்கு 'வரத₃ாசார்யர்' என்னும் தம் திருநாமத்தையேயிட்டு, ஸ்வீக்ருதபுத்ரராக்கி, அவரைக்கொண்டு நடாதூரம்மாள் சரம கைங்கர்யங்களைக் குறைவற நடத்தியருளினார். அவருக்கு ஸகலார்த்த₂ங்களையும் கற்பித்து வைத்தார். அவரது பரம்பரை இன்றும் தொடர்ந்து வருகிறது.

எங்களாழ்வான் வைப₄வம் முற்றிற்று.

# நடாதூரம்மாள் — ஸுதர்சன பட்டர் வைபவம்



## நடாதூராழ்வான் தனியன்

யஸ்மிந் பத₃ம் யதிவரஸ்ய முக₂ாத் ப்ரணேதுர்
நிஷ்க்ராமதே₃வ நித₃தே₄ நிக₃மாந்தப₄ாஷ்யம் ।
தஸ்யைவ தம் ப₄க₃வத: ப்ரியப₄ாகி₃நேயம்
வந்தே₃ கு₃ரும் வரத₃விஷ்ணுபத₃ாபி₄த₄ாநம் ॥

[ஸ்ரீப₄ாஷ்யகாரரான யதிராஜரின் திருமுகத்தினின்றும் வெளிவரும் போதே, ஸ்ரீப₄ாஷ்யமானது எவரிடம் அடியிட்டுத் தங்கிற்றோ, அந்த ப₄க₃வத்₃ ப₄ாஷ்யகாரருக்கு இனிய மருமகனாராக எவர் இருந்தாரோ, அத்தகைய வரதவிஷ்ணுவெனும் திருநாமமுடைய ஆசார்யரை (நடாதூராழ்வானை) வணங்குகிறேன்.]

ஜ்ஞாநோத்தமோத்₃த₄திநிராகரணப்ரதுஷ்யத்₃
ராமாநுஜார்யகருணாபரிணாஹபாத்ரம் ।
வத்ஸாந்வவாயதிலகம் வஸதிம் கு₃ணாநாம்
வந்த₃ாமஹே வரத₃விஷ்ணுகு₃ரும் வரேண்யம் ॥

[ஞானத்தில் சிறந்தவராயிருந்தும் க₃ர்வத்தை விட்டொழித்தமையினால் உகந்தருளிய எம்பெருமானாருடைய கருணைவெள்ளத்திற்குப் பாத்திரமாயிருந்தவராய், ஸ்ரீவத்ஸகுலத்திற்குத் திலகம் போன்றவராய், கு₃ணங்களுக்குக் கொள்கலமானவரான வரத₃விஷ்ணுவெனும் சிறந்த ஆசார்யரை வணங்குகிறோம்.]

## நடாதூராழ்வான் பேரரான நடாதூரம்மாள் தனியன்

வந்தே₃ऽஹம் வரத₃ார்யம் தம் வத்ஸாபி₄ஜநபூ₄ஷணம் ।
ப₄ாஷ்யாம்ருதப்ரத₃ாநாத்₃ய: ஸஞ்ஜீவயதி மாமபி ॥

[ஶ்ருதப்ரகாஶிகைத் தொடக்கம்]

[ஸ்ரீப₄ாஷ்யமாகிய அமுதத்தை அளிப்பதன்மூலம், (ஆத்மநாஶமடைந்துகிடந்த) என்னையும் எவர் உயிர்ப்பித்தருளினரோ, அத்தகைய பெருமையை உடைய ஸ்ரீவத்ஸகுலாப₄ரணமான வரத₃ாசார்யரெனும் நடாதூரம்மாளை வணங்குகிறேன்.]

## ஸுதர்ஶன ப₄ட்டர் தனியன்

யதீந்த்₃ரக்ருதப₄ாஷ்யார்த்த₂ா யத்₃வ்யாக்₂யாநேந த₃ர்ஶிதா: ।
வரம் ஸுத₃ர்ஶநார்யம் தம் வந்தே₃ கூரகுலாதி₃பம் ॥

[யதிராஜரால் இயற்றப்பெற்ற ஸ்ரீபாஷ்யத்தின் பொருள்கள் எவருடைய ஶ்ருதப்ரகாஶிகா வ்யாக்₂யானத்தினாலே காட்டப்பட்டனவோ, அத்தகைய பெருமைபெற்றவரும், கூரத்தாழ்வான் குலத்திற்குத் தலைவரும் மிகச் சிறந்தவருமான ஸுத₃ர்ஶன ப₄ட்டரை வணங்குகிறேன்.]

எங்களாழ்வான் காலத்திற்குப் பிறகு, நடாதூரம்மாள் காஞ்சீபுரத்தில் இருந்துகொண்டு, பலருக்கு ஸ்ரீபாஷ்ய காலக்ஷேபம் ஸாதித்து வந்தார். இவரிடம் ஸ்ரீபாஷ்ய காலக்ஷேபம் கேட்டவர்களில் ஶ்ருதப்ரகாஶிகாப₄ட்டர் என்று ப்ரஸித்₃த₄ரான ஸுத₃ர்ஶந ப₄ட்டர் முக்கியமானவர். இவர் ஸ்ரீபராஶரப₄ட்டருடைய திருத்தம்பியாரான சீராமப்பிள்ளை என்னும் வேத₃வ்யாஸ ப₄ட்டருடைய பேரனாவார். இவர் காஞ்சிக்குச் சென்று அங்கேயே பல வருஷங்கள் வாழ்ந்து நடாதூரம்மாளிடம் பல முறை ஸ்ரீபாஷ்ய காலக்ஷேபம் கேட்டவர். நடாதூரம்மாள் ஸுத₃ர்ஶநப₄ட்டர் கேட்க எழுந்தருளினாலல்லது காலக்ஷேபத்தைத் தொடங்குவதில்லை. இதைக் கண்ட நடாதூரம்மாளின் மற்ற சிஷ்யர்கள் ''ப₄ட்டர்வம்ஶ்ஸ்த₂ராகையால் அம்மாள் இவருக்கு இந்தச் சலுகை அளிக்கிறார்'' என்று தங்களுக்குள் பேசிக் கொண்டனர். இதைக் கேள்விப்பட்ட அம்மாள், ப₄ட்டரின் வைப₄வத்தை அவர்களுக்கு விளக்கவேண்டும் என்னும் திருவுள்ளத்தாலே, அன்று காலக்ஷேபத்தின்போது ஓரிடத்திற்கு ''முந்தின உருக்களில் என்ன பொருள் சொல்லியிருக்கிறேன் என்று கூறுங்கள்'' என்று மற்ற சிஷ்யர்களில் ஒவ்வொருவரையும் கேட்டார். அவர்கள் நினைவு இல்லாமல் விழித்தனர். கடைசியாக ஸுத₃ர்சனப₄ட்டரையும் கேட்டார். அவர் அம்மாள் முந்தின உரு ஒவ்வொன்றிலும் ஸாதித்த அர்த்தங்களை ஒரு பத₃ம் கூட மாற்றாமல் அப்படியே விண்ணப்பித்தார். ப₄ட்டருடைய மேத₄ா விலாஸத்தையும், ஞாபக ஶக்தியையும் கண்டு மிக வியந்து ''அவருக்கு அம்மாள் அளித்து வந்த கௌரவம் நியாயமானதே'' என்று உணர்ந்தனர் மற்ற சிஷ்யர்கள். இத்தகைய பெருமையையுடையவராயிருந்தபடியாலே ஸ்ரீபாஷ்யத்திற்கு ''ஶ்ருதப்ரகாஶிகை'' ''ஶ்ருத ப்ரதீ₃பிகை'' என்று அத்₃பு₄தமான இரண்டு வ்யாக்₂யாநங்களை அருளிச்செய்தார் ஸுத₃ர்ஶநபட்டர். ''எம்பெருமானாரிடமிருந்து எங்களாழ்வான் கேட்டு, அவரிடமிருந்து நடாதூரம்மாள் கேட்டு, அவரிடமிருந்து

அடியேன் கேட்டதையே வெளிப்படுத்துகிறேன்,'' என்னும் பொருள் த்4வனிக்கும்படி ''ஶ்ருதப்ரகாஶிகை'' ''ஶ்ருதப்ரதீ3பிகை'' என்று தம் க்3ரந்2த2ங்களுக்குப் பெயரிட்டது குறிக்கொள்ளத்தக்கது. எம்பெருமானாருடைய வேதா3ர்த்த2 ஸங்க்3ரஹத்திற்கும், ஶரணாக3தி க3த்3யத்திற்கும் இவர் வ்யாக்2யானங்கள் அருளியுள்ளார். ஸுபா3லோபனிஷத்துக்கு பா4ஷ்யமும் அருளியுள்ளார். நம்பிள்ளை, பெரியவாச்சான்பிள்ளை, வடக்குத் திருவீதிப்பிள்ளை ஆகிய மூவரும் நாலாயிர தி3வ்யப்ரப3ந்த4ங்களுக்கு வ்யாக்2யாநங்கள் செய்து அவற்றை எவரும் கலக்க முடியாதபடி அரண் செய்தது போலே, இந்த மஹாசார்யர் ஸ்ரீபா4ஷ்யம் முதலான க்3ரந்த2ங்களுக்கு வ்யாக்2யாநம் செய்து, அவற்றை எவரும் கலக்க முடியாதபடி அரண் செய்தார். ஸ்ரீகாஞ்சீ வரத3ராஜப் பெருமாளுக்குக் கைபொறுக்கும்படியாக ஸுகோ2ஷ்ணமாகப் பாலமுது காய்ச்சி அளித்து வந்த வாத்ஸ்ய வரதா3சார்யரை அப்பெருமாள் தன்னுடைய அம்மாளாக (தாயாக) அபி4மானித்தமையாலே அவருக்கு நடாதூரம்மாள் என்று திருநாமம் ஏற்பட்டது. அம்மாள் அருளிச்செய்த க்3ரந்த2ங்களில் 'தத்வஸாரம்' தலையானது. ஸ்ரீபா4ஷ்யத்தின் அர்த்த2ங்களை ஶ்லோகங்களாக வடித்துக் கொடுப்பது. இதிலும், ஶ்ருதப்ரகாஶிகையிலும் (கார்யாதி4கரணத்தில்) ஜீவனுக்கு ப்ரத2மப்ரவ்ருத்தியில் நிலைநாட்டப்பட்டுள்ள ஸ்வாதந்த்ர்யம் தென்னாசார்ய ஸம்ப்ரதா3யத்தின் உயிர்நாடியான கொள்கைகளுக்கு அடிப்படையாய் அமைந்தது. 'ப்ரபன்னபாரிஜாதம்' என்னும் விரிவான நூல் இவர் செய்ததாக அச்சிடப்பட்டிருந்த போதிலும், மாமுனிகள் வரையிலுள்ள பூர்வாசார்யர்களால் தத்வஸாரம் போலே கையாளப்படாமையாலே இவர் செய்ததன்று என விளங்குகிறது.

ப்ரயாணகாலே சதுரஸ்ஸ்வஶிஷ்யாந்
பதா3ந்திகஸ்தா2ந் வரதோ3 ஹி வீக்ஷ்ய |
ப4க்திப்ரபத்தீ யதி3 து3ஷ்கரே வ:
ராமாநுஜார்யம் நமதேத்யவாதீ3த் ||

[தன் சரமகாலத்தில் தன் திருவடியருகிலிருந்த நாலு ஶிஷ்யர்களைப் பார்த்து நடாதூரம்மாள் 'ப4க்தி ப்ரபத்திகள் உங்களுக்கு செயற்கரியவையாகில் எம்பெருமானாரை ஶரணமாகக் கொள்ளுங்கள்' என்று உபதே3ஶித்தார்.] என்று சரமோபாய நிர்ணயத்தில் எடுக்கப்பட்ட ஶ்லோகத்தின்படி அந்திமகாலத்தில் இவர் தம் சிஷ்யர்களுக்குச் செய்த உபதே3ஶம் ஸ்ரீவைஷ்ணவர்கள் அனைவருக்கும் செய்த உபதே3ஶமாகக் கொள்ளத்தக்கது.

நடாதூரம்மாள் — ஸுத3ர்சன பட்டர் வைப4வம் முற்றிற்று.



திருத்தண்கா (தூப்புல்) ஸ்ரீவேத₃ாந்ததே₃ஶிகர்

ஸ்ரீமாந் வேங்கடநாத₂ார்ய: கவிதார்க்கிககேஸரீ।
வேத₃ாந்தாசார்யவர்யோ மே ஸந்நித₄த்தாம் ஸத₃ா ஹ்ருதி₃ ||

[(எதிரிடும்) கவிகளுக்கும், தார்க்கிகர்களுக்கும் சிங்கம் போன்றவராய், (ஜ்ஞாநம், ப₄க்தி, வைராக்₃யம் முதலான) செல்வங்கள் நிறைந்தவராய், 'வேங்கடநாதன்' என்னும் திருநாமமுடையவரான ஸ்ரீவேத₃ாந்ததே₃ஶிகர் என் நெஞ்சில் எப்போதும் வாழ்வாராக.]

நடாதூரம்மாளுடைய ஶிஷ்யர்களில், கிடாம்பியாச்சானுடைய பேரரான கிடாம்பி அப்புள்ளாரும் ஒருவர். "அப்புள்" [திருவிருத்தம் 3] எனப்பட்ட க₃ருட₃னை ஒத்தவர் என்று

பொருள்தருகிறது இப்பட்டப்பெயர். இவருடைய மற்ெருரு பட்டப் பெயர் "வாதி₃ஹம்ஸாம்பு₃வாஹர்" [எதிர்ப்பவர்களாகிற ஹம்ஸங்களை மேக₄ம்போலே தோன்றி அடக்குபவர்.] என்பது. தாய் தகப்பனர் இட்டபெயர் "ராமானுஜர்" என்பது. இவருடைய மருமகனும் சிஷ்யருமாய் இருந்தவரே உலகம் நிறைந்த புகழுடைய வரான ஸ்ரீவேதா₃ந்ததே₃ஶிகர். தே₃ஶிகன் இளம் வயதினராயிருக்கும் போது, தமது மாதுலருடன் நடாதூரம்மாளுடைய காலக்ஷேப கோ₃ஷ்டி₂க்குச் சென்றபோது, அம்மாள் "இவன் விஶிஷ்டாத்₃வைத ஸ்ரீவைஷ்ணவ ஸித்₃த₄ாந்தத்தை ப்ரதிபக்ஷ நிரஸன பூர்வகமாக நிலைநாட்டப்போகிறுன்" என்று தம்மை ஆசீர்வதித்ததாக தே₃ஶிகனே தம் க்₂ரந்த₂ங்களில் அருளிச்செய்திருக்கிறுர். அந்த ஆசீர்வாத₃த்தின் படியே பல க்₃ரந்த₂ங்களை அருளிச்செய்து, ப்ரதிபக்ஷிகளை வெற்றி கொண்டு, விஶிஷ்டாத்₃வைத ஸ்ரீ வைஷ்ணவ ஸித்₃த₄ாந்தத்தை நிலைநாட்டியவர் இம்மஹாசார்யர். கிடாம்பியப்புள்ளார் அருளிய தாக "ந்யாயகுலிஶம்" என்னும் ஒரே க்₃ரந்த₂மே காணக்கிடைக் கிறது. ஸ்ரீவேதா₃ந்த தே₃சிகரோவெனில் தென்மொழி, வடமொழி, மணிப்ரவாள நடைகளில் சுமார் நூறு க்₃ரந்த₂ங்கள் அருளிச்செய் துள்ளார். அவற்றில்—கீ₃தாபா₄ஷ்யத்திற்கு வ்யாக்₂யாநமான "தாத்பர்யசந்த்₃ரிகை", ஸ்ரீப₄ாஷ்யத்தின் ஒரு பகுதிக்கு வ்யாக்₂யாந மான "தத்வடீகை", நம் த₃ர்ஶநத்தின் தத்வங்களை ஆராயும் "ந்யாயஸித்₃த₄ாஞ்ஜநம்", அத்₃வைதத்தைக் க₂ண்டி₃க்கும் "ஶத தூ₃ஷணி", ஸ்ரீப₄ாஷ்யத்தின் அதி₄கரணர்த்த₂ங்களை ஸ்ரக்₃த₄ரா வ்ருத்தத்தில் விளக்கும் "அதி₄கரணஸாராவளி", தத்வங்களை ஸ்ரக்₃த₄ராவ்ருத்தத்தில் விளக்கும் "தத்வமுக்தாகலாபம்", அதன் வ்யாக்₂யானமான "ஸர்வார்த்த₂ஸித்₃தி₄", ஸ்தோத்ர சது:ஶ்லோகி களுக்கும், க₃த்₃யத்ரயத்திற்கும் ப₄ாஷ்யங்கள் முதலான வடமொழி ஶாஸ்த்ர க்₃ரந்த₂ங்களும், ஸங்கல்ப ஸூர்யோத₃ய நாடகம், த₃யா ஶதகம், பாது₃காஸஹஸ்ரம், யாத₃வாப்₄யுத₃யம், ஹம்ஸஸந்தே₃ஶம், முதலான காவியங்களும், ரஹஸ்யத்ரயஸாரம், ஸம்ப்ரதா₃ய பரி ஶுத்₃தி₄, அப₄யப்ரதா₃நஸாரம், பரமதப₄ங்க₃ம், அமலனுதிபிரான் வ்யாக்₂யாநமான முநிவாஹநபோ₄க₃ம் முதலான மணிப்ரவாள ரஹஸ்ய நூல்களும், ஆஹாரநியமம் முதலான தமிழ்க்கவிதை நூல் களும், த₃ஶாவதார ஸ்தோத்ரம், கோ₃தா₃ஸ்துதி, ஸ்ரீஸ்துதி, யதிராஜ ஸப்ததி முதலான ஸ்தோத்ரங்களும், திருவாய்மொழியின் அர்த்த₂த்தை விளக்கும் த்₃ரமிடோ₃பநிஷத் தாத்பர்ய ரத்நாவளி, த்₃ரமிடோபநிஷத்ஸாரம் என்னும் ஸம்ஸ்க்ருத பத்₃யக்₃ரந்த₂ங்களும் முக்கியமானவை.

காஞ்சியில் திருத்தண்காவில், விஸ்வாமித்ர கோ₃த்ரத்தில் திருவேங்கடமுடையானின் திருமணியின் அம்ஸமாக, அநந்தஸூரிக்கும் தோதாரம்பைக்கும் குமாரராய், சுமார் எழுநூறு வருஷங்களுக்குமுன் ஒரு புரட்டாசித்திருவோணத்தில்அவதரித்த இவர்—திருவேங்கடமுடையான் திருநக்ஷத்திரத்தன்று அவதரித்தமையால் 'வேங்கடநாத₂ன்' என்று தாய்தந்தையரால் திருநாமமிடப்பெற்றார். சுமார் நூறு வருஷங்கள் இவ்வுலகில் வாழ்ந்த இவர் ஸ்ரீரங்க₃நாத₂னால் 'வேத₃ாந்தாசார்யர்' என்னும் விருதும், ஸ்ரீரங்க₃நாய்ச்சியாரால் 'கவிதார்க்கிக கேஸரீ, ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரர்' என்னும் விருதுகளும் பெற்றவர். வரத₃ாசார்யர் என்னும் குமாரரும், ப்₃ரஹ்மதந்த்ர ஸ்வதந்த்ரஜீயரும் இவரது சிஷ்யர்கள். இம்மஹாசார்யர் ஹயக்₃ரீவனை உபாஸித்துப்பெற்ற தமது மேத₄ாவிலாஸத்தாலே எம்பெருமானாருக்குப் பிற்பட்ட ஆசார்யர்களோடு பல விஷயங்களில் கருத்து வேற்றுமைகளை ந்யாயஸித்₃த₄ாஞ்ஜநம், ஸ்தோத்ரசது:ஶ்லோகீ ப₄ாஷ்யம், ரஹஸ்யத்ரயஸாரம் முதலான தமது க்₃ரந்த₂ங்களில் தெரிவித்துள்ளார். இக்கருத்துக்களை அடிப்படையாகக்கொண்டு தே₃ஶிகஸம்ப்ரத₃ாயம் வளர்ந்துள்ளது. இவர் காலத்திற்குப்பின் விஶிஷ்டாத்₃வைத ஸ்ரீவைஷ்ணவ ஸித்₃த₄ாந்தம் தென்னாசார்ய ஸம்ப்ரத₃ாயம் (தென்கலை), தே₃ஶிகஸம்ப்ரதாயம் (வடகலை) என்று இரண்டாகப் பிரிவுபட்டபோதிலும், ஶரீரஶரீரி ப₄ாவம், விஷ்ணு பரத்வம் என்னும் ப்ரத₄ாந ப்ரதிதந்த்ரங்களில் (முக்கியக்கொள்கைகளில்) இரு ஸம்ப்ரத₃ாயங்களிடையேயும் கருத்து வேற்றுமை இல்லை என்பது குறிக்கொள்ளத்தக்கது.

எம்பெருமானார் காலத்திற்குப் பின் சிற்சில விஷயங்களில் பூர்வாசார்யர்களிடையே கருத்து வேற்றுமைகள் ஏற்பட்டன. ஸ்ரீதே₃ஶிகர் காலத்தில் அவை வளர்ந்தன. ஆனால் தென்கலை, வடகலை என்னும் வகுப்பு பே₄த₃ம் அக்காலத்தில் ஏற்படவில்லை. ப்ரத₄ாந ப்ரதிதந்த்ரமாயில்லாத பல விஷயங்களில் கருத்து வேற்றுமைகளே விளைந்தன. கூரத்தாழ்வான், எம்பார் தொடக்கமாக மாமுனிகள் ஈறாக உள்ள ஆசார்யபரம்பரை இவ்விஷயங்களில் ஒரு வித₄மான நிர்வாஹத்தைச் செய்தார்கள். ஸ்ரீவேத₃ாந்ததே₃ஶிகர் மற்றொரு வித₄மான நிர்வாஹத்தைச் செய்தார். பிற்காலத்தில் கூரத்தாழ்வான் தொடக்கமாக, மாமுனிகள் ஈறாக உள்ள ஆசார்யர்களின் திருவுள்ளக் கருத்தைப் பின்பற்றியவர்கள் தென்னாசார்ய ஸம்ப்ரத₃ாயஸ்த₂ர்கள் என்றும், ஸ்ரீவேத₃ாந்ததே₃சிகருடைய திருவுள்ளக் கருத்தைப் பின்பற்றியவர்கள் தே₃சிக ஸம்ப்ரத₃ாயஸ்த₂ர்கள் என்றும்

வழங்கப்பட்டனர். காலம் செல்லச்செல்ல, இவ்விரு ஸம்ப்ரதா₃ய ஸ்த₃ர்களிடையே அனுஷ்டா₂ந பே₄த₃ங்களும் வளர்ந்து, சுமார் முந்நூறு வருஷங்களுக்குள் புண்ட்₃ர பே₄த₃மும் ஏற்பட்டு, கோயில் கள் விஷயமாக ஏராளமான வழக்குகள் நடைபெறுவதற்கு இட மாயிற்று சுமார் 300 வருஷங்களுக்கு முற்பட்ட எந்த நூலிலும் ஸ்ரீவைஷ்ணவர்களிடையே புண்ட்₃ரபே₄த₃ம் இருந்ததாகக் காணப் படவில்லையாகையால், இந்த பே₄த₃ம் சுமார் 300 வருஷங்களுக்குள் ஏற்பட்டதேயாக வேண்டும். தென்னாட்டிலுள்ள கோயில்களின் நிலை, முந்நூறு வருஷங்களுக்குள் எழுந்த வழக்குகளின் தீர்ப்புகள், ஆசார்யபுருஷர்கள் அரையர்கள் முதலான கோயில் ஸம்ப₃ந்த₄ம் உள்ளவர்களின் நிலை, இவை எல்லாவற்றுக்கும் மேலே. ஆழ்வார் கள் காலத்திலிருந்து தென்னாட்டு வைணவத்தை வளர்த்து வருகிற வர்களும், பூர்வாசார்யர்கள் காலத்திலும், அதற்குப் பிற்பட்ட காலத்திலும் கோயில் கைங்கர்யத்தையே தங்கள் உயிர்நாடியாகக் கொண்டு வைணவத்தை வளர்த்துவருகிறவர்களுமான பூர்வஶிக₂ ஸ்ரீவைஷ்ணவ ப்₃ராஹ்மணர்களின் ஏகரீதியானநிலை முதலியவற்றை நடுநிலைநின்று ஆராய்பவர்களுக்கு எந்தப் புண்ட்₄ரம் ப்ராசீநமானது என்றும், எந்த ஸம்ப்ரதா₃யம் பெரும்பாலான ஆசார்யர்களால் ஆத₃ரிக்கப்பட்டது என்றும் வெளிப்படையாக விளங்கும். ஆனல், இன்று தென்கலை வடகலை வகுப்பு பே₄த₃ங்களும் கருத்து வேற்றுமை களும் ஒன்ருக்க முடியாதபடி பிரிந்து நிற்கின்றன. இந்நிலையில், அவரவர் ஸம்ப்ரதா₃யப்படி அவரவர் முன்னோர்கள் அனுஷ்டானத் தைப் பின்பற்றிக்கொண்டு, பரஸ்பர சகிப்புத்தன்மையுடன் கோயில் சண்டைகளையும் ஸம்ப்ரதா₃யக்கொள்கைச் சண்டைகளையும் இனி யாவது வளர்க்காமல், வேகமாக மறைந்துவரும் விஷ்ணுபரத்வ ஜ்ஞாநத்தையும், அதற்கு அநுகு₃ணமான மறந்தும் புறம்தொழாமை யையும் தத்தம் ஸம்ப்ரதா₃ய மக்களிடையே பரப்புவது ஒன்றே வைணவமும், அதற்கு இருகண்கள்போல் அமைந்துள்ள இரு ஸம்ப்ரதா₃யங்களும் வளர்வதற்கு வழியாகும். 'வடகலைத் திருமண் காப்பையிட்டுக்கொண்டு, விஷ்ணுவிற்கும் வைணவத்திற்கும், பூர்வா சார்யர்களுக்கும் த்₃ரோஹம் செய்யும் புல்லியர்களைக் காட்டிலும், வைஷ்ணவர்களாகத் திகழும் தென்கலையினர் சிறந்தவர்கள்' என்னும் மனப்பான்மை வடகலையினருக்கும், 'தென்கலைத் திருமண்காப்பை யிட்டுக்கொண்டு தே₃வதாந்தரபரர்களாகத் திரியும் அற்பர்களைக் காட்டிலும், பரமைகாந்திகளாக வாழும் வடகலையினர் சிறந்தவர்கள்' என்னும் மனப்பான்மை தென்கலையினருக்கும் ஏற்படவேண்டும். இந்நல்லறிவை எம்பெருமான் அனைவர்க்கும் அளிப்பானாக.

ஸ்ரீவேதா₃ந்ததே₃சிகர் வைப₄வம் முற்றிற்று.

# தென்னாசார்ய ஸம்ப்ரதாயமும் தேசிக ஸம்ப்ரதாயமும்

*[12—5—78 முதலியாண்டான் திருநக்ஷத்திரத்தன்று ஸ்ரீரங்கம் உடையவர் ஸந்நிதி₄யில், தாமான திருமேனியோடு எழுந்தருளியிருக்கும் உடையவர் திருமுன்பே 'ஸுத₃ர்சனம்' ஆசிரியர் செய்த உபந்யாஸத்தின் விவரணம்]*

1. இதுவரை ஆழ்வார்கள் வைப₄வமும், நாத₂முனிகள் தொடக்கமாக எம்பெருமானர் ஈருகவுள்ள ஆசார்யர்கள் வைப₄வமும், எம்பெருமானருடைய முக்₂ய *ஶி*ஷ்யர்கள் வைப₄வமும், நடாதூரம்மாள் தொடங்கி ஸ்ரீதே₃*ஶி*கன் வரையிலுள்ள ஆசார்யர்கள் பெருமையும் சுருக்கமாக விளக்கப்பட்டது. இனி, பட்டர் தொடக்கமாக மாமுனிகளீருகவுள்ள ஆசார்யர்களின் வைப₄வம் விளக்கப்படவிருக்கிறது. இடையே ஸ்ரீ தே*ஶி*கனுக்கும், மற்ற ஆசார்யர்களுக்கும் ஏற்பட்ட கருத்துவேற்றுமைகள் காரணமாக எழுந்துள்ள இரு ஸம்ப்ரத₃ாயக்கொள்கைகளை விளக்கவேண்டிய அவ*ஶ்*யம் ஏற்பட்டுள்ளது. இவ்வாசார்யர்களில், பிள்ளான், நஞ்சீயர், பெரியவாச்சான்பிள்ளை, வடக்குத்திருவீதிப்பிள்ளை என்னும் தி₂வ்யப்ரப₃ந்த₄ வ்யாக்₂யாதாக்கள் தே₃*ஶி*கனுக்கு முன்பிருந்தவர்கள். இவர்களும், இப்போதுமிருக்கும் பல தென்மொழி வடமொழி மணிப்ரவாளநூல்கள் எழுதியவர்களான கூரத்தாழ்வான், ஸ்ரீபரா*ஶ*ரப₄ட்டர், அருளாளப் பெருமாளெம்பெருமானர், எங்களாழ்வான், நடாதூரம்மாள், *ஶ்*ருதப்ரகா*ஶி*காபட்டர், பிள்ளைலோகாசார்யர், நாயனராச்சான் பிள்ளை, அழகியமணவாளப்பெருமாள்நாயனர் என்னும் ஆசார்யர்களும் தமது நூல்களில் வி*ஶி*ஷ்டாத்₃வைத ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரத₃ாய தத்துவங்களைப் பற்றியும், ஹிதத்தைப் பற்றியும், புருஷார்த்த₂த்தைப் பற்றியும் விளக்கியிருக்கிறார்கள். அவர்களுடைய கொள்கைகளில் பலவற்றோடு அபி₄ப்ராய பே₄த₃த்தை ந்யாயஸித்₃த₄ாஞ்ஜனம், ஸ்தோத்ர சது*ஶ்*லோகீ பா₄ஷ்யம், ரஹஸ்யத்ரயஸாரம் முதலான தமது க்₃ரந்த₂ங்களில் தெளிவாகக் காட்டியிருக்கிறார் ஸ்ரீ வேத₃ாந்ததே₃*ஶி*கர். இக்

கொள்கைகளில் தே₃ஶிகனுடைய திருவுள்ளத்தைப் பின்பற்றிய வர்கள் தே₃ஶிக ஸம்ப்ரத₃ாயஸ்த₂ர்கள் என்றும், மற்ற ஆசார்யர்களின் கொள்கைகளைப் பின்பற்றியவர்கள் தென்னு சார்ய ஸம்ப்ரத₃ாயஸ்த₂ர்கள் என்றும் பிற்காலத்தில் வழங்கப் பட்டார்கள். பூர்வாசார்யர்களுடைய க்₂ரந்த₂ங்களிலும், பதி னாரும் நூற்றாண்டு வரையிலுள்ள மற்ற நூல்களிலும் ஸ்ரீ வைஷ்ணவர்களிடையே புண்ட்₃ரபே₄த₃ம் இருந்ததாக ஒரு சிறு குறிப்பும் காணப்படவில்லையாதலால், இன்று ஸ்ரீவைஷ்ணவர்களிடையே காணப்படும் தென்கலை வடகலை புண்ட்₃ரபே₄த₃ம் சுமார் முந்நூறு வருஷங்களுக்குள் ஏற்பட்டதாகவே இருக்கவேண்டும். இதில் எந்தப் புண்ட்₃ரம் ப்ராசீனமானதென்று எப்படி நிர்ணயிப்பது என்பதை ஸ்ரீ வேதா₃ந்ததே₃ஶிகரின் வைப₄வத்தின் கடைசி யில் காட்டியிருக்கிறோம். க்₃ரந்த₂ங்களைக் கொண்டு ஆராய்ந் தால், அநுஷ்ட₂ான பே₄த₃ங்களும் படிப்படியாகப் பிற் காலத்தில் விளைந்தவையே என விளங்கும். தென்கலை வகுப்பி னரிடையேயும் பல அநுஷ்ட₂ான பே₄த₃ங்கள் பிற்காலத்தில் புகுந்திருப்பதையும், வடகலை வகுப்பினரிடையேயும் பல அநுஷ்ட₂ான பே₄த₃ங்கள் பிற்காலத்தில் புகுந்திருப்பதையும் காண்கிறோம். ஆகையால், தத்வஹிதபுருஷார்த்த₂ங்கள் பற்றிய கொள்கைகளில் தே₃ஶிகனுக்கும், பெரும்பாலான மற்ற ஆசார்யர்களுக்கும் ஏற்பட்ட அபி₄ப்ராய பே₄த₃மே ஸம்ப்ரத₂ாய பே₄த₃த்திற்கு அடிப்படை என்பதும், உறுதியான அடிப்படை யில் அமைந்த இந்த பே₄த₃த்தை இல்லைசெய்யவோ ஒன் ருக்கவோ எவராலும் இயலாது என்பதும் விவேகிகளுக்கு விளங்கும்.

2. உண்மைநிலை இவ்வாருக இருக்க, ஸ்ரீரங்கத்தில் வாழும் ஒரு வித்₃வான் 'ஸ்ரீரங்க₃ ஸ்ரீவிவேசனம்' என்னும் அப₃த்₃த₄ச்சுவடியில் ஓர் ஆத₄ாரத்தையும் காட்டாமல், ஒரு நிரூபணத்தையும் செய்யாமல் 'எல்லா ஆசார்யர்களுமே வடகலைதான்' என்னும் ப்₃ரஹ்மாண்ட₃ப் புளுகை அவிழ்த்து விட்டிருக்கிருர். அதன் முகவுரையில் ஸுத₃ர்ஶனத்தையும் வம்புக்கிழுக்கச்செய்திருக்கிருர். அச்சுவடியில் அவர் எழுதியிருக்

கும் பொய்கள் கணக்கற்றவை. அவற்றை ஸ்ரீ உ. வே. ஶதாபி₄ஷேகம் கோ₃விந்த₃நரஸிம்ஹாசார்ய ஸ்வாமி ஆராய்ந்து, ஆதா₄ரங்காட்டி இம்மலரில் சேர்க்கப்பட்டுள்ள மற்றொரு கட்டுரையில் பதில் அளித்திருக்கிறார். முற்கூறிய அப₃த்₃த₄ச் சுவடியால் குழப்பமடைந்துள்ள பல அன்பர்கள்—தேஶிகன் திருவுள்ளம் பற்றியவையாகையால் தே₃ஶிக ஸம்ப்ரத₃ாயம் என்றும், தமிழ்நாட்டின் வடபகுதியிலிருந்து படிப்படியாகத் தெற்கே பரவியதால் வடகலை ஸம்ப்ரத₃ாயம் என்றும் 300 வருடங்களாக வழங்கப்படும் வடகலை ஸம்ப்ரத₃ாயத்தின் கொள்கைகளுக்கும், பெரும்பாலும் தென்தே₃ஶங்களில் வாழ்ந்த மற்ற ஆசார்யர்கள் திருவுள்ளம் பற்றியதாகையாலும், தென்தேசங்களில் இன்றும் பெரும்பான்மையாயிருக்கையாலும் 300 வருடங்களாகத் தென்னாசார்ய ஸம்ப்ரத₃ாயமென வழங்கப்படும் தென்கலை ஸம்ப்ரத₃ாயத்தின் கொள்கைகளுக்கும் உள்ள வேறுபாடுகளை விளக்கி ஓர் கட்டுரை எழுதும்படி கேட்டுக்கொண்டதற்கிணங்க, இக்கட்டுரையில் அவ்விரு ஸம்ப்ரத₃ாயங்களின் கொள்கைகளில் உள்ள முக்கியமான வேற்றுமைகள் விளக்கப்படுகின்றன.

3 தத்வம், ஹிதம், புருஷார்த்த₂ம் என்னும் மூன்று விஷயங்களிலுமே இவ்விரு ஸம்ப்ரத₃ாயங்களிடையே கருத்து வேற்றுமைகளிருந்தாலும், ஹிதாம்ஶத்தைப் பற்றிய கருத்து வேற்றுமையே வாழ்க்கை முறையை அமைத்துக் கொள்வதில் வேறுபாட்டை விளைக்குமாகையாலே, அதுவே ஸம்ப்ரத₃ாயக் கருத்து வேற்றுமைகளில் உயிர் நாடியாய் விளங்குகிறது. புருஷார்த்த₂க்கொள்கையில் வேறுபாடும் அதோடு இணைந்திருப்பது. இவ்விரண்டையும் முதலில் விவரித்துவிட்டு மற்ற வேற்றுமைகளை மேலே காண்போம்.

4. ஸாத₄னப₄க்தி அல்லது ப்ரபத்தி என்னும் ஸாத்₄யோபாயங்களில் ஒன்றை அனுஷ்டி₂த்தால்தான் அதனால் உகந்த எம்பெருமான் மோக்ஷத்தை அருளுவான். பெறுகிற ப₂லத்தின் க₄னத்தைப் பார்க்கும்போது, இவை வ்யாஜோபாயங்களேயாகும். இவ்வுபாயங்களையும் இவன் அநுஷ்டி₂ப்பதற்கு-அநாதி₃காலமாக ஸ்ருஷ்டி அவதாரம் முதலானவற்றைச்

செய்தும், ஜ்ஞானிகளை அவதரிக்கச் செய்தும் எம்பெருமான் பட்ட பாடுகளே மூலகாரணமாகும். ஆகையால் இவன் 'நான் உபாயத்தை அநுஷ்டி₂த்தேன்' என்று அஹங்காரம் கொள்ள இடமில்லை. இருந்தபோதிலும் இவ்விரு உபாயங்களில் எதில் அதி₄காரமுள்ளதோ அதை அநுஷ்டி₂த்தால்தான் மோக்ஷம் கிடைக்கும். இப்படி ஒப்புக்கொள்ளாமல், எம்பெருமான் நிர்ஹேதுகக்ருபையாலே மோக்ஷமளிக்கிறான் என்று ஒப்புக் கொண்டால், அனைவருக்குமே மோக்ஷமளிக்கவேண்டிவரும். ஆகையாலே ஆழ்வார்களும் பல ஆசார்யர்களும் 'நிர்ஹேதுக க்ருபையாலேயே மோக்ஷம்' என்று கூறுவதும், 'கர்மஜ்ஞாந ப₄க்திகள் உபாயமல்ல' எனக் கூறுவதும், 'இச்சை₂க்கு மேற்பட இவனிடம் வேறொன்றும் வேண்டியதில்லை' என்று கூறுவதும்—எம்பெருமானுடைய க்ருபைக்குப் பெருமை கூறுவதற்காக எழுந்த அதிவாத₃வாக்கியங்களேயாகும்–இவ்வளவும் ஹிதாம்ஶத்தைப் பற்றி ஸ்ரீதே₃ஶிகன் தமது நூல்களில் பல இடங்களில் தெரிவித்திருக்கும் கருத்துக்களாகும்.

5. இவ்விஷயத்தில் தென்னாசார்யர்களின் கருத்து இனி விவரிக்கப்படுகிறது. "நெறிவாசல் தானேயாய் நின்றானை" [முதல்திரு-4] "கண்ணனல்லால் இல்லைகண்டீர் சரணே" [திருவாய் 9-1-9]முதலான பற்பல பாசுரங்களிலேஆழ்வார்களும், "கேவலம் மதீ₃யயைவ த₃யயா" [ஶரணாக₃திக₃த்₃யம் 20] "ப₄க₃வத் பாத₃ாம்பு₃ஜத்₃வய ப்ரபத்தேரந்யந்ந மே கல்பகோடி ஸஹஸ்ரேணாபி ஸாத₄நமஸ்தீதி மந்வாந:"[வைகுண்ட₂க₃த்₃யம்1] என்று க₃த்₃யத்ரயத்தில் எம்பெருமானாரும்,

"கருமத்தால் ஞானத்தால் காணும் வகையுண்டே
தருமத்தாலன்றி இறைதாள்கள்?" [ப்ரமேய 4]

"உள்ளபடி உணரில் ஒன்று நமக்குண்டென்று
விள்ள விரகிலதாய்விட்டதே—கொள்ளக்
குறையேதுமில்லார்க்குக் கூறுவதென் சொல்வீர்
இறையேதுமில்லாத யாம்" [ப்ரமேய 6]

முதலானவிடங்களில் அருளாளப்பெருமாள் எம்பெருமானார் போன்ற மஹாமேத₄ாவிகளான ஆசார்யர்களும், பிள்ளான்

முதலான தி$_3$வ்யப்ரப$_3$ந்த$_4$ வ்யாக்$_2$யாதாக்களும் அந்வய வ்யதிரேகங்களாலே நிரதிஶயபுருஷார்த்த$_2$த்துக்கு நிர்ஹேதுக க்ருபையே காரணமென்றும், சேதனனுடைய முயற்சிகள் எதுவும் காரணமாகமாட்டா என்றும் அருளியிருக்கையாலே நிர்ஹேதுக க்ருபையே பரார்த்த$_2$ாநுப$_4$வகைங்கர்ய ரூபமான பரமமுக்$_2$ய மோக்ஷத்திற்கு ஸாத$_4$நமாகும். 'உள்ளபடி உணரில்' என்று ப்ரமேயஸாரத்தில் அருளியிருக்கையாலே, இது அதி வாத$_3$மன்று எனவும் விளங்குகிறது. ''அப்படியானால் எல்லோரும் மோக்ஷமடைய வேண்டிவருமே; மேலும் கர்ம ஜ்ஞான ப$_4$க்திகள் முதலான சேதனனுடைய முயற்சிகள் மோக்ஷோபாயங்கள் என்றும் ஶாஸ்த்ரங்களில் சொல்லியிருக்கிறதே. ப$_4$க்தியோக$_3$த்தைக்கொண்டு ஶுகர், வாமதே$_3$வர் முதலானோர் முக்தியடைந்ததாகவும் ப்ரமாணங்களில் காணப்படுகிறதே''என்னும் ஆக்ஷேபங்கள் எழுகின்றன. இவற்றுக்குப் பரிஹாரத்தை அடுத்த ஐந்து பாராக்களில் விளக்குவோம்.

6. அநாதி$_3$காலமாகச் சேதனன் செய்யும் முயற்சிகளால் புண்யபாபங்கள் ஏற்படுகின்றன. புண்யமானது த$_4$நம், தா$_4$ந்யம் முதலான பொருள்களை அளித்து, ப்ராக்ருதஸுக$_2$ங்களைச் சேதனனுக்கு உண்டாக்குகிறது. இந்த த$_4$நம், தா$_4$ந்யம் முதலானவை பெரும்பாலும் ஆத்மஹிதத்துக்குப் பயன்படாமல் இவனை மேலும் மேலும் பாபம் செய்யத்தூண்டி, ஆத்ம நாஶத்தை விளைப்பதையும் காண்கிறோம். பாபம் இவனுக்குத் துன்பத்தை அளிக்கும் ஏழ்மை முதலானவற்றை உண்டாக்கி, வைராக்$_3$யம் முதலானவற்றை விளைத்து ஆத்மஹிதத்துக்குப் பயன்படுவதையும் பார்க்கிறோம். ஆகையால் ஜீவனுடைய ஆத்மஹிதத்திற்கு அவனுடைய முயற்சிகளான புண்யமோ, பாபமோ உண்மையான காரணமல்ல என்றும், இந்தப் புண்ய பாபங்களைக் கருவிகளாகக்கொண்டு இவனைத் திருத்தப் பாடுபடும் நிர்ஹேதுக க்ருபையோடுகூடிய எம்பெருமானே ஆத்ம ஹிதத்துக்கு உண்மையான காரணமென்றும் விளங்குகிறது. அவன்—தனக்கு வைஷம்யமும் (பக்ஷபாதமும்), நைர்க்$_4$ருண்ய மும் (கருணையின்மையும்) வாராமைக்காக இவனுடைய யத்னங்களில் ஒருவகையான ஸ்வாதந்த்ர்யத்தை இவனுக்கு

அளித்திருக்கிருன் என்றும், சேதனன் அந்த ஸ்வாதந்த்ர்யத்தைப் பயன்படுத்திக்கொண்டு ஶாஸ்த்ரங்களில் உள்ள "ஸத்யம் வத₃, த₄ர்மம் சர, ஸ்வாத்₄யாயாந்மா ப்ரமத₃:" [ உண்மையைக் கூறுவாய் ; த₄ர்மத்தை அநுஷ்டி₂ப்பாய் ; வேத₃ாத்₄யயநம் செய்யாமலிராதே ] முதலான பொதுவான விதி₄நிஷேத₄ங்களின்படி ஒழுகுவதால் ஏற்படும் புண்யத்தின் ப₂லமாக ஸுக₂த்தையளித்தும், அவ்விதி₄நிஷேத₄ங்களை மீறி நடப்பதால் ஏற்படும் பாபத்தின் ப₂லமாக து₃:க்க₂த்தையளித்தும் இவனுடைய எண்ணத்தை உயர்த்துவதற்கு அந்த ஸர்வேஶ்வரன் பாடுபடுகிருன் என்றும் விளங்குகிறது. ஶாஸ்த்ரங்களின் உட்கருத்தை ஆராய்ந்தால் சேதனனுடைய இஷ்டப்ராப்திக்கும், அநிஷ்டநிவ்ருத்திக்கும் உறுப்பாக அவற்றில் விதி₄க்கப்பட்டிருக்கும் காம்யவிதி₄வாக்யங்களும் இச்சேதனனுடைய எண்ணத்தை உயர்த்துவதற்காகவே என்றும் விளங்கும். ஶத்ருநிரஸனத்தை விரும்பும் நாஸ்திகன் ஒருவனுக்கு அந்த ஶத்ருநிரஸனத்துக்கு உபாயமாக ஶ்யேநயாக₃த்தை விதி₄ப்பது அவனுடைய நாஸ்திகப்ரதிபத்தியை மாற்றி ஆஸ்திகப்ரதிபத்தியை விளைப்பதற்காகவே என்பது அனைவரும் இசைந்தது. இதுபோலவே அல்பமும், அஸ்தி₂ரமுமான ப்ராக்ருதப₂லன்களைப் பெறுவதற்காகப் பற்பல ஸாத₄னங்களை விதி₄ப்பதும் இவனுக்கு அப்பலன்களிலுள்ள விருப்பத்தை மாற்றி தே₃ஹாத்மவிவேகம் முதலானவற்றை ஏற்படுத்தி அநந்தஸ்தி₂ரப₂லமான மோக்ஷத்தில் விருப்பத்தை விளைப்பதற்கே என்பதையும் எளிதில் உணரலாம். இதே ரீதியில் மோக்ஷத்தைப் பெறுவதற்காகக் கர்மஜ்ஞானப₄க்திகளாகிற ஸ்வப்ரவ்ருத்திகளை ( தன் முயற்சிகளை ) விதி₄ப்பதும், அந்த ஸாத₄னங்களை அந்திமஸ்ம்ருதி ஏற்படும்வரையில் பல ஜன்மங்களில் அநுஷ்டி₂க்கும்படி செய்வதும், அப்படி அநுஷ்டி₂க்கும் போது ப₄க₃வச்சே₂ஷத்வாநுஸந்த₄ானம், த்ரிவித₄பரித்யாக₃ம் முதலானவற்றை அங்க₃மாக விதி₄ப்பதும் "மோக்ஷத்தில் தனக்குத் தன் ஆநந்த₃ம் உத்₃தே₃ஶ்யமன்று; எம்பெருமானுடைய ஆநந்த₃மே உத்₃தே₃ஶ்யம்; நாம் நம் ஆநந்த₃த்துக்காக அநாதி₃காலமாகப் பாடுபட்டுவந்ததே — அநாதி₃காலமாக நம்மையடைந்து தான் ஆநந்த₃மடைய அவன் தன் நிர்ஹேதுக

க்ருபையாலே செய்துவரும் ஸ்ருஷ்டி, அவதாரம் முதலான முயற்சிகளுக்குத் தடையாயிருந்துவருகின்றது. மோக்ஷத்திலும் அவனது ஆநந்த₃த்தையே உத்₃தே₃ஶ்யமாகக்கொண்டு, நம் ஆநந்த₃த்துக்காக எந்த முயற்சியும் செய்யாமல் சாதகம்போல் அவனருளையே பார்த்திருந்தோமானால், உடையவனான அவன் உடைமையான நமக்கு நிர்ஹேதுக க்ருபையாலே மோக்ஷமளித்துத் தான் பெருப்பேறுபெற்றாற்போலே ஆநந்த₃மடைவான்; அவன் ஆநந்த₃த்துக்கு உறுப்பான ஆநந்த₃ம் நமக்கும் தன்னடையே ஏற்படும்'' என்னும் பரிபக்வமான அறிவை விளைப்பதற்கே என எளிதில் விளங்கும். ஸித்₃தோ₄பாய விஜயத்தில் நிஷ்கர்ஷநிகஷவிஜயத்தில் முதல் அத்₄யாயமான ப்ரத₄ாந த்₃ருஷ்டாந்த நிருபணத்தில் இதன் விரிவைக்காணலாம். கீ₃தை 7, 8 அத்₄யாயங்களின் வ்யாக்₂யானங்களில் இவ்விஷயம் கீ₃தாசார்யனுக்கும், எம்பெருமானாருக்கும் மிகவும் திருவுள்ள முகந்தது என்று நிலைநாட்டப்பட்டது. ஆக, இந்த நிருபணங்களிலிருந்து — பரார்த்த₂ாநுப₄வகைங்கர்யரூபமான (அதாவது-எம்பெருமான் தனக்கேயாக நம்மைக்கொள்ளும், அவனுகப்புக்கே நாம் ஆட்செய்யும்) ஒப்பற்ற மோக்ஷத்தை, நமது முயற்சி எதையும் எதிர்பாராமல், 'மோக்ஷத்திலும் அவனது ஆனந்த₃மே உத்₃தே₃ஶ்யம்; அவ்வொப்பற்ற மோக்ஷத்திற்கு அவனது நிர்ஹேதுக்ருபையே உபாயம்' என்னும் *எண்ணமுடையவர்களுக்கு*, அந்த ஜந்மத்தின் முடிவிலேயே அந்திமஸ்ம்ருதியையும் எதிர்பாராமல் வழங்குகிறான் எம்பெருமான் என விளங்குவதாலும், *இந்த எண்ணமே* ''தத்பாத₃ாம்பு₃ஜ த்₃வயப்ரபத்தி'' என்று பா₄ஷ்யகாரரால் க₃த்₃யத்தில் வழங்கப்பட்டதென்று விளங்குகையாலும் 'எல்லாரும் முக்தியடையவேண்டி வருமே' என்னும் ஸர்வமுக்தி ப்ரஸங்க₃த்திற்குப் பரிஹாரம் உரைக்கப்பட்டது. இந்த எண்ணம் நமது ஸ்வரூபத்திற்சேர்ந்ததாகையாலும், 'அவனே உபாயம்' என்னும் நினைவாயிருக்கும் இது தன்னிடத்தில் உபாயத்வத்தைப் பொறுக்காதாகையாலும், இதுவும் ஸ்ருஷ்டி, அவதாரம் முதலான அவனுடைய முயற்சியால் உண்டானதாகையாலும் 'இதுவும் ஒரு ஸாத்₄யோபாயமோ?' என்று நினைக்க இடமில்லை. அதனாலேயே ''பாத₃ாம்பு₃ஜத்₃வய ப்ரதிபத்தியைக் காட்டிலும் வேறு உபாயமில்லை'' என்று

பு₄ாஷ்யகாரர் க₃த்₃யத்தில் அருளியதற்கு "பாத₃ாம்பு₃ஜத்₃வயத்தைக் காட்டிலும் வேறு உபாயமில்லை"என்பதே பொருளாகும்.

7. இனி, இத்தகைய பரார்த்த₂ப்ரதிபத்தியாகிற எண்ணமில்லாதவர்களாய், மோக்ஷத்தில் தாம் ஆநந்த₃மடைய வேண்டும் என்னும் உத்கடமான விருப்பம் உடையவர்களுக்கு, "*த்₃யாயீத*" "*உபாஸீத*" என்று உபாஸனத்தை முக்₂யமான மோக்ஷஸாத₄னமாக விதி₄த்து, கர்மஜ்ஞானங்களையும், ஸ்வபரயாத₂ாத்ம்யாநுஸந்த₄ானத்தையும் (தன்னையும், எம்பெருமானையும் பற்றிய உண்மைநிலையை அநுஸந்தி₄க்கையையும்),ப்ரபத்தியையும் அங்க₃மாக விதி₄த்து அந்திம ஸ்ம்ருதிபர்யந்தம் பல ஜன்மங்களில் இவர்களுடைய ஸ்வார்த்த₂தையை ( மோக்ஷாநந்த₃ம் தங்களுக்கு எனும் எண்ணத்தை ) மாற்றி, முற்கூறிய பரார்த்த₂ப்ரதிபத்தியை உண்டாக்கவே எம்பெருமான் முயல்கிறுகையாலும், அந்திமஸ்ம்ருதிபர்யந்தம் பரார்த்த₂ப்ரதிபத்தி உண்டாகாவிடில், அவர்களுக்கு அவர்கள் விரும்பிய ஸ்வார்த்த₂ாநுப₄வ கைங்கர்யங்களாகிற மோக்ஷத்தையே அருள்கிறுகையாலும், 'ப₄க்தி முதலான சேதனனுடைய முயற்சிகள் மோக்ஷோபாயமென்று சாஸ்திரங்களில் சொல்லியிருக்கிறதே ; அவைகொண்டு ஶுகர், வாமதே₃வர் முதலானோர் மோக்ஷமடைந்ததாகவும் ப்ரமாணங்களில் காணப்படுகிறதே ' என்னும் ஆக்ஷேபங்களுக்கும் பரிஹாரம் உரைக்கப்பட்டதாயிற்று.

8. எல்லாக் கர்மங்களும் கழிந்தபின்பு முக்தியில் இப்படித் தாழ்ந்த மோக்ஷம் எப்படி உண்டாக முடியும் ? எனில், 'அந்த மோக்ஷமே வேண்டும்' என்னும் எண்ணத்தாலும்: அதற்குரிய ஸாத₄னத்தைக் குறைவற அநுஷ்டி₂க்கையாலும் உண்டாகிறது எனக்கொள்கிறோம். ப₃ஹுபுண்யப₂லமாக இவனுக்கு மோக்ஷத்தில் விருப்பமுண்டானாலும், சிறிது பாபத்தின் ப₂லமாக அவ்விருப்பத்தில் ஸ்வார்த்த₂தையும் கலந்திருக்கிறது. அந்த ஸ்வார்த்த₂தையை நீக்குவதற்கே எம்பெருமான் முற்கூறியபடி ப₄க்தியை ஸாத₄னமாக விதி₄த்து, அதை அந்திம ஸ்ம்ருதி பர்யந்தம் பல ஜன்மங்களில் அநுஷ்டி₂க்கும்படி செய்கிறான். அப்போதும் நீங்காவிடில், வேறுவழி

யில்லாமையாலே தனக்கு வைஷம்யநைர்க்₄ருண்யங்கள் வாராமைக்காகவும், 'யதோ₂பாஸநம் ப₂லம்' என்னும் தத்க்ரது ந்யாயத்தை ஒட்டியும், இவன் விரும்பிய ஸ்வார்த்த₂ மோக்ஷத்தையே அளித்துவிடுகிறானாகையாலே குறையில்லை. ஸ்வார்த்த₂ மோக்ஷத்திற்குள்ள இந்த ந்யாயம் ஆத்மமாத்ராநுப₄வத்தை அளிக்கையாலே அமுக்₂யமோக்ஷமான கைவல்யத்திற்கும் ஒக்கும். ஆக, அவரவர் விருப்பப்படி கைவல்யமாகிற அமுக்₂யமோக்ஷமும், நிரதிஶயாநந்த₃த்தை அளிக்கையாலே முக்₂யமோக்ஷமான ஸ்வார்த்த₂மோக்ஷமும் அவற்றிற்குரிய ஸாத₄னங்களை அநுஷ்டி₂ப்பவர்களுக்கும், ஒப்பற்ற புருஷார்த்த₂மாகையாலே பரமமுக்₂யமோக்ஷமான பரார்த்த₂ாநுப₄வகைங்கர்யங்கள் எம்பெருமானுடைய நிர்ஹேதுக க்ருபையாலும் உண்டாகக் குறையில்லை என்று தேறிற்று. ப₄க்திநிஷ்ட₂னுக்கும், 'எம்பெருமானே உபாயம்' எனக்கொண்ட ப்ரபன்னனுக்கும் பரார்த்த₂ாநுப₄வ கைங்கர்யங்களையே ப₂லமாகக் கொண்டால் என்ன குறை? எனில்: மோக்ஷத்திற்காக அரும்பாடுபடுவதாலேயே, உபாஸகனான ப₄க்தன் மோக்ஷத்தில் தன் ஆனந்த₃த்தை உத்₃தே₃ஶ்யமாகக் கொள்கிறான் என விளங்குகிறது. 'அப்படிக் கொள்ளாவிடில் மோக்ஷத்திற்காகப் பாடுபடவேண்டாமே' என்னும் கேள்வி எழுந்தே தீரும். ஆகையால், அவனுக்கு அவன் விரும்பாத பரார்த்த₂ாநுப₄வ கைங்கர்யங்களை அருள்வது உசிதமுமல்ல; தத்க்ரதுந்யாய விரோத₄மும் வரும்.

9. இப்படி முக்தியில் பே₄த₃த்தை ஒப்புக்கொண்டால் "*விகல்போऽவிஶிஷ்டப₂லத்வாத்*" [ப்₃ரஹ்மஸூத்ரம் 3-3-57] [(ஒவ்வொரு ப்₃ரஹ்மவித்₃யைக்கும் ப்₃ரஹ்மாநுப₄வமாகிற எல்லையற்ற ஆநந்த₃ம்) ஒத்த ப₂லமாயிருப்பதால், ஒவ்வொரு வித்₃யையை அநுஷ்டி₂த்தாலே போதும்] என்று தொடங்கி விகல்பாதி₄கரணத்தில் ப₂லபே₄த₃மில்லை என்று நிலைநாட்டியிருப்பது முரண்படுமே எனும் ஆக்ஷேபம் எழுகிறது. இதற்கு பதில் பின்வருமாறு:— அவ்வதி₄கரணத்தில்–ஸ்வப்ரவ்ருத்திரூபமான உபாஸனத்தினால் கிடைக்கும் ப₂லனான ஸ்வார்த்த₂ மோக்ஷாநந்த₃ம் ஒவ்வொரு ப்₃ரஹ்ம வித்₃யைக்கும் ஒத்திருக்கையால், பல வித்₃யைகளைச் சேர்த்து அநுஷ்டி₂க்கவேண்டாம்,

ஏதாவதொரு வித்3யையை அநுஷ்டி2த்தாலே போதும் என்றே நிலைநாட்டப்பட்டது. இது பரார்த்தா2நுப4வ கைங்கர்யங்களை விரும்பி ஸ்வப்ரவ்ருத்தியினின்றும் நீங்கி அவனருளையே பார்த்திருப்பார்க்கு அவ்வநுப4வகைங்கர்யங்களை நிர்ஹேதுக க்ருபையாலே அளிக்கிறுன்' என்னும் கொள்கைக்கு எவ்வகையிலும் முரண்படாது. சுருங்கச் சொன்னுல் விகல்பாதி4கரணம் எம்பெருமானை அடைபவர்களிடையே ஆநந்த3தாரதம்யத்தை நிஷேதி4த்ததேயொழிய ஸ்வார்த்த2பரார்த்த2ரூபமான ஆகார தாரதம்யத்தை நிஷேதி4க்கவில்லை என்று தேறும்.

10. ஸ்வார்த்த2பரார்த்த2ரூபமான ஆகாரதாரதம்யம் மோக்ஷத்தில் ஏற்படும் என்பதற்கு ஸ்ரீபா4ஷ்யத்தில் ப்ரமாணமுண்டோ? எனில்: கார்யாதி4கரணத்தில் ஸூத்ரகாரரும், பா4ஷ்யகாரரும் 'உபாஸித்தபடியே ப2லன்' எனும் தத்க்ரது ந்யாயத்தை ப்3ரஹ்மாத்மக ஸ்வாத்மோபாஸகனை பஞ்சாக்3நி வித்3யாநிஷ்ட2ன் விஷயத்தில் ஸஞ்சாரம் செய்தபடியால், முக்2ய மோக்ஷத்திலும் அவரவர் விருப்பப்படி ஆகாரபே4த3ங்கள் ஏற்படத்தடையில்லை என்றும், ஸ்வார்த்த2மோக்ஷப2லப்ரத3னுக எம்பெருமானை உபாஸிப்பவர்களுக்கு ஸ்வார்த்த2மோக்ஷத்தையும், பரார்த்த2மோக்ஷப2லப்ரத3னுக எம்பெருமானை உபாஸிப்பவர்களுக்குப் பரார்த்த2மோக்ஷத்தையுமே எம்பெருமான் அருளுவான் என்றும் விளங்குகிறது. தத்க்ரதுந்யாயத்தை ஆத்மத்வோபாஸநாதி4கரணத்தில் [4-1-2] விளக்கும்போது *"யதா2வஸ்தி2தஞ்ச ப்3ரஹ்ம உபாஸ்யம்। அயதோ2பாஸநே ஹி ப்3ரஹ்மப்ராப்திரப்யயதா2பூ4தா ஸ்யாத்"* [ப்3ரஹ்மத்தை உள்ளபடியே உபாஸிக்கவேணும்; உள்ளபடியல்லாமல் உபாஸித்தால் ப்3ரஹ்மப்ராப்தியும் உள்ளபடியல்லாததாகவே அமையும்] என்று ஸ்ரீ பா4ஷ்யகாரர் அருளியிருப்பதும் இதை வலியுறுத்துகிறது.

11. ஆக, ப்ரத2மப்ரவ்ருத்தியில் எம்பெருமானுல் அளிக்கப்பட்டுள்ள ஸ்வாதந்த்ர்யத்தினுலே அநாதி3காலமாக இவனுக்கு உண்டாயிருக்கும் தாழ்ந்த ப்ரதிபத்திகளை (எண்ணங்களை) படிப்படியாக உயர்த்துவதற்கே எம்பெருமான் சேதன

னுடைய முயற்சிகளைக் கருவிகளாகப் பயன்படுத்திக்கொள்கிறு ஞகையால், இவனுடைய முயற்சிகளால் இவனுக்கு நன்மை ஏற் படுகிறது என்று கொள்வதைக் காட்டிலும், இவனுடைய எண் ணம் திருந்துவதால் நன்மை ஏற்படுகிறது என்று கொள்வது தக்கது; "சிற்றவேண்டா சிந்திப்பே அமையும்"[திருவாய் 9-1-7] முதலானவிடங்களில் ஆழ்வார்கள் இக்கொள்கையையே வலி யுறுத்திஞர்கள் என்பது தென்ஞசார்ய ஸம்ப்ரதாயத்தின் அடிப் படைக் கொள்கையாகும். இப்படிக் கொள்ளும்போது எண்ணத் தின் வேறுபாட்டாலே முக்தியிலும் ஸ்வார்த்தம், பரார்த்தம் எனும் இருவகையான மோக்ஷத்தை ஒப்புக்கொண்டே தீர வேண்டியுள்ளது என்பது அவ்வாசார்யர்களின் திருவுள்ளம். ஆழ்வார்கள் கைவல்யத்தையும் நித்யமோக்ஷமாகத் திருவுள்ளம் பற்றியது இதனுலேயே என விளங்கும். எம்பெருமானுர் ஸ்ரீபாஷ் யத்தில் பராயத்தாதிகரணத்தில் [2-3-6] ப்ரதமப்ரவ்ருத்தியில் சேதனனுக்கு எம்பெருமான் ஸ்வாதந்த்ர்யம் அளித்திருப்பதாக அருளியிருப்பதும், கீதாபாஷ்யத்தில் [7-16;8 ப்ரவேசம்]"ஸுக் ருததாரதம்யத்திஞல் உண்டான *ப்ரதிபத்தியின் சிறப்பாலே* ஐச்வர்யார்த்தி, கைவல்யார்த்தி, பகவச்சரணர்த்தி ஆகிய மூவரும் மேன்மேலே சிறந்தவர்கள்" என்று அருளியிருப்ப தும், கைவல்யத்தைப் புநராவ்ருத்தியில்லாத மோக்ஷம் என்று பலகால் அருளியிருப்பதும், ஆத்மத்வாதிகரணத்திலும், கார்யாதிகரணத்திலும் மோக்ஷமடைபவர்கள் விஷயத்தில் தத்க்ரதுந்யாயத்தை ஸஞ்சரித்திருப்பதும் எம்பெருமானுர் இக் கொள்கையையே திருவுள்ளம் பற்றினுர் என விளக்குகின்றன.

12. ஸ்ரீவேதாந்ததேசிகன் மோக்ஷத்திற்காகச் சேதனன் முயல்வது தாழ்வு என்பதையும், முக்தியில் ஸ்வார்த்த பரார்த்தரூபமான ஆகாரதாரதம்யம் உண்டு என்பதையும் ஒப்புக்கொள்ளவில்லை. முக்தியில் எவ்விதமான பேதமு மில்லை; பக்தியினுலோ, ப்ரபத்தியினுலோ பெறும் முக்தி ஒருவகைப்பட்டதே என்பது அவர் திருவுள்ளம். முக்தியில் ஆகாரபேதத்திற்கும். ப்ரதிபத்தி ப்ராதான்யத்திற்கும் மூல காரணமான 'ப்ரதமப்ரவ்ருத்தியில் எம்பெருமான் ஜீவனுக்கு ஸ்வாதந்த்ர்யம் அளித்திருக்கிறுன்' என்னும் கொள்கையையும் அவர் ஒப்புக்கொள்ளவில்லை. அப்படியாஞல் எம்பெருமானுக்கு வைஷம்யநைர்க்ருண்யங்கள் வருமே என்னும் கேள்விக்கு, ஜீவனுடைய கர்மம் அநாதியாகையாலே வைஷம்யநைர்க்ருண்

யங்கள் வரமாட்டா என்று அவர் ஸமாத$_4$ானமருளியுள்ளார். இந்த விஷயத்தில்—*"ஆத$_3$ாவீஶ்வர த$_3$த்தயைவ"* [தத்வஸாரம் 46] என்னும் *ஶ்*லோகத்தில் ப்ரத$_2$மப்ரவ்ருத்தியில் ஸ்வாதந்த்ர்யத்தை உபபாத$_3$னம் செய்திருக்கும் நடாதூரம்மாளோடும், பராயத்தாதி$_4$கரண *ஶ்*ருதப்ரகா*ஶி*கையில் அதையே மிக விரிவாகச் செய்திருக்கும் ஸுத$_3$ர்*ஶ*னபட்டரோடும் தெளிவாகக் கருத்துவேற்றுமையைக் காட்டியுள்ளார் தே$_3$*ஶி*கன். *"ப$_4$ாஷ்யாதி$_3$ க்$_3$ரந்த$_2$லேஶோऽப்யவஹிதமநஸாம் ஐத$_3$மர்த்$_2$யம் ப$_4$ஜேத"* [அதி$_4$கரணஸாராவளீ 242] [ப$_4$ாஷ்யம் முதலானவற்றில் சில வாக்யங்களை கவனமாகப் பார்த்தால் நான் சொன்ன அர்த்த$_2$த்தோடு ஒத்துப்போவது விளங்கும்] என்று பராயத்தாதிகரணத்தின் அதி$_4$கரணஸாராவளியில் அருளியிருப்பதிலிருந்து ப$_4$ாஷ்யாதி$_3$களும் சிறிது முரண்படுவதை ஒருவித$_4$மாக நிர்வஹிக்கவேணும் என்பது அவர் திருவுள்ளம் என விளங்குகிறது. இப்படி ஜீவனுடைய எண்ணத்துக்கு முக்$_2$யத்வத்தை அளிக்கவிரும்பாமையாலே, ப$_4$க்தி அல்லது ப்ரபத்தியாகிற ஜீவனுடைய முயற்சிகளுக்கு முக்கியத்துவத்தை அளித்து, அதனால் ஒரே வித$_4$மான மோக்ஷம் உண்டாகிறது என்று கொண்டுவிட்டார். இவ்வண்ணமாக — ஜீவனுக்கு ஒவ்வொரு காரியத்திலும் ப்ரத$_2$ம ப்ரவ்ருத்தியில் ஸ்வாதந்த்ர்யத்தை ஒப்புக்கொண்டு, ஜீவனுடைய முயற்சிகளுக்கு முக்$_2$யத்வமளிக்காமல், ஜீவனுடைய எண்ணத்திற்கே முக்$_3$யத்வமளித்து, விருப்பத்தின் வேறுபாட்டாலே இவன் பற்றும் ஸாத$_4$னத்தின் பே$_4$த$_3$த்தால் மோக்ஷத்திலும் வேறுபாட்டை ஒப்புக்கொள்வது தென்னுசார்ய ஸம்ப்ரத$_3$ாயம் என்றும், ஜீவனுக்கு ப்ரத$_2$ம ப்ரவ்ருத்தியில் ஸ்வாதந்த்ர்யத்தை ஒப்புக்கொள்ளாமல், ஜீவனுடைய ப$_4$க்தி ப்ரபத்திரூபமான முயற்சிகளுக்கே முக்$_2$யத்வமளித்து, அதனால் ஒரேவித$_4$மான மோக்ஷம் உண்டாகிறது என ஒப்புக்கொள்வது தே$_3$*ஶி*கஸம்ப்ரத$_3$ாயம் என்றும் விளங்குகிறது. இது ஹிதத்திலும் புருஷார்த்த$_2$த்திலும் இவ்விரு ஸம்ப்ரத$_3$ாயங்களுக்கும் உள்ள முக்கியமான கருத்து வேறுபாடு. இதை அடிப்படையாகக்கொண்டு தத்வஹித புருஷார்த்த$_2$ங்களில் விளைந்துள்ள முக்கியமான பல கருத்து வேறுபாடுகளைச் சுருக்கமாகக் காட்டுவோம் அடுத்த பாராவில்.

13. (1) ஸ்ரிய:பதியான ஸர்வேஶ்வரன் மோக்ஷமளிப்பது பக்தி அல்லது ப்ரபத்தியாகிற ஹேதுக்களை முன்னிட்டுக் கொண்டே என்பது *தேஸ. ஸ்ரிய:பதியான ஸர்வேஶ்வரன் தலை சிறந்ததான பரார்த்தமோக்ஷத்தை அளிப்பது நிர்ஹேதுகக்ருபையினாலேயே; பக்தி, ப்ரபத்தி முதலான ஜீவனின் முயற்சிகள் எம்பெருமானருளால் விளைந்தவையே; அவற்றை ஸாதனமாக மயங்கி, பர்த்ருபோகத்தை விலைக்குறுப்பாக்குவது போலே அவற்றைக் கொண்டு மோக்ஷத்தைப் பெற நினைப்பார்க்குத் தாழ்ந்த ஸ்வார்த்த மோக்ஷமே விளையும் என்பது *தெ. ஸ. (2) ப்ரதமப்ரவ்ருத்தியில் ஜீவனுக்கு ஸ்வாதந்த்ர்யம் இல்லாமையாலே அவனது எண்ணத்துக்கு முக்யத்வமில்லை; ஜீவனுடைய முயற்சிக்கே முக்யத்வமுண்டு; முயற்சியான பக்தி அல்லது ப்ரபத்தியால் உகந்த ஸர்வேஶ்வரன் ஒரே விதமான மோக்ஷத்தையே அளிக்கிறான்; முக்தியில் ஆகார பேதமில்லை என்பது தேஸ. ஸ. ப்ரதமப்ரவ்ருத்தியில் ஜீவனுக்கு எம்பெருமானால் ஸ்வாதந்த்ர்யம் அளிக்கப்பட்டிருக்கையாலே எண்ணத்துக்கே முக்யத்வம். ஜீவனுக்கு 'உனக்கே நாம் ஆட்செய்வோம்' என்னும் பரார்த்தப்ரதிபத்தி விளையப்படாதனபட்டு. விளைந்தால் நிர்ஹேதுக கிருபையாலே எம்பெருமான் தலைசிறந்த பரார்த்தமோக்ஷத்தையளிக்கிறான்; அந்திமஸ்ம்ருதிவரை அந்த ப்ரதிபத்தி விளையவில்லையானால் ஸாதனாந்தரத்தின் பலமாக ஸ்வார்த்தமோக்ஷத்தை அளிக்கிறான். ஆகையால் முக்ய முக்தியில் ஆநந்ததாரதம்யமில்லாவிடினும் ஸ்வார்த்தபரார்த்தரூபமான ஆகாரதாரதம்யமுண்டு என்பது தெ. ஸ. (2) எல்லாக் கர்மங்களும் கழிந்தபின் முக்தியில் உயர்வு தாழ்வு ஏற்படக் காரணமில்லாமையாலே, சிற்றின்பமான ஆத்மமாத்ரானுபவத்தை விளைக்கும் கைவல்யம் மோக்ஷமன்று; அது ப்ரக்ருதி மண்டலத்தினுள் அநுபவிக்கத்தக்கதொரு தலைசிறந்த ஐஶ்வர்யமே; அதை அநுபவித்த பின்பு கீழான ஐஶ்வர்யங்களுக்கோ, மேலான மோக்ஷத்திற்கோ போக இடமுண்டு என்பது தேஸ. ஸ. எல்லாக்

* இப்பாராவில் தேஸ. ஸ என்பது தேஶிக ஸம்ப்ரதாயத்தையும், தெ. ஸ. என்பது தென்னாசார்ய ஸம்ப்ரதாயத்தையும் குறிக்கும்.

கர்மங்களும் கழிந்த பின்பும் ப்ரதிபத்தியின் (எண்ணத்தின்) வேறுபட்டாலும், அது காரணமாகப் பற்றும் ஸாத4னத்தின் வேறுபாட்டாலும் முக்தியில் ஏற்றத்தாழ்வு ஏற்படலாமாகையாலும், ப்3ரஹ்மானந்த3த்தைக் காட்டிலும் சிற்றின்பமாயிருந்தபோதிலும், கைவல்யத்தில் ஸ்தூ2லஸூக்ஷ்மரூபமான ப்ரக்ருதி ஸம்ப3ந்த4ம் கழிந்துவிடுகையாலும் அது மோக்ஷமே (முக்திபத3த்தால் குறிக்கத்தக்கதே); ஸூக்ஷ்மஶரீரம் விரஜாதரணத்திற்கு முன் கழியாதாகையாலே, கைவல்யாநுப4வம் விரஜைக்கு அப்பாலும், ப4க3வானையடைபவர்கள் வாழும் பரமபத3த்திற்கு இப்பாலும் உள்ளதொரு ஸ்த2ானத்திலே ப4க3வத3நுப4வமில்லாமல் தனிநின்று தன் ஆத்மாவையே அநுப4விக்கும் அநுப4வமே. அக்கைவல்யமோக்ஷத்தைப் பெற்றுவிட்டால், அது த்ரிபாத்3விபூ4தி4யிலுள்ளதாகையாலே ப்ரக்ருதிமண்ட3லத்திற்கும் வரமுடியாது. போ4க3பூ4மியான த்ரிபாத்3விபூ4தியில் ஸாத4நாநுஷ்ட2ானமில்லாமையாலே, அங்கு ஒருஸாத4நத்தை அநுஷ்டி2த்துப் பரமபத3த்தினுள் சென்று ப4க3வானையும் அநுப4விக்கமுடியாது. எம்பெருமானர் கீ3தாபா4ஷ்யத்தில் இதைப் புநராவ்ருத்தியில்லாத மோக்ஷமாகப் பலகால் அருளியிருப்பதும், ஆழ்வார்கள் ஒருமுகமாக இதை ப4க3வத3நுப4வம் எப்போதும் ஏற்பட இடமில்லாத மோக்ஷமாக அருளியிருப்பதும், மற்றும் *ஶ்ருதி* கீ3தை ஸூத்ரம், பா4ஷ்யம், இதிஹாஸபுராணங்கள், பாஞ்சராத்ரம் எம்பெருமானர், ஆழ்வான், ப4ட்டர் முதலான ஆசார்யர்களின் க்3ரந்த2ங்கள் முதலானவற்றிலுள்ள பற்பல வாக்யங்களும் இவ்விஷயங்களைத் தெளிவாகக் காட்டும் ப்ரமாணங்கள் என்பது தெ, ஸ. நமது கைவல்ய ஸித்3த4ாஞ்ஜனத்தில் இது விரிவாக நிலைநாட்டப்பட்டுள்ளது. (4) ஒரே வித4மான மோக்ஷத்தை விளைக்கையால் ஸாத4நாந்தரங்கள் அவற்றில் அதி4காரமுள்ளவர்களுக்கு ஸ்வரூபத்திற்குத் தகுந்தவையே என்பது தே3. ஸ. ப4ர்த்ருபோ4க3த்தை விலைக்குறுப்பாக்குவது போலே, "*தே3ஹி மே த3தா3மி தே*" [நீ எனக்கு ஒன்றைக் கொடுத்தாயானல், நான் உனக்கு ஒன்றை அளிக்கிறேன்] என்னும் அடிப்படையில் அமைந்தவையாகையால் ஸாத4நாந்தரங்கள் ஸ்வரூபத்திற்குத் தகாதவையே; இதனலேயே,

'பொற்குடத்தில் உள்ள ஶுத்₃த₄ஜலத்தோடு ஒரு துளி கள் கலந்ததுபோலே அஹங்காரம் கலந்திருப்பவை ஸாத₄நாந் தரங்கள்' எனப் பிள்ளான் அருளினர். ஶாஸ்த்ரங்களும் உபாயாந்தரங்களைப் பாபத்தோடு ஒக்கச்சொல்லி, அவற்றின் தொடர்பு ஏற்பட்டால் ப்ராயஶ்சித்தத்தை விதி₄த்தன. அவற்றால் ஸ்வார்த்த₂தையின் எல்லையான கைவல்யம்போன்ற அபாயங்களும், ஸ்வார்த்த₂ாநுப₄வ கைங்கர்யங்களான தாழ்ந்த மோக்ஷமுமே விளையும் என்பது தெ. ஸ. (5) மோக்ஷத்திற் குறுப்பான எம்பெருமானுடைய அருளை விளைக்கையால் ப₄க்தி போலே ப்ரபத்தியும் ஒரு ஸாத்₄யோபாயமே என்பது தே₃. ஸ. ப₄க்திபோலே ப்ரபத்தியும் அவனருளால் விளைந்த தாகையாலும், "நீயே உபாயமாவாயாக" என்னும் நினைவா யிருக்கையாலும், ப்ரபத்தி தன்னிடத்தில் உபாயத்வலேஶ க₃ந்த₄த்தையும் பொறுக்காது; அது ஸ்வார்த்த₂ாதி₄காரியைக் காட்டிலும் பரார்த்த₂ாதி₄காரியை வேறுபடுத்திக் காட்டி, பரார்த்த₂ மோக்ஷத்திற்குக் காரணமான எம்பெருமானுடைய நிர்ஹேதுகக்ருபையை வெள்ளமிடச்செய்யும் அதி₄காரிவிஶே ஷணமே என்பது தெ. ஸ. (6) ஆநுகூல்ய ஸங்கல்பம் முத லான ஐந்து அங்க₃ங்களோடு கூடியது ஆத்மநிக்ஷேபரூபமான ப்ரபத்தி என்பது தே₃. ஸ. அவனையே உபாயமாக வரிப்ப தாகிற (கே₃ாப்த்ருத்வ வரணமாகிற) ப்ரபத்திக்கு மற்ற ஐந்தும் ஸம்ப₄ாவித ஸ்வப₄ாவங்களே; அதாவது நெல் குத்தி னல் வியர்வை வடிவதுபோலே எம்பெருமானருளால் படிப் படியாக ஏற்படும் தன்மைகளே என்பது தெ ஸ. (7) அஶக்தியினுல் ஏற்கனவேயுள்ள உபாயாந்தரத்யாக₃த்தையே கீ₃தையில் 'பரித்யஜ்ய' என்று அநுவாத₃ம் செய்கிறது என்பது தே₃. ஸ. உபாயாந்தரங்களைக் கைவிடுவதை ப்ரபத்திக்கு அவஶ்யமான அங்க₃மாகவே கீ₃தை விதி₄க்கிறது. உபாயாந் தரங்களை விட்டே எம்பெருமானைப் பற்றவேண்டும் என்பது தெ. ஸ. (8) ப₄க்தியை அநுஷ்டி₂ப்பதற்கு வேண்டிய ஜ்ஞாந ஶக்திகள் இல்லாதவர்களும், இருந்தாலும் காலவிளம்ப₃ம் பொறுக்காதவர்களும் ப்ரபத்திக்கு அதி₄காரிகள்; ஜ்ஞாநஶக்தி களை உடையவர்களாய், காலதாமதம் பொறுக்கக்கூடியவர்கள் ப₄க்திக்கு அதி₄காரிகள் என்பது தே₃. ஸ. ஸ்வரூபத்தைப்

பற்றிய உண்மையறிவுடையவர்கள் அனைவருமே ப்ரபத்திக்கு அதி₄காரிகள். அவ்வுண்மையறிவு இல்லாதவர்களே உபாயாந்தரங்களைப் பற்றுகிறார்கள். "*நரஸ்ய பு₃த்₃தி₄தௌ₃ர்ப₃ல்யாத் உபாயாந்தரமிஷ்யதே*" [ஸ்வரூபஜ்ஞானம் சரிவர இல்லாத மனிதனுக்கே உபாயாந்தரம் விதி₄க்கப்படுகிறது.] என்னும் ப்ரமாணம் இதையே காட்டுகிறது என்பது தெ. ஸ. (9) ப்ரபத்தி எப்போதுமே எம்பெருமானுக்கு உகப்பை விளைத்து, கோரிய ப₂லனை விளைத்தே தீரும் என்பது தே₃. ஸ. மற்ற புருஷார்த்த₂விஷயத்தில் இது உண்மையானாலும், ப₄க₃வத் ப்ராப்தி விஷயத்தில் இந்த நியமம் இல்லை. எம்பெருமானுடைய திருவுள்ளத்திற்கு அநுகூலமாயிருந்தால்தான் ப்ரபத்தி ப₄க₃வத்ப்ராப்தியை விளைக்கும். ப₄க₃வதி₃ச்சை₂யே ப₄க₃வத் ப்ராப்திக்கு ஹேது. இதை ப₄ரதப்ரபத்தியில் காணலாம் என்பது தெ. ஸ. (10) ப்ரபந்நனுக்குப் பாபஸம்ப₃ந்த₄மும், உபாயாந்தரஸம்ப₃ந்த₄மும் ஏற்பட்டால், அவன் மறுபடியும் ஶரணாக₃தியை அநுஷ்டி₂க்கவேண்டும் என்பது தே₃. ஸ. அப்போது முன் ப்ரபத்தியை நினைவிற்கொள்வதே ப்ராயஶ்சித்தமாகும். இதனாலேயே தினந்தோறும் அறிந்தும், அறியாமலும் உபாயங்களுடையவும், பாபங்களுடையவும் ஸம்ப₃ந்த₄ம் ஏற்படக்கூடுமாகையாலே த்₃வயத்தை எப்போதும் அர்த்த₂த்துடன் அநுஸந்தி₄க்கிறார்கள்—என்பது தெ. ஸ. (11) ப₄க்தி அல்லது ப்ரபத்தி தவிர மோக்ஷோபாயம் வேறில்லை; "ப₄க்த்யா வா ப்ரபத்யா வா ப்ராப்யோऽஹம் நாந்யதா₂ ப்ராப்ய:" என்னும் ப்ரமாணம் இதைக் காட்டுகிறது. ஆகையால் கர்மயோக₃ம், ஜ்ஞானயோக₃ம் முதலான உபாயாந்தரங்களுக்கு மோக்ஷத்தைக் குறித்து ஸ்வதந்த்ரோபாயத்வம் இல்லை என்பது தே₃. ஸ. பெரும்பாலானவர்கள் விஷயத்தில் ப₄க்தியோ ப்ரபத்தியோ மோக்ஷகாரணமாக ஆனாலும், சிலர் விஷயத்தில் கர்மயோக₃ம் முதலானவை மோக்ஷத்துக்கு நேர் உபாயமாகவும் ஆகலாம் என்று புராணங்களில் சொல்லியிருக்கிறது. கர்மஜ்ஞானப₄க்தியோக₃ங்கள் மூன்றும் கைவல்ய மோக்ஷத்துக்குத் தனித்தனி உபாயமென்று கீ₃தார்த்த₂ஸங்க்₃ரஹத்தில் ஆளவந்தார் அருளினார். அத்தகைய கைவல்யநிஷ்ட₂னுக்கு அந்திமஸ்ம்ருதியின்போது ப₄க₃வானிடம் போ₄க்யதாபு₃த்₃தி₄

விளைந்தால் அவனுக்கு ப₄க₃வத்ப்ராப்தியே இந்த ஸ்வதந்த்ரோபாயங்களால் கிடைத்துவிடுமாகையால் இவை தனித்தனி உபாயமாகவும் சில சமயங்களில் ஆகின்றன என்பதை மறுக்க முடியாது என்பது. தெ. ஸ. (12) மோக்ஷார்த்த₂ப்ரபத்தியில் ஸ்வநிஷ்டை₂, உக்திநிஷ்டை₂, ஆசார்யநிஷ்டை₂ என்னும் பே₄த₃முண்டு என்பது தே₃. ஸ. எம்பெருமான் விஷயத்திலும், ஆசார்யன் விஷயத்திலும் பரக₃தஸ்வீகாரநிஷ்டை₂, ஸ்வக₃த ஸ்வீகாரநிஷ்டை₂ என்னும் பே₄த₃ம் உண்டு. 'ஆசார்யாபி₄மானமே உத்தாரகம்' என்னும் நினைவே ஆசார்யன் விஷயத்தில் பரக₃தஸ்வீகாரநிஷ்டை₂யாகும். இதுவே தலைசிறந்தது; 'எம்பெருமானார் ஸம்ப₃ந்த₄மே உத்தாரகம்' என்பது இந்நிஷ்டை₂யின் உச்சநிலை என்பது தெ.ஸ. (13)விபு₄வான எம்பெருமானுக்கு அந்த:ப்ரதே₃ஶமில்லாத ஜீவன் முதலான அணுப்பொருள்களில் அந்த:ப்ரவேஶம் கிடையாது. விபு₄வான பொருள்களில் ப₃ஹி:ப்ரதே₃ஶமில்லாமையாலே அவனுக்கு · ப₃ஹிர்வ்யாப்தியும் கிடையாது என்பது தே₃. ஸ. அக₄டிதக₄டநாஶக்தியிஞலே எம்பெருமானுக்கு அணுப்பொருள்களில் · அந்தர்வ்யாப்தியும், விபு₄ப்பொருள்களில் ப₃ஹிர்வ்யாப்தியுமுண்டு என்பது தெ. ஸ. (14) எம்பெருமான் ஒவ்வொரு அணுப்பொருளிலும் பூர்ணனுக இருக்கிருன் என்று உபநிஷத்துக்கள் கூறுவதற்கு அவனுடைய ஸ்வரூபம் முழுவதும் அவ்வணுப்பொருள்களில் உள்ளது என்று பொருள்கொள்ளலாகாது; ஓர் அணுப்பொருளில் ஸ்வரூபம் அடங்கிவிட்டால் மற்ற பொருள்களில் வியாபிப்பதற்கு ஸ்வரூபம் இல்லாமற்போய்விடுமாகையால். ஆகையால் பூர்ணனுயிருக்கிருன் என்னும் வாக்யங்களுக்கு—அவ்வணுப்பொருள்களில் ஸ்வரூபம் முழுவதும் உள்ளதுபோலே கு₃ணங்களை வெளிப்படுத்திக் கார்யங்கள் செய்கிருன் என்றே பொருள் கொள்ளவேணும் என்பது தே₃.ஸ. அக₄டிதக₄டநாஶக்தியிஞலே ஒவ்வொரு அணுவிலும் எம்பெருமானுடைய ஸ்வரூபம் முழுவதுமுள்ளது என்பதே மூற்கூறிய ஶ்ருதிவாக்யங்களின் பொருள். "நீர்தொறும் பரந்துளன் பரந்தஅண்டமிதென" [திருவாய் 1-1-10] என்று ஆழ்வாரும் இதை நிலைநாட்டிஞர். க்ருத்ஸ்நப்ரஸக்த்யதி₄கரணத்தில் "ஶ்ருதேஸ்து ஶப்₃த₃மூலத்வாத்" [2-1-27] என்று பு₃த்₃தி₄க்கு எட்டாத இவ்விஷ

யத்தை ஶ்ருதி சொல்லுவதால் ஒப்புக்கொள்ளவேண்டியதே என்று ஸூத்ரகாரர் முடிவு கட்டினார். ஆகையால் ஒவ்வொரு பொருளிலும் ஸ்வரூபத்தாலேயே எம்பெருமான் நிறைந்திருக்கிறான் என்பது தெ. ஸ. (15) ஶ்ரிய:பதிக்கு எப்படி ஸ்வரூப விபு₄த்வமுண்டோ அப்படியே ஸ்ரீதே₃விக்கும் உண்டு என்பது தே₃. ஸ. மற்ற ஜீவரைப்போலே ஸ்ரீதே₃விக்கு அணுத்வமே இயல்வானது. எம்பெருமான் அக₄டிதக₄டநாஶக்தியினாலே அணுப்பொருள்களிலும் பூர்ணமாக வ்யாபித்திருப்பதுபோலே, இவளும் அணுவாயிருந்தபோதிலும் அக₄டிதக₄டநாஶக்தியினாலே எம்பெருமான் வியாபித்திருக்குமிடமெங்கும் வியாபித்திருக்கிறாள். இவ்விஷயத்தையே "யதா₂ ஸர்வக₃தோ 'விஷ்ணு:' [வி-பு.1-8-17] என்னும் ஶ்லோகத்தின் வ்யாக்₂யானத்திலே "ப₄க₃வாந் விபு₄த்வேந ஸர்வக₃த: ; அஸ்யாஸ்து ஶக்தி வஶாத், அணுத்வேऽபி தத்ர தத்ர ஸந்நித₄ாநாத் ஸர்வக₃தத்வம் உக்தம்"[எம்பெருமான் விபு₄வாயிருந்துகொண்டு ஸர்வவ்யாபியாயிருக்கிறான். இவள் அணுவாயிருந்தபோதிலும் (அக₄டிதக₄டநா) ஶக்தியினாலே எம்பெருமான் இருக்குமிடமெங்கும் வ்யாபித்திருக்கையாலே இவளுக்கு ஸர்வவ்யாபித்வம் சொல்லப்பட்டது] என்று எங்களாழ்வான் அருளினார். ஆகையால் பிராட்டியின் ஸ்வரூபத்துக்கு இயல்வாயுள்ளது அணுத்வமே என்பது தெ. ஸ. (16) பெரியபிராட்டியார் புருஷகாரமாயிருப்பதோடு, மோக்ஷப₂லப்ரத₃ாநஸங்கல்பத்தை எம்பெருமான் செய்யும்போது, அவனோடு சேர்ந்து அந்த ஸங்கல்பத்தில் அந்வயிக்கிறாளாகையாலே அவளுக்கு (அப்ரத₄ாநமான) உபாயத்வமும் உண்டு என்பது தே₃. ஸ. எம்பெருமானுக்குப் பரதந்த்ரையாய், சேதனனுக்கு மோக்ஷமளிக்கச்சொல்லி மன்றாடும் இவளுக்கு, அதிலிருந்தே அதை அளிக்க வல்லமையில்லை என விளங்கும். ஆகையால் மோக்ஷப்ரத₃ாநஸங்கல்பம் செய்வது ஸ்வதந்த்ரனான எம்பெருமானே. மோக்ஷப்ரத₃ாநஸங்கல்பத்தில் இவளும் கூட அந்வயிப்பதாகக்கொண்டாலும், அவனுடைய விருப்பத்தைப் பின்செல்வதாய்த் தேறுமேயொழிய ஸ்வதந்த்ரனுடைய ஸங்கல்பம்போல் உபாயத்வத்துக்கு உறுப்பாகாது. இதனாலேயே, *"அஹம் மத்ப்ராப்த்யுபாய: ...... லக்ஷ்மீ: புருஷ*

*காரத்வே நிர்த்தி$_3$ஷ்டா ... நாந்யதா$_2$ லக்ஷணம் ப$_4$வேத்''* [நான் என்னையடைய உபாயம்;...லக்ஷ்மியானவள் புருஷகாரத்வ முடையவளாகவே சொல்லப்பட்டாள்...( எங்களிருவர்க்கும் ) வேறுவித$_4$மாக லக்ஷணம் கொள்ளலாகாது] என்று பாஞ்சராத்ர *ஶா*ஸ்த்ரத்தில் ப$_4$க$_3$வானுக்கு உபாயத்வமும், பிராட்டிக்குப் புருஷ காரத்வமுமே லக்ஷணம் என்று உரைக்கப்பட்டது. பட்டரும் அஷ்ட*ஶ்*லோகியில், *'' ஸ்ரியம் ஸம்ஸ்ரித்ய...அங்க்$_4$ரீ ஹரேராஶ்ரயே இஷ்டோபாயதயா ''* என்று புருஷகாரமான பிராட்டியை ஆ*ஶ்*ர யிப்பதைத் தனியே சொல்லி, எம்பெருமானுடைய திருவடியிணையை உபாயமாகப் பற்றுவதாக அருளினர். (17) (பரப்$_3$ரஹ்மத் திற்கேயுரிய கர்மாநுகு$_3$ணமாக உள்நுழைந்து நியமித்தல் இல் லாமையாலே)அப்ரத$_4$ாநமான விபு$_4$த்வமும்,(புருஷகாரத்வத்தோடு கலந்திருக்கையால்) அப்ரத$_4$ாநமான உபாயத்வமும், (நேரே ஸ்ருஷ்டிமுதலானவற்றைச் செய்யாமல் எம்பெருமானைச் செய் விக்கையால்) அப்ரத$_4$ாநமான ஜக$_3$த்காரணத்வமும், (பத்நீத் வத்தையிட்டு) அப்ரத$_4$ாநமான *ஶே*ஷித்வமும், ப்ராப்யத்வமும் பெரியபிராட்டியார்க்கும் இருக்கையாலே,இவள் பரப்$_3$ரஹ்மமல்லா விடினும், ஈ*ஶ்*வரகோடியிலேயே சேர்க்கத்தக்கவள் என்பது தே$_3$*ஶி*கன் திருவுள்ளம். (தே$_3$*ஶி*கஸம்ப்ரத$_3$ாயஸ்த$_2$ர்களில் சிலர் இவளைப்பரப்$_3$ரஹ்மமாகவும் கொள்வது தே$_3$*ஶி*கன் திருவுள்ளத் துக்கு முரண்பட்டது. வி*ஶி*ஷ்டாத்$_3$வைதத்தையே வி*ஶி*ஷ்டத்$_3$வைதமாக்கக் கூடியது.) *''ஈஶாதே தே$_3$வ ஏக:''*முதலான உப நிஷத்துக்கள் ஈ*ஶ்*வரன் ஒருவனே என்கையாலும், *'' அஸ்யே ஶாநா ஜக$_3$தோ விஷ்ணுபத்நீ''* முதலான வேத$_3$வாக்யங்கள் இவளுடைய ஈ*ஶ்*வரத்வம் விஷ்ணுவுக்குப் பத்னியாயிருப்பதால் ஏற்பட்டதே என ஓதுகையாலும்,மற்ற ஜீவர்களைப்போலே எம் பெருமானுக்கு அத்யந்த பரதந்த்ரையாயிருக்கையே இவளுக்கு ஸ்வரூபமாகையாலும், சிறப்பளிப்பதாகையாலும், இவளை ஜீவகோடியில் சேர்ப்பதே உசிதம் என்பது தெ. ஸ. *''ப்$_3$ரஹ்ம ஶப்$_3$தே$_3$ந புருஷோத்தமோऽபி$_4$தீ$_4$யதே...ஸ ச ஸர்வேஶ்வர ஏவ; அதோ ப்$_3$ரஹ்மஶப்$_3$த$_3$ஸ் தத்ரைவ முக்$_2$யவ்ருத்த:''* [ஸ்ரீப$_4$ாஷ்யத் தொடக்கம்] முதலானவிடங்களில் ஸ்ரீப$_4$ாஷ்யகாரர் புருஷோத்த மனை ஸர்வே*ஶ்*வரனிடமே ப்$_3$ரஹ்ம*ஶ*ப்$_3$த$_3$ம் முக்$_2$யமானது என்றருளியிருப்பதும் இதை வலியுறுத்துகிறது. (18) ஆநந்த$_3$

மயனுன ப்₃ரஹ்மத்திற்கு து₃:க்க₂மிருக்கமுடியாதாகையாலும், பிறர் துன்பங்களைய வல்லமையுடையவன் அவற்றைக் களையாமல் அவற்றைக்கண்டு துன்புறமுடியாதாகையாலும், (பட்டர் முதலானுர்) "பிறர் துன்பங்கண்டு துன்புறுகை த₃யை" என்று கூறுவது த₃யாலக்ஷணமாகாது. "பிறர் துன்பங்களைக் களைவதில் விருப்பம்"என்பதே சரியான த₃யாலக்ஷணம் என்பது தே₃. ஸ. எம்பெருமானை ஆநந்த₃மயன் என்றது எல்லாக் கல்யாணகு₃ணங்களுக்கும் உபலக்ஷணமாய், எல்லாக் கல்யாணகு₃ணங்களுமுடையவன் என்றபடியேயாகும். பிறர் துன்பங்கண்டு இன்புறுவது ஹேயகு₃ணமேயொழியக் கல்யாணகு₃ணமல்ல ; அவ்வானந்த₃ம் எம்பெருமானிடம் இருக்கமுடியாது. அதுபோலவே, பிறர் துன்பங்கண்டு துன்புறுவது கல்யாணகு₃ணமேயொழிய ஹேயகு₃ணமன்று. ஆகையால் அது அவஶ்யம் எம்பெருமானிடம் உண்டு. துன்பத்தைப் போக்கவல்லவனுயினும், ஜீவனுக்கு ப்ரத₂மப்ரவ்ருத்தியில் ஸ்வாதந்த்ர்யமளித்து, அதனுல் ஏற்படும் அவனது ப்ரதிபத்திக்கும், கர்மத்திற்கும் அநுகு₃ணமாகப் ப₂லனளிப்பது என்னும் நியமத்தைக் கொண்டிருக்கையால், இவனது ப்ரதிபத்தி திருந்திலொழிய இவனது துன்பத்தை எம்பெருமாலுல் போக்க இயலாது. ஆகையால் ஸம்ஸாரிகளின் துன்பங்கண்டு துன்புறுகையே த₃யாலக்ஷணமாகும். "*ஸ ஏகாகீ ந ரமேத*" [அவன் ஒருவனுய் இன்புறவில்லை] என்று உபனிஷத்திலும், "*வ்யஸநேஷு மநுஷ்யாணும் ப்₄ருஶம் ப₄வதி து₃:க்கி₂த:*" [ரா-அ 2-40] [மனிதர்களின் துன்பத்தில் (அவர்களைக்காட்டிலும்) மிகவும் துன்புறுகிருன் ராமன்] என்று ஸ்ரீராமாயணத்தில் கு₃ணப்ரகரணத்திலும், "ஆ! ஆ!" என்று ஹாஹாகாரத்துடன் இரங்குவதாக (த₃யைபுரிவதாக) பலவிடங்களில் ஆழ்வார்களும், "*ஸ்வார்த்த₂நிரபேக்ஷா பரது₃:க்க₂ா ஸஹிஷ்ணுதா த₃யா*" [தன் பயன் கருதாமல் பிறர் துன்பத்தைக் கண்டு பொறுக்காமலிருக்கை த₃யை] என்று ஸ்ரீப₄ாஷ்யகாரரும் அருளியிருப்பது இவ்விஷயத்தில் ப்ரமாணம் என்பது தெ. ஸ. (19) "தே₃ாஷத்தையும் கு₃ணமாக அல்லது போ₄ாக்₃யமாகக் கொள்வது வாத்ஸல்யம்" என்று ஶ்ருதப்ரகாஶிகாசார்யர் முதலானுர் வாத்ஸல்யலக்ஷணமுரைப்பதை ஒப்புக்கொண்டால், ஜீவன் தே₃ாஷங்களை மேன்மேலும்

செய்ய இடங்கொடுத்துவிடும். ஆகையால் 'தோ₃ஷங்களைக் காணுக்கண்ணிட்டிருக்கை' என்பதே வாத்ஸல்யலக்ஷணம் என்பது தே₃. ஸ. *"குன்றனைய குற்றம் செயினும் குணங் கொள்ளும்"* [முதல் திருவ 41] *"செய்த குற்றம் நற்றமாகவே கொள் ஞாலநாதனே!"* [திருச்சந்த 111] என்று ஆழ்வார்கள் எம்பெருமானுக்கு தோ₃ஷபோ₄க்₃யத்வமுண்டு என அருளுகை யாலும், "அற்றமுரைக்கில்" என்னும் ஞானசாரப் பாசுரத் தில் அருளாளப்பெருமாள் எம்பெருமானார் வாத்ஸல்ய *ஶப்₃த₃* நிர்வசநபூர்வகமாக தோ₃ஷபோ₄க்₃யத்வமே வாத்ஸல்யமென நிரூபிக்கையாலும், தோ₃ஷபோ₄க்₃யத்வமே வாத்ஸல்யலக்ஷணம். இப்படிக்கொண்டால் ஜீவன் தோ₃ஷங்களைச் செய்ய இடங் கொடுத்துவிடுமெனில், 'தோ₃ஷங்களைக் காணுமலிருக்கை வாத்ஸல்யம்' என்று கொண்டாலும் ஜீவன் தோ₃ஷங்களைச் செய்ய இடங்கொடுத்துவிடுமாகையால், இந்த தோ₃ஷாபத்தி துல்யம். இந்த வாத்ஸல்யகு₃ணத்தைத் தன் விஷயத்தில் எம்பெருமான் காட்டுவான் என்பதை ஜீவன் அறுதியிடமுடி யாதாகையால், இவ்வாபத்திக்கு இடமில்லை. ஆகையால்,'தோ₃ஷ போ₄க்₃யத்வம் வாத்ஸல்யம்' என்பதே வாத்ஸல்யலக்ஷணம் என்பது தெ. ஸ. (20) எட்டுவித₄மான ப₄க்தியுடையவர்க ளாய், எம்பெருமானையே ப்ராப்யப்ராபகங்களாகக்கொண்ட ஆழ்வார்கள் போன்றவர்களாயினும். அவர்கள் உயிரோ டிருக்கையில் அவர்கள் ஜாதி கழியாது. ஆகையால் தாழ்ந்த வர்ணத்தில் உதி₃த்த அத்தகையவர்களையும், உயர்ந்த வர்ணத் திலுதித்த ப்ரபந்நன் வாக்கிலுல் மாத்திரமே கௌ₃ரவிக்கலாம் என்பது தே₃. ஸ. *"ப₄க்திரஷ்டவித₄ா"* *"ந ஶூத்₃ரா ப₄க₃வத்₃ ப₄க்தா:"* முதலான ப்ரமாணங்களையும், *"பழுதிலா ஒழுக லாற்று"* [திருமாலை 42] முதலான ஆழ்வார்களின் அருளிச்செயல் களையும், மது₄ரகவிகள் நம்மாழ்வாரிடமும், லோகஸாரங்க₃ மஹாமுனிகள் திருப்பாணாழ்வாரிடமும் நடந்துகொண்ட ஆசா ரத்தையும் கொண்டு பார்க்கும்போது பரமப₄க்தர்களுக்குத் தாழ்ந்த ஜாதி நீங்கிவிடும் என விளங்கும். ஆகையால், உயர்ந்த ஜாதியில் பிறந்த ப்ரபன்னனும் அவர்களைக் குல தெய்வமாகப் பூஜிக்கவே வேண்டும் என்பது தெ. ஸ. (21) ஸ்த்ரீஶூத்₃ரர்களுக்குத் திருமந்திரத்தை ப்ரணவமில்லா

மலே உபதே3ஶிக்கவேண்டும் என்பது தே3. ஸ. அவர்களுக்கும் (ஸ்வரமில்லாத) ப்ரணவத்தோடு சேர்த்தே உபதே3ஶிக்கலாம் என்பது தெ. ஸ. (22) ஜக3த்3வ்யாபாரவர்ஜாதி4கரணத்தின்படி (4-4-6) நித்யமுக்தர்களுக்கு ஜக3த்ஸ்ருஷ்டி முதலானவற்றில் அந்வயமில்லை என்பது தே3. ஸ. ஸர்வாத்மகத்வமில்லாமையாலே, நித்யமுக்தர்களுக்கு எம்பெருமானுக்குப்போலே 'நானே பலவாகிறேன்' என்னும் ப3ஹுப4வநஸங்கல்பம் முதலானவற்றில் அந்வயமில்லாவிடினும், எம்பெருமான் நியமனத்தாலே ப்3ரஹ்மாதி3களைப் போலேயும், அதற்கு மேலேயும் ஜக3த்ஸ்ருஷ்டி முதலானவற்றை இவர்கள் செய்யத் தடையில்லை. அதனாலேயே எம்பெருமானார் ஸ்ரீவைகுண்ட2க3த்3யத்தில் *"ஸ்வஸங்கல்பமாத்ராவக்லுப்த ஜக3ஜ் ஜந்ம ஸ்தி2தி த்4வம்ஸாதி3கே ஸ்ரீமதி விஷ்வக்ஸேநே ந்யஸ்த ஸமஸ்தாத்மைஶ்வர்யம்"* [தன் ஸங்கல்பமாத்திரத்தால் செய்யப்பட்ட ஜக3த்ஸ்ருஷ்டி ஸ்தி2தி ஸம்ஹாரங்கள் முதலானவற்றையுடைய, செல்வம் நிறைந்த விஷ்வக்ஸேநரிடம் தன் எல்லாச் செல்வத்தையும் ஒப்படைத்திருப்பவனை] என்று அருளினார் என்பது தெ. ஸ.

14. முந்திய பாராவில் தே3ஶிக ஸம்ப்ரத3ாயத்திற்கும், தென்னாசார்ய ஸம்ப்ரத3ாயத்திற்கும் உள்ள முக்கிய பே4த3ங்கள் காட்டப்பட்டன. மற்றும் சிலவும் உண்டு. பிற்காலத்தில் தத்வஹிதபுருஷார்த்த2ங்களில் இருந்த இந்தக் கருத்துவேற்றுமைகளை அடிப்படையாகக்கொண்டு அநுஷ்ட2ானபே3த3ங்களும் பல ஏற்பட்டன. தம் முயற்சியான கர்மாநுஷ்ட2ானங்களுக்கு ப்ராத4ாந்யமளிப்பதாக தே3ஶிகஸம்ப்ரத3ாயமும், பரார்த்த2ப்ரதிபத்திகார்யமான கோயில் கைங்கர்யங்களுக்கு ப்ராத4ாந்யமளிப்பதாகத் தென்னாசார்ய ஸம்ப்ரத4ாயமும் வளர்ந்தது. குளத்தை காத்தவர் வடகலையார்; கோயிலைக் காத்தவர் தென்கலையார் என்னும் பொதுஜன வழக்கும் ஏற்பட்டது. தே3ஶ காலாதி3பே4த3த்தாலே அநுஷ்ட3ானங்கள் எந்த மதத்திலும் பலவித4மான வேறுபாடுடையவையாகவேயிருப்பதைக் காண்கிறோமாகையாலும், இப்போது எல்லா அநுஷ்ட2ானங்களுமே வேக3மாக மறைந்து வருகின்றனவாகையாலும், அவை பற்றி விவரிக்காமல் விடுகிறோம். ஸத3நுஷ்ட2ாநத3ர்ப்பணத்தில் தென்கலையாசாரங்கள் ப்ரமாணங்காட்டி நிலைநாட்டப்பட்டுள்ளன.

15. 13-வது பாராவில் காட்டப்பட்ட ஸம்ப்ரதாய பேதங்களை ஸ்ரீரங்கஸ்ரீவிவேசநமெழுதியவர் நன்கு அறிவார். 13-வது பாராவில் நாம் 'தெ. ஸ.' என்று குறித்திருக்கும் கொள்கைகளில் பெரும்பாலானவற்றை தேஶிகன் தமது நூல்களில் எடுத்துக் கண்டித்திருப்பதையும், தென்னுசார்ய க்ரந்தங்களில் இக்கொள்கைகள் நிலைநாட்டப்பட்டிருப்பதை யும் வித்வானுன இவர் அறியாமலிருக்க முடியாது. ஸித்தோபாயவிஜயத்தில் நாமும் இவருக்கு எடுத்துக்காட்டியிருக்கிறேம். அப்படியிருக்க, பெரியவாச்சான்பிள்ளை, பிள்ளைலோகாசார்யர் முதலான அனைவரும் வடகலையாரே என்று இவர் எழுதியிருப்பது எத்தனை பெரிய பொய் என்பதை நடுநிலையாளர்கள் நோக்க வேணும். மற்றும் பல பொய்களையும் இவர் தமது அபத்தச் சுவடியில் இட்டு நிரப்பியுள்ளார். பெரியவாச்சான்பிள்ளை முதலான மஹாசார்யர்களைக் கண்டபடி வைது, ஸுதர்ஶனத்தில் 'அபயப்ரதராஜ விஜய'த்தின் மூலம் பல தெளிவுகளைப் பெற்று, ஸ்ரீஸூக்த பாஷ்யத்தைப்பற்றிய தெளிவை உலகறிய 'ஹிந்து' பத்திரிகையில் ஒப்புக்கொண்டு, மற்றவற்றைப் பற்றி அந்திமகாலம்வரை பல வருஷங்கள் வாய்திறவாமலிருந்தவரும், அந்திமகாலத்தில் தம்பி பெயரால் 'திருவரங்கமாராய்ச்சி' என்னும் நூலெழுதிப் பெரியபெருமாளிடமே அபசாரப்பட்டு, ஸுதர்சனத்தில் வெளிவந்த ஸ்ரீரங்கராஜ விஜயத்தின் மூலம் நிரஸிக்கப்பெற்றவரும், தேஶிக ஸ்ரீஸூக்தியையே 'அஸமஞ்ஜஸம்' (அசட்டுத்தனமானது) என எழுதியச்சிட்டவருமான D. T. தாதாசார்ய ஸ்வாமியால் ஆதாரமில்லாமலும் பொய்யான ஆதாரங்களைக் காட்டியும் எழுதப்பெற்று, ஸ்ரீகாஞ்சீ மஹா வித்வான் ஸ்வாமியால் உடனே நிரஸிக்கப்பெற்ற "ஸம்ப்ரதாய ப்ரதீபம்" எனும் சுவடி, அபிதான விளக்கம்போன்ற அதி நவீன நூல்கள், ஸமீபகாலத்தில் கல்பிக்கப்பட்ட ஸ்ரீஸூக்த பாஷ்யம் போன்றவை தவிர ப்ராசீநமான ப்ரமாண நூல்களை இவர் தாம் எழுதியிருப்பவற்றுக்கு ஆதாரமாகக் காட்டவில்லை. கோயிலொழுகு போன்றவற்றிலிருந்து சில வாக்யங்களை எடுத்து, ப்ரகரணத்துக்கு முரணான பொருளை அவற்றுக்குக் கல்பித்திருக்கிறார். அபயப்ரதராஜ விஜயம், ஸித்தோபாய விஜயம், கைவல்ய ஸித்தாஞ்ஜனம் முதலானவற்றில் அடியறுக்கப்

பட்ட வாத₃ங்களையே திருப்பியெழுதுகிருர். ஒரு பானை சோற்றுக்கு ஒரு சோறு பதம் எனும் ரீதிக்கும் மேலாக, இவரது இந்த அப₃த்₃த₄ச்சுவடியில் இப்படி நிராதா₄ரமாகவும், பொய்யாகவும், திரித்துக் கூறியும், அடிபட்ட வாத₃ங்களையும் இவர் எழுதியிருக்கும் வாக்யங்கள் பலவற்றை இவ்வாசார்ய வைப₄வத்திற்குப் பிறகு சேர்க்கப்பட்டிருக்கும் "தென்னுட்டு ப்₃ராஹ்மண சரித்திரம்" என்னும் நமது கட்டுரையில் (பக்கம் 78, 79) கொடுத்திருக்கிருேம். அதில் கண்டுகொள்ளலாம்.

15. அன்பர்களே! ஆரியர்களே! நடுநிலைநிற்கும் நல்லோர்களே! இப்படி விவேசநூல் முழுவதும் பொய்களையே இட்டு நிரப்பியதோடல்லாமல், அச்சுவடியின் கடைசியில் பக்கம் 22, 23ல் "No.P 5453-55 மைசூர்" என்னும் தலைப்பில் எறும்பியப்பா ஸாதித்ததாக ஒரு க்₃ரந்த₂த்தைத் தமிழில் அச்சிட்டுள்ளார். கோ₃மட₂ரங்க₃நாத₄ப₄ாஷ்யத்தில் பல மாறுதல்களைச் செய்து ரங்க₃நாத₂முனிப₄ாஷ்யமாகவும், நஞ்சீயர்ப₄ாஷ்யமாகவும் ஆக்கி, அது கடிலநதியில் அகப்பட்டது என்று எழுதி அச்சிடப்பெற்ற ஸ்ரீஸூக்த ப₄ாஷ்ய நூல்போலவும், பூர்வாசார்யர்கள் காலத்தில் எவரும் தொட்டறியாத 'ப்ரபந்நபாரிஜாதம் எனும் நூலைக் கல்பித்து அதை நடாதூரம்மாள் தலையில் ஏறிட்டது போலவும், மற்றும் பல பூர்வக்₃ரந்த₂ங்களில் உத்க்ஷேப ப்ரக்ஷேபங்களைச் செய்ததுபோலவும், எறும்பியப்பாவின்பேரிலும், இந்நூலை ஏறிட்டிருக்கிருர்கள் என்பது இதை ஒருமுறை படித்தாலே விளங்கும். இதை அச்சிட்டதால் 'பொய்யல்லது எழுத அறியாதவர்' எனும் ப்ரஸித்₃தி₄யைத் தமக்கு விளைத்துக்கொண்டது தவிர வேறு எப்பயனுமில்லை.

"ஏகோ ऽஹமஸ்மீதி ச மந்யஸே த்வம்
ந ஹ்ருச்ச₂யம் வேத்ஸி முநிம் புராணம் ।
யோ வேதி₃தா கர்மண: பாபகஸ்ய
தஸ்யாந்திகே த்வம் வ்ருஜிநம் கரோஷி ॥"

[ப₄ாரதம்-ஶகுந்தலா வாக்யம்]

["(இந்த ஶகுந்தலையோடு புரிந்த கா₃ந்த₄ர்வமணத்தை மறுக்கும்போது) நான் ஒருவன்தானேயிருக்கிறேன்" என எண்ணுகிருய் நீ;

அனைத்தையும் காணும் புராணபுருஷன் உன் நெஞ்சிலேயே யிருப்பதை அறிகின்றாயல்லை; அவன் நீ செய்யும் பாபத்தைப் பார்த்துக்கொண்டேயிருக்கிறான். அவனுக்கு அருகிலிருந்து கொண்டே நீ பாபம் புரிகிறாய்.] "தன்னெஞ்சறிவது பொய் யற்க; பொய்த்தபின் தன் நெஞ்சே தன்னைச்சுடும்" [திருக்குறள் 293] முதலான தென்மொழி வடமொழி நீதிமொழிகளையும், இவற்றுக்கு மூலமான "*ஸத்யம் வத₃*" என்னும் வேதா₃நு *ஶா*ஸனத்தையும் இவர் மறந்தார்போலும்!

16. ஆக, 'ஸம்ப்ரதா₃ய பே₄த₃மில்லை' என்னும் பெரும் பொய் தலையெடுக்கமுடியாதபடி இக்கட்டுரையால் தகர்க்கப் பட்டது. இவரது மற்ற பொய்களில் பெரும்பாலானவற்றை ஸ்ரீ உ. வே. *ஶ*தாபி₄ஷேகம் ஸ்வாமி இம்மலரில் சேர்க்கப் பட்டுள்ள *விவேசநஸமாலோசனத்தில்* அடியறுத்துள்ளார். "வடமாள் என்று குறிக்கப்பட்ட ஆசார்யர்கள் வடகலை யாரே; பூர்வ*ஶி*கை₂யினர் அனைவரும் வடகலையாயிருந்து ஸமீப காலத்தில் தென்கலையாராய் மாறினவர்களே" என்னும் இவ ருடைய ப்₃ரஹ்மாண்ட₃ப்பொய்கள் "*தென்னாட்டு ப்₃ராஹ்மண சரித்திரம்*" என்னும் நமது கட்டுரையால் தகர்க்கப்படுகிறது. இக்கட்டுரையும் இம்மலரில் இணைக்கப்பட்டுள்ளது. இவற்றைக் கண்டபின்பாவது, இவர் இத்தகைய பொய்களை யும் விதண்டா₃வாத₃ங்களையும் எழுதித் தமது மதிப்பையும், தமது ஸம்ப்ரதா₃யத்தின் மதிப்பையும் குலைத்துக்கொண்டு, ஏற்கனவே நலிந்துகிடக்கும் ஸ்ரீவைஷ்ணவ ஸமூஹத்தில் உட்பகைகளை வளர்க்காமல், ஸாத்விகபா₄வத்துடன் தமது அந்திம காலத்தைக் கழிப்பார் என நம்புகிறோம். 'அப்படிக் கழிக்கும்படி நல்லறிவை அளிக்கவேணும்' என்று ஸ்ரீரங்க₃ நாச்சியாரோடு கூடிய ஸ்ரீரங்க₃நாத₂னைப் பிரார்த்தி₂க்கிறோம். "*அந்யோந்ய வைர ஜநநீ விஜஹாத்வஸூயா*" [ஒருவருக் கொருவர் விரோத₄த்தை விளைக்கும் அஸூயை விட்டுப் போகட்டும்.] என்னும் தே₃*ஶி*கன் திருவாக்கு உப₄யஸம்ப்ர தா₃யத்திலும் இத்தகைய செயல்களைச் செய்யும் அனைவர் விஷயத்திலும் ப₂லித்து *ஶா*ந்தி நிலவுவதாகுக.

இனி, 13-வது பாராவில் காட்டப்பெற்ற தென்னாசார்ய ஸம்ப்ரதா₃யத்தை அசைக்க முடியாதபடி நிலைநாட்டிய ப₄ட்டர் தொடக்கமாக மாமுனிகளீறாகவுள்ள ஆசார்யர்களின் வைப₄வத்தைத் தொடர்வோம்.

# ஸ்ரீபராசரபட்டர் வைபவம்



**ஸ்ரீ பராசரபட்டர்**

( ஸ்ரீரங்க$_3$ம் ஆழ்வான் திருமாளிகை )

ஸ்ரீபராஶரப$_4$ட்டார்ய: ஸ்ரீரங்கே$_3$ஶ புரோஹித: ।
ஸ்ரீவத்ஸாங்கஸுத: ஸ்ரீமாந் ஶ்ரேயஸே மேஸ்து பூ$_4$யஸே ॥

[ஸ்ரீரங்க$_3$நாத$_2$னுக்குப் புரோஹிதராய், ஸ்ரீவத்ஸாங்கரென்னும் கூரத்தாழ்வானின் குமாரராய், திருவுடையவரான ஸ்ரீபராஶர ப$_4$ட்டார்யர் எனக்கு மிகுதியான நன்மையின் பொருட்டு ஆகட்டும்.]

எம்பெருமானாருடைய சிஷ்யர்களில் முதல்வரான கூரத்தாழ்வானும், அவருடைய தே3விகளான ஆண்டாளும், பரம விரக்தர்களாய், விஹித விஷய நிவ்ருத்தியுடையவர்களாய் (பதி பத்நீ ஸம்யோக3ம் அற்றவர்களாய்) வாழ்ந்து வந்தார்கள். மழைகாலத்தில் ஒருநாள் நடுப்பகல்வரையில் பெருமழை பொழிந்தமையாலே, ஆழ்வான் உபாத3ானத்திற்குச் செல்லமுடியவில்லை. மறுநாளைக்கென்று சேர்த்து வைக்கும் பழக்கமும் இல்லை. ஆகையால் எம்பெருமானுக்கு ஒரு பழத்தை அமுது செய்வித்துத் தீர்த்த2 ஸ்வீகாரம் செய்து, நம்பெருமாளை ஸேவித்து, திருவாய்மொழியநுஸந்த4ானமே த4ாரகமாக, பட்டினியோடே சயனித்துக் கொண்டார் கூரத்தாழ்வான். அப்போது நம்பெருமாளுக்கு அரவணை ப்ரஸாத3ம் அமுதுசெய்து திருச்சின்னம் ஸேவிக்கும் ஒலி கேட்டது. அது கேட்ட ஆண்டாள் "உம்முடைய ப4க்தர் பட்டினியே கிடக்க, நீர் என்ன குலாவிக் குலாவி அமுது செய்தருளுகிறீர்?" என்று நினைத்தாள். அந்நினைவு பெரிய பெருமாள் திருவுள்ளத்திலே உறுத்தி, திண்ணையிலே தூங்கிக்கொண்டிருந்த உத்தமநம்பி கனவிலே எழுந்தருளி, "நம்பீ! ஆழ்வான் பட்டினி கிடக்கிறார்; நம் அரவணை ப்ரஸாதத்தை—ச2த்ர சாமரங்கள், ஸகலவாத்3யங்களோடு ஶிரஸா வஹித்துக்கொண்டு போய்க்கொடும்" என்று நியமித்தருளினார். நம்பியும் உடனே எழுந்திருந்து, அவ்வண்ணமே ஆழ்வான் திருமாளிகைக்கு அரவணையைக் கொண்டு சென்று "நம்பெருமாள் அனுப்பியிருக்கிறார்; அங்கீ3கரியும்" என்றுசொல்ல, ஆழ்வான் அதை ஶிரஸா வஹித்துக்கொண்டு, தனக்கும் ஆண்டாளுக்குமாக இரண்டு திரளைகளை ஸ்வீகரித்து, எஞ்சியதை ஸ்ரீப4ண்டா3ரத்துக்கு அனுப்பிவிட்டார். ஆண்டாளைப்பார்த்து "நீ என்ன நினைத்தாய்?" என்று ஆழ்வான் கேட்க, அவளும் தன் நினைவைச் சொல்ல, "நீ இப்படி எண்ணலாமோ?" என்று வெறுத்து வார்த்தை சொன்ன ஆழ்வான், ப்ரஸாத3த்தைத் தாமும் ஏற்றுக்கொண்டு, அவளுக்கும் அருளினார். புத்ரகாமேஷ்டி யாக3த்திலுண்டான பாயஸத்தினால் த3சரத2 சக்ரவர்த்திக்கு நான்கு குமாரர்கள் அவதரித்ததுபோலே, இவ்விரண்டு திரளைகளால் ப4ட்டரும் ஸ்ரீராமப்பிள்ளையும் அவதரித்தார்கள். பட்டர் மத்4யம வயஸ்ஸிலேயே பரமபதி3த்து

விட்டார் என்பதும், எம்பெருமானுருக்குப் பிறகு த₃ர்ஶநம் நிர்வஹித்து வந்தார் என்பதும் ப்ரஸித்₃த₄மாகையாலே எம்பெருமானுருக்கு சுமார் 90 வயஸ்ஸூம் ஆழ்வானுக்கு சுமார் நூறு வயஸ்ஸூம் நடக்கும்போதே, க்ருமிகண்ட₂ன் உபத்₃ரவத்துக்குமுன் பட்டர் அவதரித்திருக்கவேண்டும். வைகாசி அனுஷத்தில் பட்டர் அவதரித்தார் என்பது ப₃ஹூ க்₃ரந்த₂ ஸித்₃த₄ம். இவர் பிறந்தவுடன் இவருக்கு நாமகரணம் செய்வதற்காக எம்பெருமானுர் குழந்தையை எம்பாரை எடுத்துவரச் சொல்ல, அவர் குழந்தையின் முகப் பொலிவைக் கண்டு ரக்ஷையாக த்₃வயாநுஸந்த₄ாநம் செய்துவர, குழந்தையின் திருமுக ஒளியைக்கண்ட எம்பெருமானுர் "எம்பாரே! த்₃வயம் பரிமளியாநின்றது; என்செய்தீர்?" என்றுகேட்க, "குழந்தைக்குக் காப்பாக த்₃வயாநுஸந்த₄ாநம் செய்துவந்தேன்" என்று பதில் உரைத்தார் எம்பார். அதுகேட்ட எம்பெருமானுர், "இக்குழந்தைக்குக் கர்த்தவ்யாம்ஶமான மந்த்ரோபதே₃ஶத்திற்கு மூற்பட்ட நீரே இதற்குப் பஞ்சஸம்ஸ்காரம் செய்யும் ஆசார்யராகவும் ஆகக்கடவீர்" என்று நியமித்துத் தம் கையாலே ஐம்படைத் தாலியையும் குழந்தைக்குச் சாத்தியருளி, ஆளவந்தாருடைய இரண்டாம் விருப்பத்தைத் தீர்ப்பதற்காக ஸ்ரீபராஶர ப₄க₃வான் திருநாமமாக, ஸ்ரீபராஶரபட்டர் என்று குழந்தைக்குத் திருநாமமிட்டார். ஸ்ரீபராஶரபட்டர் பா₃ல்யத்திலேயே அதிமேத₄ாவியாய் எம்பெருமானுராலும், நம்பெருமாளாலும் ஸ்ரீரங்க₃ நாச்சியாராலும், சீராட்டி வளர்க்கப் பட்டார். தம் புத்ரனுக அபி₄மானித்து, திருமணத்தூண் களிடையே தொட்டிலிட்டு நம்பெருமாள் பட்டரை லாளனம் செய்தார் என்பது ப்ரஸித்₃த₄ம். "ஸ்ரீரங்க₃ராஜ கமலாபத₃லாளிதத்வம்" என்று பட்டரும் இதை ஸ்ரீரங்க₃ராஜ ஸ்தவத்தில் அருளியிருக்கிறுர். பட்டருக்கு ஸ்ரீரங்கநாதன் என்னும் திருநாமமும் உண்டு என்பது அவர் அருளிய ஸஹஸ்ரநாம பா₄ஷ்யத்திலிருந்து விளங்குகிறது.

பட்டர் சிறுவயஸ்ஸிலேயே மஹா மேதாவியாய் இருந்தார். "ஸர்வஜ்ஞ பட்டன்" என்பவன் ஒருவன் விருதுகளை ஊதிக்கொண்டு பல்லக்கிலே சென்றுன். அதைக்கண்ட சிறுவரான பட்டர் "உடையவர், ஆழ்வான், ஆண்டான், அருளாளப்

பெருமாளெம்பெருமானார், எம்பார் முதலான பெரியவர் களிருக்குமிடத்தில் இவனோடா 'ஸர்வஜ்ஞபட்டன்' என்று விருதூதி வருகிறான்?'' என்று, திருக்கையிலே புழுதியை அள்ளிக்கொண்டு அவனைப் பார்த்து, ''நீ ஸர்வஜ்ஞனன்றோ, இது எத்தனை ? சொல்லு'' என்று கேட்டார். அவன் லஜ்ஜை யடைந்து ஒன்றும் சொல்லமாட்டாமல் வாயடைத்துத் தலைகவிழ்ந்து நின்றான். பட்டரும் அவனைப்பார்த்து, ''கெடுவாய்! 'இது ஒரு கைப்புழுதி' என்று சொல்லி விருதூதிச் செல்லமுடியாமல் அறிவிலியாய் விட்டாயே; இனி உன்னுடைய விருதுகளையும் ஆட₃ம்ப₃ரங்களையும் கைவிடுவாய்' என்று கூறினார். அவனும் ''இவர் யாருடைய குமாரர்?'' என்று விசாரித்து, 'ஆழ்வான் குமாரர்' என்று அங்குள்ளார் சொல்லக் கேட்டு, ''பறப்பதன் குட்டி தவழுமோ?'' என்று ஆஶ்சர்யப் பட்டு பட்டரைத்தன் பல்லக்கிலே வைத்துக்கொண்டு ஆழ்வான் திருமாளிகையிலே விட்டுச் சென்றான் — என்னும் செய்தி இளமையிலேயே இவருடைய மேத₄ா விலாஸத்தைக் காட்டு கிறது. வேத₃ா த்₄யயநம் செய்யும்போதும் ஏகசந்தை க்₃ராஹி யாய் இருந்தவர் இவர். எம்பார் இவருக்குப் பஞ்சஸம்ஸ்கார செய்த ஆசாரியர். திருத்தகப்பனாரான ஆழ்வானும் எம்பாரும் இவருக்கு ஸகலார்த்த₂ங்களையும் சொல்லிவைத்தார்கள். பெரிய பெருமாள் நியமனத்தாலே பெரியநம்பிகள் குடும்பத்தைச் சேர்ந்த மன்னியம்மனை பட்டருக்கு மணம் செய்தார்கள். தி₃வ்யப்ரப₃ந்த₄ வ்யாக்₂யானங்களிலே ஆளவந்தார் முதலான பூர்வாசார்யர்களின் நிர்வாஹங்களைக் காட்டிலும் எம்பெருமானார் நிர்வாஹம் சிறப்புற்றிருக்கும். எம்பெருமானார் நிர்வாஹத்தைக் காட்டிலும் பட்டர் நிர்வாஹம் சிறப்புற்றிருக்கும். பட்டர் நிர்வாஹத்திற்கு மேற்பட்ட நிர்வாஹம் இல்லை. இதை தி₃வ்யப்ரப₃ந்த₄ வ்யாக்₂யாநங்களில் பலவிடங்களில் காணலாம். தம்க்குமுன்பே பரமபத₃மடைந்த கூரத்தாழ்வானுக்கு பட்டரைக்கொண்டு ப்₃ரஹ்மமேத₄ ஸம்ஸ்காரம் செய்வித்தார் எம்பெருமானார். எம்பெருமானாராலே தமக்குப் பிறகு த₃ர்ஶந நிர்வாஹகராக நியமிக்கப்பட்டவர் பட்டர். ஸ்ரீரங்க₃நாத₂னாலே முதன்முதலில் ''வேத₃ாந்தாசார்யர்'' என்னும் விருது கொடுக்கப் பட்டவர் பட்டர். எம்பெருமானார் நியமித்தபடி மைஸூர்

ப்ராந்தத்திலே "வேத₃ாந்தி. மாத₄வாசார்யர்," என்னும் பெயர் கொண்ட அத்₃வைதி வித்₃வானை (எம்பெருமானார் காலத்திற்குப் பிறகு) வெற்றிகொண்டு, ஸ்ரீவைஷ்ணவ ஶிக₂ாமணியாக்கினார் பட்டர். இந்த வேத₃ாந்தியே பட்டரால் திருத்தப்பெற்றபின்பு "நஞ்ஜீயர்" என்னும் திருநாமத்துடன் உத்தமாஶ்ரமியாகி, பட்டரையல்லதறியாதவராய், திருவாய்மொழிக்கு ஒன்பதினாயிரப்படி முதலான தி₃வ்யப்ரப₃ந்த₄ வ்யாக்₂யானங்களையும் செய்தருளினார்.

அக்காலத்தில் "வீரஸுந்த₃ரப்₃ரஹ்மராயன்" என்பவன் பெரிய பெருமாளுக்குத் திருமதிள் கட்டிவந்தான். அப்போது ஆழ்வானுடைய சிஷ்யரான பிள்ளைப்பிள்ளையாழ்வானுடைய திருமாளிகை குறுக்கிட்டபடியால் அதை இடிக்க நினைத்தான் அவன். அப்போது பட்டர் "உம்முடைய திருமதிள் பெருமாளுக்கு ரக்ஷகமன்று; இங்கிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களுடைய மங்க₃ளாஶாஸனமே உண்மையான ரக்ஷகம். ஆகையால், தொண்டரடிப்பொடியாழ்வார் திருமாலை கட்டுகிற இடத்தை ஒதுக்கித் திருமங்கையாழ்வார் திருமதிள் கட்டினாற்போலே, நீரும் பிள்ளைப்பிள்ளையாழ்வான் திருமாளிகையை ஒதுக்கித் திருமதிள் கட்டும்" என்று அவனை நியமித்தார். அந்நியமனத்தை மீறித் திருமாளிகையை இடித்துத் திருமதிள் கட்டினான் வீரஸுந்த₃ரன். இதனால் ஏற்பட்ட மனஸ்தாபத்தாலே பட்டர் சில வருஷங்கள் திருக்கோட்டியூரிலே எழுந்தருளியிருந்தார். அப்போது திருக்கோட்டியூர் எம்பெருமான் விஷயமாக 'கோ₃ஷ்டீ₂நாத₂ஸ்தவ'மும், நம்பெருமாளைக் காணவேணும் என்னும் ஆர்த்தியைத் தெரிவிக்கும் ஸ்ரீரங்க₃நாத₂ ஸ்தோத்ரமும் பட்டர் அருளிச்செய்தார். வீரஸுந்த₃ரன் மரணமடைந்தபிறகு பட்டர் ஸ்ரீரங்கத்திற்கு எழுந்தருளி, மறுபடியும் த₃ர்ஶநத்தை நிர்வஹித்து வந்தார். திருத்தகப்பனாரான கூரத்தாழ்வான் பரமபத₃நாத₂ன் விஷயமாக ஸ்ரீவைகுண்ட₂ஸ்தவமும், விப₄வங்கள் விஷயமாக அதிமாநுஷஸ்தவமும், அழகர், தேவப்பெருமாள் விஷயமாக (முறையே) ஸுந்த₃ரபா₃ஹுஸ்தவமும், வரத₃ராஜஸ்தவமும் அருளியதுபோலே, ஸ்ரீரங்க₃ராஜன் விஷயமாக ஸ்தவமருளாத குறைதீர, பெரியபெருமாள் விஷயமாக இரு ஶதகங்கள்

கொண்ட ஸ்ரீரங்கராஜ ஸ்தவத்தையும், அவரது ஸ்ரீஸ்தவத்திற்கு விவரணமாக ஸ்ரீரங்கநாய்ச்சியார் விஷயமாக ஸ்ரீகுணரத்ந கோசத்தையும், ரஹஸ்யத்ரய விவரணமாக அஷ்டச்லோகியையும், ஸ்ரீவிஷ்ணுஸஹஸ்ரநாம வ்யாக்யாநமான பகவத்குண தர்ப்பணத்தையும், தத்வவிசாரபரமான 'தத்வரத்னுகர'த்தையும், 'லக்ஷ்மீகல்யாணம்' என்னும் காவியத்தையும், 'க்ரியா தீபம்' என்னும் நித்யக்ரந்தத்தையும், கைசிக புராணத்திற்கு மணிப்ரவாள நடையில் வ்யாக்யாநத்தையும் அருளிச்செய்தார் பட்டர். இவற்றில் தத்வரத்நாகரமும் லக்ஷ்மீ கல்யாணமும் தவிர மற்றவைகள் இப்போதும் உள்ளன. இவர் இவற்றில் நிலைநாட்டிய தென்னுசார்ய ஸம்ப்ரதாயக்கொள்கைகளில் முக்கியமானவை பின்வருமாறு:— (1) அஷ்டச்லோகியில் பிராட்டிக்கும், ப்ரபத்திக்கும் அநுபாயத்வம் முதலானவற்றை இவர் நிலைநாட்டியதையே பெரிய வாச்சான்பிள்ளை பரந்தரஹஸ்யத்தில் விவரித்தருளினுர். (2) ஸஹஸ்ரநாமபாஷ்யத்தில் ஸம்ஸாரத்திற்கும், பரமபதத்திற்கும் இடைப்பட்ட இடமே தாழ்ந்த முக்தியான கைவல்யாநுபவம் செய்யும் இடம் என்று காட்டினுர். (3) ஸஹஸ்ரநாம பாஷ்யத்திலேயே பக்தி முதலான அரிய உபாயங்களால் ஸாதிக்கும் மோக்ஷத்தைத் திருநாமஸங்கீர்த்தனம் முதலான எளிய உபாயங்களாலும் ஸாதிக்கலாம் என நிலைநாட்டினுர். (4) "*அநுசிகிநி சிகீவ க்ரீடஸி ஸ்ரீஸமக்ஷம்*" [ர-ஸ்த 2-44] என்று பரமபுருஷன் ஜகத்ஸ்ருஷ்டி முதலானவற்றைப் பிராட்டியின் திருமுன்பே செய்வதற்கு த்ருஷ்டாந்தமாகத் தோகையில்லாத பெண்மயிலின் முன்பு, ஆண்மயில் தோகை விரித்தாடுவதைக் கூறுகையாலே, பிராட்டிக்கு ஜகச்சரீரத்வமும், ஜகத்காரணத்வமும் அதனுல் வரும் பரப்ரஹ்மத்வமும் கிடையாது என்று காட்டினுர். மற்றும் பலவும் உண்டு.

"வீரசிகாமணிப் பல்லவராயன்" என்னும் அரசன் "எனக்குத் தஞ்சமாய் இருப்பதொரு அர்த்தம் அருளிச்செய்ய வேணும்" என்று கேட்க, "கடற்கரை வெளியை நினைத்திரும்" என்று அருளினுர் பட்டர். "கடற்கரை வெளியிலே உறங்கின கோடிக்கணக்கான வானரஸேனையைக் கையும் வில்லுமாக இருந்து ரக்ஷித்த பெருமாளே நமக்கு ரக்ஷகர்"

என்று கருத்து. "த்ரிபு₄வநவீரதே₃வராயன்" என்பவன் பட்டரை ஒருநாள் தன் ஸபை₄க்கு வந்துபோகச் சொல்ல, "பெருமாள் அஞ்சலென்ற கை மறுத்தாலும், அவர் வாசலொழிய வேறொரு வாசலிலே புகமாட்டேன்" என்று சொல்லி யனுப்பினார் பட்டர். பட்டருடைய பெருமையைக் கண்ட அவர் திருத்தாயாரான ஆண்டாள் அவர் அறியாமல் அவருடைய ஸ்ரீபாத₃தீர்த்த₂த்தை ஸ்வீகரித்தாள் என்று பூர்வக்₃ரந்த₂ங்கள் கூறும். பட்டர் நஞ்சீயருக்குப் பிள்ளான் அருளிச் செய்த ஆறாயிரப்படியைக் காலக்ஷேபம் ஸாதித்தார். பட்டர் அநுமதியுடன் சிறிது விளக்கமாக நஞ்ஜீயர் ஒன்பதினாயிரப்படி வ்யாக்₂யானம் அருளிச்செய்தார். மத்₄யம வயஸ்ஸிலேயே (சுமார் 40 வயஸ்ஸாகும்போது) ஒரு கைசிக த்₃வாத₃சியன்று கைசிகபுராணம் வாசித்த பிறகு நம்பெருமாள் மிகவும் பூரித்து 'பட்டரே! உமக்கு மேலைவீடு தந்தோம்" என்று திருவுள்ளமாக, பட்டரும் "மஹாப்ரஸாத₃ம்" என்று ஏற்றுக்கொண்டார். திருமாளிகைக்கு வந்தவுடன் திருத்தாயாரான ஆண்டாளை ஸேவித்து நிற்க, "நலமந்தமில்லதோர் நாடு புகுவீர்" என்று அவள் ஆசீர்வதிக்க, பட்டரும் "அம்மா அடியேன் வேண்டுவதீதே" என்று உகந்தருளினார். திருவரங்கத்திலுள்ளார் அனைவரும் திருமாளிகையிலே அமுது செய்து பெருங்கூட்டமாக எழுந்தருளியிருக்க, அவர்களுக்குத் திருநெடுந்தாண்டகத்திற்கு அர்த்த₂ம் அருளிச்செய்யும்போது "அஞ்சிறைப்புள்தனிப்பாகன்" என்கிறவிடத்திலே "பறவையேறு பரம்புருடா! நீ யென்னைக் கைக்கொண்டபின், பிறவியென்னுங் கடலும் வற்றிப் பெரும்பதமாகின்றதால்" என்று இத்தை இரட்டித்து அநுஸந்தி₄த்தருளித் திருக்கண்களை மலர விழித்துத் திருமேனியைச் சிலிர்ப்பித்துப் புன்முறுவல் செய்து, திருமுடியிலே அஞ்சலி செய்துகொண்டு அணையிலே சாய்ந்து நிற்கச்செய்தே, ஶிர:கபாலம் வெடித்துத் திருநாட்டுக்கு எழுந்தருளினார்.

'இன்னம் சிலநாள் இருந்தால் பரமபத₃த்திற்குப் படிக்கட்டுக் கட்டிவிடுவேன்' என்று தம் திருவாக்காலே அருளிச்செய்த ப₄ட்டர் மத்₄யமவயஸ்ஸிலேயே பரமபதி₃த்தது நம் தௌ₃ர்ப்ப₄க்₃யமேயாகும். இவர் நஞ்சீயரைத்திருத்திய வகையும், இவருக்கும் நஞ்சீயருக்கும் நடந்த பரிமாற்றங்களும், அடுத்துள்ள நஞ்சீயர் வைப₄வத்திலே காணலாம்.

ஸ்ரீ பராஶரபட்டர் வைப₄வம் முற்றிற்று.

# நஞ்சீயர் வைபவம்

நமோ வேதா₃ந்த வேத்₃யாய ஜக₃ந்மங்க₃ளஹேதவே ।
யஸ்ய வாக₃ம்ருதாஸாரபூரிதம் பு₄வநத்ரயம் ॥

[எவருடைய வாக்காகிற அமுதவெள்ளத்தால் மூவுலகும் நிறைந் துள்ளதோ, உலகிற்கு மங்க₃ளகாரணமான அந்த வேதா₃ந்தி நஞ்சீயருக்கு நமஸ்காரம்.]

இவர் மேல்நாட்டிலே திருநாராயணபுரத்திலே ஒரு பங்குனி உத்தரத்திருநாளிலே அவதரித்தார். மாத₄வர் என்பது இவருக்குப் பிறப்பிலே இடப்பட்ட திருநாமம். அக்காலத்தில் அத்₃வைத வித்₃வான்களில் தலைசிறந்தவராய் இருந்து ஆறு த₃ர்ஶநங்களுக்கும் ஆறு ஆஸநம் இட்டுக்கொண்டு "வேதா₃ந்தி" என்று பண்டித₃த வுலகில் புகழ்பெற்றிருந்தார். இவரை வெற்றிகொண்டு நம் த₃ர்ஶந நிர்வாஹகராக்கவேண்டுமென்று எம்பெருமானார் பட்டருக்கு நியமித்துச் சென்றார். ஒரு தீர்த்த₂வாஸி ப்₃ராஹ்மணன் மூலமாக, பட்டர் பெருமையை வேதா₃ந்தி கேள்விப்பட்டு உள்நடுக்கம் கொண்டிருந்தார். ஒரு ஸமயம் அந்தத் தீர்த்த₂வாஸி ப்₃ராஹ்மண னிடம் பட்டர் வார்த்தை சொல்லும்போது, அவன் "பட்டருக்குத் தர்க்கம், மீமாம்ஸை முதலான ஸகல ஶாஸ்த்ரங்களும் வரும் என்று வேதாந்தியிடம் சொன்னேன்" என்று பட்டரிடம் சொல்ல, அதற்கு பட்டர் "நமக்குத் திருநெடுந்தாண்டக ஶாஸ்த்ரம் வரும் என்று சொல்லாமல் விட்டுவிட்டாயே" என்று வெறுத்து வார்த்தை சொன்னார். அவனும் அடுத்த முறை மேல்நாட்டுக்குப் போகும் போது இவ்விஷயத்தை வேதாந்தியிடம் சொல்ல, வேதா₃ந்தியும் "திருநெடுந்தாண்டகம் என்னும் சொல்லுக்குப் பொருளே விளங்க வில்லையே, அவர் எப்படிப்பட்ட வித்₃வானோ" என்று வியந்து கொண்டிருந்தார்.

பட்டரும் நம்பெருமாள் நியமனம் கொண்டு, அவருடைய ஸகல பரிஜந பரிச்ச₂த₃ங்களோடு வேதாந்தியை வெற்றிகொள்ள மேல் நாட்டுக்குச் சென்றார். திருநாராயணபுரத்தில் ஐம்பத்திருவர் முதலான அனைவராலும் எதிர்கொண்டழைக்கப்பட்டு, பெரிய ஸ்ரீ வைஷ்ணவ ஸமூஹத்தோடு கூடி அருகில் வேதா₃ந்தி வாழ்ந்துவந்த ஊருக்குச் சென்றார். வேதாந்தியின் இயல்வு அறிந்த சிலர், "இப்படிப் பெரிய ஆட₃ம்ப₃ரத்தோடு சென்றால் அவருடைய சிஷ்யர்கள்,

நீண்டநாள் விதண்டா வாதங்களைச் செய்து உள்ளே புகமுடியாமல் தள்ளிவிடுவார்கள். ஆகையால் அவர் ப்ராஹ்மண போஜநம் இடுமிடத்திற்கு பூஜிக்கவருபவரைப்போலே வேஷம் கொண்டு சென்றால் அவரைக்காணலாம்'' என்று வேதாந்தியைக் காணும் வழியைக் காட்டினார்கள். பட்டரும் தம் பரிகரங்களையெல்லாம் ஊருக்கு வெளியில் நிறுத்தி, ஸத்ரபோஜநம் நடக்குமிடத்திற்குச் சென்று, அங்கு ஒரு மண்டபத்திலே ஆறு ஆஸநங்கள் இட்டுக்கொண்டு அவற்றின்மேலே பெரிய மதிப்போடு வீற்றிருந்த வேதாந்தியின் அருகில் சென்றார். ''இங்கு ஏன் வருகிறீர்?'' என்று வேதாந்தி கேட்க, ''பிக்ஷைக்கு வருகிறேன்'' என்று பட்டர் கூற, ''பிக்ஷைக்கு அங்கே போகலாமே'' என்று போஜநம் செய்யுமிடத்தை வேதாந்தி காட்ட, ''சோற்றுபிக்ஷை எனக்கு வேண்டியதில்லை'' என்று பட்டர்கூற, ''அப்படியானால் என்ன பிக்ஷை வேண்டும்?'' என்று வேதாந்தி கேட்க, ''தர்க்கபிக்ஷையே'' என்று பட்டர் கூற, தீர்த்தவாஸி ப்ராஹ்மணன் சொன்ன வார்த்தைகள் நினைவிற்கு வந்து, ''நீர் பட்டரோ?'' என்று வேதாந்தி கேட்க, ''ஆம்''என்று பட்டர் கூற, இருவருக்கும் வாதப்போர் தொடங்கிற்று. ஒன்பது நாள் முடிவில்லாமல் வாதம் சென்ற பின்பு, பத்தாவது நாள் மாயாவாத மதத்தை பட்டர் பலவாறு கண்டித்து ''ஸகல ஶாஸ்த்ரங்களும் விஶிஷ்டாத்வைத ஸித்தாந்தந்தையே நிலைநாட்டு கின்றன'' என்று மாரிமலைமுழைஞ்சில் பாசுரப்படியே சீரிய சிங்கமாய் முழங்கினார். இதைக்கேட்ட வேதாந்தி, நடுநடுங்கி எழுந்திருந்து நின்று வேறொன்றும் சொல்லாமல் ''உம்மை ஸாமான்ய மனுஷ்ய ரென்று நினைத்திருந்தேன். நம்பெருமாளும் நீரும் வேறில்லை. உறங்கும் பெருமாள் அவர். உலாவும் பெருமாள் நீர். இனி வாய் திறந்து எதிர்வார்த்தை சொல்லமாட்டேன்'' என்று அரைகுலையத் தலைகுலைய வந்து பட்டர் திருவடிகளிலே விழுந்து, கிருபை செய்தருளவேணுமென்று பிரார்த்தித்தார். பட்டரும் அவரைப்பரம கிருபையோடு அங்கீகரித்துப் பஞ்ச ஸம்ஸ்காரங்களையும் ப்ரஸாதித்து, ஸகலார்த்தங்களையும் உபதேசித்துத் திருத்திப் பணிகொண்டு திருவரங்கத்துக்கு எழுந்தருளினார். சிலகாலம் சென்றபின் நஞ்சீயர் க்ருஹஸ்த தர்மத்தில் வெறுப்புற்று, பட்டருக்குக் கைங்கர்யம் செய்ய ஆசைகொண்டு, இரண்டு தேவிகளுக்கும் தன் செல்வத்தில் இரு பகுதிகளைக் கொடுத்து, மற்றொரு பகுதியை பட்டருக்கு ஸமர்ப்பிப்பதற்காக எடுத்துக்கொண்டு துறவறம் பூண்டு ஸ்ரீரங்கத் திற்கு எழுந்தருளி, கொண்டுவந்த செல்வத்தை பட்டர் திருவடிகளிலே

ஸமர்ப்பித்து, அஹங்கார மமகாரமற்றவராய் நின்றார். பட்டரும் மிகவும் உகந்து, "நம்முடைய சீயர் வந்தார்" என்று வாரி அணைத்துக்கொண்டு அன்று முதல் ஒருகணமும் பிரியாமல் அவரைத் தம் அருகிலேயே வைத்துக்கொண்டு, ஸகலார்த்தங்களையும் ப்ரஸாதித்தார். பட்டருடைய பல்லக்கை நஞ்ஜீயர் ஸ்ரீபாதம் தாங்குவதாகத் தோளிலே பல்லக்குத் தண்டை வைக்கப்புக, 'உம்முடைய வேஷத்திற்கு இது முரண்படுமே' என்று பட்டர் அருளிச் செய்ய, "ஆசார்ய கைங்கர்யத்துக்கு முரண்படுமாகில் காவியை விட்டு வெள்ளை உடுப்பேன்" என்று நஞ்ஜீயர் அருளிச் செய்தார் என்பது ப்ரஸித்தம். "பட்டருக்கு நஞ்ஜீயர் ஸகலவித கைங்கர்யங்களும் செய்தார். பட்டரும் அவருக்கு அருளிச்செயல் அனைத்துக்கும் அர்த்தம் உபதேசித்தருளினார்" என்று பூர்வாசார்ய க்ரந்தங்கள் கூறுகின்றன. இவ்வர்த்தங்கள் உலகுக்கு உதவும்படி, திருவாய்மொழி முதலான நாலிரண்டு ப்ரபந்தங்களுக்கு ஒன்பதினாயிரப்படி முதலான வ்யாக்யாநங்கள் இட்டருளினார் நஞ்ஜீயர். ஸம்ஸ்க்ருத ஶாஸ்த்ரங்களைக் கரைகண்ட அருளாளப்பெருமாள் எம்பெருமானார், அருளிச் செயலையறியாமல் அந்த ஶாஸ்த்ரங்களை மாத்திரம் அறிவதால் ஏற்படும் அநர்த்தங்களை உணர்ந்து, ஸம்ஸ்க்ருதத்தில் ஒரு நூலும் அருளாமல், அருளிச்செயலின் ஸாரமாக ஞானசாரத்தையும், பிரேமயசாரத்தையும் தமிழில் அருளியதுபோலே, ஷட்தர்ஶனங்களுக்கும் ஆறு ஆஸனமிட்டு வேதாந்தி என்று புகழ் பெற்றிருந்த இவரும், வடமொழியில் ஒரு நூலும் அருளாமல், அருளிச்செயல் வ்யாக்யானங்களையே அருளியது குறிக்கொள்ளத்தக்கது. இவர் பெயரில் அச்சிடப்பெற்றிருக்கும் ஸ்ரீஸூக்தபாஷ்யம் இவரதன்று என்பதை அடுத்துவரும் கூரநாராயணஜீயர் வைபவத்தில் காணலாம். பட்டர் பரமபதித்தவுடன் அவரை ப்ரஹ்ம மேதத்தாலே ஸம்ஸ்கரித்தபின்பு, நஞ்ஜீயர் முட்டாக்கிட்டு மூடிக்கொண்டு புழக்கடை வழியாலே தம் மடத்துக்குச் சென்றார். "ஏன் இப்படி" என்று முதலிகள் கேட்க, "புதுக்க அறுத்த விதவை, தெருவிலே வெளிப்பட வருவாளோ?" என்று அருளிச்செய்தார். இப்படி சிஷ்யலக்ஷண பூர்த்தியோடிருந்த நஞ்சீயர், ஆசார்யலக்ஷணபூர்த்தியையும் உடையவராயிருந்தார். தம் சிஷ்யரான நம்பிள்ளை கூறிய அர்த்தங்கள் சிறப்பாயிருந்தால், அவற்றை ஏற்று அவரைக் கொண்டாடினார் நஞ்சீயர் என்று திவ்யப்ரபந்தவ்யாக்யானங்களில் உள்ளது. நஞ்ஜீயர் வைபவத்தின் எஞ்சிய பகுதிகள் நம்பிள்ளை வைபவத்தில் காணலாம்.

நஞ்ஜீயர் வைபவம் முற்றிற்று.

# கூரநாராயணஜீயர் வைபவம்

ஸ்ரீபராஶரப₄ட்டார்ய ஶிஷ்யம் ஸ்ரீரங்க₃பாலகம் ।
நாராயணமுநிம் வந்தே₃ ஜ்ஞாநாதி₃கு₃ணஸாக₃ரம் ॥

[ஸ்ரீபராசரபட்டரின் சீடராய், திருவரங்கம் பெரியகோயிலை ரக்ஷிப்பவராய், ஞானம் முதலான கு₃ணங்களுக்குக் கடலாயிருப்பவரான நலந்திகழ் நாராயண ஜீயரை வணங்குகிறேன்.]

இவர் கோயிலிலே மார்கழிக் கேட்டை நக்ஷத்திரத்தில் எம்பாருடைய தம்பி சிறிய கோ₃விந்த₃ப்பெருமாளுடைய குமாரராய் அவதரித்தவர். இவர் முதலில் கூரத்தாழ்வானுக்கும் பிறகு ப₄ட்டருக்கும் *ஶி*ஷ்யராயிருந்தவர். உடையவருடைய மடத்தில் அவர் காலத்துக்குப்பின் எழுந்தருளியிருந்து ப₄க₃வத்₃ பா₄க₃வத கைங்கர்யங்கள் பலவற்றைச் செய்த பெரியவர் இவர். இவருக்கு நலந்திகழ்நாராயண ஜீயர், ஸ்ரீரங்க₃நாராயண ஜீயர், பெரிய ஜீயர், நாராயணமுனி என்னும் திருநாமங்களுமுண்டு. தே₃சிகன் தமது க்₃ரந்த₂ங்களில் பெரியஜீயர் என்றும் நாராயண முனி என்றும் இவரைக் குறிப்பிடுகிறார். கூரத்தாழ்வானுக்கே *ஶி*ஷ்யராயிருந்த இவர் நஞ்ஜீயரைவிட வயதில் பெரியவராயிருந்திருக்க வேண்டுமாகையால் பெரியஜீயர் என்று தே₃*ஶி*கன் இவரை வழங்கியிருக்கிறார் என்று கொள்ளலாம். இவர் ஸுத₃ர்*ஶ*ந உபாஸகர். "எல்லாவற்றுக்கும் அவன் கைபார்த்திருக்கும் குடியில் பிறந்த நாம் தன் முயற்சியாகிற உபாஸனையில் ஈடுபடுவது சரியல்லவே" என்று ஆழ்வான் இவருக்கு ஹித முரைத்ததாகவும், "அடியேனுடைய ஸுத₃ர்*ஶ*னோபாஸநம் ஸ்வார்த்த₂மானதல்ல. ப₄க₃வத்₃பா₄க₃வத கைங்கர்யத்துக்கே உறுப்பாகும்" என்று ஜீயர் ஸமாதா₄நமுரைத்தார் என்றும் வழங்குவதுண்டு. அவ்வண்ணமே நம்பெருமாள் திருக்காவேரியிலே ஒரு வருஷம் தெப்பம் கண்டருளும்போது காவேரி ப்ரவாஹத்திலே தெப்பம் அடித்துக்கொண்டு செல்லப்புக, இவர் தமது உபாஸநாப₃லத்தாலே தெப்பத்தை ஸ்தம்பி₄க்கச் செய்து நம்பெருமாளைக் காப்பாற்றினார் என்றும், தமக்குப் பிற்காலத்தில் இத்தகைய ஆபத்துவர இடமளிக்கலாகாது என்னும் திருவுள்ளத்தாலே, தற்சமயம் நம்பெருமாள் தெப்பம்

கண்டருளும் தெப்பக்குளத்தை வெட்டச் செய்தார் என்றும் க்₃ரந்த₂ங்கள் கூறும். அவ்வண்ணமே திருவரங்கப்பெருமாள ரையருக்குப் பெரியதான வியாதி₄ வந்து அவர் கைங்கர்யம் செய்ய முடியாமல்போனபோது இவர் ஸுத₃ர்ஶநஶதகம் அருளிச்செய்து அவருடைய வியாதி₄யைப் போக்கினார் என்றும் வரலாறு கூறுகிறது. இவர் ஒரு ஸ்தோத்ர வ்யாக்₂யானம் செய்திருப்ப தாக ஸ்தோத்ர பா₄ஷ்யத்திலும், ஸ்ரீ ஸூக்தபா₄ஷ்யமும், நித்ய க்₃ரந்த₂மும் செய்திருப்பதாக ரஹஸ்யத்ரயஸாரத்திலும் ஸ்ரீதே₃ஶிகன் எடுத்திருக்கிறார். பெரியதிருமுடியடைவில் உப நிஷத்துக்களுக்கும் இவர் பா₄ஷ்யம் செய்துள்ளதாக எடுக்கப் பட்டுள்ளது. ஈட்டின் ப்ரமாணத்திரட்டில் மாமுனிகள் இவரது உபநிஷத்₃ பா₄ஷ்யத்திலிருந்து சில பகுதிகளை எடுத்திருக்கிறார். 'ஶாத்₃த₄ஸம்ப்ரதா₃யநிஷ்டா₂ர்' என்று ஓரிடத்தில் இவரைப் பாராட்டியுமிருக்கிறார். இவர் பெயராலேயே உடையவர் மடத் துக்கு இப்போதும் ஸ்ரீரங்க₃நாராயண ஜீயர்மடம் என்றும், அம்மடத்தை அலங்கரிக்கும் ஜீயர்களுக்கு ஸ்ரீரங்க₃நாராயண ஜீயர்கள் என்றும் வழக்கு ஏற்பட்டுள்ளது. பெரியஜீயர் ஸ்ரீஸூக்தபா₄ஷ்யம் செய்திருப்பதாக தே₃ஶிகன் ரஹஸ்யத்ரய ஸாரத்தில் ஸாதித்திருப்பதைப் பற்றாசாகக்கொண்டு, கே₃ாமட₂ ரங்க₃நாத₂ர் என்னும் அர்வாசீநரொருவர் செய்ததாய், இப்போதும் சென்னை ஓரியண்டல் (கீழ்த்திசை) ஓலைச்சுவடிப் புத்தகாலயம் முதலானவற்றில் காணப்படுவதான ஸ்ரீஸூக்த பா₄ஷ்யத்தில் பல மாறுதல்களைச் செய்து, பல பக்கங்களையும், பங்க்திகளையும் சேர்த்து,'ரங்க₃நாத₂முனிபா₄ஷ்யம்' என்னும் ஸ்ரீஸூக்த பா₄ஷ்யச் சுவடியொன்றைப் புதிதாக உண்டுபண்ணி, அச்சுவடி கடில நதியில் கிடைத்ததாகக் கட்டுக்கதை எழுதி, அதை நஞ்ஜீயர் பா₄ஷ்யமாக அச்சிட்டிருக்கிறார்கள் சிலர். இப்புத்தகம் நஞ்ஜீயர் பா₄ஷ்யமாயிருக்க இடமேயில்லை என்றும், நாராயணஜீய ருடைய ஸ்ரீஸூக்தபா₄ஷ்யமுமல்ல என்றும் எந்தையாரது அப₄யப்ரதா₃ராஜவிஜயத்திலும் அடியேனது ஸ்ரீஸூக்த வ்யாக்₂ யானத்திலும் நிலைநாட்டப்பட்டுள்ளது. ஈஶாவாஸ்யோபநிஷத்₃ பா₄ஷ்யம்செய்த கூரநாராயணஜீயர் இவரல்லர். தே₃ஶிகனுக்குப் பிற்பட்டவர்.

**கூரநாராயணஜீயர் வைப₄வம் முற்றிற்று.**







நம்பிள்ளை (மூலவர்) —ஸ்ரீரங்கம்— நம்பிள்ளை (உத்ஸவர்)

(திருவடியில் பின்பழகிய பெருமாள் ஜீயர்)

# நம்பிள்ளை வைபவம்

வேதா₃ந்தவேத்₃யாம்ருதவாரிராஶேர்
வேதா₃ர்த்த₂ ஸாராம்ருதபூரமக்₃ர்யம் ।
ஆதா₃ய வர்ஷந்தமஹம் ப்ரபத்₃யே
காருண்ய பூர்ணம் கலிவைரிதா₃ஸம் ॥

[வேதாந்திநஞ்ஜீயராகிய அமுதக் கடலினின்றும், மிகச் சிறந்ததான வேதஸாரப்பொருளமுதப் பெருக்கைப் பருகிப் பொழிபவராய், கருணை (நீர்) நிறைந்த (மேகம் போன்ற)வரான திருக்கலிகன்றிதா₃ஸராம் நம்பிள்ளையைச் சரணடைகிறேன்.]

சோழ மண்டலத்தில் உள்ள 'நம்பூர்' என்னும் க்₃ராமத்திலே ப்ரப₄வ வருஷம்(?) கார்த்திகைமாதக் கார்த்திகையிலே திருமங்கையாழ்வார் திருநக்ஷத்திரத்தன்று அவருடைய அம்சாவதாரமாக, அவரது 'திருக்கலிகன்றிதாஸர்' என்னும் திருநாமத்தையும் 'வரத₃ர்' என்னும் திருநாமத்தையும் உடையவராய், ஆழ்வார்களுடைய ஸ்ரீஸூக்திகளுக்கு விஶேஷ வ்யாக்₂யானங்கள் ஏற்பட்டுப் பரவுவதற்காகவே அவதரித்தவர் இம்மஹாசார்யர்.

நஞ்ஜீயர், ஸ்ரீப₄ாஷ்ய ப்ரக்ரியையாலே திருவாய்மொழிக்குத் தாம் இட்டருளிய ஒன்பதினுயிரப்படி வ்யாக்₂யானத்தை அழகாக ஒரு பிரதி எழுதித்தரவல்லாருண்டோ? என்று தம் ஶிஷ்யர்களைக்கேட்க அவர்களும் "காவேரியின் தென்கரையிலிருந்து நம்பூர்வரதராஜர் என்பவர் அடிக்கடி இங்கே வருகிறுர். அவர் நன்ருக எழுதுவர்" என்று பதில் உரைத்தார்கள். நஞ்ஜீயரும் வரதராஜரின் கையெழுத்து முத்துப்போல் நன்ருயிருப்பதைக்கண்டு அவரைத் திருத்திப்பணி கொண்டு, ஒன்பதினுயிரப்படியையும் ஒருமுறை அவருக்குக் காலக்ஷேபம் ஸாதித்து, 'இப்படியே தப்பாமல் பிரதி எழுதித்தாரும்' என்று பட்டோலையை அவர் கையிலே கொடுத்தருளினுர். நம்பூர்வரதரும் 'அடியேன் ஊரிலேபோய் எழுதிக்கொண்டு வருகிறேன்' என்று விண்ணப்பித்து ஜீயரின் அநுமதிபெற்று ஊருக்குச் செல்லும்போது திருக்காவேரியை நீந்திக் கடக்கவேண்டியிருக்கையாலே, பட்டோலையைத் தம் திருமுடியிலே கட்டிக்கொண்டு நீந்துகையில் ஓர் அலைவந்து அடித்து க்₃ரந்த₂ம் ஆற்றுக்குள் விழுந்துவிட்டது. நீந்தி அக்கரையை வந்தடைந்த வரதராஜர் 'என்செய்வது' என்று ஆராய்ந்து, தமது அபாரமான ஜ்ஞாபகஶக்தியைக் கொண்டே

ஒன்பதினாயிரப்படியை ஒரு பதமும் தப்பாமல் எழுதியருளினார். அத்துடன் தாம் தமிழில் மிகவும் வல்லவராயிருந்தமையாலே, ஒவ்வொரு பாட்டுக்களிலே அழகான சில அபூர்வார்த்தங்களையும் எழுதிச் சேர்த்திருந்தார். அதை ஜீயர் கையிலே கொண்டுபோய்க் கொடுத்தபோது, ''நான் எழுதிய அர்த்தங்களோடு சில விசேஷார்த்தங்களும் இருப்பதற்குக் காரணமென்ன? உண்மையைச் சொல்லும்'' என்று ஜீயர் கேட்டார். நடந்ததைச் சொன்னார் நம்பூர்வரதர். நஞ்ஜீயர் மிகவும் திருவுள்ளம் உகந்து வரதராஜரை வாரியெடுத்து அணைத்துக்கொண்டு ''இவர் நம்முடைய பிள்ளை திருக்கலிகன்றி தாஸர்'' என்று திருநாமம் சாத்தி, தம்மோடு அரைக்கணமும் பிரியாமல் வைத்துக்கொண்டு ஸ்ரீ பாஷ்யம் முதலான ஸம்ஸ்கிருத க்ரந்தங்களையும், அருளிச் செயல்களையும் அவருக்குக் காலக்ஷேபம் ஸாதித்தருளினார். அவரும் ஜீயரையல்லது தேவுமற்றறியாதவராய் எழுந்தருளியிருந்தார். ஜீயர் 'நம்முடையபிள்ளை' என்று அபிமானித்த அன்றுமுதல் நம்பூர் வரதருக்கு 'நம்பிள்ளை' என்னும் பெயர் ஏற்பட்டு இன்றளவும் விளங்காநிற்கிறது.

நஞ்ஜீயர் நூறுஉரு திருவாய்மொழிக்கு அர்த்தம் நிர்வஹித்தருளுகையாலே நம்பிள்ளை நஞ்ஜீயருக்கு சதாபிஷேகம் செய்தருளினார் என்று அருளிச்செய்வர். நஞ்ஜீயர் காலத்திலேயே நம்பிள்ளை ஸகலார்த்தங்களும் அறியப்பெற்று விளக்கில் கொளுத்திய தீவட்டி போலே அபாரவாக்வைபவ முடையவராயிருப்பதைக்கண்டு பெரியவாச்சான்பிள்ளை, வடக்குத் திருவீதிப்பிள்ளை, பின்பழகிய பெருமாள் ஜீயர், (ஈயுண்ணி) மாதவப்பெருமாள் முதலான அனேகஜ்ஞானிகள் நம்பிள்ளை திருவடிகளிலே ஆஸ்ரயித்துப் பேறுபெற்றார்கள். நம்பிள்ளையினுடைய உபந்யாஸ கோஷ்டி நம்பெருமாளுடைய கீழைப்படியருகிலே நடைபெறுவது வழக்கம்; அந்த கோஷ்டி கலைந்து ஸ்ரீவைஷ்ணவர்கள் எழுந்தருளும்போது அதைக் காண்பவர்கள் நம்பெருமாள் கோஷ்டியும் நம்பிள்ளை கோஷ்டியும் ஸம்ருத்தியில் ஒத்திருக்கையாலே, ''நம்பெருமாள் கோஷ்டியோ? நம்பிள்ளை கோஷ்டியோ?'' என்று கேட்பார்களாம். ஒருமுறை பெரியபெருமாளும் இவருடைய கோஷ்டியின் பெருமையை ஸேவிப்பதற்காக மனித வுருவுடன் ஜயவிஜயர்களுக்கு அருகிலிருந்து எட்டிப்பார்த்தார் என்றும், அவருடைய திருமேனி தீண்டப்பெற்ற திருவிளக்குப் பிச்சன் ''இப்படிச் செய்யலாமோ? உள்ளே எழுந்தருளும்'' என்று நியமிக்க, பக்தபராதீனனாகையாலே பெரிய பெருமாள் உள்ளே சென்று மறுபடியும் சயனித்தார் என்றும் கூறுவர். இப்போதும்

ராஜமஹேந்த்ரன் திருச்சுற்றிலே திருமலை ஸ்ரீநிவாஸன் சித்திர ரூபமாக எழுந்தருளியிருக்கும் இடத்துக்குக் கிழக்கே நம்பிள்ளை உபந்யாஸ கோஷ்டி நடந்த இடம் என்னும் நினைவாலே முதலில் அங்கு வடக்கு நோக்கி தண்டன் ஸமர்ப்பித்து, அதற்குப் பின்பு அத்திருச்சுற்றை வலம்வருவது ஸத்ஸம்ப்ரதாய நிஷ்டர்களின் அநுஷ்டானமாயிருந்து வருகிறது. பின்பழகிய பெருமாள் ஜீயர் நம்பிள்ளையிடம் மிகவும் ஈடுபட்டவர். நம்மாழ்வாரையல்லது தேவு மற்றறியாத மதுரகவிகளைப் போலவும், எம்பெருமானாரையல்லது வேறறியாத வடுகநம்பியைப் போலவும் நம்பிள்ளைக்கு ஆன அடிமைகளைச் செய்துகொண்டு வாழ்ந்தவர். ஒருமுறை அவருக்குத் திருமேனி பாங்கின்றியிருந்தபோது அந்தரங்கரான சில ஸ்ரீவைஷ்ணவர்களை அழைத்து நம்பெருமாளிடம் 'ஏழை ஏதலன்' திருமொழியும், 'ஆழியெழச்சங்கு' திருவாய்மொழியும் விண்ணப்பித்து ப்ரபத்திசெய்து தனக்குத் திருமேனி ஸௌகர்யமாக ப்ரார்த்திக்கும்படி நியமித்தார். அவர்களும் அப்படியே செய்து நிற்க, ஜீயருக்குத் திருமேனி பாங்காயிற்று ; 'இவர் செய்த இச்செயல் சரியா ?' என்று நம்பிள்ளையிடம் சில ஸ்ரீவைஷ்ணவர்கள் கேட்டனர். நம்பிள்ளையும் "அவருடைய அபிப்ராயம் அறிகிலோம். எங்களாழ்வான் ஸகல ஶாஸ்த்ரங்களும் வல்லவர். அவரிடம் சென்று கேளுங்கள்" என்று அருளினர். அவர்களும் எங்களாழ்வானைக் கேட்க, அவரும் "ஸ்ரீரங்கஸ்ரீயாகிற திருவரங்கச் செல்வத்திலுள்ள பற்றாலே இன்னமும் வாழவிரும்பினர்போலும்" என்று அருளிச்செய்தார். இதைக்கேட்ட நம்பிள்ளை திருநாராயணபுரத்தரையரைச் சென்று கேட்கச் சொல்ல, அவரும் "இங்கு துவக்கின கைங்கர்யம் தலைக்கட்டாமையாலே இருக்கலாம்" என்று அருளினர். அதைக்கேட்டு நம்பிள்ளை அம்மங்கி யம்மாளைக் கேட்கச் சொல்ல, "அவரும் நம்பிள்ளை கோஷ்டியிலிருந்து பகவத்விஷயம் கேட்பவர்களுக்குப் பரமபதமும் ருசிக்காதாகை யாலே" என்று அருளினர். அதற்குப்பின் நம்பிள்ளை அம்மங்கிப் பெரிய முதலியாரைக் கேட்கச்சொல்ல, அவரும் "நம்பெருமாளுடைய வடிவழகில் ஈடுபாட்டாலே இருக்கலாம்" என்று அருளினர். அதற்குப் பின் நம்பிள்ளை பின்பழகிய பெருமாள் ஜீயரையே கேட்கச்சொல்ல, அவரும் "நம்பிள்ளை திருமஞ்சனம் கண்டருளி, தூய உடையாடை திருவுத்தரியம் சாத்தியருளி, உலாவியருளும்போது குருவேர்ப்போடே கூடின திருமுக மண்டலச் செவ்வியையும், அடியேன் சுற்றிச் சுழற்றித் திருவாலவட்டம் பரிமாறுகிற கைங்கர்யத்தையும் விட்டு அடியேனுக்குப் பரமபதத்துக்குப் போகவும் விருப்பமில்லை" என்று அருளிச்செய்தார். இதையே மாமுனிகள்,

பின்பழக ராம்பெருமாள் சீயர் பெருந்திவத்தில்
அன்பதுவு மற்றுமிக்க வாசையினுல்—நம்பிள்ளைக்
கான வடிமைகள்செய் யந்நிலையை நன்னெஞ்சே
ஊனமற வெப்பொழுது மோர். [உபதேசரத்தினமாலை 66]

என்று அருளிச்செய்தார்.

முதலியாண்டானுடைய திருப்பேரனாராய், கந்தாடையாண்டான் குமாரரான கந்தாடை தோழப்பர் நம்பிள்ளையுடைய வைப₄வத்தைக் கண்டு பொறுக்கமாட்டாதவராயிருந்தார். ஒருநாள் கோயிலிலே நம்பிள்ளையைக் குறித்துப் பல கடும் வார்த்தைகளைச் சொல்லி நிந்தி₃த்து விட்டார். நம்பிள்ளை அதைக்கேட்டு நடுநடுங்கித் திருமாளிகைக்குச் சென்றுவிட்டார். தோழப்பருடைய தேவிகள் சிறந்த அறிவாளி. நம்பிள்ளை பொழியும் அர்த்த₂விஶேஷங்களை விடாமல் கேட்பவள். அவள் இவ்விஷயத்தைக் கேள்விப்பட்டு ப₄ர்த்தாவான தோழப்பருக்கு முகங்கொடுக்காமலிருந்தாள். 'இதற்குக் காரணம் என்ன?' என்று தோழப்பர் கேட்டார். ''ஆழ்வாருடைய அவதாரம்போன்றவரான நம்பிள்ளைதிறத்திலே அபசாரப்பட்டு, அநுதாபமுமில்லாதிருக்கும் உம்மோடு எனக்கு ஸஹவாஸம் எப்படிக்கூடும்? ஆனபின்பு நான் இஷ்டப்படியிருந்து ஈடேறிப்போகிறேன்'' என்று பதிலுரைத்தாள். தோழப்பரும் கலக்கம் தீர்ந்து, 'இனி என்ன செய்வது?' என்று அவளையே கேட்க, அவளும் ''பரமத₃யாளுவான நம்பிள்ளை திருவடிகளிலே ஸேவித்து அபராத₄க்ஷாமணம் செய்துகொண்டு உஜ்ஜீவிப்பீர்'' என்று உரைத்தாள். தோழப்பரும் இசைந்து தே₃வியைப் புருஷகாரமாக அழைத்துக்கொண்டு நம்பிள்ளை திருமாளிகைக்குச் செல்லத் தம் வீட்டு வாசலுக்கு வந்தவுடன், தம்மிடம் அபராத₄க்ஷாமணம் செய்து கொள்வதற்காக நம்பிள்ளை முட்டாக்கிட்டுக்கொண்டு படுத்திருப்பதைக் கண்டார். அவருடைய நெஞ்சில் ஓடுவதுதெரியாமல் ''நான் நிந்தித்ததற்குப் பழிவாங்கக் கிடக்கிறீரோ?'' என்று கேட்டார். அது கேட்ட நம்பிள்ளை ''அப்படியன்று. பெரியபெருமாள் ஸன்னிதி₄யிலே முதலியாண்டான் திருப்பேரனாரான தேவரீர் திருவுள்ளம் கலங்கும்படி நடந்துகொண்ட மஹாபாபியான அடியேனுக்கு தேவரீர் திருமாளிகை வாசலல்லது புகலில்லையாகையாலே வந்து கிடக்கிறேன்'' என்று அருளிச்செய்தார். இதைக்கேட்டு மயிர்க்கூச்செறியப்பெற்ற தோழப்பர் நம்பிள்ளையை வாரி எடுத்து அணைத்துக்கொண்டு, ''இவ்வளவு நாளும் உம்மைச் சிலருக்கே ஆசாரியன் என்று நினைத்திருந்தேன்; இப்போது உலகுக்கெல்லாம் நீரே ஆசார்யராவதற்குத்

தகுதிபெற்றவரென்று அறிந்தேன். இனி உம்மை உலகம் 'லோகா சார்யர்' என்றே அழைக்கட்டும்'' என்று அருளிச்செய்து, தேவியும் தாமுமாகப் பிள்ளையை மிகுதியாக கௌரவித்து அவருக்குச் சிஷ்ய ராகி, எல்லா அர்த்த₂ங்களையும் அவரிடம் கேட்டுப் பேறுபெற்றார். இதையே மாமுனிகளும்,

துன்னுபுகழ்க் கந்தாடைத் தோழப்பர் தம்முகப்பால்
என்னவுல காரியனோ வென்றுரைக்க—பின்னை
உலகா ரியனெனும்பேர் நம்பிள்ளைக் கோங்கி
விலகாமல் நின்றதென்றும் மேல். [உபதேசரத்தினமாலை 51]

என்று அருளிச்செய்தார்.

நஞ்ஜீயர் பரமபதித்தவுடன் அவருக்கு ப்₃ரஹ்ம மேத₄வித₄யாலே ஸம்ஸ்காரம்செய்து திருப்பள்ளிப்படுத்தியருளிச் சிறப்பாகத் திரு வத்₄யயனத்தை நடத்தியருளினார் நம்பிள்ளை.

நம்பிள்ளை தம் ஶிஷ்யர்கள் சிலரோடு திருவெள்ளறை நாச்சியாரை ஸேவித்து ஒருசமயம் மீண்டும் கோயிலுக்கு எழுந்தருளும்போது திருக்காவேரியில் வெள்ளம் பெருக, ஓடம் கிடையாதபடியாலே ஒரு தாழியிலே அவர்கள் வடதிருக்காவேரியைக் கடக்கத் தொடங்கினார்கள். நட்டாற்றில் சென்றவுடன் அஸ்தமித்து மழையும் இருட்டுமாய் திக்குத்திசை தெரியாமல் தாழி அமிழத் தொடங்கிற்று. '' தாழி இவ்வளவு பேரைத் தாங்காது; யாராவதொருவர் தாழியிலிருந்து குதித்துவிட்டால் மற்றவர்கள் பிழைக்கலாம்'' என்று தாழிக்காரன் கூறினான். அப்பொழுது அத்தாழியிலிருந்த ஓர் அம்மையார் '' உலகுக்கெல்லாம் ஓர் உயிரான நம்பிள்ளை பிழைத்தால் போதும்; அவரைக் கரையில் கொண்டுபோய்ச் சேர்ப்பாயாக '' என்று கூறி விட்டு, இருளையும் கணிசியாமல் ஆற்றிலே குதித்தாள். தாழியும் சிறிது நேரத்தில் கரைசேர்ந்தது. '' ஐயோ ! ஓர் அம்மையார் ப்ராணத்யாக₃ம் செய்யும்படியாய்விட்டதே !'' என்று மிக வருந்தி நம்பிள்ளை வார்த்தை சொல்லிக்கொண்டிருந்தார். அப்போது ஓர் திடரில் கால்பட்டு அதிலே ஏறியிருந்த அம்மையார் கரையருகி லிருந்தமையாலே நம்பிள்ளையின் வார்த்தையைக் கேட்டு, 'ஸ்வாமீ! தேவரீர் கவலைப்படவேண்டாம்; அடியேன் இங்கேயே இருக்கிறேன்'' என்று குரல் காட்ட, நம்பிள்ளையும், அம்மையார் திடர் அல்லது மரத்தைப் பற்றியிருக்கக்கூடும் என்று அறிந்து, தாழிக்காரனைக் குரல் வந்த திசைநோக்கிப் போகவிட்டு, அம்மையாரை அழைத்து

வரச்செய்தார். அவளும் அவர் திருவடியிலே விழுந்து ''தேவரீரே ஒரு திடராய் வந்து அடியேனை ரக்ஷித்ததாக நினைக்கிறேன்'' என்று விண்ணப்பம் செய்தாள். ''உம்முடைய நம்பிக்கை அப்படியானால் அப்படியே வைத்துக்கொள்ளும்'' என்று அருளிச்செய்தார் நம்பிள்ளை.

நம்பிள்ளை திருமாளிகைக்கு அருகில் அம்மையாரொருவருக்கு வீடு இருந்தது. நம்பிள்ளை திருமாளிகை நெருக்கமாயிருப்பதுகண்டு, அம்மையார் வீட்டின் ஒரு பகுதியை நம்பிள்ளைக்கு அளிக்கும்படி நம்பிள்ளையின் சிஷ்யர்கள் வேண்டினார்கள். அவள் மறுத்துவிட்டாள். நம்பிள்ளையே அம்மையாரைக் கூப்பிட்டு ''ஸ்ரீவைஷ்ணவர்கள் எழுந்தருளியிருப்பதுக்கு மிக நெருக்கமாயிருக்கிறது. உன் வீட்டிலே உமக்குத் தேவைப்படாத ஒரு பகுதியை எனக்குக் கொடுக்கவேணும்'' என்று கேட்டார். அதற்கு அம்மையார் ''அப்படியே செய்கிறேன்; தேவரீர் பரமபதத்தில் அடியேனுக்கு அவ்வளவு இடம் தரவேணும்'' என்றாள். ''ஸ்ரீவைகுண்ட₂நாத₂னன்றோ பரமபத₃த்துக்கு உரிமையுடையவன்; அவனுக்கு விண்ணப்பம்செய்து கேட்டுத்தருகிறோம்'' என்றார் நம்பிள்ளை. அவளும் ''அடியேன் ஒன்றும் தெரியாத பெண்பிள்ளை; ஆகையால் வெறும் வார்த்தை போராது; க்ரயப்பத்திரம் எழுதிக்கொடுக்க வேண்டும்'' என்று கேட்டாள். நம்பிள்ளையும் அப்படியே ஸ்ரீவைகுண்ட₂நாத₂னைப் பிரார்த்தித்து ஶாஸனமெழுதிக் கையெழுத்திட்டு அம்மையாரிடம் கொடுத்தார். அவளும் அதிப்ரீதியுடன் வாங்கிக்கொண்டு நம்பிள்ளையிடம் ஸ்ரீபாத₃தீர்த்த₂மும் ஶேஷப்ரஸாத₃மும் ஸ்வீகரித்து, இரண்டுநாள் அவரை ஸேவித்துக்கொண்டு இருந்து, மூன்றாம்நாள் பரமபத₃த்துக்குச் சென்றாள்.

கூரத்தாழ்வானுடைய திருப்பேரனாரான நடுவில் திருவீதிப்பிள்ளை ப₄ட்டர் நம்பிள்ளையின் பெருமையைப் பொறாது அவரிடம் விரோத₄ம் பாராட்டிக் கொண்டிருந்தார். பட்டர்வம்ஶஸ்த₂ராகையாலே ராஜஸபையில் வித்வானாயிருந்த அவர் ஒருமுறை அந்த ஸபைக்கு எழுந்தருளும்போது, பின்பழகிய பெருமாள் ஜீயரையும் கூட அழைத்துச் சென்றிருந்தார். அரசன் ராஜகார்யத்தின் நடுவிலே ப₄ட்டரை ஒரு கேள்விகேட்டான். அதாவது—''ஆத்மாநம் மாநுஷம் மந்யே'' [ரா-யு 120-11] [நான் என்னை மனிதனாகவே நினைக்கிறேன்] என்று தன்னை அறுதியிட்டிருந்த ராமபிரான் ஜடாயுவைக் குறித்து ''க₃ச்ச₂ லோகாநநுத்தமாந்'' [ரா. ஆ. 68-30] [ஜடாயுவே! ஒப்பற்றதான மோக்ஷ உலகத்துக்குச் செல்வீராக] என்று அருளி, ஜடாயுவுக்கு மோக்ஷம் கொடுத்தது எப்படி? என்னும் கேள்வியை ப₄ட்டரைக்

கேட்டுவிட்டு அரசன் ராஜகார்யங்களில் ஈடுபட்டான். அந்த இடைவெளியிலே பட்டர் இதற்குப் பதில் எதுவும் தோன்றாது அருகிலிருந்த ஜீயரைப்பார்த்து "ஜீயா! நம்பிள்ளை இந்த ப்ரகரணத்தை எப்படி நிர்வஹிப்பார்?" என்று கேட்டார். அதற்கு ஜீயர் "'ஸத்யேந லோகாந் ஜயதி' என்ற ஶ்லோகங்கொண்டு நிர்வஹிப்பர்" என்று கூறினர், பட்டரும் மேதாவியாகையாலே புரிந்துகொண்டு ராஜகார்யத்திலீடுபட்டிருந்த அரசன் இவரை நோக்கித் திரும்பியபோது—"ஸத்யேந லோகாந் ஜயதி தீநாந் தாநேந ராகவ:। குரூந் ஶுஶ்ரூஷயா வீர: தநுஷா யுதி ஶாத்ரவாந்॥"[ரா.அ.12-29] [ராகவன் உண்மை உரைத்தலாலே உலகங்களை ஜயிக்கிறான். எளியவர்களைக் கொடையினாலே கவருகிறான். ஆசார்யர்களைக் கைங்கர்யத்தினாலே வஶப்படுத்துகின்றான். வீரனான அவன் போரிலே வில்லாலே பகைவர்களை வெல்கின்றான்] என்று வால்மீகியே அருளிச் செய்திருக்கையாலே உண்மை உரைத்தலாலேயே எல்லா உலகங்களையும் தன்வசப்படுத்தியிருக்கும் ராமபிரான் மநுஷ்ய பாவனையோடு இருந்தபோதிலும், அந்த ஸத்ய வசன பலத்தாலே ஜடாயுவுக்கு மோக்ஷலோகத்தைக் கொடுத்ததில் முரண் இல்லை—என்று அருளிச்செய்தார்.அதைக்கேட்ட அரசன் மிகவும் ஸந்தோஷமடைந்து, அவருக்கு ஏராளமான ஸம்மானங்களைக் கொடுத்தனுப்பினான். ஸ்ரீரங்கத்துக்கு வந்த பட்டர் ஜீயரைப் புருஷகாரமாக முன்னிட்டுக் கொண்டு நம்பிள்ளை திருவடிகளிலே வணங்கி, அந்த ஸம்மானங்களையும் அவரிடம் ஸமர்ப்பித்து "தேவரீருடைய திவ்யஸூக்தியில் பதினாயிரங்கோடியிலே ஒன்றுக்குப் பெற்ற செல்வம் இது. ஆகையாலே அடியேனையும் இந்தச் செல்வங்களையும் அங்கீகரித்தருளவேணும்" என்று ப்ரார்த்தித்தார். நம்பிள்ளையோ "கூரத்தாழ்வானின் திருப்பேரனான நீர் இப்படிச் செய்யலாகாது" என்று அருளினார். பட்டரோ "அசலகத்தேயிருந்தும் இத்தனை நாள் தேவரீர் திருவடிகளை இழந்துகிடந்ததோடன்றியில் அஸூயைகொண்டும் திரிந்த அடியேனுக்கு, இந்த ஆத்மாவை ஸமர்ப்பிப்பது தவிர வேறொரு ப்ராயஶ்சித்தமில்லை. ஆகையாலே அடியேனை அவஶ்யம் அங்கீகரித்தருளவேணும்" என்று கண்ணும் கண்ணீருமாய்க்கொண்டு நம்பிள்ளை திருவடிகளிலே விழுந்துகிடந்தார். நம்பிள்ளையும் பட்டரை எடுத்து வாரியணைத்துக்கொண்டு ஸர்வார்த்தங்களையும் ப்ரஸாதித்தார். பட்டரும் அவரை ஒருகணமும் பிரியாது அநுபவித்துக்கொண்டு வாழ்ந்து வந்தார்.

அக்காலத்தில் நம்பிள்ளை பட்டருக்கு ஓர் உரு திருவாய்மொழிக்கு அர்த்தம் அருளிச்செய்தார். அதை ஒவ்வொரு நாளும் ஓர்எழுத்தும்

விடாமல் எழுதிவந்தார் பட்டர். அந்த க்ரந்தமும் முடிந்தவுடன் லக்ஷத்திருபத்தையாயிரம் க்ரந்தக் கணக்கிலேயிருந்த அந்த வ்யாக்யானத்தை நம்பிள்ளை திருமுன்பே கொண்டுபோய் வைத்தார் பட்டர். அதைப்பார்த்த நம்பிள்ளை "ஒரு ஶிஷ்யசாரக்ரமமே அற்றுப் போம்படி இவ்வளவு விரிவாக வ்யாக்யானம் எழுதலாமோ? என்னுடைய அநுமதியில்லாமல் நீர் இப்படிச் செய்தது சரியல்ல" என்று அருளி, அந்த க்ரந்தத்தை நீரைச் சொரிந்து கரையானுக்குக் கொடுத்து விட்டார். அதற்குப்பின் நம்பிள்ளை தமக்கு ப்ரியஶிஷ்யராய் தம்மிடம் எல்லா அர்த்தங்களையும் அலகு அலகாகக்கற்றிருக்கும் பெரியவாச்சான் பிள்ளையை 'திருவாய்மொழிக்கு ஒரு வ்யாக்யானம் பண்ணியருளும்' என்று நியமித்தருள, பெரியவாச்சான்பிள்ளையும் ஸ்ரீராமாயணக் கணக்கிலே இருபத்து நாலாயிரப்படியாக ஒரு வ்யாக்யானம் செய்தருளினர். இதையே மாமுனிகளும்,

நம்பிள்ளை தம்முடைய நல்லருளா லேவியிட
பின்பெரிய வாச்சான் பிள்ளையதனால்—இன்பா
வருபத்தி மாறன் மறைப்பொருளைச் சொன்னது
இருபத்து நாலா யிரம் [உபதேசரத்னமாலை 43]

என்று அருளிச்செய்தார்.

நம்பிள்ளை ஓர் உரு திருவாய்மொழிக்கு அர்த்தம் அருளிச்செய்யும் போது அவருடைய அந்தரங்கஶிஷ்யர்களுள் ஒருவரான வடக்குத் திருவீதிப்பிள்ளை ஒவ்வொருநாளும் பகலில் கேட்டதை தரித்து நின்று இரவில் எழுதி வ்யாக்யானம் முடிந்தவுடன் அதை நம்பிள்ளை திருமுன்பே கொண்டுபோய் வைத்தார். நம்பிள்ளையும் ஸ்ரீகோஶத்தைக் கடாக்ஷித்து மிகச் சுருக்கமும் மிக விரிவுமில்லாமல், ஆனைக்கு அழகு செய்து புறப்பட்டதுபோலே மிகவும் அழகாய் ஶ்ருதப்ரகாஶிகைக் கணக்கிலே முப்பத்தாறுயிரப்படியாய் இருப்பதைக்கண்டு மிகவும் உகந்து, வடக்குத் திருவீதிப்பிள்ளையைப் பார்த்து "நன்றாக எழுதினீர். ஆனாலும் நம்முடைய அநுமதியில்லாமல் எழுதினபடியாலே க்ரந்தங்களைத்தாரும்" என்று வாங்கிக் கட்டி உள்ளே வைத்தருளினர். நம்பிள்ளை ஶிஷ்யரான ஈயுண்ணி மாதவப் பெருமாள் நம்பெருமாளை ப்ரதக்ஷிண நமஸ்காரங்கள் செய்து வேண்டிக்கொண்டு, நம்பிள்ளை திருக்கையிலே உள்ள ஈடு முப்பத்தாறுயிரப்படியைத் தமக்குக் கொடுக்கும்படி நியமிக்கவேணும் என்று ப்ரார்த்தித்தார். நம் பெருமாளும் "அப்படியே செய்கிறோம்" என்று வரமளித்து, நம்பிள்ளை ஒருநாள் திருவடித்தொழ வந்தவுடன் அவருக்குத் தீர்த்தம் திருமாலை

திருப்பரியட்டம் ஸ்ரீஶடகோபம் முதலானவற்றை ப்ரஸாதித்து. "பிள்ளாய்! ஈடுமுப்பத்தாறுயிரத்தை ஈயுண்ணிச் சிறியாழ்வான் அப்பிள்ளையாகிற மாதவருக்கு ப்ரஸாதியும்" என்று நியமித்தருளினார். பிள்ளையும் அந்நியமனத்தைச் சிரமேற்கொண்டு ஈயுண்ணி மாதவருக்கு ஈடு முப்பத்தாறுயிரத்தைக் கொடுத்து வாழ்வித்தருளினார். இந்த ஈடு முப்பத்தாறுயிரத்தை மாதவர் தம்முடைய குமாரரான பத்மநாபருக்கு உபதேஶித்தருளினார். அப்பத்மநாபர் தம்முடைய ஶிஷ்யரான நாலூர்ப் பிள்ளைக்கு உபதேஶித்தருளினார். அவர் தம்முடைய குமாரரான தேவராஜர் என்னும் நாலூராச்சான்பிள்ளைக்கு உபதேஶித்தருளினார். இதுவரையில் ஈடு ஓராண்வழியாகவே உபதேஶக்ரமத்தில் வந்தது. நாலூராச்சான்பிள்ளை, திருவாய்மொழிப்பிள்ளை முதலான பலருக்கு ஈட்டை ப்ரசாரம் செய்தருளினார். திருவாய்மொழிப்பிள்ளையிட மிருந்து ஈட்டை உபதேசம்பெற்ற ஈடு முப்பத்தாறுயிரப் பெருக்கரான மாமுனிகள் மூலமாகவே ஈடு இவ்வுலகில் விஶேஷப்ரசாரத்தை யடைந்தது. இவ்விஷயத்தை மாமுனிகளும்,

> தெள்ளியதா நம்பிள்ளை செப்பு நெறிதன்னை
> வள்ளல் வடக்குத் திருவீதிப்—பிள்ளை இந்த
> நாடறிய மாறன்மறைப் பொருளைநன் குரைத்தது
> ஈடுமுப்பத் தாறு யிரம். [உபதேசரத்தினமாலை 44]

> சீரார் வடக்குத் திருவீதிப் பிள்ளைஎழு
> தேரார் தமிழ்வேதத் தீடுதனைத்—தாருமென
> வாங்கிமுன் நம்பிள்ளை ஈயுண்ணி மாதவர்க்குத்
> தாம்கொடுத்தார் பின்னதனைத் தான். [உபதேசரத்தினமாலை 48]

> ஆங்கவர்பால் பெற்ற சிறியாழ்வா னப்பிள்ளை
> தாம்கொடுத்தார் தம்மகனார் தம்கையில்—பாங்குடனே
> நாலூர்ப்பிள் ளைக்கவர்தாம் நல்லமக னார்க்கவர்தாம்
> மேலோர்க்கீந் தாரவரே மிக்கு. [உபதேசரத்தினமாலை 49]

என்று அருளிச்செய்தார்.

இவ்வண்ணமாக நாலாயிர திவ்யப்ரபந்தங்களுக்கும் வ்யாக்யானங்களைப் பெரியவாச்சான்பிள்ளை வடக்குத்திருவீதிப்பிள்ளை முதலான மஹாநுபாவர்களுக்கு அருளிச்செய்ததன் மூலம் அந்த திவ்யப்ரபந்தங்களுக்கு வ்யாக்யானம் உலகில் வெளிவரக் காரணமானார் நம்பிள்ளை. மூவாயிரங்களில் சில ப்ரபந்தங்களுக்கு நம் பிள்ளையருளிச் செய்த வ்யாக்யானம் வடக்குத் திருவீதிப்பிள்ளையினால் ஏடுபடுத்தப்பெற்று ஈட்டைப்போலே நம்பிள்ளை வ்யாக்யானங்களாக வழங்கி வருகின்றன. இவருடைய திருநாமங்கள்:— வரதராஜர்,

திருக்கலிகன்றிதாஸர், ஸ்ரீஸூக்திமஹார்ணவர், நம்பிள்ளை, லோகாசார்யர் முதலானவை. ஸ்ரீரங்கநாச்சியாரும் ஆண்டாளும் இரு தேவிகள். திருவாராத₄னம் வயலாலி மணவாளர். திருக்குமாரர் ராமாநுஜாசார்யர். இவருடைய பெருமையை ''அந்தணன் ஒருவன்'' [பெரிய திருமொழி 5-8-7] என்ற பாசுரப்பகுதியின் வ்யாக்₂யானத்தில் பெரியவாச்சான் பிள்ளை அருளிச்செய்துள்ளார் — '' முற்பட த்₃வயத்தைக்கேட்டு, இதிஹாஸ புராணங்களையும் அதி₄கரித்து, பரபக்ஷப்ரதிக்ஷேபத்துக்குடலாக ந்யாயமீமாம்ஸைகளும் அதி₄கரித்து, போதுபோக்கும் அருளிச்செயலிலேயாம்படி பிள்ளையைப்போலே அதி₄கரிப்பிக்கவல்லவனையிறே 'ஒருத்தன்' என்பது'' என்று. நம்பிள்ளையின் வைப₄வத்தை அவரது சிஷ்யர்கள்

''இந்திரன்வார்த்தையும் நான்முகன்வார்த்தையும் ஈசனுடன்
கந்தன்சொல் வார்த்தையும் கற்பவராரிந்தக் காசினிக்கே
நந்தினமுத்தெறி நம்பூர்வரதர்தம் மாளிகையிற்
சிந்தின வார்த்தைகொண்டே சிலநாடு திறைகொள்வரே''

என்று அநுஸந்தி₄த்துக் கொண்டாடினர்கள்.

### காலநிர்ணயம்

ஆசார்யர்கள் வாழ்ந்த காலத்தை நிர்ணயிப்பதற்குப் பெரிய திருமுடியடைவு ஒன்றே ப்ரமாணமாயுள்ளது. அதன்படி பட்டர் தொடக்கமாக, நம்பிள்ளையீருகவுள்ள ஆசார்யர்களின் காலம் பின் வருமாறு :— (1) பட்டர் திருவவதாரம் சுபகிருத் (கி. பி. 1122) தீர்த்த₂ம் ஜய-ஹு (கி. பி. 1174) வயஸ்ஸு 52. (2) நஞ்சீயர் திருவவதாரம் விஜய-ஹு (கி. பி. 1113) தீர்த்த₂ம் (1208) வயஸ்ஸு 95 (3) நம்பிள்ளை திருவதாரம் ப்ரப₄வ-ஹு (1147) தீர்த்த₂ம் (1252) வயஸ்ஸு 105. ஆக, பட்டர் பரமபதிக்கும்போது நம்பிள்ளைக்கு 27 வயஸ்ஸாகையாலே ''பட்டர் அருளிச்செய்ய நான் கேட்டேன் என்று நம்பிள்ளை அருளிச்செய்வர்'' என்று தி₃வ்யப்ரப₃ந்த₄ வ்யாக்₂யானங்களில் வருவது பொருந்திவிடுகிறது. ஆகையால், ஆறுயிரப்படி கு₃ருபரம்பராப்ரப₄ாவத்தில் பட்டர் 28 திருநக்ஷத்திரத்தில் பரமபதி₃த்தார் என்று எழுதியிருப்பது பாடப்பிறழ்வு என்றே கொள்ளவேண்டும். பட்டர் 52 திருநக்ஷத்திரங்கள் எழுந்தருளியிருந்தார் என்று கொள்வதே பொருத்தம். அதுவும் மத்₄யபவயஸ்ஸே யாகையாலே ஶோசநீயமேயாகும். பட்டர் வைப₄வத்தில் நாம் எழுதியிருப்பவைகளை இதற்கு அநுகு₃ணமாகத் திருத்திக்கொள்வது.

நம்பிள்ளை வைப₄வம் முற்றிற்று.

# பெரியவாச்சான்பிள்ளை வைபவம்

ஸ்ரீமத்க்ருஷ்ணஸமாஹ்வாய நமோ யாமுநஸூநவே ।
யத்கடாக்ஷைகலக்ஷ்யாணாம் ஸுலப₄: ஸ்ரீத₄ரஸ் ஸதா₃ ॥

[எவருடைய கடாக்ஷத்திற்கு இலக்கானவர்களுக்கு ஸ்ரீத₄ரன் எப்போதும் கிடைத்தற்கெளியவனோ, அத்தகையவராய், யாமுநாசார்யரின் பிள்ளையாய், ஸ்ரீமத்க்ருஷ்ணர் என்னும் பெயரையுடையவரான பெரியவாச்சான்பிள்ளைக்கு வணக்கம்.]

நம்பிள்ளைக்கு "ராமஸ்ய த₃க்ஷிணோ பா₃ஹு:" என்று பெருமாளுக்கு இளையபெருமாள்போலே வலதுகையாயிருந்து, அவருடையநியமனம் பெற்று அவருடைய உபந்யாஸ வர்ஷங்களையெல்லாம் வ்யாக்₂யானங்களாக ஏடுபடுத்தியருளிய 'ஸ்ரீக்ருஷ்ணர்' என்னும் திருநாமமுடைய பெரியவாச்சான்பிள்ளை (கி. பி. 1167) ஸர்வஜித் வருஷத்திலே ஆவணி மாதம் க்ருஷ்ணாஷ்டமீ ரோஹிணியிலே சோழநாட்டில் (தஞ்சை ஜில்லாவில்) உள்ள திருவெள்ளியங்குடிக்கு அருகிலுள்ள சங்கநல்லூரில் பூர்வஶிக₂ ஸ்ரீவைஷ்ணவ ப்₃ராஹ்மணோத்தமரான யாமுநாசார்யருக்கும் நாச்சியாரம்மனுக்கும் திருக்குமாரராய், கண்ணனுடைய அம்ஶமாய் அவதரித்தருளினார். இவருடைய ப்ரப₄ாவத்தைப் பற்றி *"பெரியவாச்சான்பிள்ளை ப்ரப₄ாவ ப்ரகாஶிகை"* என்ற பெரிய நூலொன்று ஸுத₃ர்ஶன ஸ்த₂ாபகரான எங்தையாரால் இருபத்தைந்து வருடங்களுக்கு முன் ஸுத₃ர்ஶனத்தில் தொடங்கப்பெற்று பதினாறு பக்கங்களுடன் நின்று விட்டது. அதிலிருந்து ஒரு பகுதியை அடுத்தபடியாகக் கீழே அளிக்கிறோம்.

பெரியபெருமாள் ப்ரப₄ாவத்தைப் பேசி முடித்தாலும் முடிக்கலாம்; பெரியவாச்சான்பிள்ளை ப்ரப₄ாவத்தைப் பேசி முடியாதென்பர் பெரியோர். ஸ்ரீவைஷ்ணவ ஸித்₃த₄ாந்தத்தைப் பரவச்செய்த ஆசாரியர்களுள் இவர்க்கு ஒப்பானவர்கள் முன் அவதரித்ததுமில்லை, இனி அவதரிக்கப்போவதுமில்லை என்று அறுதியிட்டுச் சொல்லலாம். இவருக்கு மேற்பட்டவர் '*ந பூ₄தோ ந ப₄விஷ்யதி*' [முன் இருந்ததுமில்லை; இனி உண்

டாகப்போவதுமில்லை.] என்பது சொல்லாமலே விளங்கும். இவர் பல நற்குணங்களுக்கு அவதாரஸ்தலமென்றும் சிஷ்ய லக்ஷணத்திற்கும், ஆசார்யலக்ஷணத்திற்கும் ஸீமாபூமி (எல்லை நிலம்) என்றும் புகழ்பெற்று விளங்கினர். இருள்தருமாஞாலம் எனப்பட்ட இந்த பூமி இவர் அவதரித்தபின், அருள்பெற்ற அவனியாகியது. "குணைர் தாஸ்யமுபாகத:" என்கிறபடியே இவருடைய குணங்களுக்கு ஆட்படாதவர் அக்காலத்திலு மில்லை, இக்காலத்திலுமில்லை, எக்காலத்திலுமில்லை என்று சபதமிட்டுச் சொல்லலாம். அவருக்குப் பரமகாருணிகர், அபார கருணாம்ருதஸாகரர் என்று எல்லாரும் ஒருமிடறாகச் சிறப்புப் பெயர் சூட்டினர்கள். ஸத்வகுணமே உருவெடுத்துவந்தவர் இம் மஹான். இவருடைய விரிவான கிரந்தங்களில் ஓரிடத்திலும் பூர்வாசார்ய ஸ்ரீஸூக்திகளைத் தவறென்று தூஷிப்பது கிடை யாது. தம்முடன் ஸமகாலத்தில் எழுந்தருளியிருந்தவர்களை யும், அவர்களுடைய கிரந்தங்களையும் தூஷிக்கும் வழக்கமும் இவரிடமில்லை.

"ஆழ்வார்கள் எல்லோரையும் போலல்லர் பெரியாழ்வார்" என்றார் பிள்ளைலோகாசார்யர். 'ஆசாரியர்கள் எல்லாரையும் போலல்லர் பெரியவாச்சான்பிள்ளை' என்பர் பெரியோர். ரஹஸ்யங்களுக்குச் சேமவைப்பாயிருந்தார் திருக்கோட்டியூர் நம்பிகள். திருவாய்மொழியின் பொருளை விவரித்துச் சொல்ல அதிகாரியாயிருந்தார் திருமாலையாண்டான். ஸ்ரீராமாயணார்த்தத் திற்குப் பெரியதிருமலைநம்பிகளிடம் போய் ஒரு வருஷம் காலக்ஷேபம் செய்யவேண்டியிருந்தது. ஸ்ரீ வைஷ்ணவ ஸித்தாந்தத்திற்கு இன்றியமையாத இம்மூன்றின் மறைபொருள் களையும் தம் நெஞ்சிலே தேக்கிவைத்திருந்து பல்லாயிரக் கணக்கான சிஷ்யர்களுக்கு உபதேசம் செய்துவந்ததோடன்றி யில், பின்னுள்ளரான ஸ்ரீவைஷ்ணவர்களும் உய்யும்படி அருளிச் செயல்கள், ஸ்ரீராமாயணஶ்லோகங்கள், ரஹஸ்யங்கள், ஸ்தோத் ரங்கள், கத்யங்கள் முதலியவைகளுக்குத் தேனிலுமினிய வியாக்கியானங்களை இயற்றிப் பேதை பாமரரும் உணரும்படி செய்த ஆசாரியர் வேறு எவரிருக்கிறார்? அருளிச்செயல்களுக்கு வியாக்கியானம் செய்து, அவற்றை அருளிச்செயலாக்கின பெருமை வேறு எந்த ஆசாரியர்க்குண்டு? இவருடைய

வியாக்கியான ரஸங்களை அனுபவிப்பவர்கள் 'இச்சுவை தவிர அச்சுவை பெறினும் வேண்டேன்' என்று ஆநந்த₃ நிர்ப்ப₄ரரா யிருப்பர்கள்.

நாலாயிர திவ்யப்ரபந்தங்களுக்கும் வியாக்கியானம் செய்த வர் இவரொருவரே. நம் தர்சனத்திற்கு அடிப்படையான ஆழ்வார்களுடைய அருளிச்செயல்களின் ஆழ்பொருள்களை அறிவதற்கு இவர் அருளிச்செய்த அமுதினுமினிய வியாக்கி யானங்களையொழிய வேறு கதியில்லை என்பதை மத்₄யஸ்த₂ர்க ளான மதாந்தரஸ்த₂ர்களும் உணர்த்தியுள்ளார்கள். ஆழ்வா ராசார்யர்கள் வைப₄வ நூலில் "விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத் திலே இருக்குமவர்களுக்குத் திருப்பல்லாண்டு முதலிய திவ்ய ப்ரபந்தமொழிய வேறு கதியில்லை. பூர்வாசார்ய ஸம்ப்ரத₃ாய பரம்பரையாலே வந்த திவ்யப்ரபந்த தி₃வ்யார்த்த₂ங்களை அறிகைக்குப் பெரியவாச்சான்பிள்ளை செய்தருளின வியாக்கி யானங்களையொழிய வேறு கதியில்லை. ஆகையால் ஸ்ரீவைஷ்ண வர்கள் எல்லாரும் பெரியவாச்சான்பிள்ளை ஸம்பந்தம் பெற்று, அவருக்கு சிஷ்யகோடிகளாயிருப்பார்கள்" என்று சொல்லப் பட்டது. இவருடைய திவ்யப்ரபந்த வியாக்கியானங்களைக் காலக்ஷேபம் செய்யாத ஸ்ரீ வைஷ்ணவர்கள் இல்லையென்றே சொல்லலாம். அப்படியிருந்தார்களாகில்,

*"நிந்தி₃தஸ் ஸ வஸேல்லோகே ஸ்வாத்மாப்யேநம் விக₃ர்ஹதே"*

[அவன் உலகில் நிந்திக்கப்பட்டவனாகவே வாழ்கிறான். அவ னுடைய மனமும் அவனை நிந்திக்கும்.] என்ற கணக்கிலே யாவர்கள்.

இவருக்கு அப₄யப்ரத₃ராஜர் என்னும் சிறப்புப்பெயர் இவருடைய வியாக்கியானங்களைச் செவிசாற்றின ஸ்ரீரங்க₃ நாத₂னால் அளிக்கப்பட்டது. ஆழ்வார்களின் அருளிச்செயல் களையும் அதற்கு இவர் அருளிய வியாக்கியானங்களையும் கேட்பதற்கல்லவா இன்றும் திருமொழித் திருநாளாகிய அத்₄ யயநோத்ஸவம் நடக்கிறது. ஸ்ரீராமாயண விசேஷார்த்த₂ங் களைத் தனிச்லோக வ்யாக்₂யானமாகவும், ராமசரமச்லோக வ்யாக்₂யானமான அப₄யப்ரத₃ான ஸாரமாகவும், திவ்யப்ரபந்த

வ்யாக்யானங்களில் பல ஶ்லோகங்களையெடுத்து விவரணம் செய்வதன்மூலமும் வெளியிட்டு, ஸ்ரீராமாயணப்பெருக்கர் என்று பிரஸித்திபெற்றார். அவற்றை ஸேவித்த மதாந்தரஸ்தர்களும், இவர் வால்மீகி ஹ்ருதயத்தினுள்ளிருக்கும் அந்தராத்மாவோ, அல்லது வால்மீகியின் அபராவதாரம்தானோ என்று ஆச்சரியப்பட்டார்கள்.

மற்றுள்ள ஆசாரியர்கள் ஸம்ஸ்க்ருதத்திலோ ஸம்ஸ்க்ருத வாக்யங்கள் நிறைந்த கடுந்தமிழ் நடையிலேயோ கிரந்தங்களும் வியாக்கியானங்களும் எழுதியிருக்கிறார்கள். வியாக்கியானங்களில்லாமல் அவற்றின் அர்த்தங்களை அறிவது அரிது. இம் மஹாசார்யர் வேத₃ப₄ாஷாவிற்பன்னராயிருந்தபோதிலும் பேதை பாமரர்களும் அருமறைப் பொருளை அறிந்துய்யவேணும் என்கிற பொங்கும் பரிவாலே வடமொழியில் க்₃ரந்த₂ங்களியற்றுவதில்லை என்கிற விரதம் பூண்டு, முத்தும் பவழமும் போன்ற வடமொழி தென்மொழிச் சொற்கள் கலந்த மணிப்ரவாள ப₄ாஷையில் எளிய தெள்ளிய நடையில் நெஞ்சையுருக்கும் வாக்யரத்னங்கள் பொதிந்த வியாக்கியானரத்நமாலைகளை அருள்மாரியாகப் பொழிந்திருக்கிறார். மற்றுள்ள ஆசாரியர்களில் பலரும் பத்தெட்டு கிரந்தங்களுக்குமேல் அருளிச்செய்ததில்லை. நூற்றுக்கணக்கான கிரந்தங்களை இவர் அருளிச்செய்ததாக ப்ரஸித்தியிருக்கிறது. இவைகளில் அநேகம் நம் அஜாக்ரதையினால் மறைந்தன. இப்போதும் நம் பாக்கியத்தால் அறுபது கிரந்தங்களுக்குமேலிருக்கின்றன. அவை முழுவதையும் காலக்ஷேபம் செய்து அறிந்து ஆநந்திப்பதற்கு ஒரு புருஷாயுஸ்ஸும் போராது.

பெரியபெருமாள், பெரியாழ்வார், பெரியவாச்சான்பிள்ளை, பெரியஜீயர் என்று சொல்லப்பட்ட நால்வரும் அவரவர் பெருமையால் ‘பெரிய’ என்கிற பட்டம் அடைந்து புகழப்பட்டிருக்கிறார்கள். இப்படிப் பல பெருமைகளையுடைய இம் மஹாசார்யரின் மஹிமையையுணர்ந்த முன்னோர்கள்,

**“வ்யாஸோ வல்மீகஜந்மா வா க₃ருட₃: க்ருஷ்ண ஏவ வா।**
**பு₃தை₄ரிதி விதர்க்யாய ஸ்ரீக்ருஷ்ணாயாஸ்து மங்க₃ளம்॥”**

['இவர் வ்யாஸரோ? வால்மீகியோ? க₃ருட₃னே? க்ருஷ்ணன் தானேயோ?' என்று ஞானிகளால் எண்ணப்படுகிற ஸ்ரீக்ருஷ்ண ஸூரிக்கு மங்க₃ளமுண்டாகக்கடவது.] என்று மொழிந்திருக்கிறார்கள். வடமொழி வேதங்களைப் பிரித்தெடுத்துச் சிக்கறுத்து, ஸூத்ரங்களாலே அவற்றின் பொருளை விவரித்த க்ருஷ்ணத்₃வைபாயனரே தமிழ்வேதப்பொருளை விவரிக்க ஸ்ரீக்ருஷ்ணஸூரியாய் அவதரித்தாரோ? அல்லது ஆதி₃காவ்யமாகவும் வேதோ₃பப்₃ரும்ஹணமாகவும் விளங்கும் ஸ்ரீராமாயணத்தைப் பாடின வால்மீகியே தம்முடைய ஹ்ருத₃யத்தி₃லிருந்த அர்த்த₂ங்களை வெளிப்படுத்த அப₄யப்ரத₃ராஜராக அவதரித்தாரோ, அல்லது வேத₃ஸ்வரூபவிஹங்க₃ராஜரான *பெரிய* திருவடியே மறைப்பொருளை மாண்புறச்செய்யப் *பெரிய*வாச்சான் பிள்ளையாக அவதரித்தாரோ, அல்லது பூர்ணாவதாரமான ஸ்ரீக்ருஷ்ணப₄க₃வானே உபனிஷத்துக்களாகிற க்ஷீராப்₃தி₄யைக் கடைந்து கீ₃தாம்ருதத்தைக் கொடுத்துதவினதுபோல், சரம ஶ்லோகார்த்த₂வ்யாக்யானம் செய்து ப்ரபத்தியின் பெருமையைப் பேசியும், ஆழ்வார்களின் அருளிச்செயல்களாகிற அமுதக் கடலைக் கடைந்து, தமிழ் வேத₃ பா₄ஷ்யங்களாகிற ஆராவமுதத்தை அவனிக்களித்தும் புகர்பெறுகைக்காகத் தன் ஜந்மதி₃னமாகிய ஸ்ரீஜயந்தியிலே '*க்ருஷ்ணன்*' என்னும் திருநாமத்துடனேயே திருவவதரித்தானே என்று பு₃த்₃தி₄மான்கள் எண்ணியெண்ணி அவருக்கு மங்களாசாஸனம் செய்வர்கள்.

**[இதுவரை ப்ரப₄ாவப்ரகாஶிகா ஸ்ரீஸூக்திகள்]**

*அவதாரரஹஸ்யம்*

பெரியதிருமொழியிலே—

''*மெய்ம்மை சொல்லில் வெண்சங்கமொன்றேந்திய*
*கண்ணா! நின்தனக்கும் குறிப்பாகில்*
*கற்கலாம் கவியின் பொருள்தானே*'' [பெரிய-திரு 7-10-10]

என்று திருமங்கையாழ்வார் திருக்கண்ணமங்கைக் கண்ணன் தம் திருமொழியின் அர்த்த₂ங்களை அறிந்துகொள்ளவேண்டுமென்று ஆசைப்படுவதை அவன் திருமுகக்குறிப்பிலிருந்து கண்டு, ''நீ என்னிடமிருந்து கவியின் பொருளைக் கற்றுக்கொள்ளலாம்'' என்று நியமித்தார். அதைக்கேட்ட பரமரஸிகனான கண்ணனும் அவஶ்யம் உம்மிடமிருந்து கவிப்பொருள்களைக்

கற்கிறேன். ஆனால் இப்போது அர்ச்சாவதாரமாகையாலே அது கூடாது. பின்னொருஸமயத்திலே நீர் உமது அவதாரத்திரு நக்ஷத்ரமான கார்த்திகையில் கார்த்திகை நாளிலேயே உமது திருநாமமான 'திருக்கலிகன்றிதாஸர்' என்ற திருநாமத்துடன் இந்தச் சோழ நாட்டிலியே அவதரிக்கப்போகிறீர். அப்போது நான் இச்சோழ நாட்டிலேயே எனது அவதார நக்ஷத்ரமான ஆவணியில் ரோஹிணியிலேயே கண்ணன் (கிருஷ்ணன்) என்னும் பெயருடன் அவதரித்து உம்மை ஆசார்யனாகக் கொண்டு ஆழ்வார்கள் அனைவருடையவும், ஆண்டாளுடையவும் அருளிச் செயல்களின் பொருள்களையும், மற்றுமுள்ள ரஹஸ்யார்த்த₂ங்களை யும், ஸ்ரீராமாயணார்த்த₂ங்களையும் உம்மிடமிருந்தே கற்றறிந்து உலகுய்ய வெளிப்படுத்துவேன்'' என்று அருளிச்செய்தான். அதன்படியே கலிகன்றியாகிய திருமங்கையாழ்வார் திருக்கலி கன்றித₃ாஸராகிற நம்பிள்ளையாகவும் கண்ணன் ஸ்ரீமத்க்ருஷ்ண ஸமாஹ்வரான (க்ருஷ்ணஸூரி எனும்) பெரியவாச்சான் பிள்ளையாகவும் அவதரித்தான் என்று பெரியோர் பணிப்பர். இது நம்பிள்ளை, பெரியவாச்சான்பிள்ளைகளின் அவதார ரஹஸ்யம். மஹாபா₄ரதத்தைச் செய்த வேத₃ வ்யாஸர் அக்காரணத்தை யிட்டே அவரது தகப்பனாரான பராஶர மஹர்ஷியால் நாராயண னுடைய அம்ஶாவதாரமாக அறுதியிடப்பட்டதுபோலே, அந்த மஹாபா₄ரதத்தைக் காட்டிலும் சொற்பொருள் பெருமைகள் மிக்க நாலாயிர வ்யாக்₂யானங்களையும், ஸ்ரீராமாயண தனிஶ்லோகத்தையும், ரஹஸ்ய வ்யாக்₂யானங்களையும், ஸ்தோத்ரக₃த்₃ய வ்யாக்₂யானங்களையும் அருளிய பெரியவாச்சான்பிள்ளையை நாம் எம்பெருமானின் அவதாரமாக அறுதியிடத்தட்டில்லை.

சங்கநல்லூரில் இவரைப்பற்றின சரித்திரம் அதிகமாக வழங்க வில்லை. குடும்பத்தோடு திருமலையாத்ரை எழுந்தருளினாரென்றும், அங்கு திருமலை ஸ்ரீநிவாஸனிடம் திருவேங்கடமுடையான் விக்₃ரஹமொன்றைப் பெற்றாரென்றும், அவ்விக்₃ரஹத்தைச் சங்க நல்லூரில் ப்ரதிஷ்டை₂ செய்தாரென்றும் அவ்வூரில் வரலாறு வழங்குகிறது. பெருமாளைக் கைப்பிடித்தபின்பு மிதிலைக்குச் சென்றறியாத ஸீதாப்பிராட்டியைப்போலே—தம்முடைய தாய் தந்தையர்களுக்குச் சரமகைங்கர்யம் செய்துவிட்டுத் திருவரங்கத்துக்கு வந்து நம்பிள்ளை திருவடிகளை ஆஶ்ரயித்த

பின்பு ''தெரித்தெழுதிவாசித்தும் கேட்டும் வணங்கி வழிபட்டும் பூசித்தும் போக்கினேன் போது'' [நான் திருவ 1] என்று திருமழிசைப்பிரான் அருளிச்செய்த ரீதியிலே, நம்பிள்ளை திருவடிகளிலே ஸகலார்த்த₂ங்களையும் கேட்பதிலும், அவருடைய நியமனம்பெற்று அவைகளை வ்யாக்₂யானங்களாக வடித்தெழுதுவதிலும் அவர் பரமபதி₃த்தபின்பு வடக்குத் திருவீதிப்பிள்ளை முதலான ஸப்₃ரஹ்மசாரிகளையும் கூட்டிக்கொண்டு ஸ்ரீரங்க₃த்தில் த₃ர்ஶநம் நிர்வஹிப்பதிலுமே இவருடைய காலமெல்லாம் கழிந்துவந்தபடியால், இவர் சங்கநல்லூருக்குத் திரும்பினதே இல்லை என்று கொள்ளலாம்.

ஸ்ரீரங்கத்தில் இவர் வாழ்ந்தகாலம் முன்னும் பின்னும் காணமுடியாத நல்லடிக் காலமாயிருந்தது. எம்பெருமானார் காலத்திலும், ப₄ட்டருடைய காலத்திலும் அரசர்களின் உபத்₃ரவம் நேர்ந்ததென்று அறிகிறோம். பிள்ளை லோகாசாரியர், வேதா₃ந்ததே₃ஶிகர் முதலானோர் வாழ்ந்த பிற்காலத்திலும் துருஷ்கர்களால் பேராபத்துக்கள் விளைந்தன என்று அறிகிறோம். இத்தகைய இடையூறுகளில்லாமல் பெரிய கிதயுகம் பற்றிப் பேரின்பவெள்ளம் பெருகியதாலேயே இந்த மஹாசார்யரால் சொற்பொருள் பெருமைகள் மிக்க ஏராளமான க்₃ரந்த₂ங்கள் அருளிச்செய்யப்பட்டன என்று விளங்குகிறது. இவருக்கு ஔரஸபுத்ரரில்லை. மருமகனாராய் (ஸஹோத₃ரிபிள்ளையாய்) த₃த்தபுத்ரரான நாயனாராச்சான்பிள்ளை இவரிடமிருந்து ஸகலார்த்த₂ங்களையும் க்₃ரஹித்தருளினார். இவர்தவிர, பன்னீராயிரப்படியுரையருளிய வாதி₃கேஸரி அழகிய மணவாளச் சீயரும் அஹோபி₃லமட₂ ஸ்தா₂பகரான ஆதி₃வண்ஶட₂ கோபஜீயருக்குப் பரமாசார்யரான ஸ்ரீரங்க₃ாசார்யரும், பரகாலநல்லான் ரஹஸ்யம் மைவண்ண நறுங்குஞ்சிக்குப் பெரிய வ்யாக்யானம், ஆசார்ய ஹ்ருத₃யத்துக்கு முந்துறமுன்னம் வ்யாக்₂யானம் ஆகியவையருளிய பரகாலதா₃ஸர் முதலானோரும் இவருடைய ஶிஷ்யர்களாயிருந்தவர்கள் என்பது பெரிய திருமுடியடைவு முதலான க்₃ரந்த₂ங்களிலிருந்து விளங்குகிறது. வடக்குத்திருவீதிப் பிள்ளையும் நம்பிள்ளை காலத்துக்குப் பிறகு பெரியவாச்சான் பிள்ளையிடம் சில அர்த்த₂ விஶேஷங்கள் கேட்டதாக ''ஆசார்ய ஸம்மதி'' என்னும் தம் ரஹஸ்யத்தில் அருளியிருப்பதாக

ப₄க₃வத்₃விஷய வ்யாக்₂யானத்தில் காட்டப்பட்டுள்ளது. பின்பழகிய பெருமாள் ஜீயரும் நம்பிள்ளை காலத்துக்குப்பின் இவரை ஆஶ்ரயித்திருந்ததாகப் பெரிய திருமுடியடைவு கூறுகிறது. இதனால் நம்பிள்ளை காலத்துக்குப்பின்பு ஸ்ரீரங்க₃த்தில் த₃ர்ஶநம் நிர்வஹித்து வந்தவர் இம்மஹாசார்யரே என விளங்கும்.

வாதிகேஸரி ஜீயர் இவரால் உய்வுபெற்றதைப்பற்றிப் பின் வரும் செய்தியொன்று வழங்குகிறது. பூர்வாஶ்ரமத்தில் அவர் பெரியவாச்சான்பிள்ளைக்குத் திருமடைப்பள்ளி கைங்கர்யம் செய்துவந்தார். நிரக்ஷரகுக்ஷியாகவும் இருந்து வந்தார். அப்பொழுது பெரியவாச்சான்பிள்ளையை ஸேவிக்கவந்திருந்த சில பண்டிதர்கள் அவர் திருமாளிகையில் ஒருபுறத்தில் இருந்து கொண்டு ஒரு க்₃ரந்த₂த்தை ஆராய்ந்துகொண்டிருந்தனர். இவர் அது என்ன ஸ்ரீகோஶம்? என்று அவர்களைக் கேட்டார். நிரக்ஷரகுக்ஷியான இவர் க்₃ரந்த₂த்தின் பெயரைச் சொன்னாலும் புரிந்துகொள்ள முடியாத உலக்கைக்கொழுந்து போன்ற அறிவுடையவர் என்று சுட்டிக்காட்டிப் பரிஹஸிப்பதற்காக "முஸலகிஸலயம்" (உலக்கைக்கொழுந்து) என்று பதில் கூறினார்கள் அவர்கள். யதா₂ஶ்ருதக்₃ராஹியான இவர் உண்மை யாய் அப்பெயரையுடைய க்₃ரந்த₂த்தையே அவர்கள் பரிஶீலிக் கிறார்கள் என்று எண்ணி, பெரியவாச்சான்பிள்ளையிடம் "அந்த வித்₃வான்கள் அடியேன் கேட்டதற்கு முஸலகிஸலய க்₃ரந்த₂த்தை பரிஶீலித்துக்கொண்டிருப்பதாகச் சொன்னார்கள். அதுயார் அருளிச்செய்தது?" என்றுகேட்டார். பெரியவாச்சான் பிள்ளையும் உண்மையை உணர்ந்து "அப்படியொரு க்₃ரந்த₂ மில்லை. உன் பு₃த்₃தி₄ உலக்கைக்கொழுந்து போன்றுள்ளது என்று பரிஹஸித்திருக்கிறார்கள்" என்று வருத்தத்துடன் சொன்னார். இதைக்கேட்ட அழகியமணவாளர், பெரியவாச்சான் பிள்ளை திருவடியைப் பிடித்துக்கொண்டு 'அடியேனை எப்படி யாவது வித்₃வானாக ஆக்கிவிடவேணும்' என்று பிரார்த்தி₂த்தார். அப₄யப்ரத₃ராஜரும் அவரையெழுப்பி அன்போடு அணைத்துக் கொண்டு அப₄யப்ரதா₃னம் செய்து, அன்றுமுதல் அக்ஷராப்₄யாஸம் தொடக்கமாகப் பல கலைகளிலும் பாடம் சொல்லி, தென்மொழி வடமொழி இலக்கண இலக்கியங்களைக் கரைகண்டவராக

ஆக்கினார். அதன்பிறகு "முஸலகிஸலயம்" என்றொரு க்ரந்தம் செய்து பரிஹஸித்த வித்வான்கள் நாணும்படி அவர்களிடமே காட்டினார் வரதராஜர் என்று பூர்வாச்ரமத்தில் பெயர் பெற்றிருந்த அவர் என்பது அந்த வ்ருத்தாந்தம். வாதிகேஸரி ஜீயர் அருளிய "தத்வ நிரூபணம்" என்னும் க்ரந்தத்தின் தொடக்கத்தில்,

அபயப்ரதநாமாநம் அஸ்மத்குருமஹம் பஜே।
யத்கடாக்ஷாதயம் ஜந்து: அபுநர்ஜந்மதாம் கத: ॥

[ஒன்றுமறியாத விலங்குபோல் இருந்த அடியேன், எவருடைய கடாக்ஷத்தால் பிறவாமை பெற்றேனோ, அத்தகைய பெருமை பெற்ற அபயப்ரதர் என்னும் திருநாமமுடைய நம் ஆசார்யரை அடியேன் வணங்குகிறேன்] என்று இவர் அருளிய ச்லோகம் இச்செய்தியை உணர்த்துவதாயுள்ளது.

கடலினும் பெரிதான பெரியவாச்சான்பிள்ளையின் பெருமையில் ஒரு திவலையே இங்கு அநுபவிக்கப்பட்டது. வ்யாக்யான சக்ரவர்த்தியான இவருடைய க்ரந்தங்களிலுள்ள ஒவ்வொரு வாக்யமும் இவர் ஸகலசாஸ்த்ரங்களையும் கரைகண்டவர் என்பதையும், ஆழ்வார்களாலே மயர்வறமதிநலமருளப் பெற்றவர் என்பதையும், பரமரஸிகர் என்பதையும், பரமகாருணிகரென்பதையும் பறைசாற்றுகின்றன.

இவர் தொண்ணூற்றஞ்சு திருநக்ஷத்திரம் எழுந்தருளியிருந்ததாகப் பெரியதிருமுடியடைவில் உள்ளதாகையால், இவரது தீர்த்தம் துந்துபி வருஷம் (கி.பி.1262) எனக்கொள்ளலாம்.

நஞ்சீயர் செய்த வியாக்கியைகள் நாலிரண்டுக்(கு)
எஞ்சாமை யாவைக்கு மில்லையே—தம்சீரால்
வையகுரு வின்தம்பி மன்னுமண வாளமுனி
செய்யுமவை தாமும் சில. [உபதேசரத்தினமாலை 47]

பெரியவாச் சான்பிள்ளை பின்புள்ள வைக்கும்
தெரிய வியாக்கியைகள் செய்வால்—அரிய
அருளிச் செயற்பொருளை யாரியர்கட் கிப்போது
அருளிச் செயலாய்த் தறிந்து. [உபதேசரத்தினமாலை 46]

என்று மாமுனிகள் அருளிச்செய்தபடியே பெரியவாச்சான்பிள்ளையின் பேரருளாலேயே பின்புள்ளாரனைவரும் அருளிச்செயற்பொருளையறிந்து ஆசார்யபதம் நிர்வஹிக்கிறார்கள்.

பெரியவாச்சான்பிள்ளை வைபவம் முற்றிற்று.

# வடக்குத்திருவீதிப்பிள்ளை வைபவம்

ஸ்ரீக்ருஷ்ணபாத₃ பாத₃ாப்₃ஜே நமாமி ஶிரஸா ஸதா₃ ।
யத்ப்ரஸாத₃ப்ரப₄ாவேந ஸர்வஸித்₃தி₄ரபூ₄ந்மம ॥

[எவருடைய அருளின் பெருமையால் எனக்கு ஜ்ஞாந ப₄க்தி வைராக்₃யங்களாகிற எல்லா ஸித்₃தி₄களும் கிடைத்தனவோ, அத்தகைய ஸ்ரீக்ருஷ்ணரெனும் வடக்குத்திருவீதிப்பிள்ளையின் திருவடித் தாமரைகளைத் தலையால் எப்போதும் வணங்குகிறேன்.]

பெரியவாச்சான்பிள்ளை அவதரித்த அதே ஸர்வஜித் வருஷத்திலே ஆனி ஸ்வாதியிலே முடும்பைக்குடியிலே ஸ்ரீவத்ஸகோ₃த்ரத்தில் யஜுஶ்ஶாகை₂ ஆபஸ்தம்பஸூ₂த்ரத்தில் வடம ஸ்ரீவைஷ்ணவ ப்₃ராஹ்மண குலத்திலே, க₃ருட₃ன், பெரியாழ்வார் அம்ஶமாக அவதரித்தவர் ஸ்ரீக்ருஷ்ணபாத₃ர் என்னும் வடக்குத்திருவீதிப்பிள்ளை. இவர் ஈடு முப்பத்தாறுயிரம் பட்டோலை கொண்ட விவரம் நம்பிள்ளை வைப₄வத்திலே காட்டப்பட்டது. மூவாயிரத்திலும் சில தி₃வ்ய ப்ரப₃ந்த₄ங்களுக்கு நம்பிள்ளையுடையதாக வழங்கும் வ்யாக்₂யானங்கள் இவர் பட்டோலை கொண்டவையாயிருக்கலாம். அஷ்டஶ்லோகீ வ்யாக்₂யானம் பெரியபடியிலே—வெகு நீண்டதான ஒரு வாக்யத்தையெடுத்து, பெரியவாச்சான்பிள்ளை பரந்தரஹஸ்யத்திலும், வடக்குத் திருவீதிப்பிள்ளை அஷ்டாக்ஷரதீ₃பிகையிலும் அருளிச்செய்ததாக உரைத்திருப்பதிலிருந்து, பெரியவாச்சான்பிள்ளை பரந்தரஹஸ்யம் அருளியது போல், இவரும் அஷ்டாக்ஷர தீ₃பிகை என்னும் ரஹஸ்ய க்₃ரந்த₂ம் ஒன்று அருளியிருப்பதாகத் தெரிகிறது. வைராக்₃யத்தினாலே கல்யாணமான பின்பும் சுமார் 37 வயஸ்ஸு வரை மனைவியோடு தொடர்பு கொள்ளாதிருந்த இவர் ஆசார்யரான நம்பிள்ளையின் நியமனத்தாலே சிறிதுகாலம் தொடர்பு கொண்டிருந்ததனால் இவருக்குப் பிள்ளைலோகாசார்யர், அழகியமணவாளப்பெருமாள் நாயனார் எனும் இரு குமாரர்கள் அவதரித்தனர். ஈடு முப்பத்தாறுயிரப்படி இவருடைய மேத₄ாவிலாஸத்துக்கு விஜயஸ்தம்ப₄மாய் விளங்குகிறது. பெருமாளும், இளையபெருமாளும் போன்ற பெரியவாச்சான்பிள்ளையும், வடக்குத் திருவீதிப்பிள்ளையும் அவதரித்திராவிடில் அருளிச்செயல்களின் பொருள்கள் விளங்காமல் இவ்வுலகம் இருள்மண்டியிருக்கும். இவரது வைப₄வத்தின் விரிவு பிள்ளைலோகாசார்யர் வைப₄வத்தில் காணலாம்.

வடக்குத்திருவீதிப்பிள்ளை வைப₄வம் முற்றிற்று.

# பிள்ளைலோகாசார்யர் வைபவம்



பிள்ளைலோகாசார்யர்—ஸ்ரீரங்கம்

லோகாசார்யாய குரவே க்ருஷ்ணபாதஸ்ய ஸூநவே ।
ஸம்ஸார போகிஸந்தஷ்ட ஜீவ ஜீவாதவே நம: ॥

[ஸ்ரீக்ருஷ்ணர் என்னும் திருநாமமுள்ள வடக்குத்திருவீதிப்பிள்ளையின் குமாரரும், ஆசார்யலக்ஷணபூர்த்தியுள்ளவரும், ஸம்ஸாரப் பாம்பால் கடியுண்ட உயிர்களுக்கு உயிர்தரும் மருந்தாயிருப்பவருமான பிள்ளை யுலகாசிரியர்க்கு நமஸ்காரம்.]

ஆசார்யாக்₃ரேஸரரான பிள்ளையுலகாசிரியர் ஸ்ரீரங்க₃த்தில் க்ரோத₄ன-ஹு (கி. பி. 1205) ஐப்பசித் திருவோணத்தில் வடக்குத் திருவீதிப்பிள்ளைக்குக் குமாரராய் அவதரித்ததாகப் பெரியதிருமுடி யடைவில் உள்ளது. கி. பி. 1311ல் நிகழ்ந்த துருஷ்கர் படை யெடுப்பின்போது இவர் பரமபதி₃த்ததால் இவர் 106 வருஷங்கள் வாழ்ந்திருக்கவேண்டும். பதின்மூன்ரும் நூற்ருண்டின் பெரும்பகுதி யில் வாழ்ந்திருந்த பெரியவர் இவர். கலாபத்தின்போது நம் பெருமாள் விக்₃ரஹத்தை எழுந்தருளப் பண்ணிக்கொண்டு சென்று இடையில் ஜ்யோதிஷ்குடியென்னுமிடத்தில் ஜ்யேஷ்ட₂ஶுத்₃த₄த்₃வா த₃ஶியில் பரமபதி₃த்தார். அப்போது ஸ்ரீரங்க₃த்திலிருந்து ஶ்ருத ப்ரகாஶிகையை ரக்ஷித்துக்கொண்டுபோன ஸ்ரீவேத₃ாந்ததே₃ஶிகர்க்கு சுமார் 42 திருநக்ஷத்திரமாகிறது.

தமக்கு முந்தி வாழ்ந்த ஆழ்வார்கள் ஆசார்யர்கள் அனைவரும் ஒருதட்டென்ருல், தாம் ஒரு தட்டாம்படி புகழ்படைத்தவர் பிள்ளை யுலகாசிரியர். அவதாரம் தொடங்கிப் பரமபதமடைந்ததீருக ஒவ் வோரம்ஶத்திலும் சிறப்புப் பெற்றவர் இப்பேராசிரியர். மாமுனி களின் உபதே₃ஶரத்தினமாலை, பெரியதிருமுடியடைவு, யதீந்த்₃ர ப்ரவண ப்ரப₄ாவம் முதலான நூல்களைத் துணைகொண்டு இவர்தம் பெருமையைச் சுருக்கமாக அநுப₄விப்போம்.

## அவதார வைப₄வம்

கார்த்திகையில் கார்த்திகைநாள் காசினியில் வந்துதித்த கலிகன்றியாம் திருமங்கைமன்னனே "கண்ண நின்தனக்கும் குறிப்பாகில் கற்கலாம் கவியின் பொருள்தானே" [பெரிய திருமொழி 7-10-10] என்ற தம் திருவாக்கின்படி, ஸ்ரீஜயந்தியிலேயே அவதரித்த கண்ணனும் பெரியவாச்சான்பிள்ளைக்குக் கவியின் பொருளைக் கற்பிக்கக் கார்த்திகையில் கார்த்திகை நாளிலேயே கலிகன்றியென்னும் திருநாமத்துடன் அவதரித்த பெருமையையுடைய லோகாசார்யராம் நம்பிள்ளை, ஒருநாள் நித்யப்படி காலக்ஷேபம் நிறைவடைந்தவுடன் நடுப்பகலில் ஏகாந்தமாய் எழுந்தருளியிருக்க, அவரது சிஷ்யரான வடக்குத்திருவீதிப்பிள்ளையின் திருத்தாயாரான அம்மி என்பவள், "உம்முடைய சீடனை என்பிள்ளைக்கு ஓர் கல்யாணம் செய்வித்தீரே! அவன் பத்னியோடு வாழமறுக்கிருன்; வம்ஶத்திற்குப் பிள்ளையில்லாமற் போய்விடும்போல் இருக்கிறதே!' என்று பெருவருத்தத்துடன் விண்ணப்பிக்க, அவளைத் தேற்றி அவளுடைய மணுட்டுப்பெண்ணை அழைத்துவரச்சொல்லி அவளுடைய திருவயிற்றைத் தம் திருக்கை யாலே ஸ்பர்ஶித்து 'நம்மைப்போல் இருக்கும் ஒரு பிள்ளையைப் பெறக்கடவாய்' என்று அநுக்₃ரஹித்து, வடக்குத் திருவீதிப்பிள்ளையை அழைத்து, "உம்முடைய விஹித விஷய வைராக்₃யத்தை உணர்ந்தோம்; ஆயினும், லோகமர்யாதை₃க்கு நாம் சொன்னதற்காக

இன்றிராக் கூடியிரும்'' என்று நியமிக்க, அப்படியே கூடியிருந்த வளவில் உண்டான கர்ப்பம் பன்னிரண்டாம் மாதத்தில் பூலோக வைகுண்டமான ஸ்ரீரங்கத்தில் ஐப்பசியில் திருவோணத்தில் ஆண் குழந்தையாகப் பிறந்தது. ''லோகாசார்யர் பிள்ளை'' என்று நம்பிள்ளையுடைய திருநாமத்தையே சாத்தி, திருத்தமப்பனரான வடக்குத்திருவீதிப்பிள்ளையால் ஸகலார்த்தங்களையும் அளித்து வளர்க்கப்பட்ட அவரே பிள்ளையுலகாசிரியர். இவர் திருத்தாயார் திருநாமம் ஸ்ரீரங்கநாச்சியார். இவர் கச்சிநகர் எழுந்தருளும் பேரருளாளனும் வரதனின் அம்ஸாவதாரமே என்பதை மாமுனிகள் தாமே ஓர் ஐதிஹ்யத்தின் மூலம் ஸ்ரீவசநபூஷணவ்யாக்யாந ப்ரவேஸத்திலே (நமது பதிப்பு பக்கம் 33-36) நிலை நாட்டியருளினர்.

பிள்ளைலோகாசார்யருடைய அப்ததபூர்த்திக்கு நம்பெருமாளை ஸேவிப்பதற்காகக் குழந்தையைப் பல்லக்கில் எழுந்தருளுவித்து, நம்பிள்ளை முதலான பெரியவர்களனைவரும் கோயிலுக்குச் சென்று மங்களாஸாஸனம்செய்ய, பெருமாளும் நம்பிள்ளையை அர்ச்சகமுகமாக, ''உம்மைப்போல் ஒரு பிள்ளையை அருளினீரே; இனி நம்மைப்போல் ஒரு பிள்ளையை அருளும்'' என்று நியமிக்க, நம்பிள்ளையும் அதை அங்கீகரிக்க, அவ்வநுக்ரஹத்தாலே பிள்ளையுலகாசிரியர்க்குத் திருத்தம்பியார் அவதரித்தருளினர். அழகியமணவாளனின் பிள்ளை என்பது தோற்ற அழகியமணவாளப்பெருமாள் நாயனர் என்று அவருக்குத் திருநாமம் சாத்தி, ராமலக்ஷ்மணர்களைப்போலும், பலராம க்ருஷ்ணர்களைப்போலும் அவர்களை வளர்த்து வந்தனர். இது பிள்ளைலோகாசார்யரின் அவதாரப் பெருமை.

## நிஷ்டாவைபவம்

திருத்தகப்பனரைப்போலே பரமவிரக்தரான இப்பிள்ளைகளிருவரும், வைராக்யபங்கம் ஏற்படலாகாது என்னும் திருவுள்ளத்தாலே நைஷ்டிகப்ரஹ்மசாரிகளாகவே இறுதிவரையில் வாழ்ந்து வந்தனர். இப்பெருமையாலேயே, க்ருஹஸ்தர்களாயிருந்த மற்ற ஆசார்யர்கள் ப்ரபந்நனுக்கு விஹிதவிஷயநிவ்ருத்தி தன்னேற்றம் (சிறப்பு) என்று சொல்லத்துணியாதபோது, பிள்ளையுலகாசிரியர் ஸ்ரீவசநபூஷணத்திலே இவ்வரும்பொருளை ஸூத்ரமிட்டருளினர்.

## க்ரந்த வைபவம்

மற்ற ஆசார்யர்கள் வேதாந்த விவரணக்ரந்தங்களும், வேதாந்த சாயையில் அமைந்த திராவிடவேதாந்த விவரணக்ரந்தங்களும் அருளுவதையே முக்யக்ருத்யமாகக் கொண்டிருந்தனராகையால், ஸாரதமமான அர்த்தங்கள் அவர்களுடைய கிரந்தங்களிலே தேடிக் கண்டுபிடிக்கவேண்டும்படியிருக்கும். அப்படியல்லாமல் ஸாரதமமான ரஹஸ்யத்ரய விவரணம், தத்வத்ரயவிவரணம் முதலிய ரஹஸ்ய

க்₃ரந்த₂ங்களை இயற்றுவதையே போதுபோக்காகக் கொண்டிருந்தவ ராகையாலே, சாடுக்தி, ரஸோக்தி, அலங்காரோக்தி முதலான எதுவும் கலசாமல், ஒவ்வொரு பத₃மும் தத்த்வநிர்ணயபரமாகவேயிருக்கும் கிரந்தங்களையே அருளிய பெருமை பிள்ளையுலகாசிரியர் ஒருவர்க்கே உரியதாகும். இவருடைய க்₃ரந்த₂ங்கள் அஷ்டாத₃ஶரஹஸ்யங்கள் என்று பெயர்பெற்று ஸ்ரீவைஷ்ணவவுலகை உய்வித்து வருகின்றன. மாமுனிகளின் வியாக்கியானங்களிலிருந்து தனிஶ்லோகம் முதலான மற்றும் சில கிரந்தங்கள் இவர் அருளியதாகத் தெரியவந்தாலும், அவை இப்போது கிடைப்பதில்லை. இவருடைய கிரந்தங்கள் அனைத்திலும் சிறப்புப்பெற்றதாய் மற்ற கிரந்தங்களிலில்லாத பல பரம ரஹஸ்யார்த்த₂ங்களை அறிவிப்பதாய், பெரியபெருமாளுடைய நியமனத்தால் அவதரித்ததாய், அவரால் அங்கீ₃கரிக்கப்பட்டதான ஸ்ரீவசநபூ₄ஷணம் ஒன்றுக்கே இரு பூர்வாசார்ய வ்யாக்₂யானங்கள் அமைந்தன. அதிலும், மாமுனிகளின் வியாக்கியானம் அத்யாஶ்சர்யமான பல அரும்பதவுரைகளோடும் மீமாம்ஸாபா₄ஷ்யத்தோடும் பொலிகின்றது. பூர்வாசார்யர்கள் க்₃ரந்த₂ஸ்த₂மாக்காமல் மறைத்துப் போந்த பல அரும்பொருள்கள் இந்த க்₃ரந்த₂த்திலேயே முதலில் வெளிப்படுத்தப்பட்டன. ப்ரபத்தியில் ஸ்வக₃தஸ்வீகாரநிஷ்டை₂ பரக₃தஸ்வீகாரநிஷ்டை₂ என்னும் இரு வகையுண்டு, பரமமுக்தியிலும் ஸ்வார்த்த₂ பரார்த்த₃ பே₄த₃முண்டு முதலானவை அவற்றில் சில. இந்த க்₃ரந்த₂த்தைப் பற்றிச் சிலர் ஆக்ஷேபிக்க, இதில் அருளப்பட்ட அர்த்த₂ங்களை நிலைநிறுத்துவதற்காகவே அழகியமணவாளன் திருமுன்பே, இவர் திருத்தம்பியாரான அழகியமணவாளப்பெருமாள் நாயனாராலே ஆசார்யஹ்ருத₃யம் என்னும் அத்₃பு₄தக்₃ரந்த₂ம் அருளிச் செய்யப்பெற்று, நம்பெருமாளின் அங்கீ₃காரத்தையும் அநுக்₃ரஹத்தையும் இந்த தி₃வ்யக்₂ரந்த₂ம் அடைந்தது. மாமுனிகளருளிய உபதே₃ஶரத்தினமாலையில் பற்பல அரிய பாசுரங்களைப் பெற்ற பெருமை இந்த தி₃வ்யக்₃ரந்த₂த்திற்கே உண்டு. அவையாவன:—

அன்னபுகழ் முடும்பை யண்ணலுல காசிரியன்
இன்னருளால் செய்தகலை யாவையிலும்—உன்னில்
திகழ்வசன பூடணத்தின் சீர்மையொன்றுக் கில்லை
புகழலவிவ் வார்த்தைமெய்யிப் போது.

முன்னம் குரவோர் மொழிந்த வசனங்கள்
தன்னைமிகக் கொண்டுகற்றோர் தம்முயிர்க்கு—மின்னணியாச்
சேரச் சமைத்தவரே சீர்வசன பூடணமென்
பேர்இக் கலைக்கிட்டார் பின்.

ஆர்வசன பூடணத்தி னாழ்பொருளெல் லாமறிவார் ?
ஆரதுசொன் னேரி லநுட்டிப்பார் ?—ஓரொருவ
ருண்டாகி லத்தனைகா ணுள்ளமே! எல்லார்க்கும்
அண்டாத தன்றோ வது ;

உய்ய நினைவுடையீர் ! உங்களுக்குச் சொல்லுகின்றேன்
வைய குருமுன்னம் வாய்மொழிந்த—செய்யகலை
யாம்வசன பூடணத்தி னாழ்பொருளைக் கற்றதனுக்
காம்நிலையில் நில்லு மறிந்து.

தேசிகர்பால் கேட்ட செழும்பொருளைச் சிந்தைதன்னில்
மாசறவே யூன்றமன நஞ்செய்து—ஆசரிக்க
வல்லார்கள் தாம்வசன பூடணத்தின் வான்பொருளைக்
கல்லாத தென்னோ கவர்ந்து ?

சச்சம் பிரதாயம் தாமுடையோர் கேட்டக்கால்
மெச்சும் வியாக்கியைதா னுண்டாகில்—நச்சி
அதிகரியும் நீர்வசன பூடணத்துக் கற்ற
மதியுடையீர் ! மத்தியத்த ராய்.

சீர்வசன பூடணத்தின் செம்பொருளைச் சிந்தைதன்னால்
தேறிலுமாம் வாய்கொண்டு செப்பிலுமாம்—ஆரியர்காள்
என்றனக்கு நாளு மினிதாக நின்றதையோ !
உந்தமக்கெவ் வின்பமுள தாம்.

[உபதேசரத்தினமாலை 53 to 59]

## கு₃ணவைப₄வம்

கு₃ணமென்னும் குன்றேறி நின்றவர் இவ்வாசிரியர் ஒருவரே. அஜாதஶத்ருவாய் விளங்கிய பரமஸாத்விகர் இப்பெரியார். இவரது க்₃ரந்த₂ங்களில் கடுமையான ஓர்வாக்யமும் காணக்கிடைக்காது. தம் ஸம்ப₃ந்த₄ம் பெற்ற திர்யக்குகளுக்கும் மோக்ஷமளித்த பெருமை இப்பேராசிரியர்க்கு உண்டு. திருவரங்கம் துருஷ்கர்களால் ஆக்ரமிக்கப் பட்டபோது, பெரியபெருமாளுக்குத் திருமுன்பே கல்காப்புச் சாத்தி, நம்பெருமாளை எழுந்தருளுவித்துச் சென்று ரக்ஷித்த பெருமை இவர் சிறப்புக்களில் தலையானது. அப்படி ரக்ஷிக்கும் காலத்திலேயே (ஜ்யோதிஷ்குடி என்னும் கிராமத்திலே) திருநாட்டுக்கு எழுந்தருளி, தம்முடைய ஸர்வத்தையும் நம்பெருமாளுக்காகப் பரித்யாக₃ம் செய்த பெருமை இப்பெரியார் ஒருவருக்கே உண்டு.

## சிஷ்யப்பெருமை

திருத்தர்பியாரான அழகிய மணவாளப்பெருமாள்நாயனார், கூரகுலோத்தமதா₃ஸர், (மாமுனிகளின் ஆசார்யரான) திருவாய் மொழிப்பிள்ளை, விளாஞ்சோலைப்பிள்ளை, மணற்பாக்கத்து (திருச் சானூர்) நம்பியார், (மாமுனிகளின் பூர்வாஶ்ரம திருத்தமப்பனாரான) திகழக்கிடந்தாரண்ணன் முதலான பல பல பெருமக்களை சிஷ்யராகப் படைத்திருந்த பெருமையும் இப்பெரியார்க்கு உண்டு.

பிள்ளைலோகாசார்யர் வைப₄வம் முற்றிற்று.

## நாயனாராச்சான்பிள்ளை வைபவம்

ஶ்ருத்யர்த்த₂ஸாரஜநகம் ஸ்ம்ருதிபா₃லமித்ரம்
பத்₃மோல்லஸத்₃ப₄க₃வத₃ங்க்₄ரிபுராணப₃ந்து₄ம் ।
ஜ்ஞாநாதி₄ராஜமப₄யப்ரத₃ராஜபுத்ரம்
அஸ்மத்₃கு₃ரும் பரமகாருணிகம் நமாமி ॥

[வேதப்பொருள்களின் ஸாரத்தைக் கடைந்தெடுப்பவராய், ஸ்ம்ருதிகளாகிற தாமரைகளுக்கு இளஞ்சூரியனாய், ஶ்ரிய:பதியின் திருவடிகளுக்குப் பழைய உறவினராய், ஞானங்களுக்குப் பேரரசராய், அப₄யப்ரத₃ராஜரின் பிள்ளையாய், பரமகாருணிகரான என் ஆசாரியரை வணங்குகிறேன்.]

பெரியவாச்சான்பிள்ளை, தமக்கு ஔரஸபுத்ரனில்லாமையாலே ஸஹோத₃ரி குமாரரான அழகிய மணவாளப்பெருமாள் நாயனாரை ஸ்வீகாரமெடுத்துக்கொண்டு அவருக்கு ஸகலார்த்த₂ங்களையும் உபதே₃ஶித்தார். இவருடைய ஶிஷ்யரான பரகால தா₃ஸர் அருளிய பரகாலநல்லான் ரஹஸ்யத்தில் "அப₄யப்ரத₃ கு₃ருஸூநுவான ஸுந்த₃ரவரராஜாசார்யர்" என்று இவர் திருநாமம் எடுக்கப்பட்டுள்ளது. ஸுந்த₃ரவரராஜாசார்யர் என்பது "அழகியமணவாளப்பெருமாள் நாயனார்" என்பதின் நேர் ஸம்ஸ்க்ருதமொழிபெயர்ப்பாகும். இவரை "ஸௌம்யவரேஶ வரர்" என்றும் பரகாலநல்லான் ரஹஸ்யத்தில் எடுத்திருப்பதும் இவர் திருநாமம் இதுவே என்று வலியுறுத்துகிறது. பிள்ளை லோகாசார்யரின் திருத்தம்பியார் திருநாமமும் இதுவேயாயிருந்தபடியால், வாசி தெரிவதற்காக அவரை 'அழகியமணவாளப் பெருமாள் நாயனார்' என்றும், இவரை 'நாயனாராச்சான்பிள்ளை' என்றும் பின்புள்ளார் வழங்கினார்கள். இவர் பல க்₃ரந்த₂ங்களை அருளிச்செய்தவர். அவற்றில் சது:ஶ்லோகீ வ்யாக்₂யானம் தலை சிறந்து விளங்குகிறது. பிராட்டி பற்றிய பூர்வாசார்யநிர்ணயத்தை மிக விரிவாக இக்₃ரந்த₂த்தில் இவர் நிலைநாட்டியுள்ளார். இப்போதுள்ள இவருடைய மற்றொரு க்₃ரந்த₂மான தத்வ ஸங்க்₃ரஹத்திலும் இவ்விஷயமே நிலைநாட்டப்பட்டுள்ளது. சரமோபாயநிர்ணயத்தில் எம்பெருமானாரே உத்தாரகாசார்யர் என்னும் பரமரஹஸ்யத்தை நிலைநாட்டியுள்ளார் இம்மஹா

சாயர் இவர் அருளிய ''முக்தபோ₄காக₃ாவலீ'' இப்போதும் தெலுங்கு லிபியில் அச்சிடப்பட்டுள்ளது இதைச் சிறுவயதிலே இயற்றி, தந்தையான பெரியவாச்சான்பிள்ளையிடம் காட்ட, "எனக்குச் சரமத்திலே (1 கடைசியிலே 2 சரமபர்வத்திலே) பிறந்த ஜ்ஞானம் உனக்கு ப்ரத₂மத்திலே (1 முதலிலேயே 2 ப்ரத₂மபாவத்திலே) உண்டாயிருந்தது ஆனாலும் என்னோடு வைஷ்ணவத்வத்தைக் கற்கவேணும" என்று பெரியவாச்சான் பிள்ளை அருளியதாக வாதி₃கேஸரி ஜீயரின சிஷ்யராய் திருமாலையாண்டான் வம்ஶஸ்த₂ரான யாமுனாசார்யர் ப்ரமேயரத்னம் என்னும க்₃ரந்த₂ததிலே அருளியிருப்பது இவருடைய ஜ்ஞான வைப₄வத்தையுப் பெரியவாச்சான்பிள்ளை கிளியைப் பழக்குவது போலே இவரைப் பழக்கியதையும காட்டுகிறது. ஜ்ஞானார்ணவம், ததவத்ரயவிவரணம், அணுத்வபுருஷகாரத்வஸமர்த்த₂னம், சரமரஹஸ்யத்ரயம் முதலான சில க்₃ரந்த₄ங்களையும் இவர் அருளியிருப்பதாகப் பெரியதிருமுடியடைவு, ரஹஸ்ய விவேகம் முதலான க்₃ரந்த₂ங்களிலிருந்து விளங்குகிறது இவரருளிய இந்த க்₃ரந்த₂ஙகள் இப்போது இலலை தி₃வயப்ரப₃ந்த₄ வ்யாக்₂யாதாக்களோடு பல விஷயங்களில் கருத்து வேறுபாடுகள் தெரிவித்த ஸ்ரீவேத₃ாநததே₃ஶிகரோடு நேரிலும் க்₃ரந்த₄ங்கள் மூலமாகவும் சர்ச்சைசெயது தி₃வயப்ரப₃ந்த₄வயாக்₂யாதாக்களின் கருத்துக்களை நிலைநாட்டியவா இவா எனறும், பிளளை லோகாசார்யரிடம் ஆசார்யதுலய ப்ரதிபததி கொண்டிருந்தவர் இவர் என்றும் இவருடைய க்₃ரந்த₂ஙகளிலிருந்து விளங்குகிறது ஸ்ரீவேத₃ாந்ததே₃ஶிகரைவிட இவா சுமாா 40 வருடங்கள் மூத்தவரானாலும் இருவரும் பல வருஷங்கள் சேர்ந்து வாழ்ந்திருக்கவேண்டும் [ தே₃ஶிகனைவிடப் பிள்ளைலோகாசார்யர் சுமார் 64 வயஸ்ஸு மூத்தவராயிருந்திருக்கவேண்டும் ] தென்னாசார்ய ஸம்ப்ரத₃ாயகொள்கைகளில பலவற்றை நிலைநாட்டிய நாயனாருடைய க்₃ரந்த₄ங்களிற பல லுப்தமாகிவிட்டதும், இருக்கும் க்₃ரந்த₂ங்களும் மிகுந்த ப்ரசாரமிலலாதிருப்பதும் மிகவும் வருந்தத்தக்கது வாதி₃கேஸரி ஜீயர், ஆதிவண்ஶட₂ கோபஜீயருக்குப் பரமாசார்யரான ஸ்ரீரங்க₃ாசாரியா, பரகால த₃ாஸர் முதலானோர் இவருடைய ஶிஷ்யர்கள்

நாயனாராசசானபிளளை வைப₄வம முறறிறறு

# அழகியமணவாளப்பெருமாள்நாயனர் வைபவம்

—: :—

த்₃ராவிட₃ாம்நாயஹ்ருத₃யம் கு₃ருபர்வக்ரமாக₃தம் ।
ரம்யஜாமாத்ருதே₃வேந த₃ர்ஶிதம் க்ருஷ்ண ஸூநுநா ॥

[ஆசார்ய பரம்பராப்ராப்தமான திராவிடவேதஹ்ருதயம் வடக்குத் திருவீதிப்பிள்ளையின் குமாரரான அழகியமணவாளப்பெருமாள்நாயனுரால் (ஆசார்யஹ்ருத₃யநூலில்) காட்டப்பட்டது.]

பிள்ளைலோகாசார்யரின் திருத்தம்பியாரான இவரது அவதார வைப₄வம் பிள்ளைலோகாசார்யர் வைப₄வத்திலேயே காட்டப்பட்டது. இவர் திருநக்ஷத்ரம் மார்கழி அவிட்டம். பஞ்சஸம்ஸ்காரங்களும் நித்யாநுஸந்த₄ானமும் ஸாதித்தருளினவர் திருத்தகப்பனுரான வடக்குத்திருவீதிப்பிள்ளை. ஸ்ரீப₄ாஷ்யாதி₃க்₃ரந்த₂ங்களும், ஶ்ருதப்ர காஶிகையும், ரஹஸ்யங்களும் ரஹஸ்யவ்யாக்₂யானங்களுமாகிய ஸகலார்த்த₂ங்களையும் ஸாதித்தருளின ஆசார்யர் நம்பிள்ளை. திருவாய் மொழி முதலான தி₃வ்யப்₃ரப₃ந்த₄ங்களும், அவற்றின் வ்யாக்₂யானங் களும் ஸாதித்தருளின ஆசார்யர் திருத்தமயனுரான பிள்ளைலோகா சார்யர். இவர் திருத்தாயார் ஸ்ரீரங்கநாச்சியார். இவர் செய்தருளின தலைசிறந்த க்₃ரந்த₂ம் ஆசார்யஹ்ருத₃யம். திருப்பாவை ஆருயிரப்படி, அமலனுதிபிரான், கண்ணிநுண் சிறுத்தாம்பு முதலான சில தி₃வ்ய ப்ரப₃ந்த₄ங்களுக்கு வ்யாக்₂யானங்கள், அருளிச்செயல் ரஹஸ்யம் ஆகியவை இவரது க்₃ரந்த₂ங்கள். ''தஞ்சீரால் வையகுருவின் தம்பி செய்யுமவைதாமும் சில'' [உபதேச 47] என்று இவர் சில தி₃வ்யப்ர ப₃ந்த₄ங்களுக்கு விரிவாக வ்யாக்₂யானம் செய்தருளியதை மாமுனிகள் எடுத்துக்காட்டினுர். பிள்ளைலோகாசார்யருக்கு இரண்டு அல்லது மூன்று வருஷங்களே இளையவரான இவர், சுமார் நூறு வருடங்கள் வாழ்ந்து, பிள்ளைலோகாசார்யருக்கு முன்னதாகவே ஸ்ரீரங்க₃த்தில் பரம பதி₃த்தருளினுர். பிள்ளைலோகாசார்யர் பரமப₄ாக₃வதரான இவரது விஶ்லேஷத்தாலே மிகவும் வருந்தியவராய் இவர் திருமுடியைத் தம் மடியிலே வைத்துக்கொண்டு ''மாமுடும்பை மன்னு மணவாளவண்ண லொடு சேமமுடன் வைகுந்தம் சென்றக்கால்—மாமென்று தொட்டு ரைத்த சொல்லும் துயந்தன்னினுழ்பொருளும் எட்டெழுத்து மிங்குரைப் பாரார்?'' என்று பலவாறு புலம்பித் திருமுத்துதிர்த்து (கண்ணீர் பெருக்கி), முதலிகள் தேற்றத்தேறி நின்று, நாயனுருக்குச் சரம கைங்கர்யம் செய்து திருவத்₄யயனமும் நடத்தியருளினுர். வேத₃ாந்த தே₃ஶிகரோடு கருத்துவேற்றுமையைத் தம் ஆசார்யஹ்ருத₃யத்தில் இம்மஹாசார்யரும் அழுத்தமாகத் தெரிவித்துள்ளார்.

அழகிய மணவாளப்பெருமாள் நாயனுர் வைப₄வம் முற்றிற்று.

# வாதிகேஸரி அழகியமணவாளச்சீயர் வைபவம்



ஸுந்த₃ரஜாமாத்ருமுநே: ப்ரபத்₃யே சரணம்பு₃ஜம் ।
ஸம்ஸாரார்ணவ ஸம்மக்₃ந ஜந்து ஸந்தாரபோதகம் ॥

[ஸம்ஸாரக்கடலில் அமிழ்ந்த ஜந்துக்களைத் தாண்டுவிக்கும் ஓடம் போன்றதான (வாதி₃கேஸரி) அழகியமணவாள ஜீயரின் திருவடித் தாமரையை ஶரணடைகிறேன்.]

பெரியவாச்சான்பிள்ளைக்கும், நாயனாராச்சான்பிள்ளைக்கும் ஶிஷ்யரான இவர் தென்தே₃ஶத்தில் ப்₃ரஹ்மதே₃ஶம் மன்னார்கோவிலில் ஆனி ஸ்வாதியில் அவதரித்தவர். திருவாய்மொழிக்குப் பன்னீராயிரப்படியுரை இவர் அருளிய தலைசிறந்த க்₃ரந்த₂ம்,

"அன்போ டழகிய மணவாளச் சீயர்
பின்போரும் கற்றறிந்து பேசுகைக்கா—தம்பெரிய
போதமுடன் மாறன் மறைப்பொருளைச் சொன்னது
ஏதமில் பன்னீரா யிரம்" [உபதேசரத்தினமாலை 45]

என்று மாமுனிகள் இவ்வுரையின் பெருமையை அருளிச்செய்தார். இவரைப் பெரியவாச்சான்பிள்ளை திருத்திப்பணிகொண்ட விவரம் அவர் வைப₄வத்திலே காட்டப்பட்டது. "மன்னுமணவாளமுனி செய்யுமவைதாமும் சில" [உபதேச 47] என்று மாமுனிகள் அருளியபடியே திருவிருத்தம் ஸ்வாபதே₃ஶவுரை முதலான மூவாயிரத்தில் சில ப்ரப₃ந்த₄ங்களுக்கு உரை. திருவாய்மொழிகளுக்கு ஒன்றோடொன்று தொடர்பைச் சொல்லும் ஸம்ஸ்க்ருதபத்₂யக்₃ரந்த₂மான த்₃ரமிடோ₃பநிஷத்ஸங்க₃தி தத்வங்களை விளக்கும் ஸம்ஸ்க்ருதக₃த்₂ய க்₃ரந்த₂மான தத்வதீ₃பம், அதுக்கு மணிப்ரவாளநடையில் இவரே செய்த வ்யாக்₂யானமான தீ₃பப்ரகாஶம், தீ₂பஸங்க்₂ரஹம், தத்வநிரூபணம், ரஹஸ்யத்ரயகாரிகாவளி, ப₄க₃வத்₂கீ₃தை வெண்பா முதலான இவரது ப்ரப₃ந்த₄ங்கள் இப்போதும் உள்ளன. கீ₃தைக்கு மணிப்ரவாள வ்யாக்₂யானம் முதலான இவரருளிய மற்றும் சில க்₃ரந்த₂ங்கள் இப்போது கிடைக்கவில்லை. திருமாலையாண்டான் திருவம்ஶஸ்த₂ரான யாமுனாசார்யர் இவரது ஶிஷ்யர். இந்த யாமுநாசார்யரது வைப₄வம் திருமாலையாண்டான் வைப₄வத்தில் காட்டப்பட்டது. வாதி₃கேஸரி ஜீயர் பூர்வாஶ்ரமத்தில் வரத₃ராஜர் என்னும் திருநாமமுடையவராயிருந்து, உத்தமாஶ்ரமத்தில் ஸுந்த₃ரஜாமாத்ருமுனி—அழகியமணவாளச்சீயர் என்னும் திருநாமத்தைப் பெற்றார். பல வாதி₃களை ஜெயிக்கையால் 'வாதி₃கேஸரீ' என்னும் பட்டப்பெயரையும் பெற்றார்.

வாதி₃கேஸரி அழகியமணவாளச்சீயர் வைப₄வம் முற்றிற்று.

# கூரகுலோத்தமதாஸர் வைபவம்

ஸ்வயமாஹூய ஶைலேஶகு₃ரவே ஽ர்த்த₂ப்ரத₃ாநத: ।
லப்₃தே₄ாத₃ாரபி₄த₄ம் கூரகுலோத்தம கு₃ரும் ப₄ஜே ॥
லோகாசார்ய க்ருபாபாத்ரம் கௌண்டி₃ந்ய குலபூ₄ஷணம் ।
ஸமஸ்தாத்ம கு₃ணாவாஸம் வந்தே₃ கூரகுலோத்தமம் ॥

[திருமலையாழ்வாராகிய திருவாய்மொழிப்பிள்ளைக்குத் தாமே வலியச்சென்றழைத்து நற்பொருள்களை உபதேசிக்கை யாலே 'உதா₃ரர்' என்னும் அடைமொழிபெற்றவரான கூரகுலோத்தமரை ஆஶ்ரயிக்கிறேன். பிள்ளையுலகாசிரியரின் கிருபைக்குப் பாத்திரரும், கௌண்டி₃ன்யகுலத்திற்கு அலங் காரமாயிருப்பவரும், எல்லா ஆத்மகு₃ணங்களுக்கும் இருப்பிட மானவருமான கூரகுலோத்தமதா₃ஸரை வணங்குகிறேன்.]

பூர்வஶிகா₂ ஸ்ரீவைஷ்ணவ ப்₃ராஹ்மணகுலத்தில் கௌண்டி₃ந்ய கோ₃த்ரத்தில் அவதரித்த இவருடைய திருவவதார ஸ்த₂லம் கோயில் (ஸ்ரீரங்கம்) என்றும், திருநக்ஷத்திரம் ஐப்பசி மாதம் திருவாதிரை என்றும் பெரிய திருமுடியடைவு கூறுகிறது. இவருக்குப் பஞ்சஸம்ஸ்காரங்களும் நித்யாநுஸந்தா₄னங்களும் ஸாதி₄த்தருளிய ஆசார்யர் வடக்குத்திருவீதிப்பிள்ளை; திருவாய் மொழி முதலான தி₃வ்யப்ரப₃ந்த₄ங்களும், அவற்றின் வ்யாக்₂யானங்களும், ஸ்ரீப₄ாஷ்யாதி₃க்₃ரந்த₂ங்களும், ஶ்ருத ப்ரகாஶிகை முதலான க்₃ரந்த₂ங்களும் ஸாதித்தருளின ஆசார்யர் பிள்ளைலோகாசார்யர். ரஹஸ்யங்கள், அவற்றின் அர்த்த₂ங்கள் முதலானவை ஸாதித்தருளின ஆசார்யர் அழகிய மணவாளப்பெருமாள் நாயனார். இவர் பிள்ளைலோகாசார்யரின் நியமனத்தாலே, ராஜகார்யத்தில் ஈடுபட்டிருந்த திருவாய்மொழிப் பிள்ளையைத் தாமே வலியச்சென்று திருத்திப் பணிகொண்டு த₃ர்ஶன ப்ரவர்த்தகராக்கினார். இச்செயலாலே உதா₃ரர் (வண்மை மிக்கவர்) என்று புகழ்பெற்றார். இவருடைய வைப₄வத்தின் விரிவு திருவாய் மொழிப்பிள்ளை வைப₄வத்தில் காணலாம்.

*கூரகுலோத்தம தாஸர் வைப₄வம் முற்றிற்று.*

# ஈயுண்ணிமாதவர், பத்மநாபர், நாலூர்ப்பிள்ளை, நாலூராச்சான்பிள்ளை வைபவம்



லோகாசார்ய பத₃ாமபே₄ாஜஸமாஶ்ரயம கருணும்பு₃தி₄ம் ।
வேத₃ாநததத₃வயஸமபநநம மாத₄வாாயமஹம ப₄ஜே ॥

[உலகாரியரான நம்பிள்ளையின் திருவடித்தாமரையைப் பற்றிய வராய், கருணைக்கடலாய், உப₄யவேத₃ாந்தச் செல்வமுடையவ ரான (ஈயுண்ணி) மாத₄வாசார்யரை ஆஶ்ரயிக்கிறேன் ]

மாத₄வாசாாய ஸதபுதரம ததபாத₃கமலாஶ்ரிதம் ।
வாதஸலயாதி₃ கு₃ணோயுகதம பத₃மநாப₄கு₃ரும ப₄ஜே ॥

[(ஈயுண்ணி) மாதவரின் நல்ல குமாரராய், அவருடைய திருவடித்தாமரையில் ஆஶ்ரயிததவராய் வாத்ஸல்யம் முதலான கு₃ணங்களையுடையவரான (ஈயுண்ணி) பத்₃மநாப₄ாசார்யரை ஆஶ்ரயிக்கிறேன் ]

சதுாக₃ராமகுலோத₃பூ₄தம த₃ராவிட₃ப₃ரஹ்மவேதி₃நம் ।
யஜ்ஞாய வமஶதிலகம ஸ்ரீவராஹமஹம ப₄ஜே ॥

[நர்லூரானின் வம்ஶத்தில் உதித்தவராய், (எம்பெருமானாரின் சீடரான) எச்சான் எனப்படும் யஜ்ஞேஶரின் குலத்திற்குத் திலகமாய், திராவிட வேதப்பொருளை அறிந்தவரான ஸ்ரீவராஹர் எனப்படும் நாலூர்ப்பிள்ளையை ஆஶ்ரயிக்கிறேன் ]

நமோஸது தே₃வராஜாய சதுாக₃ராம நிவாஸிநே ।
ராமாநுஜாாயத₃ாஸஸய ஸுதாய கு₃ணஶாலிநே ॥

[நாலூரில் வாழ்பவரும், ராமாநுஜார்யர் எனப்படும் நாலூர்ப் பிள்ளையின் குமாரரும், கு₃ணமுடையவருமான தே₃வராஜர் எனப்படும் நாலூராச்சான்பிள்ளைக்கு வணக்கம்.]

பெரியதிருமுடியடைவில்

இவாகள் திருநக்ஷததிரஙகள முதலானவை

*ஈயுணணிமாதவருககுத்* திருநக்ஷத்ரம் கார்த்திகை மாஸம் பரணி. இருப்பிடம் கோயில்.

*ஈயுண்ணிபத்₃மநாப₄ருக்கு* ஆசார்யர் திருத்தகப்பனாரான ஈயுண்ணிமாதவர். திருவாராத₄னம் பெரியபெருமாள். இருப்பிடம் கோயில்.

*நாலூர்ப்பிள்ளைக்குத்* திருவவதார ஸ்த₂லம் தொண்டை மண்டலத்தில் மேல்பாடகம். குடி நாலூர். காஶ்யபகோ₃த்ரம். இவர் கூரத்தாழ்வான் திருவடிகளில் ஆஶ்ரயித்த நாலூரான் திருவம்ஶம்.

*நாலூராச்சான்பிள்ளை* திருநக்ஷத்ரம் மார்கழி மாஸம் ப₄ரணி. இருப்பிடம் பெருமாள் கோயில், சிஷ்யர் திருநாராயணபுரத்தாய், இளம்பிளிசைப்பிள்ளை. திருவாய்மொழிப்பிள்ளை.

238-பக்கத்தில் எடுத்துக்காட்டப்பட்ட உபதேசரத்தினமாலைப் பாசுரங்களில் மாமுனிகள் அநுஸந்தி₄த்த ரீதியில் நம்பிள்ளையிடமிருந்து வடக்குத் திருவீதிப்பிள்ளை பட்டோலை கொண்ட முப்பத்தாறுயிரப்படியாகிற ஈட்டை ஈயுண்ணி மாத₄வரென்னும் நம்பிள்ளைஶிஷ்யர் பெற்றார். அவரிடமிருந்து அவர் குமாரர் ஈயுண்ணி பத்₃மநாப₄ர் அந்த ஸ்ரீகோஶத்தைப் பெற்றார். அவர் தமது ஶிஷ்யரான நாலூர்ப்பிள்ளை, ராமாநுஜர் என்னும் கோலவராஹப் பெருமாளுக்கு அந்த ஸ்ரீகோஶத்தை அளித்தார். இவருடைய அவதாரஸ்த₂லம் காஞ்சியில் பாண்ட₃வதூதர் ஸன்னிதியிருக்கும் பாடகம். குடி நாலூர். இவருடைய குமாரர் தே₃வராஜர் என்னும் திருநாமமுள்ள நாலூராச்சான்பிள்ளை. நாலூர் என்பது இவர்களது குடிப்பெயர். நாலூர்ப்பிள்ளை தமது குமாரரான நாலூராச்சான்பிள்ளைக்கு ஈடுஸ்ரீகோஶத்தை அளித்தார். தேவப்பெருமாள் நியமனத்தாலே நாலூராச்சான் பிள்ளை அந்த ஈடுமுப்பத்தாறுயிரத்தைத் தமது ஶிஷ்யர்களான திருநாராயணபுரத்து ஆய், இளம்பிளிசைப்பிள்ளை, திருவாய் மொழிப்பிள்ளை முதலானோர்க்கு உபதே₃ஶித்தருளினார். திருவாய்மொழிப்பிள்ளையிடமிருந்து முப்பத்தாறுயிரப்பெருக்கரான மாமுனிகளையடைந்த ஈடு முப்பத்தாறுயிரம் அவர்மூலம் இவ்வுலகில் விஶேஷமாகப் பரவிற்று. இந்த நாலூர்ப்பிள்ளையும் நாலூராச்சான்பிள்ளையும் எம்பெருமானார் திருவடியில் ஆஶ்ரயித்த யஜ்ஞேஶர் என்னும் எச்சானுடைய வம்ஶத்தைச் சேர்ந்தவர்கள்.

ஈயுண்ணிமாதவர், பத்மநாபர், நாலூர்ப்பிள்ளை,
நாலூராச்சான்பிள்ளை வைப₄வம் முற்றிற்று.

# "திருநாராயணபுரத்து ஆய்" (என்னும்) ஜநந்யாசார்யர் வைபவம்

ஆசார்யஹ்ருத₃யஸ்யார்த்த₂ா: ஸகலா யேந த₃ர்ஶிதா: |
ஶ்ரீஸாநுத₃ாஸமமலம் தே₃வராஜம் தமாஶ்ரயே ||

[ஆசார்ய ஹ்ருத₂யத்தின் அர்த்த₂ங்கள் அனைத்தையும் அருளியவராய், ஸ்ரீஸாநுத₂ாஸர், தே₃வராஜர் என்னும் திருநாமங்களை உடையவரான திருநாராயணபுரத்தாயை ஆஶ்ரயிக்கிறேன்.]

ஸ்ரீ யாத₃வாத்₃ரி, திருநாராயணபுரம், அஷ்டோத்தரஶத ஸ்த₂ான ஸாரம், த₃க்ஷிண ப₃த₃ரிகாஶ்ரமம், வைகுண்ட₂வர்த்த₄நக்ஷேத்ரம், இந்தி₃ராக்ஷேத்ரம், ஸம்யமி ஸார்வபௌமவிஜயஸ்த₂ானம் என்னும் பல பல திருநாமங்களால் விளங்குகிற (மேலக்கோட்டை) தி₃வ்ய க்ஷேத்ரத்தில், ஸேனைமுதலியார் அவதரித்த ஓங்கு துலாப் பூராட நன்னாளில் உதித்து, எம்பெருமானார் தம் திருக்கைகளாலே திருவாராத₄னம் ஸமர்ப்பித்த திருநாராயணப் பெருமாளுக்கும், ராமப்ரியனும், யதிராஜ ஸம்பத்குமாரனுமான செல்வப்பிள்ளைக்கும் யஶோத₃ா தேவியைப் போலப் பாலமுதும், ஸ்ரீமாலாகாரர், ஸ்ரீவிஷ்ணு சித்தர், ஆண்டாள் முதலானவர்போலப் புஷ்பமும் ஸமர்ப்பித்துக் கொண்டு புஷ்ப க்ஷீர கைங்கர்ய நிரதராய், நம் த₃ர்ஶனத்தை நிர்வஹித்துக்கொண்டு ஸத்ஸம்ப்ரத₃ாய ப்ரவர்த்தகராய் விளங்கினவராய். "திருநாராயணபுரத்தாய்" "திருத்தாழ்வரைதாஸர்" (ஸ்ரீஸாநுத₃ாஸர்), "ஜநந்யாசார்யர்" "மாத்ருகு₃ரு" "ஆயி" "தே₃வராஜர்" என்று பரஸித்₃தி₄பெற்றவரே இம்மஹாசார்யர்.

எம்பெருமானார் திருவவதரித்த வம்ஶம், ஹாரீத வம்ஶம். "ஆஸூரிப்பெருமாள்" "ஆஸூரிதே₃வர்" என்று ப்ரஸித்₃த₄ரான ஆஸூரி புண்ட₃ரீகாக்ஷர் இந்த ஹாரீத வம்ஶத்தில் அவதரித்து, எம்பெருமானாரை அடிபணிந்து போந்த மஹாநுபா₄வர். இவர் 74 ஸிம்ஹாஸநாதி₄பதிகளில் ஒருவர். "குடீங்க்ருத்வா தஸ்மிந் யது₃கிரிதடே நித்யவஸதி:" என்று எம்பெருமானார் பரமபத₃த்துக் கெழுந்தருளுவதற்கு முன்பு நியமித்த ஆறு உபதே₃ஶங்களில் நான்காவதான ஸ்ரீயாத₃வகி₃ரியில் நித்யவாஸத்தை ஆத₃ரித்து இந்த ஆஸூரிப்பெருமாள் திருநாராயணபுரத்துக்கு எழுந்தருளி, எம்பெருமானார் திருவுள்ளத்துக்குகப்பாக அங்கே நிலையாகநின்று பெருமாளுக்கு மங்க₃ளாஶாஸநபரராய், த₃ர்ஶந நிர்வாஹகராய்

எழுந்தருளியிருந்தார். இவர் வம்ஶத்தில் அவதரித்தவர் ஜநந்யாசார்யர். இவர் திருத்தகப்பனார் திருநாமம் லக்ஷ்மணாசார்யர். இவர் திருக்குமாரர் கேசவாசார்யர். இந்த ஆயி ஸ்வாமி ஸர்வஸங்க₃ பரித்யாக₃ம் பண்ணி உத்துங்க₃மான ஸந்யாஸாஶ்ரமத்தையும் ஸ்வீகரித்தார்.

நம்பிள்ளையின் சிஷ்யர்களில் ஒருவராய், அவரிடமிருந்து திருவாய்மொழியீட்டைப் பெற்றவர் ஈயுண்ணிமாத₄வர். இவருடைய சிஷ்ய பரம்பரையிலேயே ஈடு ஓராண் வழியாய் உபதேசிக்கப்பெற்று வந்தது. இவருடைய குமாரர் (சிஷ்யர்) ஈயுண்ணி பத்₃மநாப₄ர். இவருடைய சிஷ்யர் நாலூர்ப்பிள்ளையென்னும் ஸௌமநஃகோலேஶர். இவருடைய குமாரர் (சிஷ்யர்) தே₃வராஜர் என்னும் நாலூராச்சான் பிள்ளை. இவருடைய சிஷ்யர்களில் முக்கியமானவர் திருநாராயண புரத்தாய் என்னும் ஜநந்யாசார்யர்.

தே₃வராஜர்க்கு ''ஆய்'' என்று திருநாமம் வந்த வகையாவது:— இவர் தினந்தோறும் பரிவுடன் செல்வப்பிள்ளைக்கு ரஸவிஶேஷம் குறையாமல் ஸௌகே₃ாஷ்ணமாயும், ஏலாலவங்₃க₄நஸாரகுங்கும பரிமளயுக்தமாயும் பாலமுது காய்ச்சி அமுது செய்யப்பண்ணிவந்தார். ஒருநாள் பாலமுது கொண்டுவரச் சிறிது தாழ்க்கவே, செல்வப்பிள்ளை அதுபொறாமல் 'நம் ஆய் (தாய்) எங்கே ? இன்னம் காணோமே?' என்று அர்ச்சகமுகே₂ந வினவின்படியாலே இவருக்கு, 'ஆய்' என்றும், 'ஜநந்யாசாரியர்' என்றும் திருநாமமுண்டாயிற்று என்பர்.

ப₄க₃வத்₃ப₄ாக₃வதர்களுக்குத் தாய்போலே பரிவுகாட்டி வந்தமை யாலே 'ஆய்' என்றும், 'ஜநநீ' என்றும் சிறப்புப் பெயர்பெற்றவர் என்றும் கொள்ளலாம். தே₃வராஜர் என்பது இவருடைய இயற்பெயர். திருநாராயணபுரத்தில் அவதரித்தவராகையாலே 'திருநாராயண புரத்து ஆய்' என்று அழைக்கப்படுவர். (இவர் அருளிய ஸ்ரீவசந பூ₄ஷண வ்யாக்₂யாநம் நமது ஸ்ரீஸூக்திமாலா மலர் 24ல் சேர்த்து அச்சிடப்படுகிறது. இவர் அருளிய திருப்பாவை வ்யாக்₂யாநமான நாலாயிரப்படியும் அச்சிடப்பட்டுள்ளது.) திருமாலைக்கும் ஆசார்ய ஹ்ருத₃யத்திற்கும் இவர் வியாக்கியானமிட்டருளியுள்ளதாகப் பெரிய திருமுடியடைவு கூறும். அவை இப்போது கிடைப்பதில்லை.

ஆயி சிஷ்யர் நல்லப்பநாயன்—என்பவரை பிள்ளைலோகம் ஜீயர் ''சச்சம்பிரதாயம்'' என்கிற பாட்டு வ்யாக்₂யாநத்தில் கூறியிருக்கிறார். 'ஆயி' பெருமை கூறும் பின்வரும் பாடலையும் எடுத்துள்ளார்:—

மாறில் முடும்பை உலகாரியன் வசனக்கலனும்
மாறன் கருத்தின் மணவாளன் வார்த்தையும் வல்லிருளைச்
சீறும்படி திருத்தாழ்வரை தாதன் தெரிந்தெனக்குத்
தேறும்படி யுரைத்தான் திருத்தாள்களென் சென்னியதே.

[வசனக்கலன்—வசநபூ₄ஷணம். மாறன்...மணவாளன் வார்த்தை—ஆசார்யஹ்ருத₃யம்.] என்று பிள்ளைலோகஞ்ஜீயர் எடுத்துள்ள பாடல் இவரை ஆசார்யஹ்ருத₃ய ஸ்ரீவசநபூ₄ஷண ப்ரவசனத்தில் ஈடுபட்டவ ராகக் காட்டுகிறது.

மாமுனிகளுக்கும் இவருக்குமுள்ள ஸம்ப₃ந்த₄ம் யதீந்த்₃ரப்ரவண ப்ரப₄ாவத்தில் பின்வருமாறு விவரிக்கப்பட்டுள்ளது :—

(மாமுனிகள்) ஆசார்யஹ்ருத₃யத்திற்குப் பொருள் அருளிச் செய்யும்போது "ஜ்ஞாநசதுர்த்தி₂களின் மேலேயிறே ஆநந்த₃ ஷஷ்டி₂களுக்குத₃யம்" என்கிற வாக்கியத்திற்கு அர்த்த₂ம் ஸ்வரஸ மாக ஆகாமையாலே, இதற்கு அர்த்த₂மருளிச்செய்வாரார்? என்று விசாரமுண்டாய், திருநாராயணபுரத்தாயி பக்கலிலே இவ்வர்த்த₂ம் கேட்கவேணும் என்னும் பேராசையோடே ஆழ்வார்க்கு விண்ணப்பஞ் செய்து அவரநுமதிகொண்டு திருநாராயணபுரத்துக்குப் போவோ மென்று புறப்பட்டெழுந்தருளாநிற்க, ஆயியும் ஜீயருடைய ப்ரப₄ாவங்கேட்டு இவரை ஸேவிப்பதாகத் திருநகரிக்கு ஆஸந்நமாக மார்க்க₃மத்₄யே வந்து ஸங்க₃தராக அவரைக்கண்டு, "எண்ணின ப₂லம் எதிரிலே வரப்பெறுவதே!" என்று பெரிய ப்ரீதியோடே தீ₃ர்க்க₄ப்ரணமம் பண்ணி நிற்க, ஆயியும் தாளுந் தடக்கையுங்கூப்பி ஸேவிக்க, இருவரும் அந்யோந்யம் வந்த₃நபராய் குஶலப்ரஶ்நம் பண்ணிநிற்க, இதைக்கண்டு ஜீயர் ஸ்ரீபாத₃த்து முதலிகளெல்லாரும் "பெரிய நம்பியும் எம்பெருமானாரும் எதிர்ப்பட்டாப்போலாயிற்று" என்று மிகவும் உகந்தருளினார்கள். அநந்தரம் குன்றமாடத்திருக்குருகூரேற எழுந்தருளி, ஆயி பக்கலிலே "ஆசார்யஹ்ருத₃யஸ்யார்த்த₂ாஸ் ஸகலா யேந த₃ர்ஶிதா:। ஸ்ரீஸாநுத₃ாஸமமலம் தே₃வராஜம் தமாஶ்ரயே ||) என்று அந்த உபகாரஸ்ம்ருதிக்கு அவர் விஷயமாக ஒரு தனியனருளிச்செய்தருள; ஆயி தமக்கு அதில் அந்வயமற்றபடி தோற்ற

பூதூரில் வந்துதித்த புண்ணியனோ? பூங்கமழும்
தாதாரு மகிழ்மார்பன் றானிவனோ?—தூதூர
வந்த நெடுமாலோ? மணவாள மாமுனிவன்
எந்தையிவர் மூவரிலும் யார்?

என்று அருளிச்செய்து, ஜீயரை அவதாரவிசேஷமென்று ஆதரித்துக் கொண்டு, ஆழ்வாரையும் அநுதிநம் ஸேவித்துக்கொண்டு அங்கே சிலகாலமெழுந்தருளியிருக்க ;

அதுவே ஹேதுவாக 'ஆயி திருநாட்டுக்கெழுந்தருளினார்' என்று திருநாராயணபுரத்திலுள்ள அஸ்மதியாளுக்கள் திருமாளிகையிலுள்ள ஸர்வஸ்வத்தையும் செல்வப்பிள்ளை அங்கீகரித்தருளும்படி ஸ்ரீபண்டார த்தில் சேர்க்க, அக்காலத்திலே ஆயியும் மீண்டு திருநாராயண புரத்துக்கெழுந்தருளி இச்செய்தியைக்கேட்டு ஹ்ருஷ்டராய், ''யஸ்யாநு க்ரஹமிச்சாமி தஸ்ய வித்தம் ஹராம்யஹம்'' [எவனுக்கு நான் அருள்புரிய விரும்புகிறேனோ, அவனுடைய செல்வத்தை எடுத்துக் கொள்கிறேன்.] என்னும் திருமுகப்படியே ப்ரத்யக்ஷமாகச் செல்வப் பிள்ளை இத்தைக் கைக்கொண்டருளியபின்பு நாம் இனி இரக்கத்துக்கு விஷயமென்கிறது கிம்புநர்ந்யாயஸித்தமிறே. 'யஸ்யைதே தஸ்ய தத்தநம்' [மனைவி, புத்திரன், அடிமை ஆகியவர்களுடைய செல்வம் அவர்களுடைய யஜமானனுக்கே உரியது.] அன்றோ? என்று ஈடுபட்டு, ஆநந்தாச்ருக்கள் பனிப்ப எழுந்தருளி, ஆசார்யக்ருபாலப்தரான ஞானப்பிரானொருவரையுமே அர்த்திதத்துப்பெற்று மற்றவைகளையெல் லாம் அங்குத்தைக்கு ஸமர்ப்பித்து, யாதவகிரிநிலயனுக்கு மால்ய ஸமர்ப்பணைகநிஷ்டராய், அங்கே ப்ரீதராயெழுந்தருளியிருந்தார்.

மாதவத்தோர் வாழ்த்தும் முடும்பை மணவாளன்
தோதவத்தித் தூய்மறையோ ரானபெற்றார்—தீதற்ற
ஆசா ரியவிதயம் பெற்றார்நம் மாயியிவர்
தேசாரத் தன்கண்நெஞ்சே! காண்.

என்று ஆசார்யஹ்ருதய ஸம்ப்ரதாயத்தைத் தாம் (மாமுனிகள்) அநுஸந்தித்தருள, அப்படியே முதலிகளும்,

மாதவத்தோன் மாறன் மனங்கூறும் மணவாளன்
தோதவத்தித் தூய்மறையோ ரானபெற்றார்—நீதியினால்
ஆங்கவர்தாள் சேரப் பெற்றார் ஆய்மணவாளன்
பூங்கமலத் தாள்கள் நெஞ்சே போற்று.

என்று அநுஸந்தித்தார்கள்.

பூர்வாஷாடாவதீர்ணாய துலாயாம் யதுபூதரே ।
ஸ்ரீஸாநுதாஸகுரவே தேவராஜாய மங்களம் ॥

[திருநாராயணபுரத்தில் ஐப்பசிப் பூராடத்தில் அவதரித்தவராய், திருத்தாழ்வரை தாஸர் எனப்படும் தேவராஜருக்கு மங்களம்.]

ஜநந்யாசார்யர் வைபவம் முற்றிற்று.

குந்தகை — திருவாய்மொழிப்பிள்ளை



[ஸமீபத்தில் ஸம்ப்ரோக்ஷணத்திற்குமுன் புகைப்படம் எடுக்கப்பட்டதால் வஸ்த்ரமில்லை. ராஜ்யபாரம் நிர்வஹித்தது தோற்றச் செங்கோல் தரித்திருக்கிறார்.]

# திருவாய்மொழிப்பிள்ளை வைபவம்

நம: ஸ்ரீசைலநாதா₂ய குந்தீநக₃ர ஜந்மநே।
ப்ரஸாத₃லப்₃த₄ பரமப்ராப்ய கைங்கர்ய சாலிநே॥

[குந்தீநகரத்தில் உதித்தவராய், (ஆசார்யன்) அருளாலே அடையப்பெற்ற பரமப்ராப்யமான கைங்கர்யத்தை உடையவரான திருமலையாழ்வாருக்கு வணக்கம்.]

'கூடல்' எனப்படும் மதுரைக்கு அருகில் உள்ள குந்தீ நக₃ரம் எனும் நகரில் நம்மாழ்வார் திருநக்ஷத்திரமான வைகாசி விசாகத்தில் அவதரித்தவர் இம்மஹாசார்யர். பெரியதிருமுடியடைவில் இவரது அவதார வருஷம் விப₄வ எனக் காண்கிறது. கி. பி. 1268, 1328 ஆகிய இரு வருஷங்களில் விப₄வ வருஷம் வரும். கி. பி 1268ஐ திருவாய்மொழிப்பிள்ளை அவதார வருஷமாகக் கொண்டால் மாமுனிகள் அவதாரத்தின் போது பிள்ளைக்கு நூறுவருஷங்களுக்குமேல் ஆகிவிடுமாகையாலும், 1328ஐக் கொண்டால் பிள்ளைலோகாசார்யர் பரமபதித்தபின்பே பிள்ளை அவதரித்ததாக ஆகிவிடுமாகையாலும், யதீந்த்₃ரப்ரவண ப்ரப₄ாவம் முதலான பல நூல்களோடு இவை முரண்படுமாகையாலும், விப₄வ-ஸூ பிள்ளையின் அவதார வருஷமாயிருக்க முடியாது. பிள்ளைலோகாசார்யர் பரமபதி₃த்த 1311ல் பிள்ளை யௌவநவயஸ்ஸை அடைந்துவிட்டதாக விளங்குகையால், கி. பி. 1290க்கு அருகிலுள்ள ஒரு வருஷத்தில் அவதரித்து, எம்பெருமானாரைப்போலே ஏறக்குறைய 120 வருஷங்கள் (சுமார் கி. பி. 1410 வரை) பிள்ளை வாழ்ந்திருக்கவேண்டும். பெரியதிருமுடியடைவில் உள்ளது பாடப்பிறழ்வு என்றே கொள்ளவேண்டும்.

### குலப்பெருமை

திருவாய்மொழிப்பிள்ளையின் இயற்பெயர் திருமலையாழ்வார் (ஸ்ரீசைலேசர்) என்பது. வைகாசி விசாகத்தில் அவதரித்தமையால் சட₂கோபதா₃ஸர் என்னும் திருநாமத்தையும்

பெற்ருர். இவர் அவதரித்த இடம் மதுரைக்கு அருகிலேயுள்ள குந்திநக$_3$ரம் என்னும் குந்தகையாகும். அவதரித்த குலம் ஆழ்வார்களில் அந்தணர்கள் அனைவரும் அவதரித்த பூர்வ*ஶி*க$_2$ ஸ்ரீ வைஷ்ணவ ப்$_3$ராஹ்மண குலம். காடாயிருந்த சோழ தே$_3$*ஶ*த்திற்கு முதன்முதலில் வந்தமையாலே 'சோழியர்கள்' என்று அழைக்கப்படும் குலம். ஊர்த்$_4$வக$_3$திக்கு அழைத்துச் செல்லும் பகுத்தறிவைப் பெற்றிருக்கையாலே, உயரவளரும் மனிதன் குறுக்கே வளரும் திர்யக்குகளைக் காட்டிலும் உயர்ந்திருப்பதுபோலும், உயரநோக்கியிருக்கும் ஊர்த்$_4$வபுண்ட்$_3$ரம் குறுக்கே படரும் திர்யக்புண்ட்$_3$ரத்தைக் காட்டிலும் சிறப்புற்றிருப்பதுபோலும், ஊர்த்$_4$வமுக$_2$மாயிருப்பதால் *ஊர்த்$_4$வ ஶி*கை$_2$யென்றும், பூர்வகாலத்தில் ஏற்பட்டதாகையாலும், முன் ஸ்த$_2$ானத்திலிருப்பதாலும் *பூர்வஶி*கை$_2$ *புர:ஶி*கை$_2$ என்றும் புகழப்படும் *ஶி*கை$_2$, மற்ற ஸ்த$_2$ானங்களிலிருக்கும் *ஶி*கை$_2$களைக் காட்டிலும் உயர்ந்தது என்பது—ப்ரத்யக்ஷம், அனுமானம், *ஶா*ஸ்த்ரம் என்கிற ஸகல ப்ரமாணங்களாலும் ஸித்$_3$தி$_4$க்கிறது. இப்படிக் குலப்பெருமை மிக்கிருந்த குலமாயினும், எக்காலத்திலும் அதைப் பாராட்டாத குலமும் இதுவேயாகும். ஆழ்வார்கள் காலத்திலே, குலப்பெருமையைப் பாராட்டாமல் நம்மாழ்வாரையொழியத் தேவுமற்றறியாதிருந்த மது$_4$ரகவிகள் இக்குலத்தில் அவதரித்தவரேயாவர். இக்குலத்தவதரித்த பெரியாழ்வார் "*பண்டைக் குலத்தைத் தவிர்ந்து*" "*தொண்டக் குலத்திலுள்ளீர்*" "*அடியார்கள் எந்தம்மை விற்கவும் பெறுவார்களே*" என்றும், தொண்டரடிப்பொடியாழ்வார், "*போனகம் செய்த சேடம் தருவரேல் புனிதமன்றே*" என்றும் குலாபி$_4$மானத்தை அறுத்துப்பேசியது ஸுப்ரஸித்$_3$த$_4$ம். முக்குறும்பர்களுடைய அபி$_4$ஜநமத$_3$த்தை இக்குலத்தவதரித்த ஆசார்ய *ஶ்*ரேஷ்ட$_2$ரான உய்யக்கொண்டாரும் பொருட்படுத்தாமலிருந்தார் என்று சரித்திரம் கூறுகிறது. நம் திருவாய்மொழிப்பிள்ளையும், பிள்ளைலோகாசார்யருடைய உத்தம*ஶி*ஷ்யராய், குலந்தாங்குசாதிகள் நாலிலும் கீழிழிந்த குலத்துதித்தவரான விளாஞ்சோலைப்பிள்ளைக்குச் சரமகைங்கர்யங்கள் செய்தருளியதும் இப்பெருமையை வலியுறுத்தும். இன்றளவும் இக்குலத்துதித்த அனைவரும் அபி$_4$ஜநமத$_3$மற்றிருப்பதையும்.

பிறர் அபி₄ஜநமத₃த்தாலே எளிவரவு செய்தாலும் அதைப் பொறுத்திருப்பதையும் இயல்வாகக் கொண்டிருப்பதைக் காண்கிறோம். இப்படி முக்குறும்பற்ற உத்தமகுலமாயிருந்த மையாலே த்₃விஜகுலதிலககுலமான இதில், பெரியபிராட்டியார் ஜனககுலத்தில் அவதரித்ததுபோலே, பூமிப்பிராட்டியார் ஆண்டாளாக அவதரித்தாள் என்றும், ஜனககுலத்தில் பெருமாள் பெண்ணெடுத்ததுபோலே, இக்குலத்தில் பெரியபெருமாள் பெண்ணெடுத்தார் என்றும் பெரியோர் கூறுவர். இத்தகைய குலத்து அவதரித்த திருமலையாழ்வாரின் சிறு பிராயத்தைக் காண்போம் இனி.

## சிறு பிராயம்

*" அறியாக்காலத்தில் அடிமைக்கண் அன்புசெய்வித்து "* என்றுப்போலே தம் *ஶிஷ்*யையான இவருடைய தாயாரின் புருஷகார ப₃லத்தினால் ஆசார்யாக்₃ரேஸரரான பிள்ளைலோகாசார்யர் சிறு வயதினரான இவரைக் குளிரக்கடாக்ஷித்துப் பஞ்ச ஸம்ஸ்காரம் செய்வித்தார். வயது முதிர முதிர அதிமேத₄ாவியாய், லௌகிக வைதி₃கங்களில் அதி நிபுணரானார் இவர். அக்காலத்தில் பாண்டிய அரசன் இறந்து அவனுடைய குமாரன் சிறு பிராயம் உடையவனாயிருந்தான். திருமலையாழ்வாரின் மேதை₄யையும், திறமையையும் கண்ட அரசியலார் அவ்வரச குமாரனுக்குப் பிரதிநிதி₄யாக இவரை நியமித்து, ஸகலராஜ்ய ப₄ாரத்தையும் இவர் வசத்தில் ஒப்படைத்தனர். பூர்வ*ஶிக₂* ஸ்ரீவைஷ்ணவ ப்₃ராஹ்மண குலத்தில் உதித்த *விஷ்ணுகு₃ப்தன்* என்னும் *சாணக்யனைப்*போலே ராஜதந்திரங்களில் மிக வல்லவராயிருந்த இவர் ராஜ்யப₄ாரத்தை மிகத்திறமையுடன் நிர்வஹித்து வந்தார். இது இப்படியிருக்க.

## ஆசார்யகடாக்ஷம்

துருஷ்க ப₄யத்தாலே நம்பெருமாளைப் பிள்ளைலோகாசார்யர் முதலான ஆசார்யர்கள் வலசையாக எழுந்தருளப் பண்ணிச் செல்லும்போது 'ஜ்யோதிஷ்குடி' என்னும் கிராமத்திலே பெருமாளோடு எழுந்தருளியிருக்கும்போது பிள்ளைலோகாசார்யருக்குச் சரமத₃*ஶை* நெருங்கிற்று. அப்போது

திருவடிகளை ஆஶ்ரயித்த சிடர்கள் 'எங்களுக்குத் தஞ்சமேது?' என்று கேட்க, திருமலையாழ்வாரிடத்தில் திருவுள்ளம் ஈடுபட்டு, "ஒரு மிடறு செய்து லௌகிக வைதி₃கங்களிலே அதிநிபுணராய், மதுரை ராஜ்யாதி₄பத்யம் பண்ணுகிறவர், அத்தைவிட்டு த₃ர்ஶந ப்ரவர்த்தகராம்படி ஆசீர்வதித்தருளி, அவரை அநுவர்த்தித்து ரஹஸ்யங்களையும் அர்த்த₂ங்களையும் நன்ருக ப்ரஸாதி₃க்கும்படி கூரகுலோத்தமதா₃ஸநாயனுருக்கும், திருவாய்மொழியை ப்ர ஸாதி₃க்கும்படி திருக்கண்ணங்குடிப் பிள்ளைக்கும், திருப்புட்குழி ஜீயருக்கும், மூவாயிர வ்யாக்₂யானத்துக்கு நாலூர்ப்பிள்ளைக்கும், ஸப்தகாதை முதலான சில அர்த்த₂விஶேஷங்களை ப்ரஸாதி₃க்கும் படி விளாஞ்சோலைப் பிள்ளைக்கும் நியமித்தருளி, ஜ்யேஷ்ட₂ ஶுத்₃த₄த்₃வாத₃ஶியில் திருநாட்டுக்கு எழுந்தருளினுர் பிள்ளை யுலாகாசிரியர்.

## ஆழ்வாரை ரக்ஷித்தது

துருஷ்கப₄யத்தாலே திருக்குருகூரில்நின்றும் ஆழ்வாரை எழுந்தருளப்பண்ணிச்சென்று, மலைநாட்டில் மிகவுயர்ந்த முந் திரிப்பு மலையிலே மிக ஆழமானதொரு சரிவிலே ஒரு திருப் பெட்டகத்திலே சங்கிலிகட்டி எழுந்தருளப்பண்ணி வைத் திருந்தார்கள். அவர்களிலே ஒருவராய், புரஶ்ஶிக₂ரான தோழப் பர் என்பர் மதுரைக்குச்சென்று திருமலையாழ்வாரிடம் இதை அறிவிக்க, அவர் துருஷ்கப₄யம் தீர்ந்தவுடன் மலையாள ராஜா வுக்கு ஆழ்வாரை ரக்ஷிக்கும்படி ஸ்ரீமுக₂ம் கொடுத்து, வேண்டிய மனிதர்களையும் த்₃ரவ்யத்தையும் கொடுத்துத் தோழப்பரை அனுப்பினுர். திருவனந்தபுரத்தரசரும் திருமலை யாழ்வாரின் திருமுகத்தைத் தலையாலே தாங்கித் தோழப் பருக்கு ஆழ்வாரை மலைச்சரிவிலிருந்து கொண்டுவர வேண்டிய உதவியெல்லாம் செய்தார். தோழப்பரும் ஆழ்வாரைச் சரிவி லிருந்து மேலே ஏற்றி அனுப்பிவிட்டுத் தாம் ஏறிவருகையில் கீழே விழுந்து ப்ராணத்யாக₃ம் செய்துவிட்டார். இன்றும் அக்குலத்தவர் '*ஆழ்வார் தோழப்பர்*' என அழைக்கப்படு கின்றனர். மலையாளராஜாவும் ஆழ்வாரை 'திருக்கணும்பி' என்னுமிடத்தில் ஸுரக்ஷிதமாக எழுந்தருளப்பண்ணினுன். இது இப்படியிருக்க.

கூரகுலோத்தமதாஸர் திருமலையாழ்வாரைத் திருத்தியது

பிள்ளைலோகாசார்யர் திருவடிகளை ஆச்ரயித்த ஸ்ரீசைலேச மாதா அவருடைய பிரிவு பொறாமல் பரமபதமடைய. ஸ்ரீசைலேசரை அவருடைய சிறிய தாயார் போஷித்துவந்தாள். யௌவனவயஸ்ஸை அடைந்தபின் மதுரை ராஜப்ரதிநிதியான திருமலையாழ்வாரும் ராஜதுல்யராயிருக்கையிலே கதிரிளமடவார் தாழ்ச்சியை மதித்துப்போர, இவர் சதிருடைய தமிழ் விரகராயிருக்கையாலும், ஆசார்ய நியமனத்தாலும் கூரகுலோத்தமதாஸர் இவரை எப்படியாவது திருத்துவது என்று உறுதி பூண்டார். இக்கூரகுலோத்தமதாஸரும் பூர்வசிகா ஸ்ரீவைஷ்ணவ ப்ராஹ்மண குலத்தில் கௌண்டிந்யகோத்திரத்தில் அவதரித்தவர். ஒருநாள் திருமலையாழ்வார் முன்பே கூரகுலோத்தமர் திருவிருத்தத்தை அநுஸந்தித்துக்கொண்டு எழுந்தருள, தமிழில் ஈடுபாடுள்ளவராகையாலே திருமலையாழ்வார் அதற்குப் பொருள் கேட்க, கூரகுலோத்தமரும் 'உமக்குச் சொல்ல முடியாது' என்று அவமதித்துவிட, அவரை தண்டிக்க முற்பட்ட தம்முடைய ராஜப்ருத்யர்களை விலக்கிவிட்டுத் தம் சிற்றன்னையிடம் இவ்விஷயத்தைச் சொல்ல, அவளும் பிள்ளைலோகாசார்யர் ஸம்பந்தத்தை உணர்த்த, இவரும் அநுதாபம் பிறந்து கூரகுலோத்தமரை ஆச்ரயிப்பதற்கு அநுகூலமான திருவுள்ளத்தை உடையவரானார்.

ஓதுமுடும்பை உலகாசிரியனருள் ஏதும் மறவாத எம்பெருமானை கூரகுலோத்தமரும் இவரைத் திருத்த சமயம் பார்த்திருக்க, ஒருநாள் திருமலையாழ்வார் யானைமேல் ஏறிப் புறப்பட, தாம் மேட்டுநிலத்திலே நின்று தம்மைக் காட்டிக் கொள்ள, திருமலையாழ்வார் இவரைக் கண்டவுடன் பிள்ளைலோகாசார்யராகவே எண்ணி, யானை மேலிருந்து உடனே இறங்கி, கூரகுலோத்தமர் திருவடிகளிலே வேரற்ற மரம்போல் விழுந்தார். அவரும் இவரை எடுத்தணைத்துக் கொண்டாடிப் பிள்ளைலோகாசார்யர் சரமதசையில் ஆசைப்பட்டதை அருளிச்செய்தார். திருமலையாழ்வாரும், "ராஜகார்யத்திலால் எனக்கு அவகாசம் அரிதாயுள்ளது. தினந்தோறும் காலையில் திருமண் காப்புச் சாத்திக்கொள்ளும்போது எழுந்தருளி, அடியேனுக்கு

உபதே3ஶங்களைச் செய்தருளவேணும்'' என்றார். மணக்கால் நம்பி ஆளவந்தாரை அநுவர்த்தித்து உபதே3ஶித்ததுபோலே கூரகுலோத்தமரும் திருமலையாழ்வாரை அநுவர்த்தித்துக் காலவேளையில் அவர் திருமண்காப்பிட்டுக்கொள்ளும்போது பிள்ளைலோகாசார்யருடைய தனியனை முன்னிட்டுக்கொண்டு ரஹஸ்யோபதே3ஶம் செய்து வந்தார். ஒருநாள் திருமலையாழ்வார் ராஜகார்யத்தாலே உபதே3ஶத்தைக் கேளாமல் பராக்காயிருக்க, கூரகுலோத்தமர் சில நாட்கள் எழுந்தருளாமலிருக்க, திருமலையாழ்வார் அது பொறாமல் ஒருநாள் கால் நடையாகவே கூரகுலோத்தமர் திருமாளிகைக்கு எழுந்தருளி, அவரை க்ஷாமணங்கொண்டு, ஸ்ரீபாத3தீர்த்த2மும், போனகம் செய்தசேடமும் ஸ்வீகரித்தமையாலே ஞானவிளக்கம்பெற்றுப் பரமவிரக்தராகி, ராஜ்யபா4ரத்தை ராஜமஹிஷியிடம் ஒப்படைத்து, கூரகுலோத்தமதாஸர் திருவடிகளையே மனம் மெய் மொழிகளாலே ஶரணமாகப்பற்றி அவரிடமிருந்து ரஹஸ்யார்த்த2ங்கள் அனைத்தையும் உபதே3ஶம்பெற்று வாழ்ந்திருந்தார். கூரகுலோத்தமர் இப்படித் திருமலையாழ்வாரைத் திருத்தியது கூரகுலோத்தமருடைய பின்வரும் தனியனால் விளங்குகிறது.

ஸ்வயமாஹூய ஶைலேஶகு3ரவேர்த்த2ப்ரதா3நத: |
லப்3தோ4தா3ராபி4தா4ம் கூரகுலோத்தம கு3ரும் ப4ஜே ||
லோகாசார்ய க்ருபாபாத்ரம் கௌண்டி3ந்ய குலபூ4ஷணம் |
ஸமஸ்தாத்ம கு3ணாவாஸம் வந்தே3 கூரகுலோத்தமம் ||

[திருமலையாழ்வாராகிற திருவாய்மொழிப்பிள்ளைக்குத் தாமே வலியச்சென்றழைத்து நற்பொருள்களை உபதேசிக்கையாலே 'உதா3ரர்' என்னும் அடைமொழி பெற்றவரான கூரகுலோத்தமரை ஆஶ்ரயிக்கிறேன். பிள்ளையுலகாசிரியரின் கிருபைக்குப் பாத்திரரும், கௌண்டின்ய குலத்திற்கு அலங்காரமாயிருப்பவரும், எல்லா ஆத்மகுணங்களுக்கும் இருப்பிடமானவருமான கூரகுலோத்தமதாஸரை வணங்குகிறேன்.]

## பெரியதிருமுடியடைவில் திருவாய்மொழிப்பிள்ளை

திருவாய்மொழிப்பிள்ளைக்குத் திருவவதார ஸ்த2லம் பாண்டிய மண்ட3லத்தில் குந்திகை. திருநக்ஷத்ரம் விப4வ

வருஷம் (?) வைகாசி மாஸம் விசாகம். திருநாமங்கள் திருமலையாழ்வார், திருவாய்மொழிப்பிள்ளை, ஸ்ரீஶைலேஶர். பஞ்சஸம்ஸ்காரங்களும் திருவாய்மொழி முதலான திவ்ய ப்ரபந்தங்களும் சாதித்தருளின ஆசார்யர் பிள்ளைலோகாசார்யர். ஈடு முதலான பகவத் விஷயங்கள் சாதித்தருளினவர் நாலூராச்சான்பிள்ளை, ஸ்ரீபாஷ்யாதி க்ரந்தங்களும், ஶ்ருதப்ரகாஶிகையும் சாதித்தருளினவர் அழகியமணவாளப்பெருமாள் நாயனாராசார்யர்.(?)தத்வத்ரயாதி₃ பஞ்சரஹஸ்யங்களும்,ஆசார்யஹ்ருதயமும், ரஹஸ்யவ்யாக்யானங்களும் சாதித்தருளினவர் கூரகுலோத்தமதாஸர். மற்றும் வேண்டும் ரஹஸ்யங்களெல்லாம் சாதித்தருளியவர் விளாஞ்சோலைப்பிள்ளை. திருவாராதனம் இனவாயர்குல(தலை?)வர். இருப்பிடம் திருநகரி. இவர் செய்தருளின வ்யாக்யானம் பெரியாழ்வார் திருமொழிக்கு ஸ்வாபதே₃ஶ வ்யாக்யானம். இவர் செய்தருளின கைங்கர்யம் ஆழ்வார் திருநகரி ஜீர்ணோத்₃த₄ாரணம். இவர் சிஷ்யர் பெரியஜீயர், நம்மாழ்வார்கோயில் எம்பெருமானார் ஜீயர், எம்பெருமானார் கோயில் சடகோபஜீயர், தத்வேஶஜீயர் முதலானவர்கள். இவர் நூற்றஞ்சு திருநக்ஷத்ரம் எழுந்தருளி இருந்தார். இவருக்குத் திருவத்₄யயனம் வைஶாக₂ம் க்ருஷ்ணாஷ்டமி.

### தி₃வ்யப்ரப₃ந்த₄காலக்ஷேபமும், ஆழ்வார்திருநகரி ஜீர்ணோத்₃த₄ாரணமும்

கூரகுலோத்தமர் பரமபதித்தபின்பு பிள்ளைலோகாசார்யர் நியமித்தபடி நாலூர்ப்பிள்ளையிடம் தி₃வ்யப்ரப₃ந்த₄காலக்ஷேபம் செய்யத் திருமலையாழ்வார் திருவுள்ளமாய், வழியிலே பெருமாள் கோயிலுக்கு எழுந்தருள, அங்கே பேரருளாளனை ஸேவிக்கும் போது நாலூர்ப்பிள்ளையும், அவர் குமாரர் நாலூராச்சான்பிள்ளையும் எழுந்தருள், திருமலையாழ்வார்க்குத் தக்கபடி தினவுகெடச் சொல்லவல்ல நாலூராச்சான்பிள்ளையைத் திருமலையாழ்வாருக்கு மூவாயிர வ்யாக்₂யானங்களோடு ஈட்டையும் ப்ரஸாதி₃க்கும்படி பேரருளாளனை வரத₃ராஜப்பெருமாள் நியமிக்க, அப்படியே இசைந்து நாலூராச்சான்பிள்ளையான தே₃வராஜர் திருமலையாழ்வாருக்கு நாலாயிரவ்யாக்₂யானங்களையும் உபதே₃ஶித்தருளினர்.

"தே₃வாதி₄பாத் ஸமதி₄க₃ம்ய ஸஹஸ்ரகீ₃தேர்
பா₄ஷ்யம் நிகூ₃ட₄மபி ய: ப்ரத₂யாஞ்சகார ।
குந்தீபுரோத்₃ப₄வமமும் ஶரணம் ப்₄ரஜேऽஹம்
ஸ்ரீஶைலநாத₂ம் உருப₄க்திப்₄ருதம் ஶட₂ாரௌ ॥

[நாலூராச்சான்பிள்ளையிடமிருந்து அதிரஹஸ்யமாயிருந்த திருவாய்மொழியீட்டைப்பெற்று எவர் (பலருக்கு) உபதே₃ஶித்தாரோ, நம்மாழ்வாரிடம் பேரன்பு கொண்டவராய், குந்தீபுரத்தில் அவதரித்தவரான அத்திருமலையாழ்வாரைச் சரணடைகிறேன்.] என்று இவ்விஷயம் பூர்வர்களால் அநுஸந்திக்கப்பட்டது. நாலூராச்சான்பிள்ளையிடமிருந்து நாலாயிர வ்யாக்₂யானங்களையும் '*இனவாயர்தலைவர்*' என்னும் திருவாராத₄னப் பெருமாளையும் பெற்ற திருமலையாழ்வார், ஆழ்வாரைத் திருவடித்தொழ ஆசைகொண்டு திருக்கணும்பிக்குச்சென்று ஆழ்வாரை ஸேவித்து, ஆழ்வாரை ஸ்வஸ்த₂ானமான திருநகரியிலே சேர்ப்பிக்கவேணுமென்று திருவுள்ளம்கொண்டு, தாம் திருநகரிக்கு முன்னம் எழுந்தருளிக் காடாய்க் கிடந்த அவ்வூரைக் காடுவெட்டி நாடாக்கிப் பல நல்லோர்களைக்குடியேற்றி, ஸந்நிதி₄யை ஜீர்ணோத்₃த₄ரணம்பண்ணி ஆழ்வாரைத் திருப்புளியடியிலே எழுந்தருளப்பண்ணி வைத்தார். ஆழ்வார் திருவருளாலே '*ஶட₂கோபதா₃ஸர்*' என்னும் யதா₂ர்த்த₂மான திருநாமத்தைப் பெற்றவராய், "*ப்ரஸாத₃ லப்₃த₄ பரமப்ராப்ய கைங்கர்ய ஶாலிநே*" என்கிறபடியே ஆழ்வார் திருவடிகளிலே ஸகலவித₄ கைங்கர்யங்களையும் பண்ணிக்கொண்டு, திருவாய்மொழியநுஸந்த₄ானமே போதுபோக்காயிருந்தமையால் திருவாய்மொழிப்பிள்ளை என்றே அனைவரும் அழைக்கும்படி ஆனார்.

### விளாஞ்சோலைப்பிள்ளைக்குச் சரம கைங்கர்யம் செய்தல்

பின்பு, பிள்ளைலோகாசார்யர் நியமனப்படி திருவனந்தபுரத்திலிருந்த பரமபா₄க₃வதரான விளாஞ்சோலைப்பிள்ளையை ஆஶ்ரயித்து, உலகாசிரியர் அவரிடம் சேமித்துவைத்த ஸகலார்த்த₂ங்களையும் கேட்டு, வேதகப் பொன்னுன அவர் ஸம்ப₃ந்த₄த்தாலே தம்முடைய ஜன்மக்கொத்தையைக் கழித்துக்கொண்டு, அவர் பரமபதித்தவுடன் மாறனேரி நம்பிக்குப் பெரியநம்பிகள் செய்ததுபோலே ஸகலசரமகைங்கர்யங்களையும் தாமே செய்

தருளினார். இப்படி இவருடைய சரமசேஷிவிஷயமான சரமாநுவர்த்தனத்தைக் கண்டவர்கள்,

"பற்றாத எங்கள் மணவாள யோகி பதம்பணிந்தோன்
நற்றேவராசன் நலந்திகழ் நாரணதாதருடன்
கற்றான் எம் கூரகுலோத்தம தாதன் கழல்பணிவோன்
மற்றாருமொவ்வாத் திருவாய்மொழிப்பிள்ளை வாழியவே"

[*மணவாளயோகி பதம்பணிந்தோன்*—மணவாள மாமுனிகளால் பதம் பணியப்பெற்றவன்; *நற்றேவராசன்*—நாலூராச்சான் பிள்ளை; *நலந்திகழ் நாரணதாதர்*—விளாஞ்சோலைப்பிள்ளை;] என்று அனுஸந்தித்தார்கள். பின்பு திருமலையாழ்வார் தம்முடைய திருமருமகனாரைப் புத்ராபி₄மானம் பண்ணி "தேவப்பெருமாள்" என்று நாலூராச்சான்பிள்ளை திருநாமத்தைச் சாத்தியருளினார்.

### மாமுனிகளை ஆட்கொண்ட பெருமை

தமக்கு வயது முதிர்ந்தவாறே 'இனி, த₃ர்ஶநப்ரவர்த்தகராவார் ஆர்?' என்று திருவாய்மொழிப்பிள்ளை சிந்தாக்ராந்தராயிருந்தபோது, பிள்ளைலோகாசார்யர் திருவடிகளை ஆஶ்ரயித்த திகழக்கிடந்தான் திருநாவீறுடையபிரான் தாதரண்ணர் திருக்குமாரரான அழகியமணவாளநாயனார் இவரை ஆஶ்ரயித்து இவரையே எல்லாமாகக்கொண்டு. இவரிடம் ஸகலார்த்த₂ங்களையும் பெற்று, பிற்காலத்தில் மணவாள மாமுனிகளாகி அரங்கனுக்கே ஈடு சாதித்து அவனாலே ஸ்ரீஶைலேஶதனியன் ஸாதிக்கப்பெற்றார் என்பது மாமுனிகள் வைப₄வத்திலே ஸுப்ரஸித்₃த₄ம். மாமுனிகளின் தந்தை அவருக்குப் பஞ்சஸம்ஸ்காரம் ஸாதித்த ஆசார்யராயிருந்தபோதிலும், மணவாளமாமுனிகளுக்கு உண்டான வைப₄வங்களுக்கெல்லாம் மூலகாரணம் ஸ்ரீஶைலேஶராம் திருவாய்மொழிப்பிள்ளையின் ஸம்ப₃ந்த₄மே என்று திருவுள்ளம் பற்றியே நம்பெருமாள் இத்தனியனை "ஸ்ரீஶைலேஶத₃யாபாத்ரம்" என்று தொடங்கி, அதற்குப்பின் மாமுனிகளின் மற்ற வைப₄வங்களை அருளிச்செய்தார் என்பதொன்றே திருவாய்மொழிப்பிள்ளையின் பெருமைகளிலே சிக₂ரமானதாகும். மாமுனிகள் இவரைப்பற்றி அனுஸந்தி₄த்த சில பாசுரங்களைக் கொடுத்து வாசாமகோ₃சரமான திருவாய்மொழிப்பிள்ளையின் வைப₄வத்தை ஒருவாறு நிறைவுபடுத்துவோம்.

எந்தை திருவாய் மொழிப்பிள்ளை யின்னருளால்
வந்த வுபதேச மார்க்கத்தைச்—சிந்தைசெய்து
பின்னவரும் கற்கஉப தேசமாய்ப் பேசுகின்றேன்
மன்னியசீர் வெண்பாவில் வைத்து.

[உபதேசரத்தினமாலை 1]

தேசந் திகழும் திருவாய் மொழிப்பிள்ளை
மாசில்திரு மலையாழ்வார் என்னை—நேசத்தால்
எப்படியே எண்ணிநின் பால்சேர்த்தார் எதிராசா!
அப்படியே நீசெய் தருள்.

[ஆர்த்திப்ரபந்தம் 12]

திருமலை யாழ்வார் திருவாய் மொழிப்பிள்ளை சீரருளால்
தருமதி கொண்டவர் தம்மையுத் தாரக ராகவெண்ணி
யிருமன மேஅவர்க் காக எதிராச ரெமைக்கடுகப்
பரம பதந்தன்னி லேற்றுவர் என்ன பயம்நமக்கே.

[ஆர்த்திப்ரபந்தம் 21]

தீதற்ற ஞானத் திருவாய் மொழிப்பிள்ளை சீரருளால்
ஏதத்தை மாற்று மெதிராசர் தம்மபி மானமென்னும்
போதத்தை யேறிப் பவமாம் புணரி தனைக்கடந்து
கோதற்ற மாதவன் பாதக் கரையைக் குறுகுவனே.

[ஆர்த்திப்ரபந்தம் 22]

திருவாய் மொழிப்பிள்ளை தீவினையோந் தம்மைக்
குருவாகி வந்துய்யக் கொண்டு—பொருவில்
மதிதா னளித்தருளும் வாழ்வன்றோ நெஞ்சே!
எதிராசர்க் காளானோம் யாம்.

[ஆர்த்திப்ரபந்தம் 46]

எந்தை திருவாய் மொழிப்பிள்ளை யின்னருளால்
உன்ற னுறவை யுணர்த்தியபின்—இந்தவுயிர்க்
கெல்லா வுறவும் நீயென்றே யெதிராசா
நில்லாத துண்டோவென் னெஞ்சு.

[ஆர்த்திப்ரபந்தம் 58]

திருவாய்மொழிப்பிள்ளை வைபவம் முற்றிற்று.

# மணவாளமாமுனிகள் வைபவம்





ஆழ்வார்திருநகரி—மணவாளமாமுனிகள்



ஸ்ரீஶைலேஶ த$_3$யாபாத்ரம் தீ$_4$ப$_4$க்த்யாதி$_3$ கு$_3$ணார்ணவம் ।
யதீந்த்$_3$ர ப்ரவணம் வந்தே$_3$ ரம்யஜாமாதரம் முநிம் ॥

[திருமலையாழ்வாரின் கருணைக்குப் பாத்திரராய், ஜ்ஞாநப$_4$க்தி வைராக்$_3$யாதி$_3$கு$_3$ணங்களுக்குக் கடலாய், யதிராஜரிடம் ஈடு பட்டவரான மணவாளமாமுனிகளை வணங்குகிறேன்.]

தே2ஹாத்மாபி4மாநிகளுக்கும் ஆத்மஸ்வரூபம் கைவந்திருக்கும் ரிஷிகளுக்கும் பர்வதபரமாணுவோட்டை வாசிபோரும். (ஸ்வயத்நலப்3த4 ஜ்ஞாநரான) ரிஷிகளுக்கும், (ப4க3வத் ப்ரஸாத3லப்3த4 ஜ்ஞாநரான) ஆழ்வார்களுக்கும் அத்தனை வாசிபோரும்; (ப4க3வத3 நுப4வபரர்களான) மற்றையாழ்வார்களுக்கும், (மங்க3ளாஶாஸநபரரான) பெரியாழ்வாருக்கும் அத்தனை வாசிபோரும்; (ப4க3வந் நிஷ்ட2ரான) பெரியாழ்வாருக்கும், (ஆசார்யநிஷ்ட2ரான) ஆண்டாளுக்கும், மது4ரகவிகளுக்கும் அத்தனை வாசிபோரும். (விவரணமில்லாவிடில் பல ஐயங்களை விளைக்கும் பிரபந்தங்களையருளிய) ஆழ்வார்களுக்கும், ஐயமறும்படி அவற்றுக்கு விவரணமருளிய ஆசார்யர்களுக்கும் அத்தனை வாசிபோரும். அவர்களிலும் அநுவ்ருத்தி ப்ரஸந்நாசார்யர்களான நாதமுநி2கள் தொடக்கமானார்க்கும் க்ருபாமாத்ர ப்ரஸந்நாசார்யர்களான எம்பெருமானார் தொடக்கமானார்க்கும் அத்தனை வாசிபோரும். அவர்களிலும், (பின்புள்ளார்க்கும் உதவும்படி) கிரந்தமிடாத ஆசார்யர்களுக்கும், கிரந்தமருளிய ஆசார்யர்களுக்கும் அத்தனை வாசிபோரும். அவர்களிலும் வேத3ாந்த விவரண க்3ரந்த2 கர்த்தாக்களான எம்பெருமானார், ஶ்ருதப்ரகாஶிகாப4ட்டர் முதலானார்க்கும், வேத3ாந்த ஸாரமான தி3வ்யப்ரப3ந்த4 ரஹஸ்யத்ரயாதி2 விவரண கர்த்தாக்களான பிள்ளான் நஞ்ஜீயர் பெரியவாச்சான்பிள்ளை முதலானார்க்கும் அத்தனை வாசிபோரும். அவர்களிலும்—விஶ்லேஷ த3ஶையில் ஈஶ்வரனையும், பரோபதே3ஶத்தில் ஸம்ஸாரிகளையும் வெறுத்து வார்த்தை சொல்லுதல், இயற்கை வர்ணனை, ‘சிவனாய் அயனாய்’ என்பது போன்ற ஸாமாநாதி4கரண்யப் பேச்சுக்கள், ‘‘தாழ்சடையும்’’ ‘‘அரன் நாரணன்’’ ‘மூவுருவும் கண்டபோது ஒன்றும்சோதி’’ ‘‘அரி அயன் அரனென்னுமிவரை ஒன்ற நும்மனத்து வைத்து’’ முதலான மந்த3மதிகளுக்கு மயக்கத்தை விளைக்கும் பேச்சுக்கள் முதலான கிலேஶங்கள் நிரம்பிய தி3வ்யப்ரப3ந்த4ங்களுக்கு வியாக்கியானம் செய்வதையே முக்2யக்ருத்யமாகக் கொண்ட பிள்ளான் நஞ்சீயர் முதலானார்க்கும், தத்வபரமான ரஹஸ்ய க்3ரந்த2ங்களையே இயற்றிய பிள்ளையுலகாசிரியர்க்கும் அத்தனை வாசிபோரும். பொருளுணரவரிய ஸூத்ரம் போன்ற நடையிலமைந்த ரஹஸ்யக்3ரந்த2ங்களையே அருளிய பிள்ளையுலகாசிரியர்க்கும், அவருடைய ஸூத்ரங்களுக்கு விஶத3தமமான நடையிலே வியாக்கியானமெழுதுவதையே முக்2யக்ருத்யமாகக்கொண்ட மாமுனிகளுக்கும் அத்தனை வாசிபோரும். இதனாலேயே இவர் ஆசார்யர்களில் சரமாசார்யராய் அமைந்து, ப்ரத2மாசார்யரான பெரிய பெருமாளாலேயே ஆசார்யராக வரிக்கப்பட்டார்.

ஆசார்ய பரம்பரையாகிற ஹாரத்தின் கீழே தொங்கும் ரத்தினப் பதக்கம் போன்றவராய், எம்பெருமானுருடைய அபராவதாரமாகக் கீர்த்திபெற்றவராய், பரமஸாத்விகராய், ஜ்ஞாந ப₄க்தி வைராக்₃யாதி₃ கு₃ணங்களுக்கு ஓர் கடலாயிருப்பவராய், விஶத₃வாக்ஶிக₂ா மணியென்று விருதுபெற்றவராய், ஸ்ரீஶைலேஶராம் திருவாய் மொழிப்பிள்ளையிடம் சரமபர்வநிஷ்டை₂யை உடையவராய், யதீந்த்₃ர ப்ரவணராய், சரமாசார்யராய், ப்ரத₂மாசார்யனுக்கும் ஆசார்யரானவர் நம் கோயில் மணவாளமாமுனிகள். இவரது சரித்திரத்தை யதீந்த்₃ரப்ரவணப்ரப₄ாவத்தில் உள்ளபடி சுருக்கமாகக் காண்போம்.

யதிராஜரின் புநரவதாரமெனக் கொண்டாடப்படும் மாமுனிகள், பாண்டியநாட்டில் திருக்குருகூர் என்னும் ஆழ்வார்திருநகரியிலே ஸ்ரீ வைஷ்ணவ ப்₃ராஹ்மணோத்தமரான திகழக்கிடந்தான் திருநாவீறுடையபிரான் தாதரண்ணர் என்பவருக்கும் ஸ்ரீரங்கநாச்சியாருக்கும் திருக்குமாரராய் கலியுகம் நாலாயிரத்து நானூற்று எழுபத்தொன்றும் வருஷமான (கி. பி. 1370) ஸாத₄ாரண வருஷம் ஐப்பசி மாதம் சுக்லபக்ஷ சதுர்த்தி₄யும் வியாழக்கிழமையும் கூடின மூல நக்ஷத்திரத்திலே அவதரித்தருளினர். ஶ்ரிய:பதியான ஸர்வேஶ்வரன், 'எம்பெருமானரைப்போலே லோகமெல்லாம் உஜ்ஜீவிக்கலாம்படி ஒருவரை உண்டாக்குவோம்' என்று ஸங்கல்பித்துத் திருவனந்தாழ்வானைக் கடாக்ஷித்து "நீர் மறுபடியும் அவதரித்து முன்போல் ஸ்ரீவைஷ்ணவ ஸாம்ராஜ்யத்தை நிலைநாட்டிவாரும்" என்று நியமித்தான். திருவநந்தாழ்வானும் திகழக்கிடந்தான் திருநாவீறுடையபிரான் தாதரண்ணரின் பத்னியான ஸ்ரீரங்க₃நாச்சியாரின் க₃ர்ப்ப₄த்தை அடைந்து முன் குறித்தபடி ஸாத₄ாரண வருஷம் ஐப்பசி மாதம் மூல நக்ஷத்திரத்தில் அவதரித்தருளினன். தகப்பனரும் ஜாதகர்மாதி₃ ஸம்ஸ்காரத்தைச் செய்தருளி, பத்துநாளும் கடந்த இரண்டாம்நாள் திருவிலச்சினை (ஐம்படைத்தாலி) சாத்தி "அழகியமணவாளப் பெருமாள்நாயனர்" என்று நாமகரணம் செய்தருளினர். அந்தந்தக் காலங்களில் அந்நப்ராஶனம், சௌளம், உபநயனம் முதலான ஸம்ஸ்காரங்களை முறைப்படி செய்து ஸகல கலைகளையும் கற்பித்தருளினர். தாம் தமது மாமனரான கொல்லிகாவல்த₃ாஸரென்னும் கோட்டூர் அழகியமணவாளப்பெருமாள்பிள்ளையிடம் ஸகலார்த்த₂ங்களையும் கற்றுத்தேர்ந்ததுபோல், தமது குமாரரையும் சிக்கில்கிடாரத்தில் அவரது மாதுலக்₃ருஹத்தில் வளர்த்துக்கொண்டு வேத₃ம் முதலான ஸகலகலைகளையும் கற்பித்துக்கொண்டிருந்தார். அழகிய மணவாளப்பெருமாள்நாயனரும் — எப்போதும் ஸகலகலாபூர்ணனாய்

நிர்மலனான பூர்ணசந்த்ரன் என்னலாம்படி விளங்கினார். காலக்ரமத்திலே நாயனாரின் தந்தை அவருக்குத் தக்க குலத்தில் திருக்கல்யாணம் செய்தருளினார். ஆழ்வார்களின் அருளிச்செயல்களையும், அவற்றின் ஸாரார்த்தமான ரஹஸ்யங்களையும் விசேஷித்துக் குமாரருக்கு ஓதுவித்தருளினார். காலக்ரமத்தில் தகப்பனார் திருநாடலங்கரிக்க, குமாரர் அழகிய மணவாளப்பெருமாள் நாயனார் அவருக்கு ஶ்ரத்3தை4யுடன் திருவத்4யயனம் பெருக்க நடத்தியருளினார்; பிதாவாய், ப்3ரஹ்மோபதே3ஷ்டாவாய், பஞ்சஸம்ஸ்காரமும் செய்த உபகாரஸ்ம்ருதியாலே, தகப்பனாருக்குத் தனியன்கள் இட்டருளி அநுஸந்தி4த்தார்.
"ஸ்ரீஜிஹ்வாவத3தீ4ஶ தா3ஸம் அமலம் அஶேஷஶாஸ்த்ரவித3ம் |
ஸுந்த3ரவரகு3ருகருணா கந்த3லித ஜ்ஞானமந்தி3ரம் கலயே ||"

"வாழி திருநாவீ றுடைய பிரான் தாதனருள்
வாழி யவன்மாமை யாக்கின்பம்—வாழியவன்
வீரன் மணவாளன் விரைமலர்த் தாள்சூடி
பாரமதைத் தீர்த்தளித்த பண்பு" என்று.

ஆழ்வார்திருநகரியிலே 'ஸ்ரீசைலேசர்' என்னும் திருமலையாழ்வார்—ஆழ்வார் தி3வ்யப்ரப3ந்த4மே தமக்கு தா4ரகபோஷகபோ4க்3யமாகக்கொண்டு, திருவாய்மொழி அநுஸந்தா4னமும் ஆழ்வார் கைங்கர்யமுமே போதுபோக்காக இருந்தமையால் "திருவாய்மொழிப் பிள்ளை" என்று ப்ரஸித்3த4ராய், த3ர்ஶந ப்ரவர்த்தகராயெழுந்தருளியிருந்தார். அழகியமணவாளப் பெருமாள்நாயனாரும் தன் அம்மான் ஊரான சிக்கில் கிடாரத்தில் (கொத்தங்குளத்தில்) நின்றும் பத்னியுடன் புறப்பட்டு, தன் ஜன்மபூ4மியான ஆழ்வார் திருநகரிக்கு வந்து திருவாய்மொழிப்பிள்ளை திருவடிகளை ஆஶ்ரயித்து ஆசார்யனே தனக்கு ஶேஷி, ஶரண்யன், ப்ராப்யன் என்று திருவாய்மொழிப்பிள்ளைக்கு ஸகலகைங்கர்யங்களும் செய்துகொண்டிருந்தார். திருவாய்மொழிப் பிள்ளையும் அழகியமணவாளப்பெருமாள் நாயனாரைத் தமக்குப்பின் த3ர்ஶநப்ரவர்த்தகராம்படி விசேஷகடாக்ஷம் பண்ணியருளினார். தாம் ஏற்படுத்தின ஸ்ரீராமாநுஜ சதுர்வேதி3மங்க3லத்தில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் உத்தாரகாசார்யரான உடையவர் திருவடிகளை நாயனாருக்குக் காட்டிக்கொடுத்தருளினார். நாயனாரும் உடையவர் திருவடிகளில் ப்ரவணராய், உடையவர் விஷயமாக 'யதிராஜவிம்ஶதி' என்னும் ஸ்தோத்ர ப்ரப3ந்த4த்தை அருளிச்செய்து அநுஸந்தி4த்து வந்தார்.

நாயனாருக்குத் திருக்குமாரர் அவதரிக்க, ஆசார்யநியமனத்தினால் "எம்மையனிராமாநுசன்" என்று குமாரருக்கு நாமகரணம்

செய்தருளினார். நாயனாரை ஶேஷாவதாரவிஶேஷம், உடையவருடைய அவதாரவிஶேஷம், என்று ஸ்ரீவைஷ்ணவர்கள் அனைவரும் ஆத₃ரித்துக்கொண்டு போந்தார்கள். ஸ்ரீபராங்குஶதா₃ஸரான பெரிய நம்பியை ஆஶ்ரயித்த ஏற்றம் எம்பெருமானார்க்கு உண்டானாற்போலே, ஶட₂கோபதா₃ஸரான திருவாய்மொழிப்பிள்ளையை ஆஶ்ரயித்த ஏற்றம் இவருக்கு உண்டாயிற்று என்று கொண்டாடினார்கள். திருவாய்மொழிப்பிள்ளை தமது சரமத₃ஶையிலே அழகிய மணவாளப்பெருமாள் நாயனாரை ''ஸம்ஸ்க்ருத ஶாஸ்த்ரங்களிலே பலகாலும் கண்வையாமல், ஸ்ரீபா₄ஷ்யத்தை ஒருகால் கேட்டு, நமக்கும் எம்பெருமானார்க்கும் ப்ரியமாகத் திருவாய்மொழி முதலான அருளிச்செயலிலே அநவரதம் பரிஶீலனம் பண்ணிக்கொண்டு, பூர்வர்களைப்போலே பெருமாளுக்கு மங்க₃ளாஶாஸனபரராய்க்கொண்டு கோயிலிலே நித்யவாஸமாக எழுந்தருளியிரும்'' என்று நியமித்து, மற்ற ஸ்ரீவைஷ்ணவர்களை நாயனார் திருக்கைகளிலே காட்டிக் கொடுத்தருளி, ''இவரை அவதாரவிஶேஷம் என்று ஆத₃ரித்துப் போருங்கள்'' என்று நியமித்தருளினார். வைஶாக₂ப₃ஹுளாஷ்டமியில் திருவாய்மொழிப்பிள்ளை திருநாடலங்கரித்தார். நாயனாரும், திருவாய்மொழிப் பிள்ளையால் புத்ராபி₄மானம்பண்ணி தேவப்பெருமாள் என்று திருநாமம் இடப்பெற்ற (பிள்ளையின்) திருமருமகனாரைக் கொண்டு பிள்ளைக்குத் திருவத்₄யயனம் பெருக்க நடத்தியருளினார்.

பிறகு,ஆசார்ய நியமனத்தின்படி கோயிலிலே நித்யவாஸமாயிருந்து, பெரியபெருமாளையும், நம்பெருமாளையும் மங்க₃ளாஶாஸனம் செய்து கொண்டிருப்பதிலே விருப்பமுண்டாய், நம்மாழ்வார் ஆதி₃நாதனின் நியமனப்பெற்று, நாயனார் அந்தரங்க₃ர்களுடன் திருவரங்கப் பெரிய கோயிலுக்குப் பயணமாகப் புறப்பட்டார், நாயனாரின் ப்ரபா₄வத்தில் ஈடுபட்டு அவர் திருவடிகளில் ஆஶ்ரயித்திருந்த அழகியவரதர், ஸேனை முதலியார் தொடக்கமானோர் ஸ்ரீரங்க₃த்திற்கு அவரோடு கூட எழுந்தருளினார்கள். அழகியவரத₃ர் பரமவிரக்தராய், அப்போதே ஸந்யாஸாஶ்ரமம் ஏற்று, ராமாநுஜஜீயர் என்று திருநாமம் பெற்றார். நாயனார் கோயிலுக்குப் புறப்பட்டுச் செல்லும் வழியிலே ஸ்ரீவில்லிபுத்தூரில் பெரியாழ்வார் வடபெருங்கோயிலுடையானையும் ஆண்டாள் ரங்கமன்னாரையும் மங்க₃ளாஶாஸனம் செய்துகொண்டு, அழகர்மலையில் அழகரை மங்களாஶாஸனம் செய்துகொண்டு, திருவரங்கம் திருப்பதிக்கு எழுந்தருளினார். காவேரியில் நித்யகர்மாநுஷ்டா₂னங்களை முடித்துக்கொண்டு அந்தரங்க₃ர் புடைசூழ, க்ரமப்படி கோயில் மங்க₃ளாஶாஸனம் செய்துகொண்டு முதலியாண்டான் வம்ஶமாகை

யாலே தமக்கு ஆசார்யதுல்யரான (கோயில்) அண்ணர் திருமாளி கைக்கு எழுந்தருளினர். அண்ணர் முன்பு துருஷ்ககலாபகாலத்தில் கோயிலைவிட்டுத் திருமெய்யத்திலே எழுந்தருளியிருந்து அங்கே ஆழ்வார்கள் அருளிச்செயல் வ்யாக்2யானங்களை ப்ரவசனம்செய்தருளி னவர். அண்ணர், நாயனரை கோயில் அதி4பதியாயிருந்த திருமாலை தந்த பெருமாள் பட்டர் புருஷகாரமாக, பெரியபெருமாளை மங்க3ளா ஶாஸனம் செய்ய அழைத்துக்கொண்டெழுந்தருளினர். "தே3வீ கோ3தா3 யதிபதி ஶட2த்3வேஷிணௌ" [தி3நசர்யை] என்ற க்ரமப்படி நாயனரும் மங்க3ளாஶாஸனம் செய்தருளினர். கோயிலிராமாநுசனைக் கண்ணாரக்கண்டு அவ்வழகில் ஈடுபட்டு,

"இவ்வுலகந் தன்னி லெதிராசர் கொண்டருளும்
எவ்வுருவும் யான்சென்றி றைஞ்சினக்கால்—அவ்வுருவம்
எல்லா மினிதேலு மெழிலரங்கத் திருப்புப்போல்
நில்லாதென் னெஞ்சு நிறைந்து" என்று அநுஸந்தி4த்தார்.

பிறகு நாயனருக்காக அண்ணர் திருமாளிகைக்கு, பட்டர் வம்ஶ ஸ்த2ரான திருமாலை தந்த பெருமாள்பட்டர் அநேகபதா3ர்த்த2ங்களை அனுப்பிச் சிறப்பித்தார். அண்ணருடன் நாயனர் அமுது செய்து எழுந்தருளியிருக்க, அண்ணர் பூர்வர்களின் ஞானமநுஷ்ட2ானங்களைச் சொல்லக்கேட்டுகந்தார்; ஆசார்யர்கள் எழுந்தருளியிருந்த திருமாளிகை களை ஸேவித்து, பிள்ளைலோகாசார்யர் திருமாளிகையை "ரஹஸ்யம் விளைந்த பூ4மி" என்று அத்யாத3ரத்துடனே ஸேவித்து, அங்கு சிறிது நேரம் எழுந்தருளியிருந்தார் நாயனர். அங்குண்டான ரஹஸ்யக்3ரந் த2ங்கள் ஜீர்ணமாயிருந்தவற்றைப் புதிதாக ஏடுபடுத்தி உத்3த4ாரணம் செய்தருளினர். சிலநாள் கழித்து வடதிருவேங்கடம் முதலான திருப்பதிகளை மங்க3ளாஶாஸனம் செய்யத் திருவுள்ளமாய், பெருமாள் நியமனம்பெற்றுக்கொண்டு திருவேங்கடயாத்திரை புறப்பட்டார். வழியில் திருவெள்ளறை, திருக்கோவலூர், திருக்கடிகை (சோள ஸிம்ஹபுரம்) முதலான தி3வ்யதே3ஶங்களை மங்க3ளாஶாஸனம் செய்துகொண்டு எழுந்தருளினர். திருக்கடிகையருகில் எறும்பியிலுள்ள பெரியோர்கள் உபஹாரங்களுடன் வந்து நாயனரை ஸேவிக்க, அவர்களை ஆத3ரித்தருளினர்.

பிறகு திருப்பதியில் கோ3விந்த3ராஜனையும், திருச்சுகனூரில் (திருச்சானூரில்) அலர்மேல்மங்கையையும் மங்க3ளாஶாஸனம் செய்து திருமலைக்கு எழுந்தருள, (ஸ்த2லத்தாரான) பெரியகேள்விஜீயர் ப3ஹுமானத்துடன் எதிர்கொண்டு அழைத்துக்கொண்டு போக,

திருமலையப்பனை மங்களாஶாஸனம் செய்தருளினர். பிறகு உலகேத்து மாழியானத்தியூரான பெருமாள் கோயிலுக்கு எழுந்தருளி, அநந்தஸரஸ்ஸில் நீராடி, த்வாதஶோர்த்வ புண்ட்ரம் சாத்திக்கொண்டு பெருந்தேவித்தாயார் பேரருளாளனை மங்களாஶாஸநம் செய்தருளி, அங்கு நின்றும் புறப்பட்டு எதிராஜர் அவதரித்தருளின ஸ்ரீபெரும்பூதூருக்கு எழுந்தருளினர். ஸ்ரீபெரும்பூதூரை அடைந்த ஸந்தோஷத்தில் "நமக்கு இந்த பாக்யம் கிடைத்ததற்கு மூலம் நம்மாழ்வார் திருவருளே; ஆசார்யரான திருவாய்மொழிப்பிள்ளையருளே; அவர் காண்பித்துக் கொடுத்த யதிராஜரின் க்ருபாவிஶேஷமே" என எண்ணித் தன் பாக்கியத்தைக் கொண்டாடினர்—

"இதுவோ பெரும்பூதூ ரிங்கே பிறந்தோ
எதிராச ரெம்மிடரைத் தீர்த்தார்?—இதுவோதான்
தேங்கும் பொருநல் திருநகரிக் கொப்பான
ஓங்கு புகழுடைய வூர்?"

"எந்தை யெதிராச ரெம்மை யெடுத்தளிக்க
வந்தபெரும் பூதூரில் வந்தோமோ?—சிந்தை
மருளோ தெருளோ மகிழ்மாலை மார்ப
னருளோ இப் பேற்றுக் கடி?"

என்று. "ஆண்டுகள் நாள்திங்களாய்" என்கிற பாசுரத்தை அநுஸந்தித்துக்கொண்டு ஸேவாக்ரமத்திலே ஆதிகேஶவனை ஸேவித்து, எம்பெருமானாரையும் திருவடிதொழுது மங்களாஶாஸநம் செய்தருளினர். ஸ்வாசார்யரான திருவாய்மொழிப்பிள்ளையின் நியமனப்படி ஸ்ரீபாஷ்யம் க்ரந்த காலக்ஷேபம் செய்ய ஸ்ரீபாஷ்யகாரரிடம் அநுமதிகொள்ள, ஸ்ரீபாஷ்யகாரரும் அன்றிரவு ஸ்வப்நத்தில் நாயனாருக்கு "நாமே உமக்குப் பெருமாள்கோயிலில் ஸ்ரீபாஷ்யம் ஸாதிக்கிறோம். கிடாம்பிநாயனாரிடம் செல்லும். நமக்கும் திருவாய்மொழிப்பிள்ளைக்கும் ப்ரியமாக ஸ்ரீபாஷ்யகாலக்ஷேபம் செய்து, பிறகு அருளிச்செயல் வ்யாக்யானங்களையே பஹுமுகமாகப் ப்ரவர்த்திப்பியும்" என்று நியமித்தார். அழகியமணவாளப்பெருமாள் நாயனாரும் மீண்டும் பெருமாள்கோயிலுக்கு எழுந்தருளிக் கிடாம்பிநாயனாரிடம் ஸ்ரீபாஷ்யகாலக்ஷேபம் செய்தருளினர்.

கிடாம்பிநாயனாரும், அவர் ஸஹபாடிகளான ஐயகளப்பாவும், செல்வநாயனாரும் அழகியமணவாளப்பெருமாள் நாயனாருடைய க்ரஹணதாரண வாக்வ்யவஹார சாதுர்யத்தைக் கண்டு அவதார

விஶேஷமென்று மிகவும் உகந்து கொண்டாடினார்கள். கிடாம்பி நாயனாரின் நிர்ப3ந்த4த்தின்பேரில் 'தே3வரஹஸ்யம் வெளியிடக் கூடாது' என்று ஶபத2ங்கொண்டு தன் ஶேஷாவதாரத் தன்மையை அவருக்குக் காட்டினார் நாயனார். ஸ்ரீப4ாஷ்யகாலக்ஷேபம் சாற்று முறை செய்துகொண்டு திரும்பவும் திருவரங்கம் பெரியகோயிலுக்கு எழுந்தருளி, பெரியபெருமாளையும் நம்பெருமாளையும் மங்க3ளா ஶாஸநம் செய்துகொண்டு எழுந்தருளியிருந்தார்.

கோயிலில் காலக்ஷேபம் ஸாதி3த்துவருகையில், அதற்கும், ப4க3வத் கைங்கர்யத்துக்கும் விரோத4மாக ஆஶௌச விஶேஷங்கள் அடிக்கடி குறுக்கிட்டன. ஸம்ஸாரத்தில் வெறுப்புண்டாய் பரம வைராக்3யஶீலராயிருந்த நாயனாரும் அதுவே வ்யாஜமாக ஸந்யாஸம் மேற்கொள்ள விரும்பி, தமக்கு ஸப்3ரஹ்மசாரியான ஶட2கோப ஜீயரிடமிருந்து ஸந்யாஸாஶ்ரமத்தை ஸ்வீகரித்தருளினார். பிறகு பெருமாளை மங்க3ளாஶாஸநம் செய்தருள ஸந்நிதிக்கு எழுந்தருள, பெருமாளும் ப3ஹுமானித்து "நம் அழகியமணவாளஜீயரை (எம் பெருமானார் சிஷ்யரான) ஆட்கொண்டவில்லிஜீயர்மடமாயிருந்து, இப்போது பல்லவராயன்மடம் என வழங்கப்படும் மடத்திலே விட்டு வாருங்கள். முன்பு திருக்கொட்டாரத்திலிருந்து அமுதுபடி நெய் அனுப்பப்பட்டதுபோலே மீண்டும் அனுப்பிவையுங்கள்" என்று நியமித்தார். ஸன்னிதி4 கைங்கர்யபரர்கள் அனைவரும் அப்படியே செய்தார்கள். பல்லவராயன் என்பவனால் சிறப்பாக இராமாநுசகூடம் அவ்விடத்தில் நடத்தப்பட்டதால் அவ்விடம் 'பல்லவராயன் மடம்' என வழங்கப்பட்டது. இந்த மடத்தில், தாம் காலக்ஷேபம் ஸாதி3த்து வந்த மண்டபத்திற்குத் தம் ஆசார்யருடைய "திருமலை யாழ்வார்" என்னும் திருநாமத்தைச் சூட்டினார் ஜீயர்.

திருமஞ்சனம் அப்பா, அவர் திருக்குமாரத்தி ஆச்சி ஆகியவர்களின் புருஷகாரத்தால், முதலியாண்டான் திருவம்ஶஸ்த2ர்களாய், ஆசார்ய புருஷர்களான வரத3நாராயணன் என்ற கந்தாடையண்ணன் (கோயிலண்ணன்) முதலான நூற்றிருபதுபேர்கள் ப4ார்யாபுத்ராதி3 களுடன் அழகியமணவாள ஜீயர் திருவடியை ஆஶ்ரயித்தார்கள். தம் ப்ராணஸுஹ்ருத்தான வானமாமலை ராமாநுஜ ஜீயரிடம் ஆச்சி யின் குமாரர்களான அண்ணாவும், த3ாஶரதி2 அப்பையும் ஜீயர் நியமனத்தாலே ஆஶ்ரயித்தார்கள். ஶுத்3த4ஸத்வமண்ணனிடம் குமாண்டூர் ஆச்சான்பிள்ளை பௌத்ரரான (பேரரான) ஆண்ட பெருமாள், ஜீயர் நியமனத்தாலே ஆஶ்ரயித்தார். திருவாழியாழ்வார்

பிள்ளையை ஜீயர் அவ்வப்போது ஜீர்ணமான ஸ்ரீ கோஶங்களைப் புதிதாக எழுதி உத்₃த₄ரணம் செய்யும்படி நியமித்தும், தமக்கு அவ்வப் போது வேண்டிய ஸ்ரீகோஶத்தை எடுத்துக்கொடுக்கும்படியும் நியமித் தருளினர். இப்படி (திருவரங்கம் பெரிய) கோயிலில் அழகியமணவாள மாமுனிகள் த₃ர்ஶநப்ரவர்த்தகராயெழுந்தருளியிருந்த காலத்தில், பூர்வாஶ்ரம திருக்குமாரருக்குக் குமாரர் அவதரிக்க, அவருக்கு அழகியமணவாளப்பெருமாள்நாயனர் என்று திருநாமம் சாத்தும்படி செய்தார். குமாரர் ஸ்ரீவில்லிபுத்தூரில் எழுந்தருளியிருந்தபோது அவதரித்த இரண்டாவது குமாரருக்கு 'பெரியாழ்வார்' என்று திரு நாமம் சாத்தும்படி செய்தார். அவ்விருவரும் ப்ராப்த காலத்திலே ஜீயர் திருவடியில் ஆஶ்ரயித்தனர். மூத்தவருக்கு 'ஜீயர் நாயனர்' என்பதுவும் ஒரு திருநாமம்.

ஒருசமயம் ஜீயருக்குத் தாம் பிறந்த ஊரான திருக்குருகூருக்குப் போய் ஆதி₃நாத₂ன் ஆழ்வார் முதலானரை ஸேவித்து வரவேணும் என்ற திருவுள்ளம் உண்டாயிற்று. நம்பெருமாள் அநுமதிபெற்று அந்தரங்க₃ர்களுடனே புறப்பட்டு எழுந்தருளும்போது தமதாசார்யர் அவதார ஸ்த₂லமான குந்தீநகரம் சென்று மூன்றுதினம் எழுந்தருளி யிருந்தார்.

''சித்தந் திருமால்மேல் வைத்தருளும் சீர்மன்னர்
நத்த மிதுகாணும் நாம்தொ ழவே—முத்தராய்ப்
போனரே யாகிலும் பூங்கமலத் தாள்கள்தமைத்
தாமார வைத்தார் தலம்''

என்று அத்தி₃வ்யதே₃ஶத்தை மங்க₃ளாஶாஸநம் செய்தருளிப் புறப் பட்டு, வழியில் தி₃வ்யதே₃ஶங்களை மங்க₃ளாஶாஸநம் செய்து கொண்டு திருக்குருகூர் என்னும் ஆழ்வார்திருநகரிக்கு எழுந்தருளி ஆழ்வாரை மங்க₃ளாஶாஸநம் செய்தருளினர். ஆநந்த₃மிகுதியுடன்,

''புக்ககத்தி னின்றும் பிறந்தகத்திற் போந்ததுபோல்
தக்கபுகழ்த் தென்னரங்கம் தன்னினின்றும்—மிக்கபுகழ்
மாறன் திருநகரி வந்தோ மரங்கன்றன்
பேறன்றே நெஞ்சேயிப் பேறு''

என்று அநுஸந்தி₄த்தார். அங்குள்ளாரனைவரும் ஜீயரின் அப்ரதிம வைப₄வத்தில் ஈடுபட்டு அவர் திருவடியில் ஆஶ்ரயித்தனர்.

திருநாராயணபுரத்தில் ''ஆய்''என்னும் ஜநந்யாசார்யர் ஜீயரின் ப்ரப₄ாவம் கேட்டு ஜீயரை தண்டன் ஸமர்ப்பிக்க ஆழ்வார் திருநக

ரிக்கு எழுந்தருள. ஜீயரும் ஆசார்யஹ்ருதயத்தில் "ஜ்ஞான சதுர்த்திகளின் மேலேயிறே ஆநந்தஷஷ்டிகளுக்கு உதயம்" என்னும் வாக்யத்துக்குத் தெளிவாகப் பொருள் தெரிந்துகொள்ளவேண்டித் திருநாராயணபுரத்தாயியை தண்டன் ஸமர்ப்பிக்கப் புறப்பட, வழியில் திருக்குருகூர் அருகே இருவரும் ஸந்தித்தனர். ஆய் ஜீயரின் வைபவத்தில் ஈடுபட்டு,

> "பூதூரில் வந்துதித்த புண்ணியனோ ? பூங்கமழும்
> தாதாரு மகிழ்மார்பன் றனிவனோ ?—தூதூர
> வந்த நெடுமாலோ ? மணவாள மாமுனிவன்
> எந்தை யவர் மூவரிலும் யார்? "

என்று அநுஸந்தித்தார். மாமுனிகள் திருநகரியில் எழுந்தருளியிருந்த போது அத்தேசாதிபதியை ஶிஷ்யனாக்கிக்கொண்டு ஆழ்வார் கைங்கர்யத்தைச் சிறப்பாகச் செய்வித்தார். திருக்குறுங்குடியில் திருவேங்கடமுடையான் என்னும் ப்ராஹ்மணனொருவனுக்கு விஶேஷ கடாக்ஷம் பண்ணி, ஐந்து நம்பிகளுக்கும் கைங்கர்யங்களை அவனைக் கொண்டு சிறப்பாகச் செய்வித்தருளினார். பிறகு,

> "பிறந்தகத்திற் சீராட்டுப் பெற்றாலும் தன்னைச்
> சிறந்துகக்கும் சீர்க்கணவன் தன்னை—மறந்திருக்கப்
> போமோ ? மணவாளர் பொன்னடியை விட்டிருக்க
> லாமோ? கலவியறிந் தால் "

என்று நினைந்து மீண்டும் திருவரங்கம் எழுந்தருளினர்.

கோயில் கந்தாடை அண்ணன் புருஷகாரமாக 'தேவராஜர்' என்னும் எறும்பியப்பா ஜீயர் திருவடியை ஆஶ்ரயித்தார். எறும்பி யப்பா, வானமாமலை ராமாநுஜஜீயர் ஆகிய இருவர் புருஷகாரமாக அப்பிள்ளார். அப்பிள்ளை முதலானோர் ஜீயர் திருவடியை ஆஶ்ரயித் தனர். அப்பிள்ளை அப்பிள்ளார் ப்ரஸித்த வித்வச்ச்ரேஷ்டராயிருப் பார்கள். அப்பிள்ளை ஜீயர் நியமனத்தின்பேரில் இயற்பா ஐந்து திருவந்தாதிகளுக்கும் உரை அருளிச்செய்தார். ஓராண்வழி வாழித் திருநாமமும் அருளிச்செய்தார்.

ஒருசமயம் ஜீயர் சடகோபக்கொற்றியென்னும் ஸாத்விகையான ஒரு அம்மையாருக்குத் தம் ஆதிஶேஷாவதாரத்தன்மையை நிர் ஹேதுக க்ருபையாலே காட்டித் தந்தருளினர். தம் அவதாரவிஶேஷத் துக்குத் தக்கபடி வெள்ளை திருமேனியையுடையவராயிருப்பதில் அதி

ஶங்கைபண்ணின உத்தமநம்பிக்குப் பெருமாள் தன் அரவணையைத் தொட்டுக் காண்பித்து 'இவரே அவர்' என்று தெளிவுபடுத்தினார்.

பிள்ளைலோகாசார்யர் அருளிய முமுக்ஷுப்படி, தத்வத்ரயம், ஸ்ரீவசன பூ₄ஷணம், அவர் தம்பியாரான அழகியமணவாளப்பெருமாள் நாயனார் அருளிச்செய்த ஆசார்யஹ்ருத₃யம் எனும் க்₃ரந்த₂ங்களுக்கு வ்யாக்₂யானங்களும், இராமாநுசநூற்றந்தாதி ஞானசார ப்ரமேயசாரங்களுக்கு வ்யாக்₂யானங்களும், உபதேசரத்தினமாலை, திருவாய்மொழி நூற்றந்தாதி, ஆர்த்தி என்கிற தமிழ் ப்ரப₃ந்த₄ங்களும், ஸகலஸாத்விக ஜனோஜ்ஜீவனமாக ஜீயர்தம் பரமக்ருபையாலே அருளிச்செய்தருளினார். தத்வ த்ரயப்ரமாணத்திரட்டும் ஈட்டு ப்ரமாணத்திரட்டும் தொகுத்தருளினார். பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்₂யானம் லுப்தமாய், வ்யாக்₂யானமில்லாதிருந்த பெரியாழ்வார் திருமொழி 4 பத்துக்களுக்கு வ்யாக்₂யானம் அருளிச்செய்தருளினார். ஸ்ரீப₄ாஷ்யகாரர் நித்யக்₃ரந்த₂த்தைத் தழுவி ப₄க₃வதா₃ராத₄ன க்ரமத்தை ஸங்க்₃ரஹித்தருளினார். ஜீயரின் அந்தரங்க₃ர்கள்,

> ''மேவுந் தவத்து வரயோகி யிட்ட வியாக்கியையால்
> தேவுந் திகைக்கும் நல்தத் துவரக சியத்துடனே
> தாவும் பெரும்புகழ் ஆசா ரியவித யத்திற்குமா
> தாவும் பொருள்செறிச் சொல்லா பரணச் சுருதிக்குமே''

என்று ஜீயரின் க்₃ரந்த₂வைபவத்தை அநுஸந்தி₄த்தார்கள். திருமந்த்ரார்த்த₂ஸாரமான சரமார்த்த₂நிஷ்டையை (ப₄ாக₃வதநிஷ்டை₂யை - ஆசார்யநிஷ்டை₂யை) ஜீயர் தம் உக்த்யநுஷ்ட₂ானங்களாலே நிலை நாட்டி, உலகோர்களையும் அந்நிஷ்டை₂யில் ஊன்றிநிற்கச்செய்தார்.

கோயிலில் குத்₃ருஷ்டி வித்₃வானொருவன் ஜீயருடன் வாத₃ம் புரியவர, தாம் ஸமர்த்த₂ராலும், தம் சீடரான வேடலப்பையை வரவழைத்து வாத₃த்துக்கு அனுப்ப, வேடலப்பையிடம் வித்₃யா க்₃ரஹணம் பண்ணின அவன் அவரைக்கண்டு பயந்து அவ்விடத்தை விட்டு ஏகினான். வேடலப்பையும் தன் க்₃ராமத்துக்குப் போய் விட்டார். 'எப்போதும் தம்முடன்கூட இருந்து பரபக்ஷப்ரதிக்ஷேப பூர்வகமாக ஸ்வபக்ஷவர்த்த₄கராயிருக்கும்படியான ஒருவர்வேணும்' என்று திருவுள்ளங்கொண்டு ''ப்ரதிவாதி₃ப₄யங்கரர்'' என்ற பி₃ருதி₃னால் அலங்கரிக்கப்பெற்றவராய், திருமலையப்பனுக்கு ஆகாஶக₃ங்கை₃யினின்றும் திருமஞ்சன தீர்த்த₂கைங்கர்யம் பண்ணிப்போரும் பரம விரக்தராய், ஸாத்விகரான ஹஸ்திகி₃ரிநாத₂ரண்ணாவை ''இதுக்காவார் இவர்'' என்று திருவுள்ளம் பற்றி அபி₄மானித்தருளினார்.

அண்ணுவும்—கோயிலிலிருந்து திருமலைக்கு எழுந்தருளின ஸ்ரீவைஷ்ண வர் மூலம் மணவாள மாமுனிகளின் வைபவத்தைக் கேட்டு அவரை ஆஶ்ரயிக்க ஆசைமிகுந்து, கோயிலுக்குப் பத்னீபுத்ரர்களுடன் புறப் பட்டு, கோயிலில் ஸ்ரீரங்கநாராயணஜீயர் மடத்தில் தங்கி, அங்கிருந்து கோயிலண்ணன் திருமாளிகைக்குச் சென்று அவர் புருஷகாரமாகவும், அங்கு எழுந்தருளியிருந்த வானமாமலை ராமாநுஜஜீயர் புருஷகார மாகவும் ஜீயர் திருவடிகளைக் குடும்பத்தோடு ஆஶ்ரயித்தார். ஜீயர், "வாரீர் ப்ரதிவாதிபயங்கரரே!" என்று அன்புடன் அழைத்துக் கடாக்ஷிக்க, ஹஸ்திகிரிநாதரண்ணுவும் "பரவாதி கோஷ்டியில் அப்படி ப்ரஸித்தி பெற்றிருந்தாலும், ஸ்ரீவைஷ்ணவ கோஷ்டியில் அடியேன் அவர்களுக்கு தாஸன்" என்று விண்ணப்பித்து தண்டன் ஸமர்ப்பிக்க, ஜீயரும் உகந்து "உமக்கும் உம்மைச்சேர்ந்தவர் களுக்கும் "ஸ்ரீவைஷ்ணவ தாஸன்" என்பதுவே தாஸ்யநாமம் ஆகக்கடவது என்று அருளிச்செய்தார். "ஸ்ரீபாஷ்யகாரருக்குக் கூரத்தாழ்வான்போலே அவரது அவதாரவிஶேஷமான மாமுனிகளுக்கு ப்ரதிவாதிபயங்கரர்" என்று அனைவரும் போற்றிக்கொண்டாடினர். மாமுனிகள் மீண்டும் ஒருமுறை திருமலையாத்திரை சென்றுவரத் திரு வுள்ளமாய், நம்பெருமாள் அநுமதிகொண்டு புறப்பட்டு வழியிலுள்ள திவ்யதேஶங்களை ஸேவித்துக்கொண்டு, திருப்பதியில் கோவிந்த ராஜனை மங்களாஶாஸனம் செய்தருளி, திருமலையில் திருவேங்கட வனை மங்களாஶாஸனம் செய்தருளினர். அங்குள்ள ஸ்ரீவைஷ்ண வர்கள் கேட்டுக்கொண்டதின்பேரில், எம்பெருமானர் ஜீயரை திருமலை யப்பன்—கோவிந்தராஜன் கைங்கர்யத்துக்கு நியமித்தருளினர். இவருக்குச் சிறியகேள்விஜீயர் என்றும் வ்யவஹாரமுண்டு. திரு வெவ்வுள், திருநின்றவூர், திருவல்லிக்கேணி, திருப்புட்குழி, பெருமாள்கோயில் ஆகிய திவ்யதேஶங்களை மங்களாஶாஸனம் செய்தருளி, பெருமாள்கோயில் ஸ்ரீவைஷ்ணவர்கள் கேட்டுக்கொண்ட தின் பேரில் அப்பாச்சியாரண்ணுவைப் பேரருளாளன் கைங்கர்யத்துக் காக நியமித்தருளினர். திரும்புகாலில் பெரியநம்பி ராமாநுஜருக்கு ஸமாஶ்ரயணம் செய்தருளின மதுராந்தகத்திற்கு எழுந்தருளி, ஏரி காத்த ராமனையும், பெரியநம்பியையும், ராமாநுஜரையும் மங்களா ஶாஸனம் செய்தருளினர். அவ்விடத்தை—

"மருமலர் கமழுஞ் சோலை மதுரைமா நகர்வந் தெய்தி
அருள்மொழி பெரிய நம்பி யன்றெதி ராச ராசர்க்கு
அரும்பொருள் வழங்கு மெங்கள் ஏரிகாத் தருள்வார் கோயில்
திருமகி ழுடியிற் செல்வீர் தீவினை தீரு மாறே"

''இதுவோ கிளியா(று)இவ் வூரோ திருமதுரை
இதுவோ திருமகிழும் கோபுரமும்—இதுவோ
பெரியநம்பி தாமுகந்து பின்னுமெதி ராசர்க்குத்
துயமளித்த தூயப் பதி'' [ துயம்-த்$_3$வயம் ]

என்று அநுஸந்தி$_4$த்தருளினர். திருச்சித்திரகூடம் தொழுது திருவாலி திருநகரியில் திருமங்கைமன்னன் வடிவழகில் ஈடுபட்டு, ''அணைத்த வேலும்'' என்று தொடங்கும் சூர்ணைகளாலே மங்க$_3$ளாஶாஸனம் செய்தருளி, வேடுபறி நடந்த இடத்தைத் தொழுது 'திருமந்த்ரம் விளைந்த பூ$_4$மி' என்று ஈடுபட்டு,

''இதுவோ திருவர(சு) இதுவோ மணங்கொல்லை
இதுவோ எழிலாலி என்னுமூர்—இதுவோதான்
வெட்டுங் கலியன் வெருட்டி நெடுமாலை
எட்டெழுத்தும் கொண்ட விடம்''

என்று மங்க$_3$ளாஶாஸனம் செய்தருளினர். திருக்கண்ணபுரம், நாச்சியார் கோவில், திருக்குடந்தை, திருப்பேர் (கோவிலடி) முதலான தி$_3$வ்ய தே$_3$ஶங்களை மங்க$_3$ளாஶாஸனம் செய்துகொண்டு திரும்பவும் கோயிலுக்கு எழுந்தருளி நம்பெருமாளை மங்க$_3$ளாஶாஸனம்செய்து, தாம் கொண்டுவந்த த்$_3$ரவ்யங்களையெல்லாம் திருக்கொட்டாரத்தில் ஸமர்ப்பித்து மடத்தேற எழுந்தருளினர்.

ஒருசமயத்தில் மன்னார்குடி ராஜகோ$_3$பாலனை மங்க$_3$ளாஶாஸனம் செய்தருளி, 'தீர்ப்பாரை யாமினி' என்னும் திருவாய்மொழியை கோ$_3$பாலனுக்கு ஸமர்ப்பித்துக் கொண்டாடினர். எம்பெருமானார் 'ஒருநாயகமாய்' என்ற திருவாய்மொழியை யது$_3$கி$_3$ரிநாத$_2$னை திருநாராயணனுக்கு ஸமர்ப்பித்துக்கொண்டாடினாற்போலே இது என்று பெரியோர் கூறுவர்.

ப்ரதிவாதி$_3$ப$_4$யங்கரமண்ணவை ஸ்ரீப$_4$ாஷ்ய ஸிம்ஹாஸனத்திலும், ஶுத்$_3$த$_4$ஸத்வமண்ணனை ப$_4$க$_3$வத்$_3$விஷய ஸிம்ஹாஸனத்திலும், அபி$_4$ஷேகஞ்செய்தருளினர். ஶுத்$_3$த$_4$ஸத்வமண்ணனுக்குத் திருவாய்மொழி ஆசார்யர் என்று திருநாமம் சாற்றினர்.

மாமுனிகளின் ''விஶத$_3$வாக்சி$_2$கா$_2$மணி'' என்னும் சிறப்பை உறுதிப்படுத்துவதற்காக, நம்பெருமாளும் தான் நேரில் திருவாய்மொழி வ்யாக்$_2$யானமான ஈடுமுப்பத்தாறுயிரத்தை மாமுனிகளின் மூலம் கேட்டு ஆநந்தி$_3$த்து அநுப$_4$விக்கத் திருவுள்ளங்கொண்டு பரீதாபி ஸம்வத்ஸரத்தில் திருப்பவித்ர உத்ஸவ சாற்றுமுறைதினம் ஜீயருக்கு அருளப்பாடிட்டு ''நாளை முதல் பெரிய திருமண்டபத்தே நாம் கோஷ்டியாக இருந்து கேட்டு ஆநந்தி$_3$க்கும்படி திருவாய்மொழி

வ்யாக்₂யானமான ஈடுமுப்பத்தாறுயிரத்தை உபந்யஸிக்கவேணும்'' என்று நியமிக்க, மாமுனிகளும் நியமனத்தைத் தலையால் வணங்கி யேற்று உபந்யஸித்தார். அடுத்த வருஷம் (ப்ரமாதீச) ஆனித் திரு மூலத்தில் ப₄க₃வத்₃ விஷய காலக்ஷேப சாற்றுமுறையன்று நம்பெருமாள் அர்ச்சக குமாரனுன் அரங்கநாயகம் என்னும் ஐந்து வயதுக் குமாரனிடம் ஆவிஷ்டராய், மாமுனிகள் எதிரே வந்து நின்று அஞ்ஜலிஹஸ்தராய்,

ஸ்ரீசைலேச த₃யாபாத்ரம் தீ₄ப₄க்த்யாதி₃ குணார்ணவம் |
யதீந்த்₃ர ப்ரவணம் வந்தே₃ ரம்யஜாமாதரம் முநிம் ||

என்று அநுஸந்தி₄த்துவிட்டு மறைந்துவிட்டார். ஸ்ரீஸேனைமுதலியார் மூலம் தம் திருவாணையாக எல்லா தி₃வ்யதே₃சங்களிலும் இந்தத் தனியனை முதலில் அநுஸந்தி₄த்த பிறகே மற்ற அநுஸந்த₄ானங்கள் தொடங்கவேணும் என்றும், முடிவில் ஜீயரின் சிஷ்யரான அப்பிள்ளை அநுஸந்தி₄த்த ''வாழி திருவாய்மொழிப்பிள்ளை'' என்று தொடங்கி ''மணவாளமாமுனியே இன்னமொரு நூற்றாண்டிரும்''என்னுமளவான வாழித்திருநாமங்களை அநுஸந்தி₄க்கவேணும் என்றும் நியமனம் அனுப் பியருளினர். ஈடுமுப்பத்தாறுயிரப் பெருக்கரான மாமுனிகள் விஷயமான ''ஸ்ரீசைலேசத₃யாபாத்ரம்'' என்னும் தனியனும், வாழித்திருநாமமும் ப₄க₃வந்நியமனத்தால் தி₃வ்யதே₃சமெங்கும் அநுஸந்தி₄க்கப்பட்டுவரு கிறதாயிற்று. வடதிசையில் ப₃த₃ரி முதலான தி₃வ்யதே₃சங்களில் எம் பெருமானை மங்க₃ளாசாஸனம் செய்யத் திருவுள்ளமாய், தமக்குத் திருமேனியில் தளர்த்தி மிகுதியாயிருக்கையாலே, தமக்கு ப்ரதிநிதி₄ யாய், ராமாநுஜத₃ாஸர், குமாண்டூர் இளையாழ்வார்பிள்ளை ஆகிய வர்களை வடதிசையில் அனுப்பியருள, அவர்களும் வடதிசை எம்பெரு மான்களையெல்லாம் ஸேவித்து, ஜீயருக்காக எம்பெருமான்கள் ப்ர ஸாதி₃த்த அப₄யஹஸ்தம் முதலானவற்றைப் பெற்றுக்கொண்டு கோயிலுக்கு வந்து ஜீயருக்கு ஸமர்ப்பிக்க, ஜீயர் வடதிசை தி₃வ்ய தே₃சங்களை மங்க₃ளாசாஸனம் செய்ததாக ப₄ாவித்து ஸந்தோஷ மடைந்தார்.

கோ₃விந்த₃த₃ாஸரப்பன் ''மாமுனிகள் திருவடியே உபாயோ பேயம்'' என்று அந்திமோபாயநிஷ்ட₂ராய் எழுந்தருளியிருந்தார். ஒரு திருவாடிப் பூரத்தன்று ஆண்டாள் ரங்கமன்னர் ப்ரஸாத₃ங்களைக் கொண்டுவந்து அவர் ஜீயருக்கு ஸமர்ப்பிக்க, ஜீயர் உகந்து அவரை பட்டர்பிரான் தாஸர் என்று அழைத்தார். அவர் பரமவிரக்தராய் உத்தமாச்ரமஸ்வீகாரம் செய்துகொண்டார். பட்டர்பிரான்ஜீயர் என்று பெயர்பெற்றவராய்,எம்பெருமானாருக்கு வடுகநம்பிகள்போலே,இவரும்

மாமுனிகளை விடாது தொடர்ந்து அந்தரங்ககைங்கர்யம் செய்து வந்தார். அவர் அருளிச்செய்த க்ரந்தமான "அந்திமோபாய நிஷ்டை" இப்போதும் உள்ளது.

மாமுனிகள் நம்மாழ்வாரைத் திருவடிதொழுது மங்களாஶாஸனம் செய்துவரத் திருவுள்ளமாய், நம்பெருமாளநுமதிகொண்டு புறப்பட்டு, திருப்பல்லாண்டு அவதரித்த திவ்யதேஶமான கூடலில் அழகரை மங்களாஶாஸனம் செய்தருளினர். அத்தேஶாதிபதி மஹாபலிவாண நாதராயன் என்பவன் ஜீயர் திருவடிகளை ஆஶ்ரயித்தான். முத்த ரசன் என்ற க்ராமத்தை ஜீயருக்குத் திருமுன் காணிக்கையாக ஸமர்ப் பித்தான். ஜீயர், வழியில் தமக்கும், தம் கோஷ்டிக்கும் வெயிலில் ஒதுங்க நிழல் கொடுத்த புளியமரம் ஒன்றுக்கு மோக்ஷம் கொடுத்தரு ளினர். திருப்புல்லாணி எம்பெருமானைத் திருவடித்தொழுது, ஆழ்வார் திருநகரி சென்று ஆழ்வாரைக் கண்ணாரக்கண்டு ஸேவித்து மங்களா ஶாஸனம் செய்தருளினர். அழகர்திருமலையில் கைங்கர்ய ஸ்ரீகார்யத் துக்கு எதிராஜ ஜீயரை அனுப்பியருளினர்.

கந்தாடை அண்ணன் முதலான ஏழு கோத்ரத்தைச் சேர்ந்த ஆசார்யபுருஷர்கள் பரஸ்பரம் பெண்கொடுத்து வாங்கி வ்யவஹாரம் செய்துகொண்டு வருமவர்களை 'கந்தாடையார்' என ஸப்தகோத்ர வ்யவஸ்தை செய்தருளினர், பெரியதிருமலைநம்பி வம்ஶஸ்தரான ஏட்டூர் சிங்கராசார்யர், போலிப்பாக்கம் நாயனர் இவர்களைச் சேர்த்து அஷ்டகோத்ர வ்யவஸ்தைபண்ணியருளினர். மேல்நாட்டுத் தோழப் பரையும், அவர் தமயனர் அழகிய மணவாளப்பெருமாள் நாயனரை யும், திருமலைநல்லான் வம்ஶஸ்தரான அண்ணராய சக்ரவர்த்தியை யும் பட்டர்பிரான் ஜீயர் திருக்கையில் காட்டிக்கொடுத்தார். தோழப் பரையும் அவர் தமயனரையும் மேல்கோட்டை திருநாராயணன் கைங்கர்யத்துக்காக மேல்நாட்டுக்கு அனுப்பியருளினர்.

இப்படி மாமுனிகள் தம் அவதாரகார்யத்தைத் தலைக்கட்டிப் பரம பதத்தேற எழுந்தருளத் திருவுள்ளங்கொண்டு, ஸ்ரீவைஷ்ணவர்களைக் கூட்டித் ததீயாராதனம் செய்தருளி, அருளிச்செயல் அநுஸந்திக்கச் சொல்லிக்கேட்டு அவர்களை அபராதக்ஷாமணம் செய்துகொண்டார். அவர்களும் மாமுனிகளின் வைபவத்திலே ஈடுபட்டார்கள். மாமுனிகள் தமது எழுபத்துமூன்றாவது திருநக்ஷத்ரத்தில் ருதிரோத்காரி வருஷம் மாசி மாதம் க்ருஷ்ணபக்ஷ த்வாதஶியில் திருநாட்டுக்கு எழுந்தருளி னர். அஷ்டதிக்கஜங்கள் முதலானர் மாமுனிகளின் பிரிவுக்கிரங்கி, பிறகு சிறிது ஆறுதலடைந்து ஜீயர்நாயனரைக்கொண்டு மாமுனிக ளுக்குச் சிறப்பாகத் திருவத்யயனம் செய்தருளினர்கள்.

''பாராரு மங்கை திருவேங் கடமுனி பட்டர்பிரான்
ஆராமஞ் சூழ்கோயிற் கந்தாடை யண்ண னெறும்பியப்பா
ஏராரும் பிள்ளையப் பிள்ளார் பரவாதி யண்ணனென்னும்
பேரார்ந்த திக்கயஞ் சூழ்வர யோகியைச் சிந்தியுமே''

என்னும் பாட்டு மாமுனிகள் திருவடிகளில் ஆச்ரயித்த அஷ்டதிக்கஜங்களை அநுஸந்திக்கிறது.

ஸ்ரீவசநபூஷண வ்யாக்யானம் மாமுனிகளருளிய க்ரந்தங்களில் தலைசிறந்தது. மற்ற ஆசார்யர்களின் கிரந்தங்களில் காணப்படாத பல பல ஆழ்பொருள்கள் இந்த கிரந்தத்தில் உண்டாயினும், அவற்றுக்கெல்லாம் அடிப்படையாய், ஸாரதமமாயிருப்பதொரு ஆழ் பொருள் உண்டு. அதை ஓர் திருஷ்டாந்தத்தின் மூலம் விளக்கினுல் அனைவர்க்கும் எளிதில் விளங்கும். அதாவது:— உத்தமனை ஓர் தகப்பனுக்கு நாலு பிள்ளைகள். சிறுவயதிலேயே தறுதலையாகித் தகப்பனேடு சண்டையிட்டு தேசாந்தரம் சென்றவன் ஒரு பிள்ளை. வீட்டிலேயிருந்தும், தகப்பனை மதிக்காமல் அவன் சொல்லுக்கு மாருக நடந்துகொண்டு, துராசாரமுடையவனுய், பிறர் புகழ் பாடிக் கொண்டிருப்பவன் ஒரு பிள்ளை. தகப்பனை மதித்து அவன் சொல்லுக்கு அடங்கி, நல்ல ஆசாரமுடையவனுயிருந்தும், 'நாம் இப்படி நல்ல பிள்ளையாயிருப்பதால்தான் தகப்பன் நம்மை ரக்ஷிக்கிருன்' என்று நினைப்பவன் ஒரு பிள்ளை. இப்பிள்ளையிடம் எத்தனையோ நன்மைகள் இருந்தபோதிலும், தன்னை இப்படி நல்ல பிள்ளையாம்படி திருத்தியவன் தகப்பனே என்பதையும், உறவை நோக்கியே தகப்பன் எல்லாப்பிள்ளைகளையும் வாசியற ரக்ஷிக்கிருன் என்பதையும், தகப்பனேடு தமக்குள்ள உறவை உணராமையாலும், அவன் செய்யும் ரக்ஷணத்தை விலக்குகையாலுமே முற்கூறிய தன் ஸஹோதரர்கள் பூர்ணரக்ஷணத்தையும் பெறவில்லை என்பதையும் உணராமல், 'தான் நல்லவனுயிருப்பதாலேயே தகப்பன் தன்னை ரக்ஷிக்கிருன்' என்னும் அஹங்கார கர்ப்பமான எண்ணமாகிற ஓர் பெருங்குறையும் இப் பிள்ளையிடம் உள்ளது. இனி, இவ்வுத்தமனை தகப்பனுக்கு இக் குறையுமில்லாத உத்தமனை பிள்ளையொருவனுண்டு. முந்தியவனிடமுள்ள நலங்களெல்லாம் இவனிடமும் உண்டு. அதற்கும் மேலே, தன்னை இப்படி நல்ல பிள்ளையாம்படி சிறு வயதிலிருந்து திருத்தியவன் தகப்பனே என்பதையும், அவனுலேயே தான் ஓர் வஸ்துவாயிருப்பதையும், அவன் எல்லாப் பிள்ளைகளையுமே ஸமமாகவே ரக்ஷிப்பவன் என்பதையும், தகப்பனுக்கும் தமக்குமுள்ள உறவை உணராமையாலும், அவன் பண்ணும் ரக்ஷணத்தை விலக்குகையாலுமே மற்ற ஸஹோதரர்கள் தகப்பன் செய்யும் ரக்ஷணத்தைப் பரிபூர்ணமாகப் பெறமுடியவில்லையென்பதையும், ஆகையால் தகப்பன் செய்யும் ரக்ஷணத்திற்குத் தன்னிடமுள்ளதெதுவும் காரணமல்ல

வென்பதையும், தகப்பனே தன் நன்மைக்கு நிரபேக்ஷோபாயபூ4தன் என்பதையும் உணர்ந்த உத்தமன் இவன். இவனே பிள்ளைகள் அனைவரிலும் உத்தமோத்தமன் என்பதை எவரும் மறுக்க இயலாது.

இந்த திருஷ்டாந்தத்தில் கண்ட உத்தமோத்தமனை தந்தையைப் போன்றவன் ஸர்வேஶ்வரன். பா3ஹ்யகுத்3ருஷ்டி மதங்களிலிருப்ப வர்கள் தே3வதாந்தரமோடிய தறுதலைப்பிள்ளையைப் போன்றவர்கள். நாராயணனே பரமாத்மாவென்றுணர்ந்தும் ப்ரயோஜநாந்தர தே3வ தாந்தர பரர்களாயிருக்குமவர்கள் இரண்டாவது பிள்ளையைப்போன்ற வர்கள். பரமபுருஷனே பரமப்ராப்யனென்றுணர்ந்தும், நாம் செய்யும் ப4க்தி, ப்ரபத்தி முதலானவை அவனைப்பெற உபாயங்கள் என்று நினைப்பவர்கள் மூன்றாவது பிள்ளையைப் போன்றவர்கள். அந்த ப4க்தி, ப்ரபத்தி முதலானவையும் நாராயணனுடைய க்ருபாஜநகங் களேயொழிய க்ருபாஜநகங்களல்ல; அன்றும், இன்றும், என்றும் எல்லாச்சேதனரிடத்தும் கிருபையைக்காட்டி வரும் நாராயணனே நிரபேக்ஷோபாயபூ4தன். அவனுக்கும் தமக்குமுள்ள உறவை உண ராமையாலும், அவன் செய்யும் ரக்ஷணத்தை விலக்குகையாலுமே மற்றவர்கள் அவன்செய்யும் ரக்ஷணத்தைப் பரிபூர்ணமாகப் பெருமற் போகிறார்கள் என்று உணர்ந்த உத்தமோத்தமர்கள் நாலாவது பிள்ளையைப் போன்றவர்கள். இவர்கள் எம்பெருமானுக்கு மிக நெருங்கியவர்கள். ''யமேவைஷ வ்ருணுதே தேந லப்4ய:'' ''ப்ரஜா பதிஸ் த்வம் வேத3, ப்ரஜாபதிம் த்வோ வேத3, யம் ப்ரஜாபதிர் வேத3 ஸ புண்யோ ப4வதி'' [பரமன் ஒருவனைத் தேடி அடைகிறான்; பரமனை ஒருவன் தேடி அடைகிறான்; எவனைப் பரமன் தேடி அடை கிறானோ அவனே மஹாபா4க்3யஶாலி] என்று வேத3த்திலும் புகழப் பட்ட பரக3தஸ்வீகாரநிஷ்ட2ர்கள் இவர்களே; ஶ்ருதிஸ்ம்ருதிகளிலும், மற்ற பூர்வாசார்ய க்3ரந்த2ங்களிலும் தேடிக்கண்டுபிடிக்கவேண்டி யிருக்கும் ஸாரதமமான, ப்ரதா4நப்ரதிதந்த்ரமான இவ்வர்த்த2ம் இந்த க்3ரந்த2த்தில் மிகத்தெளிவாக முழங்கப்பட்டுள்ளது. இப்படிப் பல தெளிவுகளை விளக்கும் இந்த க்3ரந்த2த்தை கு3ருமுக2மாகக் கற்கவேண்டியது ஸ்ரீவைஷ்ணவர் அனைவர்க்கும் கடமையாகும்.

ஸ்ரீமதே ரம்யஜாமாத்ரு முநீந்த்3ராய மஹாத்மநே ।
ஸ்ரீரங்க3வாஸிநே பூ4யாந்நித்யஸ்ரீர் நித்யமங்க3ளம் ॥

[ஸ்ரீரங்க3த்தில் வஸிப்பவராய், (ஜ்ஞானம், ப4க்தி, வைராக்3யம், ப4க3வத்3பா4க3வதாசார்ய கைங்கர்யம் ஆகிய) செல்வங்களைப் பரி பூர்ணமாகப் பெற்றவராய், மஹாத்மாவான மணவாள மாமுனிக ளுக்கு என்றும் சிறப்பும் மங்க3ளமும் உண்டாகுக.]

ஜீயர் திருவடிகளே ஶரணம்.

மணவாள மாமுனிகள் வைபவம் முற்றிற்று.

# நாதமுனிகள் தொடங்கி, மாமுனிகளீருகவுள்ள ஆசார்யர்களின் காலநிர்ணயம்

## ( கி. பி. வருஷங்களில் )

பெரியதிருமுடியடைவு, கு$_3$ருபரம்பராப்ரப$_4$ாவம், யதீந்த்$_3$ர ப்ரவணப்ரப$_4$ாவம், கோயிலொழுகு முதலான வரலாற்று நூல்களையும், பூர்வாசார்யர்களுடைய க்$_3$ரந்த$_2$ங்களையும் ஆத$_4$ாரமாகக் கொண்டு ஆசார்யர்கள் வாழ்ந்த காலம் இங்கு தொகுத்துக் கொடுக்கப்படுகிறது. தக்க ஆ த$_4$ ா ர ங் க ா ட் டி இவற்றில் மாறுதல்கள் செய்யவேண்டுமென்று ஆராய்ச்சியில் வல்லவர்கள் எழுதிஞல், அவையும் ஸு தர்சனத்தில் வெளியிடப்படும். இங்கு கொடுக்கப்படும் வருஷங்கள் சுமாரான வருஷங்கள். சற்று ஏறக்குறைய இருக்கலாம்.

| | ஆசார்யர்கள் | அவதார வருஷம் | பரமபதித்த வருஷம் | வாழ்ந்த ஆண்டுகள் |
|---|---|---|---|---|
| 1. | நாதமுனிகள் | 823 | 917 | 93 |
| 2. | உய்யக்கொண்டார் | 886 | 975 | 89 |
| 3 | மணக்கால்நம்பி | 929 | 1006 | 77 |
| 4. | ஆளவந்தார் | 976 | 1042 | 66 |
| 5. | பெரியநம்பிகள் | 997 | 1087 | 90 |
| 6. | திருக்கோஷ்டியூர் நம்பி | 987 | 1077 | 90 |
| 7 | திருமாலையாண்டான் | 988 | 1078 | 90 |
| 8 | திருவரங்கப்பெருமாளரையர் | 1017 | 1097 | 80 |
| 9. | திருக்கச்சிநம்பிகள் | 1009 | 1100 | 91 |
| 10 | எம்பெருமானுர் | 1017 | 1137 | 120 |
| 11. | கூரத்தாழ்வான் | 1009 | 1127 | 118 |
| 12 | முதலியாண்டான் | 1027 | 1132 | 105 |
| 13. | எம்பார் | 1021 | 1140 | 119 |
| 14. | எங்களாழ்வான் | 1097 | 1197 | 100 |
| 15 | ஸ்ரீபராசரபட்டர் | 1122 | 1174 | 52 |
| 16 | நஞ்சீயர் | 1113 | 1208 | 95 |

| | | | |
|---|---|---|---|
| *17 நம்பிள்ளை | 1147 | 1252 | 105 |
| *18 பெரியவாச்சான்பிள்ளை | 1167 | 1262 | 95 |
| *19.வடக்குத்திருவீதிப்பிள்ளை | 1167 | 1264 | 97 |
| 20. பிள்ளைலோகாசார்யர் | 1205 | 1311 | 106 |
| 21. *அழகியமணவாளப்பெருமாள்நாயனார்* | 1207 | 1309 | 102 |
| 22. நாயனாராச்சான்பிள்ளை | 1227 | 1327 | 100 |
| 23. வாதிகேஸரி அழகியமணவாளஜீயர் | 1242 | 1350 | 108 |
| 24. வேதாந்ததேசிகர் | 1269 | 1369 | 100 |
| 25 கூரகுலோத்தம தாஸர் | 1265 | 1365 | 100 |
| 26. திருவாய்மொழிப்பிள்ளை | 1290 | 1410 | 120 |
| 27. மணவாள மாமுனிகள் | 1370 | 1443 | 73 |

## மேலேகண்ட காலநிர்ணயத்தில் ஏற்படக் கூடிய சில ஸந்தே₃ஹங்களுக்குப் பரிஹாரங்கள்

(1) நாத₂முனிகளும், ஈஶ்வரமுனிகளும் யோகி₃களாயிருந்தவர்களாகையால், அவர்களுக்கு சுமார் 75 வயஸ்ஸில் புத்ரோத்பத்தி ஏற்பட்டதாகக் கொள்ளலாம். (2) திருவரங்கனின் அரவணைப் பிரஸாத₃த்தின் மஹிமையால் உண்டானவராகையால் கூரத்தாழ்வானுக்கு 113 வயஸ்ஸில் பட்டர் அவதரித்திருக்கலாம். கூரத்தாழ்வான் தேவிகளான ஆண்டாளுக்கு பதிஸம்யோக₃த்தால் பதிமரணமுண்டாகக் கூடிய கடுமையான ஜாதகதோ₃ஷமிருந்தமையால், பதிபத்நீ ஸம்யோக₃த்திற்கு இடமில்லாத முதிர்ந்த வயஸ்ஸில் ஆழ்வான் அவள் திறத்தில் கருணையாலே அவளைக் கைப்பிடித்ததாக வரலாறு கூறுகையால், பட்டர் அவதரித்தபோது ஆண்டாளுக்கு சுமார் 40 வயஸ்ஸாயிருக்கலாம். பட்டருக்குப் பின்பும் ஆண்டாள் வாழ்ந்திருந்ததும் இதை வலியுறுத்துகிறது.

'ஸுத₃ர்ஶனம்' ஆசிரியர் தொகுத்தெழுதிய
ஆசார்ய வைப₄வம் முற்றிற்று.

---

* *நம்பிள்ளையைக் காட்டிலும் நடாதூரம்மாளும், பெரியவாச்சான் பிள்ளை வடக்குத்திருவீதிப்பிள்ளைகளைக் காட்டிலும் ஶ்ருதப்ரகாஶிகா ப₄ட்டரும் சுமார் 25 வருஷங்களுக்குப் பிறகு அவதரித்து, சுமார் 30 வருஷங்களுக்குப் பிறகு பரமபத₃மடைந்திருக்கவேண்டும்.*

ஸ்ரீ :

# காகுத்தன் கருணை

[ஸ்ரீவில்லிபுத்தூர் அலங்காரம் தேவராஜய்யங்கார்]

கற்பார் இராமபிரானை அல்லால் மற்றும் கற்பரோ
புற்பா முதலாப் புல்லெறும்பாதி ஒன்றின்றியே
நற்பால் அயோத்தியில் வாழும் சராசரம் முற்றவும்
நற்பாலுக் குய்த்தனன் நான்முகனுர் பெற்ற நாட்டுளே''

ஒரு நிர்மானுஷ்யமான அடர்ந்த பெருங்கானகம். அந்தக் கானகத்திலே ஒருவன் தன்னந்தனியாக வந்து அகப்பட்டுக்கொள்கிருன். அவனை ஒரு வேங்கைப்புலி விரட்டிக்கொண்டு வருகிறது. அந்தப் புலியிடமிருந்து தப்புவதற்காக அவன் அருகிலிருந்த மரத்தின்மீது தாவி ஏறுகிருன். மரத்தின் உச்சிக்கிளையில் ஒரு பயங்கரமான குரங்கு வீற்றிருப்பதைக்கண்டு அவன் அஞ்சி நடுநடுங்குகிருன். அப்போது அந்தக் குரங்கு, ''பயப்படாதே, மரத்தின்மீது ஏறிவந்து சௌக்கியமாக இரு''என்று அவனுக்கு அபயமளிக்கிறது. அவ்வாறே அவன் மரத்தின்மேல் ஏறியதும் ஓடிவந்த களைப்பினுல் உறங்கிவிடுகிருன். அவனைத் துரத்திவந்த புலி, மரத்தினடியில் நின்று கால் கடுக்கக் காத்திருந்தது. பின்னர் அது குரங்கைப் பார்த்து 'நீயும் மிருகம், நானும் உன் இனம். மனிதன் நம் இருவருக்கும் பகைவன். எனவே அவனைக் கீழே தள்ளிவிடு; பசியாறுகிறேன்' என்று மன்ருடுகிறது. குரங்கு அதற்கு உடன்படவில்லை. அதற்குப்பின் அந்தக் குரங்கிற்கும் தூக்கம் வந்துவிடுகிறது. அதுசமயம் மனிதன் விழித்துக் கொள்கிருன். புலி, மனிதனைநோக்கி ''அந்தக் குரங்கைக் கீழே தள்ளிவிடு; அதைப் புசித்து என் பசியை ஆற்றிக்கொண்டு போய் விடுகிறேன்; நீ உயிர் தப்பலாம்'' என்று கூறுகிறது. மனிதன் சற்றும் சிந்தியாமல் உடனே தூங்குகிற குரங்கைக் கீழே தள்ளிவிட்டு விடுகிருன். ஆனுல் குரங்குப்பிடி விசேஷமான பிடியாயிற்றே! அது விழும்போதே மரத்தைக் கெட்டியாகப் பிடித்துக்கொள்கிறது. கீழே விழவில்லை. நடுவில் இருந்த கிளையில் தொத்திக்கொண்டு மேலே ஏறிவந்துவிடுகிறது. அவ்வாறு தப்பிவந்த குரங்கைக்கண்டு மனிதன் குலைநடுக்கம் கொள்கிருன். அவன் நடுங்குவதைப் பார்த்த குரங்கு, 'நீ பயப்படாதே. நீ எனக்குத் துரோகம் இழைத்தாலும் நான் உன்னைக் கைவிட்டுவிடமாட்டேன். நான் இருக்கும் இடத்துக்கு நீ அடைக்கலமாக வந்தவன்; எனவே உனக்கு ஒரு தீங்கும் வராமல் நான் உன்னைக் காப்பாற்றுவேன்' என்று அவனைத் தேற்றுகிறது. மனிதன் மனம் நெகிழ்கிருன். அந்தக் குரங்கினைத் தெய்வமாகப் போற்றுகிருன். இது, சரணுகதி தத்துவத்தின் மகோந்நத இலட்சணம்; இலட்சியம்.

குரங்கு மனிதனைவிடத் தாழ்ந்த பிறவி. அது மரத்துக்கு மரம் தாவும் சஞ்சலபுத்தியுடையது. அதனால்த்தான் 'குரங்கு மனம்' என்று கூடச் சொல்லுகிறோம். அத்தகைய கோணல் புத்தியையும் ஸ்திரப் படுத்தி நேர்நெறியில் புகுத்தவல்லது சரணாகதித் தத்துவம். சரணாகதி மிருக உள்ளத்தையும் உயர்த்தவல்லது. மனிதமனத்தை மாண்புறச்செய்வது. அதாவது மனிதனைத் தெய்வநிலைக்கு உயர்த்துவது சரணாகதி - அபயப்பிரதானம்.

முன்பின் அறிமுகமாகாத ஒருவன். ஏதலன், ஏழை; தெருவில் அடிபட்டுப் படுகாயமுற்று வேதனையால் துடிதுடிக்கிறான். அவனுடைய வேதனைகண்டு பரிதாபப்படுவது இரக்கச்சித்தம். அந்தப்படுகாயமும் படுந்துயரமும் நமக்கு ஏற்பட்டதாகப் பாவித்து நாமே வேதனையால் துடிதுடிப்பது அருள் உள்ளப். இந்த அருளைத்தான் கருணை என்று பேசுகிறோம். உற்றார் உறவினர்மீது பயன்கருதிப் பற்றும், பாசமும் கொள்வது அன்பு. ஓர் உறவுமின்றிப் பயன்கருதாமல் செலுத்துவது பேரருள் - பெருங்கருணை.

கருணை சுரக்கும் உள்ளந்தான் கடவுள் நிலைக்கு உயர்த்தவல்லது. அன்பு, ஆசை, பாசம், பற்று முதலியவை மனிதப் பண்புகள். அன்று குரங்கு, தன் இனத்தான் அல்லாத மனிதனுக்குக் கருணை காட்டியது. அதுமட்டுமல்ல ; தனக்குத் துரோகம் புரிந்த பகைவனுக்கே அருள்செய்தது. அதுதான் தெய்வப்பண்பு. அதனால்தான் அது மனிதனும் வணங்கும் தெய்வநிலைக்கு உயர்ந்துவிட்டது. கருணை உள்ளத்தால் குரங்கினம் தெய்வநிலைக்கு உயரக்கூடுமானால், மனிதன் உயரக் கேட்கவா வேண்டும்? இந்தப் பேருண்மையைப் புலப்படுத்துவதுதான் அந்த அற்புதமான சரணாகதி தத்துவக்கதை. இந்தக்கதை வான்மீகி முனிவரால் ஸ்ரீராமாயணத்தில் எடுத்தாளப் பட்டிருக்கிறது. இராமாயண மகா காவியமே சரணாகதி தத்துவத்தை அடிப்படையாகக்கொண்டதுதானே? அதனால்தான் அதனை சரணாகதி சாஸ்திரம் என்று சிரவணம் செய்கிறோம். வேதத்தின் சாரமான இந்தக்கருணாமிருத சாகரந்தான் ஆன்மகோடிகளைக் கரையேற்றுவது ; கருணை சுரந்து காப்பாற்றுவது. எனவேதான், 'கற்பார் இராமபிரானையல்லால்' என்ற அற்புதமான பாசுரத்தை அருளிச்செய்தார் நம்மாழ்வார். சகல ஜீவராசிகளுக்கும் அருள் சொரிந்து காக்கும் கருணாமூர்த்தி ஆதலாலே 'கற்பார் இராமபிரானையல்லால் மற்றுங் கற்பரோ' என்று பணித்தருளினார். ஸ்ரீராமபிரானின் திவ்யமங்கள குணங்களைக் கற்பதில் அத்துணை ஈடுபாடு ஆழ்வாருக்கு. அவனது கல்யாணகுணங்களில் மணிமகுடமாகத் திகழ்பவை கருணையும், அதன் பயனாகிய அபயதான விரதமுந்தானே ?

பரமபதத்தில் எழுந்தருளியிருக்கும் பகவான் கருணையே வடிவமாகக்கொண்டவன். ஜீவகோடியின்மீதுள்ள அளப்பரிய பெருங் கருணையால் அனைத்தையும் உய்யக்கொள்ளும் பொருட்டுப் பரமபதத்திலுள்ள பரத்வநிலையிலிருந்து இறங்கிவந்து பாற்கடலில் பள்ளி கொள்ளும் வியூகநிலையை மேற்கொண்டான். அதிலும் திருப்தியடையாமல் அவதாரநிலையாகிய விபவநிலையில் இறங்கிவந்து, அடியார்களோடு கலந்துறவாடி அவர்களைக் கடைத்தேற்ற உள்ளம் பற்றினன். அத்தகைய அவதாரங்களில், சகலகுண சம்பூர்ணமான இராமாவதாரம் தலைசிறந்தது என்பதுபற்றித்தான் நம்மாழ்வார் அவ்வாறு அருளிச்செய்தார்.

ஏழை எளியவர்களுக்கும் எளிதில் கருணை சுரக்கும் எளியவன் மட்டுமல்ல; பகைவனுக்கும் அருள் சுரக்கும் பரமதயாநிதியல்லவா? அவனை—'நாராயணனே நமக்கே பறைதருவான்' என்று கோதை நாச்சியார் திருப்பாவையில் முதற்பாசுரத்தில் நிர்ணயித்துள்ளார். 'பாற்கடலில் பையத்துயின்ற பரமனடிபாடி' என்று இரண்டாம் பாசுரத்தில் அவனது இரண்டாம் நிலையாகிய வியூகத்தைக் குறிப்பிடுகிறார். 'ஓங்கி உலகளந்த உத்தமன் பேர்பாடி' என்று மூன்றாம் பாசுரத்தில் எம்பெருமானின் மூன்றாவது படியாகிய அவதாரநிலையாகிய விபவத்தைச் சுட்டிக்காட்டுகிறார்.

அவதாரங்களிலே இராமாவதாரம் தலைசிறந்தது. காத்தற் கடவுளாகிய பரம்பொருள் ஆருயிர்களுக்கெல்லாம் அபயப்பிரதானம் அளிப்பதற்காகவே அவதரித்தான்; ஆதலினால் இந்த அவதாரத்தைத் தனிப்பெரும் சிறப்புடையதாக அடியார்கள் போற்றுகிறார்கள். அபயம் அளிப்பதை விரதமாகக்கொண்டவன் ஐயன்.

> "கனைத்திளங் கற்றெருமை கன்றுக் கிரங்கி
> நினைத்து முலைவழியே நின்றுபால் சோர
> நனைத்தில்லம் சேறாக்கும் நற்செல்வன் தங்காய்
> பனித்தலை வீழநின் வாசற்கடைப்பற்றி
> சினத்தினால் தென்னிலங்கைக் கோமானைச்செற்ற
> மனத்துக் கினியானைப் பாடவும் நீ வாய்திறவாய்"

என்று ஆண்டாளும் 'மனத்துக்கினியான்' என இராமாவதாரத்தையே கொண்டாடுகிறாள். இராகவனின் எளிய குணாதிசயங்களில் ஈடுபட்டே அவனை 'மனத்துக்கினியான்' என்று வர்ணிக்கிறார். அந்தத் தனிப் பெரும் இனியகுணம்தான் கருணாவிலாசம்! அவன் கருணை உள்ளந் தான் கருணையற்ற உலகத்தையும் அருள்பாலித்து வருகிறது.

ஆண்டாள் பூமிப்பிராட்டியின் அம்சம்; பூமிப்பிராட்டிக்கு அளவற்ற அருள் சொரிவதாக விராதன் ஐயனைத் துதிசெய்கிறான்.

"அரவாகிச் சுமத்தியால் அணியெயிற்றின் ஏந்துதியால்
ஒருவாயில் விழுங்குதியால் ஓரடியால் ஒளித்தியால்
திருவான நிலமகளை இதையறிந்தால் சீறுளோ
மருவாரும் துழாயலங்கல் மணிமார்பில் வைகுவாள்"

பகவான் ஆதிசேடனாகி பூமிப்பிராட்டியைச் சுமக்கிறான். வராக வடிவெடுத்து, கொம்பிலே தாங்கிக் கொள்கிறான். திருவாயில் விழுங்குகிறான். ஓரடியால் மறைத்து நிற்கிறான். இவ்வாறு பல நிலைகளில் பூமிப்பிராட்டிக்கு அருள்புரிவதைக் கண்டால் பெரிய பிராட்டியார் ஊடல் கொள்ளமாட்டாளா ? என்று நயம்படக் கேட்கிறான் விராதன்.

இந்தக் கருணைவிலாசத்தை மனதில்கொண்டுதான் கோதைப் பிராட்டியார், 'மனத்துக்கினியான்' என்று பாடிப்பரவசமடைகிறார்.

பூமிக்குக் கருணைசெய்தால் தனக்குக் கருணைசெய்ததுபோலவும், தனக்குக் கருணை புரிந்தால் பூமிக்கு — பூமியிலுள்ள மக்களுக்குக் கருணை பொழிவதுபோலவும் பாவித்ததால்தான் ஆண்டாள் மனத்தில் 'மனத்துக்கினியான்'என்ற அந்த அற்புதமான பிரயோகம் எழுந்தது.

இராமபிரான் இரகுவம்சத் தோன்றல். அதனால் அவனை இராகவன் என்கிறோம். ககுத்த மரபினன் ஆதலால் காகுத்தன் என்கிறோம். தசரத குமாரன் என்பதுபற்றி அவனைத் தாசரதி என்கிறோம். மேலே குறிப்பிட்ட அவனது முன்னோர்களெல்லாம் கருணைவிலாசத்தினால் சிறப்பெய்தியவர்கள். ஆதலாலே அவன் அவர்கள் மரபினனாக அழைக்கப் பெறுகிறான்.

"கொங்குமலி கருங்குழலாள் கோசலைதன் குலமதலாய்
தங்குபெரும் புகழ்ச்சனகன் திருமருகா ! தாசரதீ,
கங்கையிலும் தீர்த்தமலி கணபுரத்தென் கருமணியே
எங்கள்குலத் தின்னமுதே இராகவனே தாலேலோ"

"கொல்லணை வேல் வரிநெடுங்கண் கோசலைதன்
குலமதலாய் ! குனிவில் லேந்தும்
மல்லணைந்த மலர்த்தோளா ! வல்வினையேன்
மனமுருக்கும் வகையே கற்றாய்
மெல்லணைமேல் முன்துயின்றாய் ! இன்றினிப்போய்
வியன்கான மரத்தின் நீழல்
கல்லணைமேல் கண்துயிலக் கற்றனையோ
காகுத்தா ! கரிய கோவே !"

என்றெல்லாம் குலசேகராழ்வார் அவனது குலப்பெயர்களாகிய தாசரதி, இராகவன், காகுத்தன் என்ற திருப்பெயர்களைக் குறிப்பிட்டு அவனது கருணைகுணத்தில் கலந்து அனுபவிக்கிறார்.

காகுத்ஸ்தன் என்ற வடசொல், ககுதி - திஷ்டதி - இதி காகுத்ஸ்த: என்று பிரியும். ககுத் என்பது விருஷபத்தின் திமிள். திஷ்டதி-உட்கார்ந்திருப்பவன். முன்பு தேவாசுரயுத்தத்தில் காகுத்த மன்னன் எருதின் திமிளில் ஆரோகணித்துப் போர்புரிந்து அசுரர்களை வென்று இந்திரனைக் காத்து இரட்சித்தான். அந்த வெற்றிப் பிரபாவத்தைப் பறைசாற்றுவதே காகுத்தன் என்ற திருநாமம்.

''என் அனைய முனிவரரும் இமையவரும்
இடையூறு ஒன்று உடையரானால்
பன்னகமும் நகுவெள்ளிப் பனிவரையும்
பாற்கடலும் பதும பீடத்து
அந்நகரும் கற்பகநாட்டு அணிநகரும்
மணிமாட அயோத்தி என்னும்
பொன்னகரும் அல்லாது புகல் உண்டோ
இகல்கடந்த புலவு வேலோய்''

விச்வாமித்திர முனிவன் தசரதனிடம் வந்து இவ்வாறு கூறுகிறார். என்னைப்போன்ற முனிவர்களுக்கும் தேவர்களுக்கும் இடையூறு ஏற்பட்டால்; — கைலையங்கிரி, திருப்பாற்கடல், பிரம்மலோகம், தேவலோகம் முதலிய இடங்களுக்குச் செல்வோம். இல்லையேல் பொன்னகரமாகிய உன்னுடைய அயோத்தி மாநகருக்கு வருவோம். இவை தவிர எங்களுக்குப் புகலிடம் ஏது? என்று வினவி வழி வழியாய் அடைக்கலத்துக்குச் சிறந்த அயோத்தி அரசின் மரபினைப் பேசுகிறார் விச்வாமித்திர மகாமுனிவன். வசிஷ்டர் வாயால் பிரம்மரிஷி என்று கூறப்பட்டதுபோல் விச்வாமித்திரர் வாயால் தசரதன் 'அபயப்பிரதன்' என்று போற்றப்படுகிறான்.

தசரதனைப் பாராட்டுவதன்மூலம் இராமனின் சரணாகதரக்ஷண தத்துவத்தையே அவர் பாராட்டுகிறார். அடைக்கலம் அளிப்பதில் நெடியபாரம்பரியம் உடையவன் நெடுமாலாகிய காகுத்தன். அபயப் பிரதானத்தின் சின்னம் அவன்! சிகரம் அவன்! அதனால்தான் அவனது தனிப்பெருங்கருணையை 'காகுத்தன் கருணை' என்று புகழ்ந்து பாராட்டுகிறோம். காகுத்தன் கருணை என்றால் அது குறுகிய எல்லையுடையதல்ல. விரிந்து பரந்த வியன் பரப்பையுடையது. ஏழை, ஏதலன் என்ற வேறுபாடின்றி எவ்வுயிருக்கும் அருள் சுரப்பதே காகுத்தன் கருணை.

அவதாரம் என்பது உயர்ந்தவன் தன்னைத் தாழ்த்திக்கொண்டு இந்தப்பூமியில் வந்து தோன்றுவது அவதாரத்தின் முக்கிய பயன் தர்மஸம்ஸ்தாபனம்தான். மனிதனாக வந்து பிறந்து தன் அனுஷ்டானத்தினாலும், உபதேசங்களாலும், தர்மங்களை நிலைநாட்டுவது அவன்

அவதாரங்களின் குறிக்கோள். எல்லாத் தர்மங்களிலும் சரணுகதியே தலைசிறந்த தர்மம். 'ராமோ விக்₃ரஹவான் த₄ர்ம:' (அறத்தின் வடிவம் இராமன்) என்கிற சரணுகதி தர்மத்தை நிலைநாட்டும் பொருட்டே ஸ்ரீமந்நாராயணன் இராமாவதாரம் எடுத்தான்.

வேதம், நமக்குப் பக்தியையும், பிரபத்தியையும் உபதேசிக்கிறது. பிரபத்தி என்பதுதான் சரணுகதி தர்மம். முறைப்படி வேதம் ஓதி, கர்மானுஷ்டானம் செய்து சித்த சுத்தியுடன் ஆத்மவிசாரத்தில் ஈடு பட்டு ஆத்மாவுக்கு ஆத்மாவான பரமாத்மாவை உவப்புடன் இடை விடாமல் சிந்திக்கும் சிந்தனைத் தொடரே பக்தி. கர்மானுஷ்டானமோ, ஆத்ம சிந்தனையோ, பக்தியோகமோ நம் சக்திக்கும் ஞானத்துக்கும் அப்பாற்பட்டது என்று உணர்ந்து அவற்றை விடுத்து, பகவானிடம் சரணம் புகுவதே பிரபத்தி.

ஸ்ரீவைஷ்ணவ சம்பிரதாயத்தில் பக்தியைவிட பிரபத்தி என்னும் சரணுகதியே உயர்ந்தது என்று ஒருமுகமாக அங்கீகரித்திருக்கிருர்கள்.

இராமபிரான் ஸர்வலோக சரண்யன்! சகல ஜீவராசிகளுக்கும் அபயம் அளித்துக் காப்பவன். அவன் ஸர்வலோக சரண்யன் என்பதை விளக்கவே பாலகாண்டம் முதல் எல்லாக் காண்டங்களும் அவனுடைய கல்யாண குணங்களைப் பேசுகின்றன. சரண்யனுக்குப் பரத்வம் என்ற மேன்மையும், ஸௌலப்யம் என்ற எளிமையும், ரக்ஷகத்வம் என்ற காத்தலும் ஆகிய முக்குணங்களும் அமைந்திருக்க வேண்டும். இந்த மூவகைக் குணங்களுக்குமே மூலநாயகன் ஸ்ரீராம பெருமான். எட்டாத நிலையை மறைத்து எளியனும் தன்மையைக் காட்டி அருள்செய்வதில் அவனுக்கு நிகர் அவனே. அப்பாலுக்கு அப்பால் நிற்கும் இறைவன் இப்பாலுக்கு இப்பால் நம்மை நெருங்கி வந்து அருளும் கருணு விலாசத்தை என்னென்று புகல்வது!

> "நன்மையும் செல்வமும் நாளும் நல்குமே
> தின்மையும் பாவமும் சிதைந்து தேயுமே
> சென்மமும் மரணமும் இன்றித் தீருமே
> இம்மையே 'இராம' என்றிரண் டெழுத்திஞல்"

ராம என்ற இரண்டு எழுத்தை நினைத்தாலே போதும், எல்லா நன்மைகளும் பெருகும் என்கிருர் கம்பநாடுடைய வள்ளல். இம்மை யிலேயே மறுமை இன்பங்களெல்லாம் கிடைக்கச்செய்வது 'ராம' என்ற தாரக மந்திரம்; நினைத்தால் மட்டுமல்ல; நினையாமல் உச்சரித்தாலும் உயர்ந்தபதம் அளிக்கவல்லது இராமநாமம். பாமர வேடன் ஒருவன் 'மரா' என்னும் மரத்தின் பெயரை உச்சரிக்க, அது ராமநாமத்தை உச்சரித்த பயன் அளிக்கிறது. அதன் பயனுய் அந்த

வேடன் வான்மீகி முனிவராக மிகப்பெரிய பதவிக்கு உயர்ந்த நிலையை உலகம் அறியும்.

பகவான் அளப்பரிய ஸௌலப்யமுடையவன்; ஆதலினாலே அவனை நாமாகத் தேடிப்போய் சரணாகதி செய்ய வேண்டியதில்லை. அவனே உயிர்களின் மேலுள்ள பெரும் கருணையினால் நம்மைத் தேடி ஓடி வரும் பரமதயாளன். பரமபதத்திலிருந்து ராமமூர்த்தியாக அவதரித்து அயோத்தியிலே நிலைக்காமல் அரண்மனையை விட்டு வெளியேறி ஆரண்யம் நோக்கிப் புறப்பட்டது அனைத்துயிர்களுக்கும் அருள் புரியவேண்டும் என்ற ஆவலினால்தான்.

உயிர்களுக்கு மட்டுமல்லாது கல்லுக்கும் கருணைபுரியும் தீனதயாளு அவன். கல்லாய்க் கிடந்த அகலிகைக்கு விமோசனம் அளித்தது அந்தக் கருணாவிலாசந்தான். கல்லுக்கு அடுத்த நிலையிலுள்ள காகத்துக்கும் அதாவது காகாசுரனுக்கும் அவன் கருணை காட்டினான்.

''சித்திர கூடத்திருப்ப சிறுகாக்கை முலைதீண்ட
அத்திரமே கொண்டெறிய அனைத்துலகும் திரிந்தோடி
வித்தகனே இராமாவோ நின்னபயம் என்றழைப்ப
அத்திரமே அதன் கண்ணை அறுத்ததும் ஓர் அடையாளம்''

என்ற பெரியாழ்வார் பாசுரம் பறவைகளுக்கும் அருள்செய்த பரம கருணைக்கு அடையாளம். அடுத்த நிலையிலுள்ள அணிலுக்கும் அவன் அருள் சுரந்துள்ளான்.

''குரங்குகள் மலையைநூக்கக் குளித்துத்தாம் புரண்டிட்டோடித்
தரங்கநீர் அடைக்கலுற்ற சலமிலா அணிலம்போலேன்
மரங்கள்போல் வலியநெஞ்ச வஞ்சனேன் நெஞ்சுதன்னால்
அரங்கனார்க் காட்செய்யாதே அளியத்தேன் அயர்க்கின்றேனே''

என்ற தொண்டரடிப்பொடியாழ்வார் பாசுரம் அணிலுக்கு அருளிய அற்புதத்தைப் படம்பிடித்துக் காட்டுகிறது.

வைஷ்ணவ ஸம்ப்ரதாயத்தில், வைஷ்ணவனானால் ஏழை, ஏதலன், உயர்ந்தவன், தாழ்ந்தவன், பெரியவன், சிறியவன் என்ற பாகுபாடு கிடையாது. அந்த உயர்ந்த பண்பாட்டுக்கு முன்னோடியாகத் திகழ்ந்தவன் ஜானகிராமன், இராமச்சந்திரமூர்த்தி, பரமபதத்தில் வீற்றிருக்கும் பரந்தாமன். அந்தப் பரத்வத்தை வெளிப்படுத்திக்கொள்ளாமல், ஸௌலப்ய ஸ்வரூபனாகி அடியார்களோடு அடியானாக ஊடாடி உறவாடிப் பேரருள் புரிகிறான். நல்லவனோ கெட்டவனோ யாராயிருந்தாலும் அவன் அருள் சுரக்கத் தவறமாட்டான். வேடுவ குலத்தில் பிறந்த குகனையும், வானர இனத்தில் வந்த சுக்கிரீவனையும், அரக்கர் வம்சத்தில் வந்த விபீஷணனையும் உடன்பிறந்த சகோதரர்களாக வரித்துக்கொண்டான்.

அவதாரங்களின் குறிக்கோள். எல்லாத் தர்மங்களிலும் சரணுகதியே தலைசிறந்த தர்மம். 'ராமோ விக்₃ரஹவான் த₄ர்ம:' (அறத்தின் வடிவம் இராமன்) என்கிற சரணுகதி தர்மத்தை நிலைநாட்டும் பொருட்டே ஸ்ரீமந்நாராயணன் இராமாவதாரம் எடுத்தான்

வேதம், நமக்குப் பக்தியையும், பிரபத்தியையும் உபதேசிக்கிறது. பிரபத்தி என்பதுதான் சரணுகதி தர்மம். முறைப்படி வேதம் ஓதி, கர்மானுஷ்டானம் செய்து சித்த சுத்தியுடன் ஆத்மவிசாரத்தில் ஈடு பட்டு ஆத்மாவுக்கு ஆத்மாவான பரமாத்மாவை உவப்புடன் இடை விடாமல் சிந்திக்கும் சிந்தனைத் தொடரே பக்தி. கர்மானுஷ்டானமோ, ஆத்ம சிந்தனையோ, பக்தியோகமோ நம் சக்திக்கும் ஞானத்துக்கும் அப்பாற்பட்டது என்று உணர்ந்து அவற்றை விடுத்து, பகவானிடம் சரணம் புகுவதே பிரபத்தி.

ஸ்ரீவைஷ்ணவ சம்பிரதாயத்தில் பக்தியைவிட பிரபத்தி என்னும் சரணுகதியே உயர்ந்தது என்று ஒருமுகமாக அங்கீகரித்திருக்கிறுர்கள்.

இராமபிரான் ஸர்வலோக சரண்யன்! சகல ஜீவராசிகளுக்கும் அபயம் அளித்துக் காப்பவன். அவன் ஸர்வலோக சரண்யன் என்பதை விளக்கவே பாலகாண்டம் முதல் எல்லாக் காண்டங்களும் அவனுடைய கல்யாண குணங்களைப் பேசுகின்றன. சரண்யனுக்குப் பரத்வம் என்ற மேன்மையும், ஸௌலப்யம் என்ற எளிமையும், ரக்ஷகத்வம் என்ற காத்தலும் ஆகிய முக்குணங்களும் அமைந்திருக்க வேண்டும். இந்த மூவகைக் குணங்களுக்குமே மூலநாயகன் ஸ்ரீராம பெருமான். எட்டாத நிலையை மறைத்து எளியனும் தன்மையைக் காட்டி அருள்செய்வதில் அவனுக்கு நிகர் அவனே. அப்பாலுக்கு அப்பால் நிற்கும் இறைவன் இப்பாலுக்கு இப்பால் நம்மை நெருங்கி வந்து அருளும் கருணை விலாசத்தை என்னென்று புகல்வது!

"நன்மையும் செல்வமும் நாளும் நல்குமே
தின்மையும் பாவமும் சிதைந்து தேயுமே
சென்மமும் மரணமும் இன்றித் தீருமே
இம்மையே 'இராம' என்றிரண் டெழுத்தினுல்"

ராம என்ற இரண்டு எழுத்தை நினைத்தாலே போதும், எல்லா நன்மைகளும் பெருகும் என்கிறுர் கம்பநாடுடைய வள்ளல். இம்மை யிலேயே மறுமை இன்பங்களெல்லாம் கிடைக்கச்செய்வது 'ராம' என்ற தாரக மந்திரம்; நினைத்தால் மட்டுமல்ல; நினையாமல் உச்சரித்தாலும் உயர்ந்தபதம் அளிக்கவல்லது இராமநாமம். பாமர வேடன் ஒருவன் 'மரா' என்னும் மரத்தின் பெயரை உச்சரிக்க, அது ராமநாமத்தை உச்சரித்த பயன் அளிக்கிறது. அதன் பயனுய் அந்த

வந்த நங்கையல்லவா பிராட்டி; அவள் அந்த மானை விரும்புவது சரணு கதரக்ஷண தர்மத்தின் நோக்கு இலட்சியம். மடம் என்றால் பேதைமை. பேதைமை என்றால் அறிந்தும் அறியாதவள்போல் காட்டிக்கொள்ளும் அற்புதமான பண்பாடு. பொன்மானை விரும்பினால் பிழைவந்து நேரும். அது பிராட்டி அறிந்ததுதான். ஆனால் அறிந்தும் அறியாத் தன்மையான பேதைமையை அவள் இங்கு கடைப்பிடிக்கவேண்டிய தாயிருக்கிறது. அப்போதுதானே காகுத்தன் கருணை கண்டிப்பாய் நிறைவேறும். அந்தக்காரண காரியத்தை உய்த்துணர வைக்கவே ஆழ்வார் 'மாழைமான் மடநோக்கி' அதாவது பொன்மானை நோக்கு பவள் என்று பாராட்டி வர்ணிக்கிறார்போலும். அத்துடன் அவர் நின்றுவிடவில்லை; 'உம்பி எம்பி' என்கிறார், அதாவது 'இலக்குவனாகிய உன்தம்பி என்தம்பி' என்கிறான் இராமச்சந்திரப் பிரபு. அடுத்து 'நீ எனக்குத் தோழன்' என்று கூறுவது. இளையபெருமாள் பிரபு வுக்குத்தான் முதலில் தம்பி; இரண்டாவதாகத்தான் குகனுக்குத் தம்பி. ஆனால் இலக்குவனை குகனுக்குத்தான் தம்பி என்று கூறிக் குகனைப் பெருமைப்படுத்துகிறான் காகுத்தன். மேலும், 'நான் உனக்குத்தோழனல்ல; நீதான் எனக்குத் தோழன். உன்னைத் தோழனாகப்பெறுவதில் நான் பெருமையடைகிறேன்!' என்று குகனின் கேண்மையைப் பெரிதும் உயர்த்துகிறான். இது நம்பியின் பெருந் தகைமைக்கும் உயர்ந்த பண்பாட்டுக்கும் எடுத்துக்காட்டு. உயர்விலே பணிவும், தாழ்விலே உயர்வுந்தானே பெருந்தகைமைப்பண்பாடு!. குகன் வேடுவ குலத்தினன், மலைஜாதி வகுப்பினன். அவனை இழிந்தவன், கீழ்மகன் என்றெல்லாம் உலகம் பழிக்கக்கூடும். அவ்வாறு அவனை இழித்துப் பழிக்காமலும், ஏழை என்றும் அயலான் என்றும் இடித்துரைக்காமலும் உள்ளன்போடு உறவுபூண்ட இராமபிரானின் ஜாதிபேதமற்ற, ஏற்றத்தாழ்வற்ற, சமதர்ம சமுதாய மனப்பான்மை இந்தக் காலத்துக்கும் வழிகாட்டியாகத் திகழ்கிறது. குகன்மீது கருணைசெலுத்தி, அவனை 'குகப்பெருமாள்' என்று உலகம்போற்றிப் புகழும் அளவுக்கு உயர்வளித்துள்ளான் எம்பெருமான். காகுத்தன் கருணைக்கு இந்த உயரிய பண்பாடுதான் ஆதாரமானது. இந்த ஒப்பரிய பண்பாட்டினை நினைத்துத்தான் அசோகவனத்தில் சிறை இருக்கும் சீதாதேவி மறுகிப் புலம்புகிறாள்.

> ''ஆழநீர்க் கங்கை அம்பி கடாவிய
> ஏழை வேடனுக்கு 'எம்பி நின்தம்பி; நீ
> தோழன்! மங்கை கொழுந்தி' எனச்சொன்ன
> வாழி நண்பினை உன்னி மயங்குவாள்''

ஆழ்வாரின் அமுதவாக்கில் ஈடுபட்ட கம்பநாடன் அதனை அப்படியே தன் கவிதையில் வடித்து இன்புறும் நிலைகண்டு நாமும் இன்புறுகிறோம்.

சபரிக்கு அருள்செய்தமையும் இந்தப் பண்பாட்டுச் சிறப்புத்தான்.

அனுமனை ஆருயிர்ச் சேவகனாக ஏற்றுக்கொண்டது மற்றொரு கருணாவிலாசம். மாருதியை, மர்க்கடம், விலங்கு, குரங்குஜாதி என்றெல்லாம் கருதாமல் அவனை அணைத்துக்கொண்ட அண்ணலின் கருணையே கருணை! அநுமனைத் தான்வேறு அவன்வேறு என்று எண்ணாமல் அவனோடு ஒரே இலையில் ஸஹபோஜனம் செய்ததாகவும் ஒரு செய்தி அறிந்து வியப்படைகிறோம்.

"வாதமாமகன் மர்க்கடம் விலங்கு
மற்றோர்சாதி யென்றொழிந்திலை—உகந்து
காதலாதரம் கடலினும் பெருகச்செய்
தகவினுக் கில்லை கைம்மாறென்று
கோதில்வாய்மையினாயொடும் உடனே
உண்பன் நானென்ற ஒண்பொருள்—எனக்கும்
ஆதல்வேண்டு மென்றடியிணை யடைந்தேன்
அணிபொழில் திருவரங்கத் தம்மானே."

திருமங்கையாழ்வாரின் இந்த அருமைப் பாசுரத்தில் அனுமனுடன் அண்ணல் ஓரிலையில் உண்ட ஒருமைப்பாட்டினைக் கண்டு மகிழ்கிறோம்.

சுக்ரீவனையும் உடன்பிறந்த சோதரனாய் ஐயன் ஏற்றுக்கொண்டான். வாலிக்கு அஞ்சி உரிய அரசினையும், உற்ற தாரத்தினையும் பறிகொடுத்து அவலவாழ்க்கை நடத்திவந்தான் சுக்ரீவன். சகோதர பாசத்துக்கும் ஏக பத்னி விரதத்துக்கும் சான்றான இராமமூர்த்தி அவ்விரண்டினையும் நிலைநாட்டச் சுக்ரீவனுக்கு அடைக்கலம் கொடுத்தான். ரகுவீரன் சுக்ரீவனுக்குமட்டும் கருணை செய்யவில்லை. வாலிக்கும் பேரருள் - பெருங்கருணை புரிந்தான். சுக்ரீவனுக்கு கிட்கிந்தா ராஜ்யத்தை மட்டுமே அவன் அளித்தான். ஆனால் வாலிக்கோ பரமபதமாகிய அழியாத சாம்ராஜ்யத்தையே அருளினான். சுக்ரீவனுக்குக் கருணை புரிந்தது சகோதர பாசம். வாலிக்கு மோட்சம் அளித்தது பகைவனுக்கு அருளும் பான்மை. வாலி, முதலில் ராகவன்செயலைக் கண்டித்தான். பின்னர் அதனை மறந்துவிட்டான், அவன் சிறியன சிந்தியாத பெரியவன் ஆதலினாலே காகுத்தன் கருணாவிலாசத்தைப் புரிந்துகொண்டான். வாலியின் கண்களுக்கு மட்டுந்தான் ஐயனின் பரத்துவநிலை தெளிவாகப் புலப்பட்டது. இராம நாமம் மும்மைசால் உலகுக்கெல்லாம் மூலமந்திரம் என்ற உண்மையைத் தெரிந்துகொண்டான். தன்னை முழுதும் அடியார்களுக்கு உரிமையாக்கிவிடும் தனிப்பெருங்கருணையைப் புரிந்துகொண்டான், பிறவிப்பிணிக்கு மாமருந்தான ராமநாமத்தின் மகிமையைக் கண்டுகொண்டான்.

''மும்மைசால் உலகுக் கெல்லாம்
மூலமந்திரத்தை முற்றும்
தம்மையே தமர்க்கு நல்கும்
தனிப்பெரும் பதத்தைத், தானே
இம்மையே எழுமை நோய்க்கும்
மருந்தினை இராம வென்னும்
செம்மைசேர் நாமந்தன்னைக்
கண்களில் தெரியக் கண்டான்''

வள்ளலின் கருணைவிலாசத்தால் வாலி, மனமாற்றம் அடைந்து வாழ்த்துகிறன். அத்துடன் அமையாது, தன் தம்பி சுக்ரீவனுக்காக வும் வேண்டிக்கொள்கிறன். 'இவன் மதுவருந்தி மதிமருளும் வேளை யில் பிழை ஏதும் புரிந்தால் என்மீது ஏவிய கூற்றக்கணையினை இவன் மீது செலுத்திவிடாதே ஐயா!' என்று தன் தம்பியின் குண மறிந்து அவனைக் காக்கும் வகையிலே 'கணையைப் பொழியாதே, கருணையைப் பொழி' என்று மனங்கனிந்து வரங்கேட்கிறன். 'என் தம்பி சுக்ரீவன் அண்ணனைக் கொலை செய்வித்த கொலைபாதகன் என்று உன் தம்பிமார்கள் இகழ்வார்களானல், அதனையும் தடுக்கு மாறு வேண்டிக்கொள்கிறேன்' என்றும் மன்றுடுகிறன். தம்பிமார்கள் என்று குறிப்பிட்டது உறன்முறையாக வரித்துக்கொள்ளும் சகோதரர் களையும் சேர்த்துத்தான். அதாவது குகன் முதல் விபீஷணன் ஈருக உள்ளவர்களையும் சேர்த்துத்தான். பின்னர் அனுமனின் ஆற்றலை எடுத்தியம்பி 'உன் கைவில்லாக இருக்கத் தகுந்தவன்' என்று கட்டுரைக்கிறன். 'என் தம்பியை உன் தம்பியாக ஏற்றுக்கொள்' என்று உள்ளம் உருக உரைசெய்து ஒப்படைக்கிறன்.

''அனுமன் என்பவனை ஆழி
ஐயநின் செய்ய செங்கைத்
தனுவென நினைதி; மற்றுஎன்
தம்பி நின்தம்பி ஆக
நினைதி; ஓர்துணைவர் இன்னோர்
அனையவர் இலை, நீ ஈண்டுஅவ்
வனிதையை நாடிக் கோடி!
வானினும் உயர்ந்த தோளாய்!''

இராமபிரானின் பெருங்கருணையில் அளவற்ற நம்பிக்கை கொண்ட வன் ஆதலால், வாலி சுக்ரீவனையும் அங்கதனையும் அவனிடம் அடைக்கலப்படுத்துகிறன்.

வாலிக்குக் காகுத்தன் கருணை காட்டினன் என்ற தத்துவத்தை ஏற்றுக்கொண்டால், சூர்ப்பணகைக்கும் அவன் கருணை காட்டினன்

என்ற தத்துவத்தை உய்த்து உணரத்தான் வேண்டும். சூர்ப்பணகை காட்டில் திரிந்துகொண்டிருந்த அரக்கி. இராவணேச்வரனின் தங்கை. இவளுக்கு பகவானின் அருள்கிடைத்தது கிடைத்தற்கரிய பெரும்பேறுதான். இவள் கானகத்தில் வேறு மார்க்கமாகப் போயிருக்கலாம். அவ்வாறு செல்லாமல் பெருமாள் இருந்த இடத்தின் வழியாக வந்து, ஐயனின் தரிசன பாக்கியம் பெற்றது அவளது சுகிர்த பலன்தான்.

இரமிக்கச் செய்பவன் இராமன். பார்த்தமாத்திரத்திலே அனை வரையும் கவர்ந்திழுக்கும் பேரழகு படைத்தவன் 'தோள்கண்டார் தோளேகண்டார்' என்பதற்கிணங்க, அவனுடைய ஒவ்வொரு வடி வழகும் முழுவதும் காண, கண்டுமுடியாத மோகனரூப ஸௌந்தர்யம். அவனது அசாதாரண வடிவழகில் ஈடுபட்டு;

''தருணௌ ரூபஸம்பன்னௌ ஸுகுமாரௌ மஹாபலௌ।
புண்டரீக விசாலாக்ஷௌ சீரக்ருஷ்ணாஜிநாம்பரௌ ॥''

என்று சொல்லிச் சொல்லி மாய்ந்து போகிறாள். ஒரே குடியிற் பிறந்த இராவணன், விபீஷணன், சூர்ப்பணகை மூன்றுபேரும் ஸ்ரீ ராமனிடம் ஈடுபட்டவர்கள்தாம். இராவணன் காகுத்தனின் வீரப்பிரதாபத்தில் வீழ்ந்தான். விபீஷணன் அண்ணலின் கருணை விலாசத்தில் ஆழ்ந்தான். சூர்ப்பணகை சீதாராமனின் ஜகன்மோகன திவ்யசௌந்தர்யத்தில் வசியமாகி அவஸ்தைப்பட்டாள்.

'பஞ்சிஒளிர், விஞ்சுகுளிர் பல்லவ மனுங்க
செஞ்செவிய கஞ்சம்நிகர் சீரடியள்ஆகி
அஞ்சொல்இள மஞ்ஞைஎன, அன்னமென மின்னும்
வஞ்சிஎன, நஞ்சமென, வஞ்சமகள் வந்தாள்''

சூர்ப்பணகை இவ்வாறு வஞ்சமகள் வடிவம் தாங்கிய வஞ்சிபோல வும், மானின் விழி படைத்த மயில்போலவும் ஐயன்முன் வந்து நின்றாள். அவள் அறியாமையைக் கண்டு, அவன் மனம் இரங்கி னான். அவளிடம் அவன் அழகாக உரையாடியிருக்கிறான். அவளிடம் அவன் மனம்விட்டுப் பேசியதுபோல வேறு எவரிடமும் உரையாடிய தில்லை என்றே சொல்லவேண்டும். அவன் தன் சரிதத்தை உள்ளது உள்ளபடியே அவளிடம் தெரிவித்திருக்கிறான். இப்படி அவன் தன் சரிதையைத் தன் வாய்மொழியாகச் சொல்லியிருப்பது இந்த ஓர் இடத்தில்தான். அத்தகைய பாக்கியம் பெற்றவள் சூர்ப்பணகை. இவ்வளவு பாக்கியம் வாய்த்திருந்தும், அது வியர்த்தமாகி விட்டது.

காரணம் அவள் காகுத்தனைப் புரிந்து கொள்ளவில்லை. எந்தப் பிராட்டியைத் துணையாகக்கொண்டு பெருமானைப் பற்றவேண்டுமோ அந்தப் பிராட்டியையே அசூயையால் விழுங்கிவிடத் துணிந்தாள் அந்த வல்லரக்கி.

பிராட்டியின் புருஷகாரம் பெற்ற விபீஷணன் பகவானை அடைந்து உய்ந்து போனான். இவள் பங்கப்பட்டுப் போனாள். எம்பெருமானைக் கிட்ட எம்பிராட்டியின் கருணாவிலாசம் வேண்டும். பகவான் கருணை கிடைத்தும் பயன்படுத்தாமல் பிழைபட்டுப்போனாள் சூர்ப்பணகை. "இரக்கம் என்றொரு பொருளில்லாதவர் அரக்கர் என்றுளர் அறத்தின் நீங்கினார்' என்று அரக்கர்களை அறிமுகப்படுத்துகிறார் கம்பநாட்டாழ்வார். அரக்கர்கள் கருணையே இல்லாதவர்கள். இராம மூர்த்தியோ கருணையே வடிவானவன். கருணையே இல்லாதவர் களிடத்தே கருணை காட்டுவதுதானே கருணாமூர்த்திக்கு அடையாளம். இம்மாதிரி அசாதாரணமான கருணை காட்டுவதால்தான் 'காகுத்தன் கருணை' என்று சிறப்பித்துச் சொல்லுகிறோம். விபீஷணனுக்கு அடைக்கலமருளியது கருணாவிலாசத்தின் உச்சக்கட்டம். இந்த அபயப்பிரதானக் கட்டத்தில் சரணாகதியைப்பற்றிய அநேக முக்கிய மான தத்துவங்கள் வெளிப்படுகின்றன.

இராமன் இருக்கும் இடத்தையே அயோத்தியாகப் பாவிப்பது சீதாபிராட்டியின் திருநோக்கு. சீதை சீதாராமனுடன் இணைபிரி யாமல் இருப்பது அவள் ஸ்திரீதர்மம். ஆனால் அவளை இராகவ னிடமிருந்து பிரித்துச் சிறை எடுத்துச் செல்கிறான் இராவணன். அது தகாதசெயல் என்று தர்மோபதேசம் செய்கிறான் விபீஷணன், அவன் தர்மாத்மா. 'பகவான் உடைமையை அவனிடம் ஒப்படைத்து விடு; இல்லையேல், நீமட்டுமன்று, அரக்கர் குலமே அழிந்துவிடும்' என்று தர்மத்திற்காக வாதாடுகிறான். "நம்முடைய புகழ், செல்வம், சுற்றம் முதலியவை நிலைத்திருக்கவேண்டுமானால் பிராட்டியை விட்டு விடவேண்டும். அவ்வாறு விட்டுவிட்டால் அதைப்போல வெற்றி நமக்கு வேறெதுவுமே இல்லை' என்று எடுத்துரைக்கிறான் விபீஷணன்.

> "இசையும் செல்வமும் உயர்குலத்து
> இயற்கையும் எஞ்ச
> வசையும் கீழ்மையும் மீக்கொளக்
> கிளையொடும் மடியாது
> அசைவுஇல் கற்பின் அவ்வணங்கை
> விட்டருளுதி; இதன்மேல்
> விசையம் இல்எனச் சொல்லினன்
> அறிஞரின் மிக்கான்"

விபீடணன் எவ்வளவோ மன்றாடியும் இராவணன் திருந்தவில்லை; மாறாக அவன் கடும் சினம் கொள்கிறான். தம்பி மனம் நோக இழித்தும், பழித்தும் பேசுகிறான். மூர்க்கர்களுக்கு உபதேசம் பண்ணினால் அது பலிக்காது என்பதை விபீடணன் அறிவான். ஆயினும் அவர்களுக்குக் கூடியவரை நன்மை செய்வது தர்ம லட்சணம் என்பதால்தான் உடன்பிறந்த சகோதரனை உரிமையுடன் திருத்தப் பெரும் முயற்சி செய்தான். அதற்குப் பயன் ஏற்படவில்லை. இராவணனுடைய கொடிய வார்த்தைகளைக் கேட்டவுடன்

"இத்யுக்த: பருஷம் வாக்யம் ந்யாயவாதீ₃ விபீ₄ஷண: ।
உத்பபாத க₃தா₃பாணி: சதுர்பி₄: ஸஹ ராக்ஷஸை: ।
அப்₃ரவீச்ச தத₃ா வாக்யம் ஜாதக்ரோதே₄ா விபீ₄ஷண: ।
அந்தரிக்ஷக₃த: ஸ்ரீமாந் ப்₄ராதரம் ராக்ஷஸாதி₄பம் ॥

என்னுமாப்போலே, தன் கையிலிருந்த கதையுடனும், தன் மந்திரிகள் நால்வருடனும் இலங்கையைவிட்டுக் கிளம்புகிறான். அப்போது இராவணனின் ஆதரவில், தனக்குக் கிடைத்திருந்த மாளிகை, செல்வம், பெண்டு பிள்ளைகள் மற்றும் விடவேண்டியவை அனைத்தையும் துறந்து ககனமார்க்கமாகப் புறப்பட்டுவிட்டான். உற்றார் உறவினர்களையும், உரிமைச் செல்வங்களையும் விடுத்து அந்தரத்திலே நாதனற்று நிற்கும் விபீஷணனை 'ஸ்ரீமான்' என்று கொண்டாடுகிறார் வால்மீகி முனி.

உலகத்தில் மிகுந்த செல்வம் படைத்தவனையே 'ஸ்ரீமான்' என்று போற்றுவது வழக்கம். ஆனால் செல்வங்களைத் துறந்த விபீஷணனை 'ஸ்ரீமான்' என்கிறார் வால்மீகி. விடவேண்டியவைகளை விட்டவுடனே நிலையான சம்பத்து வந்தடைகிறது அந்த நிலையான சம்பத்துத்தான் ஸ்ரீ ராகவனின் கருணைகடாக்ஷம். அதனால்தான் முனிவர் அந்தப் பேரருளாளனை (பேரருளுக்கு ஆட்பட்டவனை) 'ஸ்ரீமான்' என்று திருவாய்மலர்ந்தருளினார்.

இலங்கை மண்ணை உதறிவிட்டு மேலே இருந்தவாறே மறுபடியும் இராவணனுக்கு ஹிதோபதேசம் செய்கிறான் வீடணன். 'ஐயோ! அநியாயமாய் அடியோடு அண்ணன் அழிந்துபோகிறானே!' என்ற கருணையினால் அவ்விதம் செய்கிறான். நெருப்பினால் வெந்துபோன வீட்டில் ஏதேனும் ஒரு குச்சியாவது அகப்படாதா என்று துருவிப் பார்ப்பதுபோலே, 'காமத்தீயால் கருகிப்போன இராவணன் நெஞ்சில் சிறிதளவாவது ஈரம் இருக்கிறதா' என்று ஆராய, காருண்யத்தால் மீண்டும்உபதேசம் செய்கிறான் அந்த அறிஞரில் மிக்கானானவிபீஷணன். செய்யவேண்டிய முயற்சியைச் செய்யாமலிருப்பது அதர்மமாகும்.

அதனால்தான் கடைசிவரை முயற்சி செய்து பார்க்கிறான் விபீஷணன். அது பலியாமல் போகவே அனைத்தையும் துறந்துவிட்டு இராமனிடம் அடைக்கலம் புகச் செல்கிறான். தர்மத்திற்காக எதனையும் துறக்கலாம்; ஆனால் எதற்காகவும் தர்மத்தைத் துறக்கலாகாது. இந்த உண்மையை அறிந்தவர்கள் விபீஷணனின் தர்மத்திலூற்றத்தைப் போற்றுவார்கள்; புரியாதவர்கள் தூற்றுவார்கள்.

விடணன் ககன மார்க்கமாக வந்துகொண்டிருந்தகாலையில் சுக்ரீவன் முதலான வானர வீரர்கள் அவனைப் பார்த்துவிடுகிறார்கள். ப்ரதிகூலர் ஸஹவாஸம் விட்டவுடனே அனுகூலர் கடாக்ஷம் கிட்டி விடுகிறது. பதிதர்களை விட்டு நீங்கியவுடனே பரமபாகவத கடாக்ஷம் கிடைக்கப்பெறுகிறது. தம்பி சொல்லை மதியாத இராவணகோஷ்டியை விடுத்து, தம்பி சொல்லை மதிக்கும் இராமகோஷ்டியை நாடி வருகிறான் தர்மாத்மா.

''எல்லையில் பெருங்குணத்து இராமன் தாள்இணை
புல்லுதும், புல்லி, இப்பிறவி போக்குதும்''

என்று கருதிய வண்ணம் காகுத்தனிடம் சரணாகதியடைய வருகிறான். இராவணன் தன்னைப் புண்படப் பேசியதும், சிறுவனாகிய இந்திரஜித்தைக்கொண்டு அவமானமுறச் செய்ததும் விபீஷணன் மனத்தைவிட்டு அகலவில்லை. எனவே உறவுகளை எல்லாம் விட்டொழித்து, 'ஸ்ரீ ராமன் தான் உண்மையான உறவு; அவன் தாள்களையே சரணமாகப் பற்றுகிறேன்' என்கிறான்.

''ஸோऽஹம் பருஷிதஸ்தேந தாஸவச்சாவமாநித: ।
த்யக்த்வா புத்ராம்ஶ்ச தா₃ராம்ஶ்ச ராக₄வம் ஶரணம் க₃த: ॥''

''பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு''

என்ற வள்ளுவர் வாக்கிற்கிணங்க பற்றுகளை விட்டால் இறைவனைப் பற்றலாம்; இறைவனைப் பற்றினால் பற்றுகளை விடலாமல்லவா? விபீடணன் பற்றுகளைவிட்டு பகவானைப் பற்ற வருகிறான்.

த்ரௌபதி பற்றுக்களை விடும்வரை பரந்தாமன் அருள்செய்யவில்லை. எல்லாப் பற்றுக்களையும் விட்டுவிட்டு,

''ஶங்க₂ சக்ர க₃தா₃பாணே த்₃வாரகா நிலயாச்யுத !
கோ₃விந்த₃ புண்ட₃ரீகாக்ஷ ரக்ஷ மாம் ஶரணாக₃தாம் ॥''

என்று அவனைச் சரண்புகுந்தாள். திக்கற்ற நிலையிலே அவளுக்கு வேறோர் சொல்லும் சொல்லத் தோன்றவில்லை. கண்ணீர் ஆறாகப் பெருகிச்சோர, குழல்சோர, துகில்பற்றியிருந்த கைகள்சோர, மெய்

சோர 'கோவிந்தா கோவிந்தா' என்று வாய்விட்டு அலறினாள். ஆரா அமுதனின் திருநாமத்தை உச்சரித்த அளவிலே, அவள் நாவில் ஆரா அமுதம் ஊறியது. மெய் புளகாங்கிதமடைந்து உள்ளமெல்லாம் உருகிக் கரைந்தது.

''ஆருகி இருதடங்கண் அஞ்சனவெம் புல்சோர அளகம்சோர
வேருன துகில் தகைந்த கைசோர மெய்சோர வேறோர் சொல்லும்
கூருமல் கோவிந்தா கோவிந்தா என்றரற்றிக் குளிர்ந்து நாவில்
ஊருத அமிழ்தூறப் புளகிக்க உள்ளமெல்லாம் உருகினாளே''

இப்படி உருகிக்கரைந்த நிலையிலும் அணித்தே இருந்த துவாரகையிலிருந்து கபடநாடக சூத்ரதாரியான மாயாஜாலக் கண்ணன் நேரில்வந்து அருள்செய்யவில்லை. அவன் திருநாமமாகிய கோவிந்த நாம சங்கீர்த்தனமே அவளுக்கு அபயமளித்து அவள்மானத்தைக் காத்தது. கண்ணன் திருநாமம் துகில்வளர்க்கும் சித்துவேலை செய்தது. இதுபோலவே இறகிழந்த சம்பாதி முன், ராமநாமத்தை பஜித்த அளவிலே இறகுகள் வானளாவி வளர்ந்தனவாம்.

''நன்றும் நாமம் நவின்று நல்கினர்
வன்தோளான் சிறை வானம் தாயவே''

அங்கே திரௌபதி கோவிந்தன் நாமத்தை அவளே உச்சரித்தாள். அவள் துகில் வளர்ந்துகொண்டே போயிற்று. இங்கே சம்பாதி இராமன் நாமத்தை உச்சரிக்கவில்லை. சுற்றிநின்ற வானரர்கள்தாம் உச்சரித்தனர் சம்பாதிக்காக, பிறர் பஜித்த அளவிலே ராமநாமம் அவனுக்கு அருள் சுரந்தது. கண்ணன் பரத்துவநிலையில் அதாவது தெய்வநிலையில் நின்று பக்தர்களைச் சோதித்துக் காப்பான். இராமனோ அவதாரநிலையில் – அதாவது மனிதநிலையில் பக்தர்களைத் தேடிவந்து தானாகவே கருணைபாலித்துக் காப்பான். காகுத்தன் கருணையைப் பெறுவதற்கு சர்வசங்கபரித்தியாகம், அதாவது சகலத்தையும் துறப்பது வேண்டியதில்லை. அவன் எளியார்க்கு இன்னருள் புரியும் சௌலப்ய சீலனல்லவா ? ஒருமுறை 'ராமா' என்று அவன் திருநாமத்தைச் சொன்னால் போதும் உடனடியாக வந்து பேரருள் புரிவான்.

''ஸக்ருதே₃வ ப்ரபந்நாய தவாஸ்மீதி ச யாசதே।
அப₄யம் ஸர்வபூ₄தேப்₄யோ த₃தா₃மி ஏதத் வ்ரதம் மம ॥''

''ஒருவன் தன் தகுதியின்மையைச் சிந்தியாமல் என்னை ஒருமுறை சரணம் பற்றினால் போதும், அவனை ஸகல பூதங்களிடமிருந்தும் காத்து ரக்ஷிப்பேன். இது என் ஸங்கல்பம்'' என்கிறான் இராகவன்.

ஒருமுறை என்னை வந்தடைந்து, 'ஹே ராமா! இந்த ஆத்மா உன்னுடையது' என்று ஒருமுறை சொன்னபோதிலும் அவனுடைய எல்லா விரோதிகளையும் போக்குவேன்; அவன் எதற்கும் அஞ்ச வேண்டுவதில்லை. இது என் உறுதியான ஸங்கல்பம். மற்ற எந்த ஸங்கல்பம் மாறினாலும் இந்த ஸங்கல்பம் மாறாது. என்னை சரணம் பற்றிய சரணாகதன் என்னைவிட்டு விலகப்பார்த்தாலும் நான் அவனை விடாமல் பற்றிக்கொள்வேன் என்கிறது இந்த ராமசரமச்லோகம். 'ஸர்வதர்மாந் பரித்யஜ்ய' என்ற கீதா சரமச்லோகம் போன்று புகழ்ப்பெறுவது இந்த ஸ்ரீராமாயண சரமச்லோகம்.

இதன்மூலம் சரண்யன் 'சரணாகதனை நான் விடேன்' என்ற உறுதிப்பாட்டை வெளியிடுகிறான்.

ஒருநாள் இராமாநுஜர், ஸ்ரீராமனின் விக்ரஹத்தைத் திருவாராதனத்துக்கு எழுந்தருளப் பண்ணினார். அப்போது 'இன்று தேவைவிடாதார் வந்தார்!' என்று அவர் கூறினாராம். கண்ணன் தன்னைப் பற்றுகிறவர்கள், 'மற்றவற்றை விட்ட பிறகே வந்து பற்ற வேண்டும்' என்ற நிபந்தனையை விதித்தான். அவ்வாறு எந்தவிதமான நிபந்தனையுமின்றி ஒருதடவை 'ராம! தவாஸ்மி' [ராமா நான் உன்னுடையவன்] என்றால் போதும். நான் அவனை விடமாட்டேன் என்று காத்திருக்கிறான் காகுத்தன். அதனைக் கருத்திற்கொண்டுதான் எம்பெருமானார் அவ்வாறு கூறினார்.

'நீ என் தம்பியல்ல; போ' என்று உடன்பிறந்த தம்பி விபீஷணனை விரட்டியடித்தான் இராவணன். உடன்பிறவா ஒருவனை, 'உன்னொடு எழுவரானோம்; நீ வா' என்று சொந்தத் தம்பியாக ஏற்றுக்கொண்டான் இராமபெருமான்.

இராவணனை விட்டுப் பிரிந்து இராகவனை நோக்கி வந்து கொண்டிருந்த விபீஷணனை வானர சைனியங்கள் பார்த்தன அல்லவா; விபீஷணனைக் கண்டதும் சுக்ரீவனுக்குக் கலக்கமுண்டாயிற்று. விபீஷணன் கையில் கதை மட்டுந்தான் இருந்தது. இருப்பினும், எல்லா ஆயுதங்களுடனும் படையெடுத்து வந்திருப்பதாகத் தோன்றுகிறது. சுக்ரீவன் பகவானிடம் கொண்டிருக்கிற பற்றினால் அவ்வாறு பிரமை ஏற்படுகிறது. உடனே மரங்களையும், மலைகளையும் எடுத்துக்கொண்டு விபீஷணனைத் தாக்க ஸித்தமாக இருக்கும்படி வானர சேனைகளுக்கு ஆணை இடுகிறான். அது கண்டு விபீஷணன் அஞ்சவில்லை. 'இராவணனிடமிருந்து உயிர்வாழ்வதைக் காட்டிலும், இராமனை நாடிவந்த இடத்தில் உயிர்போனாலும் பாதகமில்லை' என்பது அவன் கொள்கை. அதேசமயம் வானரர்களுக்கு ராகவனிடம் உள்ள பேரன்பைக் கண்டு அவன் வியப்படைகிறான். இவ்வளவு பரி

வுடன் இராமனைக் காக்கும் இவர்களே தன்னை இராமனிடம் அடைக் கலப்படுத்தத் தகுந்தவர்கள் என்று உறுதிகொள்கிறான். தான் யார், வந்த காரியம் என்ன, என்பதை அவர்களிடம் வினயமாய் விண்ணப்பித்துக் கொள்கிறான்.

''நீங்கள் என் வேண்டுகோளை ஏற்றுக்கொண்டு என்னை பகவானிடம் அடைக்கலப்படுத்தினாலே உங்களுக்குப் பெருமை உண்டு. அவ்வாறு செய்யாவிட்டால் உங்களுக்கு தோஷம் ஸம்பவிக்கும். பகவான் என்னை அங்கீகரித்தருளினால்தான் 'சரணாகதனை ரக்ஷித்தான்' என்ற பெருமை அவனுக்கு ஏற்படும். நீங்கள் என்னைப் பற்றி அவனிடம் தெரிவியாமல், அவனும் என்னை அங்கீகரிக்காமல் போனால், 'சரணாகதனைக் கைவிட்டான்' என்ற பழி அவனுக்கு ஏற்படும். அவன் ஏற்றுக்கொண்டால் நானும் உய்ந்து நலமடைவேன்; இல்லையேல் எனக்கு விநாசமே உண்டாகும். இவ்விதம் நீங்கள் நற்செயல் செய்து, பகவானும் வாழ்ந்து, நானும் வாழ்ந்துபோகும்படி உதவுங்கள்'' என்று மன்றாடுகிறான் விபீஷணன். அத்துடன் அவன் அமைந்துவிடவில்லை.

''நிவேத₃யத மாம் க்ஷிப்ரம் விபீ₄ஷணமுபஸ்தி₂தம் |
ஸர்வலோக ஶரண்யாய ராக₄வாய மஹாத்மநே ||''

என்று மேலும் பேசுகிறான்.

'சரணாகதி செய்தவர்களை விடாமல் காக்கும் ஒரு குலத்தில் தோன்றிய இராகவனுக்கு என்னைப்பற்றித் தெரிவியுங்கள்' என்கிறான் விபீஷணன். ''ஸர்வலோக சரண்யன் என்ற பெயர் அவனுக்கு நிலைத்திருக்கவேண்டுமானால் அவன் என்னை ரக்ஷித்தாகவேண்டும். ஏனெனில் உலகத்திலுள்ள ஸகல ஜீவராசிகளில் நானும் ஒருவன்; என்னை ரக்ஷித்தால்தான் உலகத்தைப் பூர்ணமாக ரக்ஷித்ததாக அர்த்தம் அப்போது தான் ஸர்வலோக சரண்யன் என்ற பெயருக்கும் அர்த்தம் உண்டு. நான் இராவணன் தம்பி விபீஷணன். விபீஷணன் சரணாகதி செய்ய வந்திருக்கிறான் என்று தெரிவியுங்கள்''—என வேண்டிக்கொள்கிறான்.

அந்த வார்த்தையைக் கேட்டமாத்திரத்திலேயே சுக்ரீவன், இராமனிடம் ஓடோடிச் செல்கிறான். ''இராவணன் தம்பியாகிய நம் சத்ரு ஒருவன் சரணாகதி என்று சொல்லிக்கொண்டு, நம்முள் புகுந்து வஞ்சனை செய்ய வந்திருக்கிறான். முன்பு இராவணன், சந்நியாசி வேஷம் பூண்டு வந்து நம்மை வஞ்சித்ததுபோல் இவனும் சரணாகத வேடமிட்டு நம்முள் மித்திரபேதம் செய்ய வந்திருக்கிறான். இவனை நாம் ஏற்றுக்கொள்ளவே கூடாது. இவனை இப்பொழுதே வதைப்பதற்கு ஆணை இடுங்கள்'' என்று ரகுவீரனிடம் பிரார்த்தனை செய்கிறான். உடனே இராகவன் மந்திராலோசனை செய்ய அவை

யைக் கூட்டுகிருன். ஒவ்வொருவரும் தத்தம் கருத்துக்களைத் தெரிவிக்கின்றனர் வானரர்கள் அனைவரும் 'விபீஷணனைச் சேர்த்துக் கொள்ளலாகாது' என்ற கருத்தினையே வெளியிடுகிருர்கள். அனுமன் மட்டும் ''இவர் உண்மையான அன்புடன் வந்திருப்பதாகவே தெரிகிறது. 'தூதனை வதைக்கக்கூடாது' என்று எனக்காக இராவணனிடம் வாதாடியவர் இவர். இவர் மனைவி மக்களைக்கொண்டு பிராட்டிக்கு அசோகவனத்தில் ஆறுதல் ஏற்படும்படி செய்தவர். இவர் தேவரீரது சரணுகதரக்ஷண தர்மத்தைப் பற்றிக் கேள்விப்பட்டு வந்திருக்கிருர். இவரை நாம் ஏற்றுக்கொள்ளலாம்'' என்று கூறுகிருன்.

அனுமனின் இந்த வார்த்தை பெருமானுக்கு சமயசஞ்சீவிபோல அமைந்தது. வாயு புத்திரனுன அனுமன், அமிர்தசஞ்சீவியல்லவா? எனவேதான் பகவான்

''மித்ரபாவேந ஸம்ப்ராப்தம் ந த்யஜேயம் கதஞ்சந।
தோஷோ யத்யபி தஸ்ய ஸ்யாத் ஸதாமேதத் அகர்ஹிதம் ॥''

என்று அருளிச்செய்கிருன். 'என்னை நாடி வந்த ஒருவன் மித்ரன் போல வேடம் புனைந்து வந்தாலும் சரி; அவனுல் என் உயிருக்கே ஆபத்து நேரிட்டாலும் சரி; நானவனைக் கைவிடமாட்டேன். அவனது குற்றங்காரணமாகவே அவனைக் கைக்கொள்ளுவேன். எத்தகைய தோஷமுள்ளவனையும் ரக்ஷிப்பதுதானே சரணுகதரக்ஷண தர்மம்' என்று மேலும் விவரிக்கிருன். தாம் செய்த உதவிக்குப் பதில் உதவி செய்பவனை 'மித்திரன்' என்று குறிப்பிடுவது உலக வழக்கம். ஆனுல் இங்கே பகவான் 'நம்பத்தகுந்தவன்' என்ற பொருளில் 'மித்திரன்' என்பதைப் பிரயோகிக்கிருன். ''என்னை வந்தடைபவன் உண்மையிலேயே நம்பத்தக்கவனுக வேண்டுவதில்லை. அவன் சொல், செயல்களால் நம்பத்தக்கவனுகத் தோன்றினுல் போதும். பற்றுவதா, விடுவதா என்ற ஆராய்ச்சிக்கே இடமில்லை. சரண்புகுந்தவனைக் கைவிட எனக்கு சக்தியே கிடையாது. அவனுல் எத்தகைய இன்னல் ஏற்படுவதாக இருந்தாலும் அக்கரை இல்லை. 'அவனுல் நமக்கு ஆபத்து வருமே' என்ருல் அதற்காக நான் பின்வாங்கவேமாட்டேன். 'மித்திரன்' என்று சொல்லி சத்துருவே சரணுகதி அடைந்தாலும் அவனை ஏற்றுக்கொள்ளாமல் புறக்கணிக்கமாட்டேன்'' என்று உறுதியாகக் கூறுகிருன் தாசரதி. புண்ணியவானை அங்கீகரிப்பதைவிட, பாபியாயிருப்பவனுக்கு அடைக்கலமளிப்பதுதான் நமக்குப் பெருமை என்பதை உய்த்துணரவைக்கிருன்.

சுக்ரீவன் கருத்துப்படி 'வந்த விபீஷணன் குற்றமுள்ளவனுக இருக்கிருன்' என்பதற்காக நான் அவனை விடப்போவதில்லை. அனுமன் கூற்றுப்படி 'அவன் தர்மாத்மாவாக இருக்கிருன்' என்பதாலும் நான்

அவனைச் சேர்த்துக்கொள்ளப் போவதில்லை. சரணாகதன் என்பதாலேயே தோஷமுள்ளவனாயினும் ஏற்றுக்கொள்ளப்போகிறேன். என்று தன் அபயதான லட்சியத்தை உறுதிப்படுத்துகிறான்.

''ஸுது₃ஷ்டோ வாப்யது₃ஷ்டோ வா கிமேஷ ரஜனீசர: ।
ஸூக்ஷ்மமப்யஹிதம் கர்த்தும் மமாஶக்த: கத₂ஞ்சந ।।''

''பிஶாசாந் தா₃நவாந் யக்ஷாந் ப்ருதி₂வ்யாஞ்சைவ ராக்ஷஸாந் ।
அங்கு₃ள்யக்₃ரேண தாந் ஹந்யாம் இச்ச₂ந் ஹரிக₃ணேஶ்வர ।।''

என்ற சுலோகத்தின்மூலம் 'அரக்கனாகிய விபீஷணன் நல்லவனோ கெட்டவனோ அவன் எனக்கு எவ்வகையிலும் தீமைசெய்ய முடியாது' என்று தனது பரத்துவநிலையையும் வெளியிட்டுப் பேசுகிறான் காகுத்தன்.

வேடனொருவன் அதிகாலையில் காட்டுக்குச்சென்று ஒரு பெண் புறாவைப் பிடித்துக் கூண்டில் அடைத்துக்கொண்டு நாள் முழுவதும் வேட்டைக்காகத் திரிகிறான். மாலைப்பொழுது; திடீரென்று மழை பிடித்துக்கொள்கிறது; மழையில் நனைந்து, குளிர் நடுக்கத்துடனும், பசியோடும் ஒரு மரத்தடியில் வந்து தங்குகிறான். அப்போது அந்தக் கூண்டிலுள்ள பெண்புறாவின் ஜோடியான ஆண்புறா அந்த மரத்தின்மேல் இருந்தது. மிகுந்த களைப்புடன், ஆண்புறா இருந்த இடம் வந்து, மூர்ச்சித்துக்கிடந்த வேடுவனை, ஆண்புறா கண்டு கொள்கிறது. அவனுக்காகப் பெரிதும் மனமிரங்கி, தன் கூட்டிலிருந்த உலர்ந்த குச்சிகளை அவன் அருகில்போட்டுத் தீமூட்டி, அவனைக் குளிர்காயச் செய்கிறது. அவனுக்கு உடல் சூடேறி விழிப்பு ஏற்பட்டதும், அவன் பசியை உணர்ந்துகொள்கிறான். பசியால் வருந்தும் வேடுவனின் பரிதாபநிலைகண்ட ஆண்புறா தான் மூட்டிய தீயில் தன் உடலையிட்டு அவனுக்கு உணவாகத் தன்னை ஆக்கிக்கொடுக்கிறது.

இந்தக் கதையினை இராமன் கூறி மேலும் விளக்கம் தருகிறான். ''புறா, பறவை இனத்தைச்சேர்ந்த அற்பஜீவன். வேடன் சரணம் என்று ஒரு வார்த்தைகூடச் சொல்லவில்லை. மேலும், அவன் பெண்புறாவைப் பிடித்து வைத்திருக்கும் பகைவன். அத்தகைய பகைவனுக்கும் தன் உயிரைக்கொடுத்து அது ரக்ஷித்தது. நானோ உயர்குலத்தோன்றலான வசிஷ்டமுனிவரின் சீடன். சரணாகதரக்ஷணத்தை தர்மமாகக் கொண்டவன். சரணாகதியடைந்தவன் பகைவனான இராவணனல்லன். அவன் தம்பி விபீஷணன்தான். அவன் நட்பை நாடி வந்திருக்கிறான், நாம் அதற்குத் தயங்கலாமா? புறாவினமே அவ்வாறு நடந்து கொள்ளும்போது மானிட வர்க்கம் எவ்வாறு நடந்துகொள்ளவேண்டும்?'' என்ற கேள்வியை எழுப்புகிறான். விபீஷணனை ஏற்றுக்கொள்ளுவதன்மூலம் பகைவனுக்கு அருளும் கருணையைக் காகுத்தன் வெளிப்படுத்துகிறான்.

விபீஷணனுக்கும் நாம் அடைக்கலம் அளிக்கிறோம் என்று உறுதியாகக் கூறி, "வந்தவன் விபீஷணனாகிலும் சரி, அல்லது இராவணனாகவே இருந்தாலும் சரி; அவனை அழைத்துவா"

"ஆநயைநம் ஹரிஶ்ரேஷ்ட₂ த₃த்தமஸ்யாப₄யம் மயா ।
விபீ₄ஷணோ வா ஸுக்₃ரீவ யதி₃ வா ராவண: ஸ்வயம் ॥"

என்று சுக்ரீவனுக்கே பகவான் ஆணையிடுகிறான். சரணாகதி பலிக்கத் தடையாக நின்ற சுக்ரீவனையே இந்தக் கைங்கரியத்தில் ஈடுபடுத்தி, பாகவதாபசாரத்தையும் போக்குகிறான் ராமபிரான்.

இராச்சியத்தில் ஆசைவைத்து விபீஷணன் சரணாகதியடையவில்லை. இராமகைங்கரியத்திற்காகவே அவன் வந்தடைகிறான். இராமன் தானாகவே விபீஷணனுக்கு இலங்கை அரசுக்கான மணிமுடி சூட்டி அருளினான்.

"ஆழியான் அவனைநோக்கி அருள்சுரந்து உவகைதூண்ட
ஏழினோ டேழாய்நின்ற உலகும் என்பெயரும் எந்நாள்
வாழுநாளன்றுகாறும் வாளெயிற்றரக்கர் வைகும்
தாழ்கடல் இலங்கைச் செல்வம் நின்னதே தந்தேனென்றான்"

இவ்வாறு இராமபிரானாலே கொடுக்கப்பெற்ற இலங்கை சாம்ராஜ்யத்தை விபீஷணன் பகவத் பிரசாதமாகக்கருதி ஏற்றுக்கொண்டானே தவிர, ஆட்சி பீடத்திலுள்ள ஆசையினால் அல்ல. 'உலகமே உள்ளளவும் ராமநாமம் உள்ளளவும் இலங்கை சாம்ராஜ்யம் உன்னுடையதே' என்று அருளிய இராமபிரானின் கருணாவிலாசத்தில் பெரியாழ்வாரும் ஈடுபட்டு,

"தென்னிலங்கை மன்னன் சிரந்தோள் துணிசெய்து
மின்னிலங்கும் பூண் விபீடண நம்பிக்கு
என்னிலங்கு நாமத்தளவும் அரசென்ற
மின்னலங் காரற்கோர் கோல்கொண்டுவா
வேங்கட வாணற்கோர் கோல்கொண்டுவா"

என்றருளிய பாசுரத்தில் தோய்ந்து தோய்ந்து பரவசமான நிலைதான் 'ஆழியான்' என்ற கம்பனின் அற்புதப் பாடலாக வெளிப்பட்டிருக்க வேண்டும். ஆழ்வார்கள் பகவானுடைய நாமத்தில் ஆழ்ந்தார்களென்றால், கம்பநாடன், ஆழ்வார்களின் பாசுரத்தில் ஆழ்ந்து, நம்மையும் ஆழ்ந்துகிடக்கச் செய்கிறான்.

இதே போலத்தான் இராமபிரானின் கருணாவிலாசத்தில் விபீஷணன் ஆழ்ந்துபோனான். விபீஷணனுக்குக் காகுத்தன் இலங்காபுரியை மட்டுமா அருளினான்? அயோத்யா சாம்ராஜ்யத்தையும் அளிக்கச் சித்தமாக இருந்தான். அந்த முறையில்தான் வீடணனுக்குத் தன் இதயசாம்ராஜ்யத்தையும் உரிமைப்படுத்தினான்.

அவனைத் தன் இன்னுயிர்ச் சகோதரனாகவே ஏற்று மகிழ்கிறான்.

"குகனொடும் ஐவர் ஆனேம் முன்பு; பின் குன்று சூழ்வான்
மகனொடும் அறுவர் ஆனேம்; எம்முழை அன்பின்வந்த
அகனமர் காதல்ஐய! நின்னொடும் எழுவர் ஆனேம்;
புகலரும் கானம் தந்து புதல்வரால் பொலிந்தான் உந்தை"

அகனமர் காதல் ஐய! என்று விபீஷணனுக்குத் தன் இதய சாம்ராஜ்யத்தை ஈந்து, 'நின்னொடும் எழுவர் ஆனேம்' என்று வீடணனைத் தன் ஏழாவது சகோதரனாக்கி அவன் மீது கருணை பொழிகிறான் காகுத்தன்,

விபீஷணனுக்கு எம்பெருமான் சாம்ராஜ்யபதவியுடன் சிரஞ்சீவிப் பட்டமும் அளித்துப் பெருமைப் படுத்தினான்.

உலகத்திலுள்ள அறிவாளிகள் அனைவருக்கும் தங்கள் உற்றார் உறவினர், பொன்பொருள்களில் ஆசையிருக்கும்; அதற்குமேல் தங்கள் உடம்பில் அதிக அன்பு இருக்கும்; சரீரத்தைக் காட்டிலும் தங்கள் உயிர்மீதும் ஆத்மாமீதும் அளவு கடந்த பற்றிருக்கும். எல்லாவற்றிற்குமே மேலாக ஆத்மாவுக்கும் ஆத்மாவான பரமாத்மா மீதே எல்லையற்ற ப்ரீதி இருக்கும். இத்தகைய பிரீதிக்கு உரிய குல தெய்வமான திருவரங்கநாதனையே ஸ்ரீ ராமனிடம் பெற்றுப் பெரும் பதவியடைந்தான் வீடணன். ஆத்மநாதனையே பெற்ற பெரும்பதவி காரணமாகத்தான் விபீஷணனை, விபீஷணாழ்வான் என்று உலகம் போற்றிப் புகழ்கிறது. பெரியாழ்வாரும் அந்தக் காகுத்தனின் கருணாவிலாசத்தைத்தான் பாசுரத்தில் பாடிப்பெருமைப்படுகிறார்.

இராமபிரான் வீடணனுக்கு அருள்செய்தான். அது எல்லோருடைய சக்திக்கும் அப்பாற்பட்டதல்ல. பக்தனுக்கு அருள்செய்வது மனித இயல்புதான். ஆனால் பகைவனுக்கு அருளும் பரிபக்குவ நிலைதான் அதிமானுஷமானது. அதிலும் இராவணனைப் போன்ற பகைவனுக்கு அருள்வதை நினைக்கவே முடியாது. எல்லார்க்கும், அபயமளிப்பது எளிதுதான். ஆனால் தன் மனைவியையே சிறை எடுத்த கொடிய பகைவனுக்கு எவராவது கருணைகாட்ட முடியுமா? முடியும் என்று காட்டுவதுதான் 'காகுத்தன் கருணை'. இராவணனுக்குக் கருணை புரிவதுதான் தனது மகத்தான குறிக்கோள் என்று புலப்படும் வகையில், ஐயன் அவனுக்கு எத்தனையோ வாய்ப்புக்கள் ஏற்படுத்தினான். ராம ராவணப்போரில் முதல் நாள் ராவணன் தோல்வியுற்றான், அவனை முதல்நாளே முடித்திருக்கலாம். ஆனால் அதுவல்லவே காகுத்தன் முடிவு. அவன் திருந்துவதற்கு வாய்ப்பளிக்கக் கருணைத் திருவுளம்பற்றினான்.

ஆளேயா உனக்கமைந்தன மாருதம் அறைந்த
பூளை ஆயின கண்டனை; இன்றுபோய்ப் போர்க்கு நாளைவா,
என நல்கினன், நாகிளங் கமுகின்
வாளைதாவுறு கோசல நாடுடை வள்ளல்.

வரம் கொடுப்பதிலும் கருணைபுரிவதிலும் வள்ளலான இராமச்சந்திரமூர்த்தி 'இன்றுபோய்ப் போருக்கு நாளைவா' என்று கூறிய இடம் ராமாயணத்திலே உச்சமான கட்டமாகும். நிராயுத பாணியை வதைப்பது யுத்ததர்மமாகாது என்பதனால் மட்டுமல்ல; பகைவனுக்கும் இரங்குவது சரணாகதரக்ஷணதர்மம் ஆகும் என்பதனாலும்தான். அப்போது,

''வாரணம் பொருத மார்பும் வரையினை எடுத்த தோளும்
நாரதமுனிவற்கேற்ப நயம்பட உரைத்த நாவும்
தார்அணி மவுலி பத்தும் சங்கரன் கொடுத்த வாளும்
வீரமும் களத்தேபோட்டு வெறுங்கையோடிலங்கை புக்கான்''

''ராவணன் தன்னுடைய பிரதாபங்களுக்கு உரியவை அனைத்தையும் போர்க்களத்தே போட்டுவிட்டு வெறுங்கையோடு இலங்கை புக்கான்'' என்று கம்பன் கட்டுரைக்கின்றான். அவன் வெறுங்கையோடு இலங்கைக்குள் புகுந்தான் என்று சமத்காரமாகச் சொன்னாலும், அதிலே ஒரு தொனிப்பொருளையும் நமக்குப் புலப்பட வைக்கத்தான் செய்கிறான். அதாவது ராவணன் எல்லாவற்றையும் போர்க்களத்தே விட்டுவிட்டு ராமனுடைய கருணாவிலாசத்தைக் கைக்கொண்டு தான் இலங்கை சென்றான். காகுத்தன் கருணை இன்றேல் அவன் இலங்காபுரிக்கு மீண்டு சென்றிருக்க முடியாது. அவ்விதம் கருணையோடு சென்றபோதிலும் அதனை அவன் பயன்படுத்திக்கொள்ளவில்லையே என்று காகுத்தனும் இரங்குகிறான்; கம்பனும் இரங்குகிறான்; நாமும் இரங்கத்தான் செய்கிறோம். உண்மையிலேயே பெரிதும் இரங்கத்தகுந்த பாத்திரம்தான் ராவணன். பகவான் கருணா கடாக்ஷம் கைவரப்பெற்றும் கைநழுவவிட்டு விட்டானே பேதை.

இறுதிப்போரில் ராமபாணத்துக்கு இலக்காகி மாண்டு மடிகிறான் ராவணன். மயிலுடைச் சாயலாளை (அதாவது சீதாபிராட்டியை) வஞ்சியாமுன்னம் நீண்ட எயிறுடை இலங்கைநாதன் இதயமாம் சிறையில் வைத்தான். அவ்வாறு இதயச்சிறையில் ராவணன் பிராட்டியை ஒளித்து வைத்திருந்தானல்லவா; ஜானகி அசோக வனத்திலிருந்து விடுதலை பெற்றாலும் ராவணன் மனச்சிறையிலிருந்து விடுதலையாகவேண்டுமே; அதனால் ராமபாணம் ராவணனைச் சல்லடைக் கண்ணாகத் துளைத்துச் சீதையை எங்காவது ஒளித்து வைத்திருந்தால் அந்த இடத்தையும் துருவித் தேடிக்கண்டுபிடித்துப் பரிபூரண விடுதலை அளித்ததாம்.

வெள்ளெருக்கஞ் சடைமுடியான் வெற்பெடுத்த
திருமேனி மேலும் கீழும்
எள்ளிருக்கும் இடம்இன்றி உயிர்இருக்கும்
இடம்நாடி யிழைத்தவாறே
கள்ளிருக்கும் மலர்க்கூந்தல் சானகியை
மனச்சிறையில் கரந்த காதல்
உள்ளிருக்கும் எனக்கருதி உடல்புகுந்து
தடவியதோ ஒருவன் வாளி

காகுத்தன் தனது ராமபாணத்தின் மூலமாகவும் ராவணனுக்குக் கருணை காட்டினான். ராவணனுக்குப் பன்னிப்பன்னி அபயமளிக்க வேண்டுமென்று ஐயன் எவ்வளவோ முயன்றுபார்த்தான். ராவணன் கடைசிவரை அந்த வாய்ப்பைப் பயன்படுத்திக்கொள்ளவே இல்லை. ஆயினும் மரணத்தறுவாயில் விபீஷணனை அவனிடம் அனுப்பிவைத்து. அவன்மூலம் அவனுக்கு அருள்சுரந்தான் என்று வான்மீகிமுனிவர் காகுத்தன் கருணையின் சிகரமான கட்டத்தை நமக்குத் தொட்டுக்காட்டுகிறார். விபீஷணன் போர்க்களத்தில் வீழ்ந்துகிடக்கும் ராவணனைக்கண்டு கல்லுங்கரைந்துருகும் வண்ணம் கதறிப் புலம்புகிறான்.

"உண்ணாதே உயிர்உண்ணா தொருநஞ்சு
சனகியெனும் பெருநஞ்சுன்னைக்
கண்ணாலே நோக்கவே போக்கியதே
உயிர் ! நீயும் களப்பட்டாயே !
எண்ணாதே எண்ணிய சொல்லின்றினித்தான்
எண்ணுதியோ எண்ணில் ஆற்றல்
அண்ணாவோ ! அண்ணாவோ ! அசுரர்கள்தம்
பிரளயமே ! அமரர் கூற்றே !"

மிகுந்த ஆற்றாமைப்படுகிறான் வீடணன். தனக்குக் கிடைத்த பதவியைத் தன் சகோதரன் அடையவில்லையே என்று பரிதாபப் படுகிறான். காகுத்தன் கருணையால் குகன் 'குகப்பெருமாள்' என்ற நிலைக்கு உயர்ந்தான்; சுக்ரீவன் 'மகாராஜர்' என்ற பதவி எய்தினான். விபீஷணனாகிய தான் ஆழ்வான் ஆயினான். ஆனால் தன் அண்ணன் ராவணேச்வரன் என்ற பதவியைத் தக்க வைத்துக்கொள்ளவில்லையே என்று எண்ணாதது எண்ணிப் புலம்புகிறான் வீடணன். காகுத்தன் கடையனுக்கும் கருணை சுரக்கக் காத்திருந்தான். அந்தக் கருணை விலாசத்தால்தான் அவன் மனிதனாக வாழ்ந்துகாட்டிக் கடவுள் நிலைக்கு அதாவது பரத்துவநிலைக்கு உயர்ந்தான். கருணை காட்ட முடியாத இடத்தும் காட்டிநிற்பதுதான் காகுத்தன் கருணை. அந்தக் கருணைதான் ராமராஜ்யம் என்ற லட்சிய சமுதாய சாம்ராஜ்யத்தைப் படைத்தது.

[இது, திருச்சி வானொலியில் ஒலிபரப்பானது.]

—○—

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

    

# நமது சமூக முன்னேற்றம்

**[ஸ்ரீ உ. வே. A. வேங்கடாத்ரி அய்யங்கார் ஸ்வாமி, ஸ்தானீகம், திருக்கோஷ்டியூர்]**

1. நம்முடைய பூர்வசிகைக் குலப்பெருமையைப்பற்றியும் தற்காலத்தில் நம் சமூகம் அடையவேண்டிய முன்னேற்றம் பற்றியும் அடியேன் சில வார்த்தைகள் விஜ்ஞாபிக்க விரும்புகிறேன்.

2. நம் குலத்தில் ஆழ்வார்கள் காலத்திலிருந்து, அநேக மஹநீயர்கள் அவதரித்து, வைஷ்ணவஸித்₃த₄ாந்தத்தைப் பல க்₃ரந்த₂ங்கள் அருளுவதன்மூலமும், மற்றும் பல வகைகளிலும் பேணிப் பாதுகாத்து நிலைநாட்டி வந்திருக்கிறார்கள். (1)சரமபர்வநிஷ்டை₂யை நிலைநாட்டிய மதுரகவியாழ்வார், (2) பொங்கும் பரிவாலே பல்லாண்டு பாடிய பெரியாழ்வார், (3) வேதமனைத்துக்கும் வித்தான பாசுரங்களைப் பாடிய ஆண்டாள், (4) திருமாலையாலே திருநாமப்பெருமையை நிலைநாட்டித் திருப்பள்ளியெழுச்சி பாடிய தொண்டரடிப்பொடியாழ்வார் ஆகிய ஆழ்வார்களும், (5) நளிர்ந்தசீலன் நயாசலன் அல்வழக்கொன்றுமில்லா அணிகோட்டியர்கோன் அபிமான துங்கன் தெளிந்த செல்வனை செல்வநம்பியும் ஆழ்வார்கள் காலத்தில் அவதரித்து வைணவத்தை வளர்த்துவந்திருக்கிறார்கள்,

3. ஆசார்யர்கள் காலத்திலும் (1) ப்ரத₂மாசார்யரான நாத₂முனிகளுடைய சிஷ்யராய், அருளிச்செயலை உலகுக்கு அளித்து உய்யக்கொண்டார் என்று பட்டம்பெற்றவரான ஸ்ரீ புண்ட₃ரீகாக்ஷர், (2) எம்பெருமானாருக்கே ஆசார்யர்களான திருக்கோட்டியூர் நம்பியும், (3) திருமாலையாண்டானும், (4) எம்பெருமானாரது சிஷ்யராய், ஆழ்வானை ஒத்தவரென்பது தோற்ற அவராலே எங்களாழ்வான் என்று அபி₄மானிக்கப்பெற்றவரான ஸ்ரீ விஷ்ணுசித்தர், (5) நாலாயிர தி₃வ்யப்ரப₃ந்த₄ங்களுக்கும் வியாக்கியானம் செய்து, அருளிச்செயலை அருளிச்செயலாக்கியவராய், மற்றும் ஸ்ரீராமாயண பா₄ரதாதி₃ தனி ஶ்லோகங்கள், ஸ்தோத்ரக₃த்₃யங்கள், ரஹஸ்யத்ரயம் முதலான

வற்றுக்கு வ்யாக்₂யானங்கள் அருளுகையாலே வ்யாக்₂யான சக்ர வர்த்தி என்று புகழ் பெற்றவரான பெரியவாச்சான்பிள்ளை, (6) அவர் திருக்குமாரராய், பல க்₃ரந்த₂ங்கள் அருளிய நாயனாராச்சான் பிள்ளை, (7) பிள்ளையுலகாசிரியரின் அந்தரங்க₃ ஶிஷ்யரான கூரகுலோத்தமதா₃ஸர், (8) மாமுனிகளுக்கே ஆசார்யரான திருவாய் மொழிப்பிள்ளை முதலான பல மஹநீயர்கள் நம் ஸ்ரீ வைஷ்ணவ த₃ர்ஶநத்தைப் பல வகைகளில் நிலைநாட்டி வளர்த்துவந்தார்கள்.

4. பூர்வாசார்யர்கள் காலத்திற்குப்பின்பும், மைஸூர் குப்பண்ணு ஸ்வாமி போன்ற சதுஶ்ஶாஸ்த்ரபாரங்க₃தர்களும், ஐம்புலிபுத்தூர் கிருஷ்ணய்யங்கார் ஸ்வாமி போன்ற தென்மொழி வடமொழிகளில் புலமைமிக்கவர்களுமான பல மஹநீயர்கள் தோன்றி வைணவத்தை யும், நம் குலப்பெருமையையும் நிலைநிறுத்தி வந்தார்கள். இருந்த போதிலும், பூர்வாசார்யர்கள் காலத்திலிருந்த நம் குலப்பெருமை, பல காரணங்களால் பிற்காலத்தில் படிப்படியாகக் குறையத் தொடங்கிவிட்டது.

5. இதைக்கண்ணுற்ற ஸுத₃ர்ஶன ஸ்த₂ாபகரான ஸ்ரீ உ. வே. K. ஸ்ரீநிவாஸய்யங்கார் ஸ்வாமி, நம் ஸமூகத்தைப் பழைய நிலைக்குக் கொண்டுவரவேண்டும் என்னும் தீவிர அபி₄லாஷையினுல் நமது சபையை, நம்மவர்கள் பலருடைய ஒத்துழைப்புடன் கடந்த ப்ரப₄வ வருஷத்தில் (1927ல்) ஸ்த₂ாபித்துப் பல வருஷங்கள் அதைத் தாமே தலைவராயிருந்து வளர்த்து, ஸ்ரீரங்கத்தில் வீடும் வாங்கி சபையை ஶாஶ்வதமாக நடந்துவரும்படி ஸ்திரமாக்கினர். அத்துடன், நம் முடைய ஆழ்வார்கள் ஆசார்யர்களுடைய உபதே₃சங்களை உலகிற்கு வெளிப்படுத்தி வைஷ்ணவத்தை உலகில் தழைத்தோங்கச் செய்ய வேண்டும் என்பதை முக்கிய நோக்கமாகக்கொண்டு, தமது சொத்தில் பலலக்ஷக்கணக்கான ரூபாய்கள் பெறுமானமுள்ள பெரும்பகுதியை ஒரு ட்ரஸ்டாக ஏற்படுத்தி, அச்சுக்கூடம், ஸ்ரீ வைஷ்ணவ ஸுதர்சன பத்திரிகை முதலானவற்றைத் தாமே தொடங்கி, பல பூர்வாசார்ய க்₃ரந்த₂ங்களையும் தம் காலத்திலேயே அச்சிட்டு உலகிற்கு உதவினர். அதற்குமேலே அது நீடித்து நடப்பதற்காகச் சிறு வயதுமுதல் தம் இருகுமாரர்களான ஸ்ரீ. கிருஷ்ணஸ்வாமி அய்யங்காருக்கும், ஸ்ரீ. ராமய்யங்காருக்கும் ஸம்ப்ரதா₃யஜ்ஞானத்தை ஊட்டி, அவர் களில் மூத்தவரைத் தமக்குப்பின் ஸுத₃ர்ஶனம் ஆசிரியராயிருக்கும் படியும் நியமித்திருப்பதும், அந்நியமனத்தின்படி ஸுதர்சனபத்திரிகை கடந்த 25 வருடங்களாக மேன்மேலே வளர்ச்சிபெற்று வைணவத்தைப் பேணிப்பாதுகாத்துவருவதும் உலகறிந்ததாகும்.

6. இந்தப் பத்திரிகையின்மூலமாகவும், தனியாகவும் பெரிய வாச்சான்பிள்ளை முதலான பூர்வாசார்யர்கள் அருளிய கிரந்தங்கள் மிக எளியதமிழ் நடையிலான விவரணங்களோடு வெளிவருகின்றன. மேலும் நம்மவர்கள் அவஶ்யம் அறியவேண்டிய விஷ்ணுபரத்வ ஜ்ஞானத்தை அசைக்கமுடியாதபடி உண்டாக்கும் விஷ்ணுசித்தவிஜயம் முதலான கிரந்தங்களும், கீதை, ப்₃ரஹ்மஸூத்ரம் முதலானவற்றின் பொருளை எளிய தமிழ்நடையில் விளக்கும் கீ₃தா வ்யாக்₂யானம் முதலான கிரந்தங்களும் வாசகர்களின் ஸந்தேஹங்களை விளக்கும் ஸுதர்சனர் பதில் முதலான நூல்களும் வெளிவருகின்றன. இப்படி வெளிவருகின்ற அருமையான நூல்களைப் பல்லாயிரக்கணக்கான வைணவர்களும், சைவர்களும், ஸ்மார்த்தர்களுங்கூடப் பாராட்டிப் படித்துப் பயன்பெற்றுவருகிறார்கள். ஆனால், நம் குலத்தவர் எத்தனை பேர் இந்நூல்களையும், ஸ்ரீவைஷ்ணவஸுதர்சன பத்திரிகையையும் படித்துப் பயன்பெற்றுவருகிறார்கள் என்று ஆராய்ந்துபார்த்தால், நம் ஸமூகத்தின் நிலை உயிரான இவ்விஷயத்தில் மிகவும் வருந்தத் தக்கதாகவே இருப்பது தெரியவரும்.

7. இந்நிலையைத் தவிர்ப்பதற்காகவே, பணம்கொடுத்து வாங்க முடியாத நிலையில் இருக்கும் நம்மவர்கள் பலருக்கு ஸுதர்சன பத்திரிகையை இலவசமாகவும் ஸுதர்சனம் ஆசிரியர் அனுப்பி வருகிறார். 1500 ரூபாய்களுக்குமேல் பெறுமானமுள்ள கிரந்தங்களை ரூ 1000 க்கு அளிப்பதற்கான திட்டம் ஒன்றையும் வெளியிட்டிருக்கிறார் ஸுதர்சனம் ஆசிரியர். நம்மவர்களில் பணம் படைத்தவர்கள் இத் திட்டத்தில் சேருவதை ஒரு கடமையாகக்கொள்ளவேண்டியது அவஶ்யம். தாங்கள் படித்துப் பயன்பெறுவதோடு, பணவசதியற்ற மற்றவர்களும் பயன்பெறுவதற்காக இத்திட்டத்தில் சேர்ந்து, அந்த ஸ்ரீகோஶங்களைக்கொண்டு ஒவ்வொரு நகரங்களிலுமாவது நூல் நிலையங்கள் அமைத்துப் பலர் பெரும்பேறுபெறும் வாய்ப்பை த₄னிகர்கள் அளித்து, பணம் படைத்த பயனை அடையவேண்டும்.

8. இம்முறையில் அடியேன் 'ஸுதர்சனம்' ஆசிரியர் வெளியிட்டிருக்கும் பிங்கள வருஷத் திட்டத்தில் ரூ 1000 அளித்துச் சேர்ந்து, அந்த ஸ்ரீகோஶங்களைக்கொண்டு, ஸ்ரீரங்கத்தில் உள்ள தமது ப₄ாரதீய பூர்வஶிக₂ ஸ்ரீவைஷ்ணவ ஸப₄ா க்₃ருஹத்தில், அடியோங்களுடைய ஆசார்யரான திருமாலையாண்டான் திருநாமத்தில் ''திருமாலையாண்டான் புஸ்தகசாலை'' என்னும் நூல் நிலையத்தைத் தொடங்க ஏற்பாடு செய்திருக்கிறேன். இந்த நூல்நிலையத்தில் உள்ள

ஸ்ரீகோஶங்களை—பொன்னும், மணியும், வயிரமும், முத்தும்போன்று நம் பூர்வாசார்யர்கள் அருளியுள்ள பெருநிதிகளை — அனைவரும் ஸேவித்துப் பிறவிப்பயன்பெறவேண்டும் என்றும், மற்றும் பலர் மற்ற நகரங்களிலும் இதுபோன்ற புத்தகசாலைகளை ஏற்படுத்தவேண்டும் என்றும் ப்ரார்த்திக்கிறேன். நம் ஸமூகம்,—ஏன், ஸ்ரீவைஷ்ணவ ஸமூஹம் முழுவதுமே—முன்னேறுவதற்கு இது ஒன்றே தலைசிறந்த வழியாகும். இந்த முன்னேற்றம் ஏற்பட்டால், லௌகிக முன்னேற்றங்களை எம்பெருமான் தானே அருளுவான். இந்த முன்னேற்றம் ஏற்படாவிடில், லௌகிக முன்னேற்றங்கள், மேல்நாடுகளிற்போலே ஆத்மநாஶத்திற்கே காரணமாகும். இவ்வாத்ம முன்னேற்றம் ஏற்பட அனைவர்க்கும் அருள்புரியவேண்டுமென்று பெரியபிராட்டியாரையும், பெரியபெருமாளையும் ப்ரார்த்திக்கிறேன். இந்த ஸுதர்ஶநபத்ரிகா கைங்கர்யமும், பூர்வாசார்யக்ரந்தப்ரகாஶந கைங்கர்யமும், தொடர்ந்து ஆசந்த்ரார்க்கம் (சந்திரஸூர்யர்கள் உள்ளவரையில்) நடைபெற ஸ்தாபகருடைய ஸந்ததியில் தக்க ஜ்ஞாநிகள் உண்டாக வேண்டுமென்றும் பெரியபிராட்டியையும், பெரியபெருமாளையும் ப்ரார்த்திக்கிறேன். ஸ்ரீ வைஷ்ணவவுலகம் முழுவதுமே இந்தப் ப்ரார்த்தனையை இடைவிடாமல் செய்துகொண்டிருக்கவேண்டும்.



ஸ்ரீ:
ஸ்ரீவிஷ்ணுசித்த ஸ்வாமிநே நம:
ஸ்ரீமத்யை கோ₃தா₃யை நம:

    

#  பட்டர் பிரான் 

[ஸ்ரீ உ. வே. வேதப்பிரான்பட்டர்
கோவிந்தராஜய்யங்கார் ஸ்வாமி, ஸ்ரீவில்லிபுத்தூர்.]

பாண்டியன் கொண்டாடப் பட்டர்பிரான் வந்தானென்று
ஈண்டிய சங்கமெடுத்தூத—வேண்டிய
வேதங்களோதி விரைந்து கிழியறுத்தான்
பாதங்கள் யாமுடைய பற்று.

## முகவுரை

*ஸ்ரிய:பதியான ஸர்வேஶ்வரனால் மயர்வற மதிநலமருளப்* பெற்றவர்கள் ஆழ்வார்கள். அவர்கள் பொய்கையார் முதல் கலிய னீருகப் பதின்மர் ஆவர். அவர்களுள் நடுநாயகமாகத் திகழும் பட்டர்பிரானே 'பெரிய' என்ற அடைமொழிச் சிறப்பைப் பெற்று, பெரியாழ்வார் என்று ஏற்றமுடன் விளங்குகிருர். விபாத₃வாக்சிக₂ா மணியான மணவாளமாமுனிகள் "பொங்கும் பரிவாலே வில்லி புத்தூர்ப் பட்டர்பிரான் பெற்ருன் பெரியாழ்வார் என்னும் பெயர்" என்று பெரியாழ்வாருடைய பெயர்ப் பெருமையைக் காரணத்துடன் விளக்கினர். இவருடைய பிரபந்தங்களிலிருந்து அகச்சான்ருக இவருடைய "பட்டர்பிரான்" என்னும் பெயரின் பெருமைகள் எங்ஙனம் அனுப₄விக்கப்பெற்றுள்ளன என்னும் விஷயம்பற்றி இக் கட்டுரையில் விளக்கப்படுகிறது.

## அகச்சான்று

ஆழ்வார்களுடைய அவதாரத்தைப்பற்றி ஆராயுமிடத்து, முதலாழ்வார்களும் திருமழிசையாழ்வாரும் துவாபரயுக₃க் கடைசியில் அவதரித்தவர்கள் என்றும், நம்மாழ்வார் தொடங்கி மற்றையாழ் வார்கள் கலியுக₃த்திலவதரித்தவர்கள் என்றும் தெரிகிறது. முதலாழ் வார்கள் திருமழிசையாழ்வார் இவர்களுடைய திவ்யப்ரபந்தங்களில் அவர்களுடைய பெயர்க்குறிப்புக்கள் வெளிப்படையாகக் காணப்பட

வில்லை. திருப்பாணாழ்வாரின் அமலனாதிபிரானிலும் இப்படியே. நம்மாழ்வார் தொடங்கி மற்றையாழ்வார்கள் திவ்யபிரபந்தங்களில் அவர்களுடைய பெயர்க்குறிப்புக்கள் அவர்களாலேயே அருளிச் செய்யப்பட்டிருப்பதால் அவர்களுடைய வைபவங்களை அவற்றின் துணைகொண்டு ஓரளவு அனுபவிக்க வாய்ப்பு இருக்கிறது. ஆகவே பெரியாழ்வாருடைய திவ்யப்பிரபந்தத்திலும் அவரைப்பற்றிப் பெருமைபேசும் ஆண்டாள் அருளிச்செய்த பிரபந்தங்களிலும் அனுபவிக்கப்பட்டிருக்கும் ''பட்டர்பிரான்'' என்ற திருநாமத்தின் பெருமைகளைப்பற்றி இனிக் காணலாம்.

## பெரியாழ்வார் நாச்சியார்திருமொழிகள்

பெரியாழ்வார் தாம் திருவாய்மலர்ந்தருளிய திருமொழிப் பிரபந்தத்தில் ''பட்டன்'' ''பட்டர்பிரான்'' என்ற இத்திருநாமச்சிறப்பு விளங்கப் பத்தொன்பது இடங்களிலும், ஆண்டாளருளிச்செய்த திருப்பாவை நாச்சியார்திருமொழிப் பிரபந்தங்களில் நான்கு இடங்களிலும் அருளிச்செய்திருக்கிறார்கள். எம்பெருமான் நிர்ஹேதுகமாக அருளிய ஜ்ஞான பக்தி வைராக்யச் சிறப்புக்களை உலகர்க்கு உணர்த்த முற்பட்டமையால், தம் சிறப்பைத் தாமே கூறிக்கொள்ளுவதில் அஹங்காரதோஷமில்லை என்பதை உணரவேண்டும். இந்த இருபத்து மூன்று இடங்களில் வரும் ''பட்டன்'' ''பட்டர் பிரான்'' என்ற சொல்லுக்கு பிராம்மணோத்தமர், ஸ்வாமி, நிர்வாஹகர், பெரியாழ்வார், வைதிகோபகாரகர், நம்பெருமாளுக்குக் கன்யாப் பிரதானம் பண்ணின உபகாரகர், என்று வியாக்யானம் செய்யப்பட்டுள்ளது. இவற்றை ஆராயுமிடத்து இவருடைய வரலாறும் இவருடைய பெருமையும் தெள்ளிதில் விளங்கும்.

## 1. பிராம்மணோத்தமர்

மதுரைமா நகரை ஆண்ட வல்லபதேவபாண்டியன் மெய்ப் பொருள் இன்னதென்றுணராமல் தவித்துக்கொண்டிருக்கிற வேளையில், வடபெருங்கோயிலுடையானால் நியமிக்கப்பெற்று, பாண்டியன் வித்வத்ஸதஸ்ஸுக்கு விஷ்ணுசித்தர் எழுந்தருளினார். ஸபையில் கூடியுள்ள வித்வான்கள் அனைவரும் மெய்ப்பொருளை உணர்த்த முடியாமல் இருக்கும்பொழுது, எவராலும் மறுக்கமுடியாமல் ஏற்கும்படி வேண்டிய வேதங்களிலிருந்து மிக நுட்பமாக மறைந்துகிடக்கும் மறைப்பொருளை — மெய்ப்பொருளை — வேதாந்த விழுப்பொருளின் மேலிருந்த விளக்கைத் தெள்ளத் தெளிய விவரித்தார். இதனால் இவர் பட்டர் என்று அழைக்கப்பட்டார். பட்டர் என்பதற்கு பிராம்மணர்

என்று பொருள். பிரம்மம் என்றால் வேதத்திற்கும் வேதத்தில் பேசப்படும் பொருளான ஸர்வேஶ்வரனுக்கும் பெயர். வேதத்தின் மூலமாக ஸர்வேஶ்வரனை உள்ளபடி யார் உணர்கிறாரோ அவரே பிராம்மணராவார். இவர் ஒருவரே பாண்டியனுடைய ஸதஸ்ஸில் பிரம்மத்தை உள்ளபடி வேதங்களைக்கொண்டு உணர்த்தினமையால், இவரே பிராம்மணர் என்ற பொருள்கொண்ட பட்டர் என்ற நாமகரணத்தைப் பெற்றார். அதனாலேயே மற்ற வித்துவான்களுக்கு முன்னிலையில் பொற்கிழி அளித்து, யானையில் பவனிவரச்செய்து பாண்டியன் கொண்டாடினான். மெய்ப்பொருளைத் தனக்கு விளக்கிக் கொடுத்த உபகாரத்தினால் "பட்டர் பிரான் வந்தான்" என்று விருதூதினன் என்ற வரலாறு இந்நாமத்தால் விளங்குகிறது. கண்ணன் ஸாந்தீபிநியிடத்தில் வேதங்களைக் கற்றதின் காரணமாக "மறை நான்கும் முன்னோதிய பட்டன்" என்று திருமங்கையாழ்வாரால் சிறப்பிக்கப்பட்டான். இங்கு "பட்டன்" என்பதற்கு வேதபண்டிதன் என்பது பொருள்.

## 2. ஸ்வாமி

வேதத்திற்கும், வைதிகர்களுக்கும் அறிய முடியாமல் மறைந்திருந்த பரம்பொருளைப் பாண்டியனுக்கும் பண்டித பாமரர்களுக்கும் மிகக்கருணைகொண்டு உபதேசித்துத் தமக்கு சிஷ்யர்களாக அனைவரையும் ஆக்கிக்கொண்டமையால் ஸ்வாமி என்று அழைக்கப்பட்டார். அவர்களுடைய தனமெல்லாம் இவருடைமையானது. ஆகவே ஸ்வாமி என்ற பொருளில் பட்டர் என்ற சொல் வழங்கப்பட்டது.

## 3. நிர்வாஹகர்

அனைவர்க்கும் பலவகைகளில் உபகரித்ததன் மூலம் அரசர்களையும், அந்தணர்களையும்,அனைவரையும் தம் சொல்வழி நடத்தி வந்தமையால் நிர்வாஹகர் என்ற பொருளில் 'பட்டர் பிரான்' என்று சிறப்பிக்கப் பட்டார். பாண்டியன் முதலான சிஷ்யர்கள் தமக்கு அளித்த நிதியைக் கொண்டு மின்னார் தடமதிள்கள், பெரிய கோபுரம் முதலிய கைங்கர்யங்கள் செய்து உபகரித்தது பிரத்யக்ஷமானது.

## 4. பெரியாழ்வார்

பல பல காரணங்களின் அடிப்படையில் ஏற்பட்ட பட்டர் பிரான் என்ற இத்திருநாமம்—அவருக்கே இடுகுறியாய், பெரியாழ்வார் என்ற திருநாமத்திற்கு ஸமானமாய், பிரசித்தமாய், தாமரைக்குப் பங்கஜம் என்ற சப்தம் போல இவருக்கே உரியதாய் நின்றது.

## 5. வைதி₃கோபகாரகர்

சிறப்பாக வைதிகர்கள் இவரிடத்திலீடுபட்டு சிஷ்யர்களாகி வேதார்த்தங்களைக் காலக்ஷேபம் செய்து கேட்டு உஜ்ஜீவித்தமையால் வைதிகோபகாரகர் என்று பொருள்பட 'பட்டர் பிரான்' என்று அழைக்கப்பட்டார். செல்வ நம்பி முதலிய வைதிகஶ்ரேஷ்டர்களுக்குப் பரதத்வ நிர்ணயம் செய்து உபகரித்த வரலாறு உணர்த்தப்படுகிறது.

## 6. கந்யாதானச் சிறப்பு—திருப்பாவை

ஆண்டாள் திருப்பாவை நிகமனப்பாசுரத்தில் ''பட்டர் பிரான் கோதை'' என்று தன்னைச் சிறப்பிக்குமிடத்து மேற்கூறிய அனைத்துப் பெருமைகளுமிருக்க ''தன்னை அரங்கனுக்குக் கந்யகாப்ரத₃ானம் செய்து அரங்கனுடையவும் தன்னுடையவும் மனோரத₂த்தைப் பூர்த்தி செய்துவைத்தமையால், அந்த உபகாரந்தோற்ற 'பட்டர் பிரான் கோதை' என்று அருளிச்செய்தாள். ஆக 'கந்யகாப்ரத₃ானம் பண்ணின உபகாரகர்' என்ற பொருளிலும் 'பட்டர் பிரான்' என்ற சொல் வந்திருக்கிறது என்பதை உணரலாம்.

''பட்டர் பிரான்—ப்₃ராஹ்மணர்க்கு உபகாரகரானவர், வேதப் பயன்கொள்ள வல்லவராகையாலே, வேத₃தாத்பர்யத்தை ஸர்வர்க்கும் உபகரிக்குமவர், பட்டர்களுக்கு வித்₃யாப்ரத₃ானம் பண்ணின உபகாரகர், மறைநான்கும் முன்னோதிய பட்டனுக்குக் கந்யகாப்ரத₃ானம் பண்ணின உபகாரகர்'' என்று அழகிய மணவாளப் பெருமாள் நாயனாரும் ஆறுயிரப்படி வ்யாக்யானத்தில் அருளிச்செய்திருக்கிறார்.

ஆக, ''பட்டர்'' ''பட்டர் பிரான்'' என்ற திருநாமங்கள் பிராம்மணோத்தமர், ஸ்வாமி, நிர்வாஹகர், பெரியாழ்வார், வைதிகோபகாரகர், கந்யகாப்ரத₃ானத்தாலே உபகாரகர் என்ற ஆறு பெருமைகளைச் சொல்லுவதாகப் பெரியாழ்வாராலும் ஆண்டாளாலும் அருளிச்செய்யப்பட்டிருப்பதை அனுப₄வித்தாம்.



ஸ்ரீ :

ஸ்ரீமதே ராமாநுஜாய நம :

ஸ்ரீமத்யை கோ₃தா₃யை நம :

    



# மதிப்புடைய சோலைக்கிளி



*விஷ்ணுசித்தன்*

(S/o வேதப்பிரான் பட்டர் கோவிந்தராஜய்யங்கார் ஸ்வாமி)

பாரதமெங்கும் பரந்து கிடக்கின்ற வைணவத் தலங்களை 'நூற்றெட்டு' என்று வகைப்படுத்துவர் ஆன்றோர். இத்தலங்கள் ஆழ்வார்களுடைய மங்களாசாஸனத்தால் ஏற்றம் பெற்றன. இவற்றி னுள்ளும் ஸ்ரீ வில்லிபுத்தூருக்கென்று தனிச்சிறப்புக்கள் பலவுண்டு. ஆழ்வார்கள் பன்னிருவரில் பெரியாழ்வார், ஆண்டாள் ஆகிய இருவரை வைணவ உலகிற்கு அளித்த பெருமையை உடையது இத்தலம். இத்தலத்தை முப்புரியூட்டிய தலம் என்று பெரியோர் போற்றுவர். பிரணவத்தைக் குறிக்கும் 'ஓம்' என்ற சொல் அகாரம், உகாரம், மகாரம் என்ற மூன்றின் சேர்க்கையாகும். இதில் அகாரம் பகவானையும், உகாரம் பிராட்டியையும், மகாரம் சேதனனையும் குறிக்கும். அகரப்பொருளாகிய பகவான் வடபெருங்கோயிலுடை யானும், உகரப்பொருளாகிய பூமிப்பிராட்டி ஆண்டாளும், மகரப் பொருளாகிய சேதனர் பெரியாழ்வாரும் எழுந்தருளியிருக்கும் திவ்விய க்ஷேத்திரம் இது என்பது ஒருபொருள்.

வடமொழியில் பிரமாணம், பிரமேயம், பிரமாதா என்று மூன்று சொற்கள் உண்டு. இவற்றில்,

பிரமேயம் — வடபெருங்கோயிலுடையான் (வடபத்ர சயனர்).

பிரமாணம் — திருப்பல்லாண்டு, பெரியாழ்வார் திருமொழி, திருப்பாவை, நாச்சியார் திருமொழி ஆகிய பிரபந்தங்கள்.

பிரமாதா — பெரியாழ்வார், ஆண்டாள்.

'முப்புரியூட்டிய தலம் என்பதற்கு இது இரண்டாவது பொருள். பெருமாள், பிராட்டி, சேதனன் ஆகிய மூவரும் ஒரே சேர்த்தியில் காட்சியளிப்பது ஸ்ரீ வில்லிபுத்தூரில் மட்டுமே; ஆண்டாள், ஸ்ரீரங்க மன்னர், கருடாழ்வார் ஆகிய மூவரும் ஒரே இருக்கையில் அமர்ந்து அடியவர்களுக்கு அருள்பாலிப்பது இத்தலத்துக்கே உரிய தனிச்சிறப்பு. இது மூன்றாவது பொருள். இதனாலன்றோ, ''வில்லி புத்தூரென்றொருகால் சொன்னார் கழற்கமலம் சூடினோம்'' என்று பாண்டிய பட்டர் கொண்டாடும் சிறப்புப் பெற்றது இவ்வூர்.

இத்தகைய வில்லிபுத்தூரின் பெருமையை விளங்க வைத்தவர்கள் பல்லாண்டு பாடிய பட்டர் பிரானும், திருப்பாவை பாடிய கோதை யாரும் ஆவர். இவ்விருவரில் ஆண்டாளுடைய வைபவத்தை ஈண்டு அனுபவிப்போம்.

ஆண்டாள் தன்னுடைய அவதாரஸ்தலமான ஸ்ரீ வில்லிபுத்தூரைப் பாடியிருப்பது ஒரே ஒரு பாசுரத்தால் மட்டுமே. நாச்சியார் திருமொழி யில் எம்பெருமானின் பிரிவாற்றுமையால் குயிலைநோக்கிக் கூறுவதாக அமைகிறது இப்பாசுரம்.

''மென்னடையன்னம் பரந்துவிளையாடும்
வில்லிபுத்தூருறைவான்றன்
பொன்னடி காண்பதோராசையினுலென்
பொருகயற் கண்ணிணை துஞ்சா
இன்னடிசிலொடு பாலமுதூட்டி
யெடுத்த வென்கோலக்கிளியை
உன்னெடு தோழமைக்கொள்ளுவன் குயிலே!
உலகளந்தான் வரக்கூவாய்.''

ஆண்டாளுடைய எல்லையற்ற பக்தியின் காரணமாக அவளை வடபெருங்கோயிலுடையானைக் கோவிலினுள் சென்று சேவிக்க அனுமதிக்கவில்லை என்று தெரிகிறது. நம்மாழ்வார் திருக்குறுங்குடி எம்பெருமானைப் பாடும்பொழுது, தலைவியின் நிலையில் நின்று பேசுகிறுர். ''நங்கள் கோலத் திருக்குறுங்குடி நம்பியை நான் கண்டபின் சங்கினேடும் நேமியோடும் தாமரைக் கண்களோடும், செங்கனிவாய் ஒன்றினேடும் செல்கின்றதென் நெஞ்சமே'' என்று எம்பெருமான் வடிவழகில் ஈடுபட்ட அவருடைய மனத்தை மீட்கும் வல்லமையில்லை என்று பேசுகிறுர். இங்கு ''செல்கின்றதென் நெஞ்சமே'' என்ற சொற்றெடரின் பொருள் ஆழ்ந்து அனுபவிக்கத் தக்கது. இம்முறையில் ஆண்டாளும் கோவிலினுள் சென்று சேவித்தால் எம்பெருமானின் சீலகுணத்திலே ஈடுபட்டு மோகித்துக்கிடப்பாள், பின்பு அவளை மீட்க இயலாது என்று அவளுடைய தோழியர் கருதினர் போலும். ஆண்டாளுடைய பாசுரம் நமக்குக் காட்டுவதும் அதுதான். ''ஓ குயிலே! நீ உலகளந்த பெருமானை இங்கு வரும்படி கூவினுல், இனிய சோற்றையும் பாலமுதையும் ஊட்டி வளர்க்கப்பெற்ற எனது அழகிய கிளியை உன்னெடு நட்புக்கொள்ளும்படி செய்வேன். ஸ்ரீ வில்லிபுத்தூரிலே எழுந்தருளியுள்ள எம்பெருமானுடைய அழகிய திருவடியைக் காணவேண்டுமென்ற ஆசையினுல் சண்டையிடும் இரண்டு கெண்டைகள் போன்ற எனது கண்கள் உறங்குகின்றன

வில்லை'' என்று ஆண்டாள் குயிலை நோக்கிக் கூறுகிருள். ஆண்டாள் வளர்த்த கிளி கோலக்கிளி. இன்றும் அர்ச்சாவதாரத்தில் ஆண்டாள் தனது வலக்கரத்தில் கிளியேந்தி நிற்பதைக் காணலாம். இது இப் பாசுரத்தின் கருத்தைப் பிரதிபலிக்கிறது.

கோலக் கிளியைப் பாடிய ஆண்டாளையே கிளியென்ருர் அடியவர் ஒருவர். ஆண்டாளுக்கும், கிளிக்கும் சிலேடை அமைத்துப் பாடிய வடமொழி சுலோகம் ஒன்றுண்டு. அது வருமாறு :

'' ஶ்யாமாம் த்₃விஜாதி₄பஸுதாம்
ஶ்ரவணாபி₄ராமமஞ்ஜுஸ்வநாம்
மது₃னமீஶ்வரஜம் ப₄ஜந்தீம் ।
கோ₃தே₃ கு₃ரோஸ்த்ரிஜக₃தாம்
கு₃ணஶாலிநீம் த்வாம் லீலாஶுகீம்
க்ருததி₄ய: ஸமுத₃ா ஹரந்தி ॥''

**ஶ்யாமாம்**

கிளி : 'மரகதம்போல் மடக்கிளி' என்றும், 'பைங்கிளி வண்ணன் சிரீதரன்' என்றும் கிளியை பகவானுடைய நிறத்துக்கு ஒப்பிட்டுச் சொல்லுகையாலே, இயற்கையான பச்சை நிறமுடையதாயிருக்கும்.

ஆண்டாள் : '' பஞ்சவர்ஷா தி₃வ்யரூபா '' என்று ஐந்து வயதுப் பெண்ணாகத் திருத்துழாயடியில் தோன்றிய இவ்வாண் டாள், கருநெய்தல்போன்ற நிறமுடையவளென்றும், இந்திரநீலக்கல்போன்ற நிறமுடையவளென்றும் நிக₃மாந்த மஹாதே₃சிகன் கோ₃தா₃ஸ்துதியில் அருளிச் செய்திருக்கையாலும் சியாமள நிறமாயிருக்கிருள்.

**த்₃விஜாதி₄பஸுதாம்**

கிளி : உயர்ந்த கிளியாகையாலே பட்சிகளிற் சிறந்த கிளியின் புதல்வியாயிருக்கும். இதற்கு முட்டையிடுதல், குஞ்சு பொறித்தல் என்று இருபிறப்பு உண்டு.

ஆண்டாள் : துவிஜகுல திலகரான பெரியாழ்வார் திருமகள். அத்துடன் பெரியாழ்வார் கருடாழ்வாரின் அம்சமாகையாலே, பட்சிராஜனின் மகளாகவும் விளங்குகிருள். பிராம்மணர்கள் இருபிறப்பாளர் என்று அழைக்கப்படுகின்றனர். உபநயனத்துக்கு முன்புள்ளது ஒருபிறப்பு. உபநயனத்துக்குப் பின்புள்ளது இரண்டாவது பிறப்பு.

### ஶ்ரவணஸு₂கா₂ம மஞ்ஜுஸ்வநாம்

கிளி காதுக்கினிமையான பேச்சை உடையது. "மென்கிளி போல் மிக மிழற்றும்" என்றும், "கிளிமொழி" என்றும் "கிளியினின்சொல்" என்றும் கிளியைப் பெரியோர் போற்றுவர்.

ஆண்டாள் : "மது₄ரா மது₄ராலாபா கிமாஹ மம ப₄ாமிநீ" என்று வால்மீகி 'மது₄ரமான பேச்சுக்களாலே தாபத்தைப் போக்குகிறவள்' என்று சொல்லுகையாலே, அழகான வாக்கையுடையவளாயிருக்கிருள். மேலும் 'வேதமனைத்துக்கும் வித்து' என்றபடி உபநிடதங்களின் சாரத்தை எளிய இனிய தமிழில் திருப்பாவை, நாச்சியார் திருமொழியாக அருளிச்செய்திருக்கிருள்.

### மத₃நமீஶ்வரஜம் ப₄ஜந்தீம்

கிளி : பகவானின் புதல்வஞன மன்மதனுக்கு வாகனமாகையாலே மதனனைச் சுமந்துகொண்டிருக்கும்.

ஆண்டாள் : "அநங்கதேவா உன்னையும் உம்பியையும் தொழுதேன்" "திருந்தவே நோற்கின்றேன் காமதேவா", "மந்திரத்தால் மன்மதனே உன்னை வணங்குகின்றேன்" "கருப்புவில் மலர்க்கணைக் காமவேளைக் கழலிணை பணிந்து" என்று நாச்சியார் திருமொழியில் அருளிச் செய்திருக்கையாலே எம்பெருமானை அடைவதற்கு மன்மதனை அடிபணிந்திருக்கிருள். இவ்வாறு ஆண்டாளைக் கிளிக்கு ஒப்பிட்டுப் பெரியோர் பகர்வர்.

ஆண்டாள் சாதாரணக் கிளியல்லள். பெரியாழ்வாருடைய பக்திப் பூங்காவிலே வளர்ந்த சோலைக்கிளி. அதிலும் அவள் தான் சூடிக் களைந்த மாலையை அரங்கனுக்கு அர்ப்பணித்து 'மதிப்புடைய சோலைக்கிளி" என்று பெருமைபெற்ருள். தந்தையோ, "உடுத்துக் களைந்த நின் பீதகவாடை உடுத்துக் கலத்ததுண்டு, தொடுத்த துழாய்மலர் சூடிக்களைந்தன சூடுமித் தொண்டர்களோம்" என்று எம்பெருமான் அனுப₄வித்த பொருட்களை ஆசைப்பட்டார். ஆனல் எம்பெருமானே, ஆண்டாள் அணிந்த மாலையை விரும்பி ஏற்றுப் பெருமைபெற்ருர். இதையே வேதாந்த தேசிகரும் தமது கோதா ஸ்துதியில் அழகாக அனுபவிக்கிருர் :

"த்வத்₃பு₄க்த மால்ய ஸௌரபீ₄க்ருத சாருமௌளே:
ஹித்வா பு₄ஜாந்தர க₃தாமபி வைஜயந்தீம் ।
பத்யுஸ்தவேஶ்வரி மித₂: ப்ரதிக₄ாதலோலா:
ப₃ர்ஹாதபத்ரருசிமாரசயந்தி ப்₄ருங்கா₃: ॥"

பகவான் வைஜயந்தி மாலையைத் தோளில் அணிந்திருக்கிறார். அதில் மொய்த்திருக்கும் வண்டுகள் தலையிலுள்ள ஆண்டாளுடைய மாலையின் வாசனையால் கவரப்பட்டுத் தோளைவிட்டுத் தலையிலுள்ள மாலையை மொய்க்கின்றன; அப்போது அவை மயிற்பீலிக்குடைபோல் விளங்குகின்றன என்பது இதன் கருத்து. ஆண்டாளுடைய மாலைக்கு வாசம் அதிகம் என்பது இதன்மூலம் பெறப்படுகிறது.

"சூடா₃பதே₃ந பரிக்₃ருஹ்ய தவோத்தரீயம்
மாலாமபி த்வத₃ளகைः அதி₄வாஸ்ய த₃த்தாம் ।
ப்ராயேண ரங்க₃பதிரேஷ பி₃ப₄ர்த்தி கோ₃ தே₃
ஸௌப₄ாக்₃யஸம்பத₃பி₄ஷேகமஹாதி₄காரம் ॥"

ஆண்டாள் அணிந்த மேலாடையையும், திருக்குழலிலே சூட்டி அதனால் வாசனையூட்டப்பட்ட மாலையையும் தலையில் அணிந்து அரங்கன் அழகு பெறுகிறார் என்பது இந்த ஶ்லோகத்தின் கருத்து.

வைஜயந்தி மாலையைத் தோளிலே அணிந்திருக்கிற எம்பெருமான் ஆண்டாளுடைய மாலையைத் தலையிலே அணிந்து தனிச் சிறப்பளிக்கிறான். இதனாலன்றோ திருக்கண்ணமங்கையாண்டான் ஆண்டாளை "மதிப்புடைய சோலைக்கிளி" என்று விருது அளித்துப் போற்றுகிறார். இத்தகைய ஆண்டாளை மகளாகப்பெற்றுப் பெரியாழ்வார் பெருமை அடைந்தார். "ஒரு மகள்தன்னையுடையேன் உலகம் நிறைந்த புகழால், திருமகள்போல வளர்த்தேன் செங்கண்மால்தான் கொண்டு போனான்" என்ற வரிகள் ஈண்டு குறிக்கொள்ளத்தக்கவை. 'செம்மையுடைய திருவரங்கர் தாம் பணித்த மெய்ம்மைப் பெருவார்த்தை விட்டுசித்தர் கேட்டிருப்பர்' என்றும், 'நல்ல என்தோழி! நாகணைமிசை நம்பரர், செல்வர் பெரியர் சிறுமானிடவர் நாம் செய்வதென்? வில்லிபுதுவை விட்டுசித்தர் தங்கள் தேவரை, வல்லபரிசு வருவிப்பரேல் அதுகாண்டுமே' என்று ஆண்டாளும் பெரியாழ்வாரைத் தந்தையாக மட்டுமின்றி நல்வழிகாட்டும் ஆசாரியனாகவும் ஏற்றுச் சிறப்பித்தாள்.

அனந்தாழ்வான் தமது கோ₃தா₃சது:ஶ்லோகியில் திருமகளும் ஆண்டாளுடைய பெருமைக்கு இணையில்லையென்று பேசுகிறார்.

மாதா சேத் துளஸீ பிதா யதி$_3$ தவ ஸ்ரீவிஷ்ணுசித்தோ மஹாந்
ப்$_4$ராதா சேத் யதிஶேக$_2$ர: ப்ரியதம: ஸ்ரீரங்க$_3$த$_4$ாமா யதி$_3$ ।
ஜ்ஞாதாரஸ்தநயாஸ் த்வது$_3$க்திஸரஸஸ்தந்யேந ஸம்வர்த்தி$_4$தா:
கோ$_3$தா$_3$தேவி! கத$_2$ம் த்வமந்ய ஸுலப$_4$ா ஸாத$_4$ாரணா ஸ்ரீரஸி ॥

கோ$_3$தா$_3$தேவியே ! தேவரீருக்குத் துளஸியானவள் மாதாவாகவும், மஹானான ஸ்ரீ விஷ்ணுசித்தராகிய பெரியாழ்வார் பிதாவாகவும், யதிகட்கிறைவரான எம்பெருமானார் அண்ணராகவும், ஸ்ரீரங்க$_3$நிலயனான ரங்க$_3$நாத$_2$ன் மணாளனாகவும், தேவரீருடைய தி$_3$வ்யப்ரப$_3$ந்த$_4$ங்களான திருப்பாவை, நாச்சியார் திருமொழிகளாகிற ரஸத்தோடு கூடின முலைப்பாலாலே நன்கு வளர்க்கப்பட்ட அறிவாளிகளான பூர்வாசார்யர்கள் பிள்ளைகளாகவும் ஆகும்போது தேவரீர் கிடைத்தற்கரியவரன்றோ. திருமகளைக் காட்டிலும் தனிச் சிறப்புப்பெற்று விளங்குகிறீர் என்பது கருத்து. எவ்வாறென்றால், திருமகள் பாற்கடலைத் தந்தையாகவும், நதிகளைத் தாயாகவும், சந்திரனைச் சகோதரனாகவும் பாற்கடல் நாதனைப் பதியாகவும் பிரமனைப் பிள்ளையாகவும் கொண்டவளாகையால் ஆண்டாளுக்கு ஒப்பல்ல என்று கருத்து.

| | திருமகள் | ஆண்டாள் |
|---|---|---|
| தாய் | நதிகள் | —துளஸி. இயற்கையிலேயே வாசனை உடையது. |
| தந்தை | சமுத்ரராஜன் | —பெரியாழ்வார் - கைங்கர்ய ஸ்ரீ உடையவர் "பொங்கும் பரிவால்" பகவானுக்கே பல்லாண்டு பாடியவர் |
| சகோதரன் | சந்திரன், அமிர்தம், ஆலகால விஷம் முதலியன. (சந்திரன் களங்கம் உடையவன், மேலும் மாதத்தில் ஒரு பட்சம் தேயும் இயல்பினன் — அதனால் எம்பெருமானாருக்கு ஒப்பல்ல) | —பூர்வாஷ்யகாரராகிய உடையவர் அழகருக்கு ஆண்டாள் செய்துகொண்ட பிரார்த்தனையை நிறைவேற்றி ஆண்டாளால் 'கோயில்அண்ணரோ!' என்று கொண்டாடப்பட்ட பெருமையை உடையவர். அதனால் கோயிலண்ணர் என்றும், திருப்பாவையில் கொண்ட ஈடுபாட்டால் "திருப்பாவை ஜீயர்" என்றும் பெயர் பெற்றவர். |
| மணாளன் | க்ஷீராப்திநாதன் (குணபூர்ணரான பெரியபெருமாளைக் | —திருவரங்கச்செல்வன் ("எழிலுடைய அம்மனைமீர் என்னரங்கத்தின்னமுதர், குழலழகர், வாயழகர், கண்ண |

| | காட்டிலும் குணம் குறைந்தவர்) | முகர், கொப்பூழில் எழுகமலப்பூவ முகர்'' என்று ஆண்டாள் கொண் டாடும்படி அழகே உருவானவர்) |
|---|---|---|
| பிள்ளை | பிரமன் | அறிவாளிகளான பூர்வாசார்யர்கள். |

மேற்கூறியவற்றுல் பிராட்டிமாருள் ஆண்டாளே மதிப்புடையவ ளாக விளங்குகிருள் என்பது தெளிவு.

பூமிப்பிராட்டி 'குன்றுத வாழ்வான வைகுந்த வான்போகந்தன்னை இகழ்ந்து' ஆழ்வார் திருமகளாக அவதரித்தாள். கோதை என்று பெயர் சூட்டப்பட்ட அவள் இளமையிலேயே எம்பெருமானிடம் கொண்ட பக்தியால் 'ஆண்டாள்' என்றும், தான் சூடிக்களைந்த மாலையை அரங்கனுக்கு ஸமர்ப்பித்தமையால் 'சூடிக்கொடுத்த சுடர்க் கொடி' என்றும் அழைக்கும் சிறப்புப்பெற்றுள். 'அஞ்சுகுடிக்கொரு சந்ததி'யென்றும், 'வேயர்பயந்த விளக்கு' என்றும் பிறந்த குலத் தோர் ஆண்டாளைக் கொண்டாடினர். பிறந்த குலம் மட்டுமின்றி பிறந்தநாடும் அவளால் பெருமைபெற்றது. 'திருமல்லி வளநாடி', 'மல்லிநாடாண்ட மடமயில்' என்று ஆன்றோர் போற்றினர். எல்லா வற்றிற்கும் மேலாக, தென்னரங்கருக்குத் தான் அணிந்த மாலையை அளித்து, அதனுல் 'மதிப்புடைய சோலைக்கிளி'யாக விளங்குவது ஆண்டாளுக்கு மட்டுமே கிடைத்த பெரும்பாக்கியமாகும். இதனுல் தான் மணவாளமாமுனிகள், ''ஆண்டாள் பிறந்த திருவாடிப்பூரத் திற்கு எந்தநாளும் ஒப்பாகாது; ஏனென்றுல் ஆண்டாளுக்கு இணை எவருமில்லை'' என்று போற்றினர்.

இத்தகைய மதிப்பையுடைய சோலைக்கிளியாம் ஆண்டாளின் மலரடிகளை வணங்கி எங்கும் திருவருள்பெற்று இன்புறுவோம்.

கோலச்சுரிசங்கை மாயன்செவ்வாயின்குணம் வினவும்
சீலத்தினள் தென்றிருமல்லிநாடி செழுங்குழல்மேல்
மாலைத் தொடை தென்னரங்கருக்கீயும் மதிப்புடைய
சோலைக்கிளியவள் தூயநற்பாதம் துணை நமக்கே.

ஆண்டாள் திருவடிகளே ஶரணம்.
எம்பெருமானுர் திருவடிகளே ஶரணம்.
ஜீயர் திருவடிகளே ஶரணம்.



ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
ஸ்ரீவிஷ்ணுசித்த குருரவே நம:



# "திருவெள்ளறை"

ஸ்ரீ உ. வே திருவெள்ளறை அம்மாள் ஸ்ரீநிவாஸாசார்ய ஸ்வாமி,
மேலத்திருமாளிகை, திருவெள்ளறை.

பரத்வாதி பஞ்சகம்:

ஸ்ரிய:பதியான எம்பெருமானுக்கு, பரம், வ்யூஹம், விபவம், அந்தர்யாமி, அர்ச்சை என்பவை ஐந்து ரூபங்கள். பரம் என்பது ஸ்ரீவைகுண்டத்தில் எழுந்தருளியிருக்கும் நிலை. வ்யூஹம் என்பது திருப்பாற்கடலில் விளங்கும் நிலை. விபவம் என்பது ராமன், கிருஷ்ணன் முதலிய அவதாரத் திருமேனி. அந்தர்யாமி என்பது ஒவ்வொருவருடைய ஹ்ருதயத்திலும் அமர்ந்து ஜீவாத்மாவை நியமித்து நிற்கும் திருமேனி இந்தத் திருமேனியை யோகம் செய்பவர்கள்தான் காணமுடியும். அர்ச்சை என்பது ஆங்காங்கு திவ்ய தேசங்களில் எழுந்தருளியிருக்கும் நிலை. "யே யதா மாம் ப்ரபத்யந்தே தாம்ஸ்தைதைவ பஜாம்யஹம்" என்று கீதையில் தானே அருளினபடி தமருகந்த உருவத்தையும், பேரையும் கொண்டு பல திவ்ய தேசங்களில் எழுந்தருளியிருக்கின்றான். பிள்ளை லோகாசார்யர் பரத்வாதி ரூபங்களுக்கு, 'பாட்டுக் கேட்குமிடம், கூப்பீடு கேட்குமிடம், குதித்தவிடம், வளைத்தவிடம், ஊட்டுமிடம்" என்று ஸ்தல நிர்த்தேசம் பண்ணுகின்றார். பாட்டுக் கேட்குமிடம் — ஸாமகானம் கேட்குமிடமான திருநாடு. கூப்பீடுகேட்குமிடம்—அமரர்களின் ஆர்த்தநாதமும் கேட்கச் செவிகொடுத்துக்கொண்டு கண்வளருமிடமான திருப்பாற்கடல். குதித்தவிடம்-விபவாவதார ஸ்தலங்கள். வளைத்தவிடம்—"ஸம்ஸாரம் கிழங்கெடுத்தாலல்லது பேரேன்" என்று இட்ட அடி பேராமல் வளைத்துக் கொண்டிருக்கிற அர்ச்சாவதார ஸ்தலங்கள். ஊட்டுமிடம்—ஹ்ருதய கமலத்திலேயிருந்து தானுகந்தார்க்குத் தன்னழகை புஜிப்பிக்கும் அந்தர்யாமித்வ ஸ்தலம். "ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலா அடிமை செய்யவேண்டும் நாம்" என்கிறபடியே கைங்கர்யானுஷ்டானத்திற்கு அர்ச்சாவதாரமே இலக்கானது. அர்ச்சாவதாரத்திற்கு 'பின்னானார் வணங்குமிடம்' என்று ஒரு திருநாமம் உண்டு. பரத்வத்திலும், வ்யூஹத்திலும், விபவங்களிலும், அந்தர்யாமித்வத்திலும் அந்வயிக்கப் பெறாதவர்கள் இங்கு 'பின்னானார்'

எனப்படுகின்றனர். அவர்களுக்காக அர்ச்சாவதாரமாக உகந்தருளின நிலங்களிலே எழுந்தருளியிருக்கிருன் எம்பெருமான். இந்த அர்ச்சைத் திருமேனிகளில் மிகவும் ஈடுபட்டவர்கள் ஆழ்வார்கள். அவர்கள், ''கண்டியூர் அரங்கம் மெய்யம் கச்சி பேர் மல்லையென்று மண்டினூர் உய்யலல்லால் மற்றையார்க்குய்யலாமே'' என்றபடி எம்பெருமான் உகந்தருளின பதிகள்தொறும் புக்குநின்று அவ்வெம்பெருமானை ஸேவிக்கப்பெற்று, இன்பம் மேலிட்டுச் செந்தமிழ் இன்பப் பாவினைத் திருவாய்மலர்ந்தருளினர். ''வேதத்திற்கு எம்பெருமானது பரத்வத்திலே நோக்கு ; பாஞ்சராத்ரங்களுக்கு வ்யூஹத்திலே நோக்கு ; இதிஹாஸ புராணங்களுக்கு விபவத்திலே நோக்கு ; தர்ம சாஸ்த்ரங்கள் என்கிற ஸ்ம்ருதிகளுக்கு அந்தர்யாமியிலே நோக்கு ; திவ்ய ப்ரபந்தங்களுக்கு அர்ச்சையிலே நோக்கு.'' [ஆசார்ய ஹ்ருதயம், சூர்ணை 70ன் கருத்து ]

இவ்வாறு ஆழ்வார்களின் மங்களாசாஸனம் பெற்ற திவ்ய தேசங்கள் நூற்றெட்டு. அவற்றுள் 'ஆதி திருவெள்ளறை' என்று போற்றப்படும் திவ்ய தேசம் முதன்மையானது. 'திரு' என்பது உயர்வைக் குறிக்கும் அடைமொழி. வெள்ளறை — வெண்மையான பாறைகளால் ஆகிய மலை. வடமொழியில் 'ஶ்வேதகிரி' எனப்படும். ப்ரபந்நாம்ருதத்தில் இத்திவ்யதேசம் ''மஹிதக்ஷேத்ரம்'' எனப்படுகிறது. 'உத்தமக்ஷேத்ரம்' என்று ஸங்கல்பத்தில் வழங்கப்படுகிறது.

போதமர் செல்வக் கொழுந்து புணர் திருவெள்ளறையான் :

இத்திவ்ய தேசத்தில் 'பங்கயச்செல்வி' என்ற நாச்சியாரே ப்ரத₄ான பூ₄தையாவாள். 'பூங்கிடங்கில் தவம் செய்யும் பொற்கொடியாள் வாழியே' என்ற வாழித்திருநாமப்படி இங்குள்ள பூங்கிணற்றில் தவம் செய்துவந்த ஸ்ரீதே₃விக்கு எம்பெருமான் செந்தாமரைக் கண்ணராய் ஸேவை ஸாதித்தான். தன் உரிமைகள் எல்லாவற்றையும் அவளுக்குக் கொடுத்து ''போதமர் செல்வக் கொழுந்து புணர் திருவெள்ளறையா''னாக விளங்குகின்றான். கொழுந்து கொள் கொம்பு மூடப்படர்ந்து ப்ரதா₄நமாகக் காட்சியளிப்பதுபோலே பங்கயச் செல்வி ப்ரதா₄நையாயிருக்கிருள். ''செந்தாமரைக் கண்ணர் அப்ரதா₄நராய் இவளே அவ்வூருக்கு ப்ரதா₄நையாயிருக்கும்படி'' என்பது வ்யாக்₂யான ஸ்ரீ ஸூக்தி. கோயில் நிலங்களின் பட்டாக்கள் பங்கயச் செல்வியின் பெயரிலேயே இருக்கின்றன. இங்கு எம்பெருமானர் காலத்திலிருந்து தொடர்ந்து நெடுங்காலம் ஆஶ்ரம ஸ்வீகாரம் பெற்று விளங்கி வந்த ஜீயர்களுக்கு 'பங்கயச் செல்வி ஜீயர்'

என்றே திருநாமம். பங்கயச் செல்வி இல்லாமல் பெருமாள் புறப்பாடே கிடையாது. மேலும் பங்கயச்செல்வி முன்னே எழுந்தருள, எம்பெருமான் பின்னே எழுந்தருள்வான்.

புராண வரலாறு :

அயோத்தி வேந்தரான சிபிச்சக்ரவர்த்தி திருவெள்ளறையில் சிலகாலம் வந்து தங்கியிருந்தார். ஒருநாள் ஶ்வேதவராஹம் ஒன்று அங்குத்தோன்றவே, படைவீரர்களுடன் சக்ரவர்த்தி அதைத் துரத்த முற்பட்டார். அது தன் உருவத்தை மிகவும் சுருக்கிக்கொண்டு அருகிலிருந்த புற்றில் மறைந்தது. சிபிமன்னர் வியந்து, அருகே தவம் செய்துகொண்டிருந்த மார்க்கண்டேய முனிவரைக்கண்டு வணங்கி அவர் ஆணைப்படி அப்புற்றுக்குப் பாலால் திருமஞ்சனம் செய்தார். அப்போது எம்பெருமான், மார்க்கண்டேயர், சிபிச் சக்ரவர்த்தி ஆகியோருக்கு ப்ரயோக சக்ரஹஸ்தனாய் ஸேவை ஸாதித்தான். "சுவேதவராகத்துருவாய்த் தோன்றினான் வாழியே" என்பது இவ்வெம்பெருமானின் வாழித்திருநாமம்.

பூர்வசிக ஸ்ரீவைஷ்ணவ ஸ்வாமிகளின் ப்ரதிஷ்டை :

கங்கைக்கும், யமுனைக்கும் நடுவில் வாழ்ந்து வந்த பூர்வசிக ஸ்ரீவைஷ்ணவர்களைத் திருவெள்ளறையில் குடியேற்றும்படி சிபிமன்னரிடம் நியமித்தார் மார்க்கண்டேயர். அந்த நியமனத்தைச் சிரமேற் கொண்டு அந்த ஸ்ரீவைஷ்ணவர்களிடம் சென்று திருவெள்ளறையில் குடியேறும்படி பிரார்த்தித்தார் சிபி மன்னர். அவர்களும் உடனே புறப்பட்டனர். இவ்வாறு மூவாயிரத்து எழுநூறு குடும்பங்கள் சிபிச் சக்ரவர்த்தியால் திருவெள்ளறைக்கு அழைத்துவரப்பட்டு ப்ரதிஷ்டை செய்யப்பட்டன. ப்ரதிஷ்டை செய்யப்பட்ட மூவாயிரத்து எழுநூறு ஸ்வாமிகளில் ஒருவர் ப்ரதிஷ்டையான தினத்திலேயே சரீரத்தைவிட்டு மோக்ஷமடைந்தார். அவருடைய பிரிவால் மிகவும் வருத்தமடைந்தார் சிபி மன்னர். சிபியின் தாபத்தைத் தீர்ப்பதற்காகப் புண்டரீகாக்ஷர் ஒரு ப்ராஹ்மணவேஷம் பூண்டு சிபியிடம் வந்து, "நீ கவலைப்படாதே; என்னையும் சேர்த்தே 3700 எனக் கணக்கிட்டேன் நான். அவருக்குப் பதில் நானிருக்கிறேன்" என்றார். இவ்வரலாறு புராண ப்ரஸித்தம். "பாங்குடன் மூவாயிரத்து எழுநூற்றுள் வாழியே" என்று தாயார் வாழித்திருநாமத்திலும் உள்ளது. இத்திவ்யதேசத்திலுள்ள ஸ்ரீவைஷ்ணவர்கள் குசஹஸ்தி தீர்த்தத்தில் ஆவணி அவிட்டத்தன்று அனுஷ்டானத்தை முடித்தபிறகு, கோயில் மேளவாத்யங்களுடன் கோயிலை அடைவார்கள். அங்கு ஆவணி அவிட்டத்தன்று செய்ய

வேண்டிய ஹோமம் நடைபெறும். இன்றும் அவ்வாறே நடைபெறுகிறது. கோவிலில் நடைபெறுவதற்குக் காரணம்—பெருமாள் சிபிச் சக்ரவர்த்தியிடம், ''நானும் 3700 ஸ்ரீவைஷ்ணவர்களில் ஒருவனாக இருக்கிறேன்'' என்று கூறியதேயாகும். ஆவணி அவிட்ட விசேஷத்திற்காகக் கோவில் திருமடைப்பள்ளியில் சுண்டல் பண்ணி வினியோகம் செய்யப்படுகிறது. இதற்கு மான்யங்கள் ஒதுக்கப்பட்டுள்ளன. மேற்கண்டவாறு சிபிச்சக்ரவர்த்தியால் இங்கு ப்ரதிஷ்டை செய்யப்பட்ட ஸ்ரீவைஷ்ணவர்கள் புண்டரீகாக்ஷனுக்கு வழுவிலா அடிமை செய்து கொண்டு வெகுகாலம் இருந்தனர். காலக்ரமத்தில் திருக்கோஷ்டியூர், ஸ்ரீவில்லிபுத்தூர் முதலிய திவ்ய தேசங்களுக்கும் பலர் குடிபெயர்ந்து வாழ்ந்து வரலாயினர். எம்பெருமானார் மேலக்கோட்டை திருநாராயண புரத்தை ப்ரதிஷ்டை செய்யும்போது திருவெள்ளறையிலிருந்து 52 குடும்பங்களை வரவழைத்து, அவர்களைத் திருநாரணனுக்கு அந்தரங்க$_3$ கைங்கர்ய பரர்களாக நியமித்தார். அவர்களே 'ஐம்பத்திருவர்' என்று இன்றும் வழங்கப்படுகின்றனர்.

நீலீவனம் :

ஶ்வேதகிரிக்குப் பக்கத்தில் நீலீவனம் ஒன்று இருந்தது. அதில் ருஷிகளின் ஆச்ரமங்கள் பல விளங்கின. 'இந்த வனம், ஸ்வர்க்கத்தின் உத்$_3$யானத்தினுடைய ஸம்பத்தையும் அல்பமாக எண்ணும்படி அதி மநோஹரமாயுள்ளது' என்று தேசிகன் ஹம்ஸ ஸந்தேசத்தில் குறிப்பிடுகிறார். ருத்$_3$ரன் ப்$_3$ரஹ்மஹத்தியினின்றும் பங்கஜநாத$_2$னின் இன்னருளால் விடுபட்டான். அதனால் ஸந்தோஷமடைந்த ருத்$_3$ரன் இந்த நீலீவனத்தில் ஓர் ஆலயங்கொண்டு நீலீவனேஶ்வரர் என்ற பெயருடன் பங்கஜநாதனை எப்பொழுதும் ஸேவித்து வருகிறான். இந்த வனமே இப்போது 'திருப்பைஞ்ஞீலி' என அழைக்கப்படுகிறது. ''பொருநீலிவனத்தில் வந்த பூமகளார் வாழியே'' என்று தாயார் வாழித்திருநாமத்தில் உள்ளது.

தீர்த்த விசேஷம் :

தீர்த்த$_2$மாவது தான் பரிசுத்தமுமாய், தன்னை ஸ்பர்சித்தாரும் பரிசுத்தராம்படி பண்ணுவது. எம்பெருமானை 'தீர்த்தன்' என்கிறார் நம்மாழ்வார். 'ஸ்வவ்யதிரிக்தர்க்கெல்லாம் சுத்தியை விளைக்குமவன் தீர்த்தன்' என்றபடி. க$_3$ங்க$_3$ாத$_4$ரனுக்கு ஸ்ரீபாத$_3$ தீர்த்த$_2$த்தால் சுத்தியை விளைவித்தான் தீர்த்த$_2$னாகிய எம்பெருமான். ஒவ்வொரு திவ்ய தேசத்திலும் தீர்த்தனைப்போல் தீர்த்த$_2$த்துக்கும் விசேஷம் உண்டு. திருவெள்ளறையில் 'பஞ்ச தீர்த்த$_2$ங்கள்' என்று போற்றப்படும் ஐந்து தீர்த்தங்கள் இருக்கின்றன. அவை—வராஹ தீர்த்த$_2$ம்.

மணிகர்ணிகா தீர்த்தமும், குசஹஸ்தி தீர்த்தமும், பத்ம தீர்த்தமும், க்ஷீரபுஷ்கரிணி. குழந்தையில்லாதவர்கள் கார்த்திகை ஞாயிற்றுக் கிழமையன்று இவற்றில் தீர்த்தமாடினல், அவர்களுக்குக் குழந்தை ஏற்படும் என்பது புராண ப்ரஸித்தமும் அனுபவமும் ஆகும். மேலும் கொடிய நோய்கள், பேய், பிசாசு முதலியவை அண்டா. குசஹஸ்தி தீர்த்தத்தில் அம்ருதம் வைக்கப்பட்டிருப்பதாக ஸ்தலபுராணம் கூறுகிறது. திருவீதி ப்ரதக்ஷிணத்தில் 'ஸ்வஸ்திக்குளம்' ஒன்றிருக் கிறது. அதற்குச் சக்ரதீர்த்தம் என்றும், 'மாமியார் நாட்டுப்பெண்குளம்' என்றும் பெயர். 'பாலூற்று' என்ற பெயருடன் ஒரு கிணறு இருக்கிறது, பெருமாள் திருமண் இட்டுக்கொள்ளத் தீர்த்தத்திற்காகக் கீழே கைவைத்தவுடன் தோன்றிய கிணறு இது என்று ஊரார் சொல்லுகின்றனர். இதில் தீர்த்தம் பாலைப்போன்ற நிறத்துடன் மிகுந்த சுவையுடன் இப்போதும் விளங்குகிறது.

பெரியாழ்வார் மங்களாசாஸனம் :

எம்பெருமானல் மயர்வற மதிநலமருளப்பெற்ற பெரியாழ்வார், கண்ணனிடத்தில் உள்ள ப்ரேமத்தின் கனத்தால் அவனுடைய லீலைகள் அனைத்தையும் நேரே அனுபவித்துப் பாசுரமிடுகிருர். தாம் யசோதை யாகிவிடுகிருர். கண்ணனுக்கு நீராட்டிக் குழல்வாரிப் பூச்சூட்டி முடித்தாள் யசோதை, தன் கண்ணல் அவனைப் பார்க்கிருள். தான் காண்பதிலேயே குழந்தைக்கு த்ருஷ்டி தோஷம் வருமோ என்ற அச்சம் அவளுக்கு. மேலும் அந்திப்போது நெருங்குகிறது. கொடிய தேவதைகள் திரியும் காலமது. இதையெல்லாம் நினைத்துக் காப்பிட விரும்பிக் கண்ணனை அழைக்கிருள். திருவெள்ளறைச் செந்தாமரைக் கண்ணனைக் காப்பிடல் பதிகத்திற்கு விஷயமாக்கிக் கொள்கிருர் யசோதை வடிவுகொண்ட பெரியாழ்வார். இவ்வெம்பெருமானுக்கு இப்பதிகம் பெறும் பாக்யந்தான் என்னே!

இப்பதிகம் நித்யானுஸந்தானத்தில் விளங்குவது. "த்ருஷ்டி தோஷம் வருமோ"? என்று மிகவும் அஞ்சிய யசோதையான பெரியாழ்வாரின் அச்சம் நீங்கும்படியாக விளங்குவதால், எல்லா திவ்ய தேசத்து ஸ்வாமிகளுடையவும் மங்களாசாஸனம் இப்பெருமானுக்கு நித்யமும் உண்டு. திருவெள்ளறை, பூர்வசிக ஸ்ரீவைஷ்ணவர்களுக்குத் தலைநகர் ஸ்தானத்தில் விளங்குவதால், பூர்வசிக ஆழ்வார்களில் தலைவரான பெரியாழ்வார், இவ்வெம்பெருமான் விஷயமான பதிகத்தை ஸ்ரீவைஷ்ணவர்கள் அனைவரும் நித்யமும் அனுஸந்திக்கவேண்டும் என்ற காரணத்தால் இப்பதிகத்துக்கு இவ்வெம்பெருமானை விஷயமாக்கினர் போலும்!

மேலும் இன்னொரு விசேஷம் உண்டு. பெரியாழ்வார் முழுப் பதிகத்துக்கும் விஷயமாக இத்திவ்ய தேசத்தையே முதலில் கொண்டார். ஆகவே நாலாயிர அடைவில் 'ஆதி திருவெள்ளறை' என்பதற்குச்சேர இத்திவ்யதேசமே முதலிடம் வகிக்கிறது. பிராட்டியின் புருஷகாரத்தோடுதான் எதையும் ஆரம்பிக்கவேண்டும் என்ற சம்ப்ரதாயப்படி, முழுப்பதிக விஷயம்பெறும் முதல் திவ்ய தேசமாகை யால் 'போதமர் செல்வக் கொழுந்து புணர் திருவெள்ளறையான்' என்று பிராட்டியுடன் இவ்வெம்பெருமானைச் சொல்லாா நின்றேத்தி வாழ்த்துகின்றார் ஆழ்வார். [போதமர் செல்வக்கொழுந்து—பங்கயச் செல்வி]

'சந்திரன் மாளிகை சேரும் சதுரர்கள் வெள்ளறை, மஞ்சு தவழ் மணிமாட மதிள் திருவெள்ளறை, முப்போதும் வானவரேத்தும் முனிவர்கள் வெள்ளறை, நல்லார்கள் வெள்ளறை, ஒளியுடைச் செம்பொன்மதிள் வெள்ளறை' என்றெல்லாம் இத்திவ்ய தேசம்பற்றிப் பெருமையாகப் பாசுரமிடுகிறார் பெரியாழ்வார். இந்தப் பதிகத்தில் ஒரு பாசுரத்தின் ஓரடியைக் கற்றாலும் பாவங்கள் பறந்து போகும் என்கிறார். முழுப்பதிகம் கற்றவர் பெறும் பயனைக் கூறவேண்டுமோ ?

திருமங்கையாழ்வார் மங்களாசாஸனம் :

திருமங்கையாழ்வார் தமது பாசுரங்களின் முன்னிரண்டு அடிகளில், எம்பெருமான் அடியாரை ரக்ஷிக்கும் திறத்தையும், பின்னிரண்டு அடிகளில் திவ்ய தேசங்களின் மாண்பையும் அனுபவித்தல் வழக்கம். இவ்வாறே திருவெள்ளறைப் பதிகமும் அமைந்திருக்கின்றது. இத் திருமொழிக்கு வ்யாக்₂யானம் அனுக்₃ரஹிக்கும் பெரியவாச்சான்பிள்ளை, ''இவ்வூரில் பதா₃ர்த்த₂மடங்கலும் பரார்த்த₂மாயாய்த்திருப்பது. தனக்காயிருக்குமதன்றி, பிறர்க்காயிருக்கையே தனக்குப் பேருயிருக்கை'' என்கிறார். இங்கு வீசும் தென்றல் காற்றின்படிகளைப் பரக்க அனுபவிக்கிறார் ஆழ்வார். இதை விவரிக்கிறார் வ்யாக்₂யாதா— ''ஶைத்ய, ஸௌரப்₄ய, ஸௌகு₃ந்த்₄ய, மார்த்த₃வங்களை உடைத் தாயிறே காற்றிருப்பது'' என்று. தேசிகனும் ஹம்ஸஸந்தே₃ஶத்தில், ''இவ்வூரில் காற்றானது மன்மத₂னுக்குக் கிங்கர க்ருத்யத்தைச் செய்கிறது'' என்கிறார். இங்கு வீசும் காற்று பல நோய்களைப் போக்கவல்லது.

தென்றலின் படிகளையும், மற்றும் மரங்கள், கொடிகள், பொழில்கள் ஆகியவை பற்றியும் ஆழ்வார்கள் பரக்கப் பேசுவதற்குக் காரணம்— ''உகந்தருளின நிலங்களிலே மெய்யே ப்ரதிபத்தி விளைந்தார்க்கு அங்குள்ளவையெல்லாம் உத்₃தே₃ஶ்யமாய்த் தோற்றுமிறே'' (மானேய் நோக்கு ஈட்டு ஸ்ரீ ஸூக்தி) ''ப்ராப்ய பூ₄மியிலுள்ளவை எல்லாம் விஶேஷஜ்ஞரானவர்களுக்கு போ₄க்₃யமாயிறேயிருப்பது'' (பெரியாழ்வார் திருமொழி வ்யாக்₂யானம் 4—9—3) என்பதாகும்.

ஸ்ரீரங்கநாதனை அனுபவிக்க விரும்பிய பராசரபட்டரும் திர்யக்குகளையும், ஸ்தாவரங்களையும் ஸ்தோத்ரம் பண்ணி வணங்குகின்றார்.

பிறந்தகத்தில் நின்றும் புக்ககம் புறப்படுகின்ற பெண்பிள்ளை, தான் நெடுநாள் வஸித்தவிடத்திலே தன்னோடு மிகவும் பழகிய பெண்களிடம் சென்று, ''நான் போய்வருகிறேன்'' என்று சொல்லி வருவதுண்டு. அதேபோல இவ்வாழ்வாரும் தம் புக்ககமாகிய பரமபதத்தின் பயணத்திற்குச் சித்தமாய் விட்டபடியால், தமக்கு மிக்க ஈடுபாட்டுக்கிடமான சில திருப்பதிகளில் சொல்லிக்கொள்ளப் புறப்படுகிறார் 'ஒரு நல்சுற்றம்' என்ற திருமொழியில், இவ்விதம் ஆழ்வாரின் முக்கிய ஈடுபாட்டுக்கிடமான சில திருப்பதிகளில் திருவெள்ளறையும் இடம்பெற்றது.

திருமடலில் இடம்பெறுவது சிறப்புடையது என்று பெரியோர் பகர்வர். இவ்வெம்பெருமான் இருதிருமடல்களிலும் இடம்பெறுகிறான். ''ஆழ்வார் பேசநின்ற எம்பெருமான்'' என்று பட்டம்பெறுவதைக் காட்டிலும் ''ஆழ்வார் ஏசநின்ற எம்பெருமான்'' என்று பட்டம் பெறுவதை விரும்புகின்றான் எம்பெருமான்! ''இன்னமங்கே நட நம்பி நீயே, வைகி எம்சேரி வரவொழி நீ, என்னுடைய பந்தும் கழலும் தந்துபோகுநம்பீ, கழகம் ஏறேல்நம்பி, இக்காலங்கள் யாமுமக்கு ஏதொன்றுமல்லோம்'' என்று பிராட்டிமார் தசையடைந்து ப்ரணயரோஷம் தலையெடுத்த ஆழ்வார்கள் ஏசினால், ''மெய்ம்மை சொல்லி முகம்நோக்கி விடைதான் தருமேல் மிகநன்றே'' என்றாற்போல் இதுதன்னையும் பெருமையாகக்கொள்கிறான் கண்ணனெம்பெருமான்.

தேசிகர்தம் மங்களாஶாஸனம் :

தேசிகர் தமது 'ஹம்ஸஸந்தேசம்' என்கிற க்ரந்தத்தில் முறையே திருமலை, காஞ்சீபுரம், திருவெள்ளறை, ஸ்ரீரங்கம், திருமாலிருஞ்சோலைமலை ஆகிய ஐந்து திவ்யதேசங்களை மங்களாஶாஸனம் செய்கின்றார். அதாவது இந்த ஐந்து திவ்யதேசங்களின் பெருமைகளைத் தாம் தூதுவிடும் ஹம்ஸத்திடம் கூறுகின்றார். இந்த ஐந்து திவ்யதேசங்களைப்பற்றி ப்ரஸ்தாவிப்பதற்குக் காரணம் கீழ்க்கண்டவாறு இருக்க ஔசித்யம் உள்ளது. திருமலைமாலின் திருமணி அம்சமாய் ஸ்வாமி அவதரித்தவராகையால், அதற்குச் சேர முதலில் திருமலையின் பெருமைகளை ஹம்ஸத்திடம் கூறுகின்றார். ஸ்வாமியின் அவதாரஸ்தலம் காஞ்சீபுரமாகையால், பிறகு காஞ்சியின் பெருமைகளைக் கூறுகின்றார். ஸ்வாமிக்கு எங்களாழ்வான் பரமாசார்யராகையால் அவருடைய அவதாரஸ்தலமான திருவெள்ளறையை அநுபவிக்கின்றார். அடுத்து, பூலோகவைகுண்டமாயும், ஆழ்வாராசார்யர்கள் மண்டின திவ்யதேசமாயும் ஸ்ரீரங்கம் விளங்குவதால் அதை

அனுபவிக்கின்றார். 'தென்னனுயர் பொருப்பும் தெய்வவடமலையும். என்னுமிவையே முலையா வடிவமைந்த' என்றபடி இருமலைகளின் சேர்த்தியை நோக்கித் திருமாலிருஞ்சோலைமலையைப்பற்றிக் கூறுகின்றார் அடுத்தபடி.

எம்பெருமானுடைய திவ்யாத்ம ஸ்வரூபம் ஸ்வயம் ப்ரகாசமாய் ஜ்ஞானமயமாயிருப்பதால் 'ஞானச்சுடரே' என்று திருவெள்ளறை எம்பெருமானை அழைக்கிறார் பெரியாழ்வார். திருமங்கையாழ்வார் இவ்வெம்பெருமானை "பரிமுகமாய் இசைகொள் வேதநூல் என்றிவை பயந்தவனே!" என்கிறார். தேசிகனும் இவ்வெம்பெருமானை "ஸ்வயம் ப்ரகாசமானவர். தம்மை அண்டின புருஷர்களின் அஜ்ஞானக் கூட்டங்களைப் போக்கடிப்பவர்" என்கிறார்.

இவ்வாறு கண்டவர் கண்குளிரும்படியாகவும், கற்றவர் தெற்றி வரும்படியாகவும் வெள்ளறையுள் கல்லறைமேல் பொன்போல் விளங்குகின்றான் எம்பெருமான்.

திருவெள்ளறையில் அவதரித்த ஆசார்யர்கள் :

சில திருப்பதிகள் ஆழ்வார்களின் மங்களாசாஸனம் பெற்று விளங்கும். சில திருப்பதிகள் ஆழ்வாராசார்யர்கள் அவதரித்த இடமாக விளங்கும். திருவெள்ளறை இவ்விரண்டாலும் பெருமை பெற்றது. உய்யக்கொண்டார், எங்களாழ்வான் என்ற இரு மஹாசார்யர்கள் இங்குத் திருவவதாரம் செய்தனர். உய்யக் கொண்டார் அவதரிக்கவில்லையானல் தெளியாத மறை நிலங்களைத் (ஸம்ஸ்க்ருத சாஸ்த்ரங்களைத்) தெளியவுதவும் திவ்ய ப்ரபந்தங்கள் நமக்குக் கிடைத்திருக்காது. ஸ்ரீமந் நாதமுனிகளிடமிருந்து அவர் சிஷ்யரான குருகைக் காவலப்பன் ப₄க்தியோகத்தைப் பெற்றார். மற்றொரு சிஷ்யரான புண்டரீகாக்ஷர் (உய்யக்கொண்டார்) 'பிணங் கிடக்க மணம் புணர்வாருண்டோ?' என்று கூறி உலகமே உய்யும் படியான திவ்ய ப்ரபந்தங்களை உபதேசம்பெற்று உலகுக்கு வழங்கினர். அருளிச் செயல் மூலம் உலகை உய்யக்கொண்டவராகையால் 'உய்யக் கொண்டார்' என்று நாதமுனிகளால் அழைக்கப்பட்டார்.

எங்களாழ்வானுக்கு இயற்பெயர் விஷ்ணுசித்தர் என்பது. கூரத்தாழ்வான் கண்ணிழந்தவுடன், நிறைவுபெருத ஸ்ரீ பா₄ஷ்யத்தை இவரைக்கொண்டு பட்டோலை கொள்ளச்செய்து பூர்த்திசெய்தார் எம்பெருமானர். கூரத்தாழ்வானின் மேத₄ாவிலாஸம் இவரிடம் விளங்கக் கண்டதால் எம்பெருமானர் இவரை 'எங்களாழ்வான்' என்று அபிமானித்தார். நடாதூராழ்வான் தமது பேரரான நடாதூரம்மாளிடம் "தினவுகெடச் சொல்லுவன் திருவெள்ளறையான்; ஆகையால் நீ திருவெள்ளறைக்குச் சென்று எங்களாழ்வானிடம் ஸ்ரீபா₄ஷ்யார்த்த₂ங் களைப் பெற்றுவா" என்று கூறினர். நடாதூரம்மாளும் அவ்வாறே பெற்றார். 'நோசேந் மமாபி யதிஶேக₂ரபா₄ரதீநாம் பா₄வ: கத₂ம்

ப₄விதுமர்ஹதி வாக்₃விதே₄ய :' என்று எங்களாழ்வானைக் கொண்டாடினர் நடாதூரம்மாள். ''ஸகல சாஸ்த்ரங்களும் போருவது பிள்ளை எங்களாழ்வானுக்காய்த்து'' என்று நம்பிள்ளை கொண்டாடும்படி விளங்கியவர் எங்களாழ்வான். நடாதூர் அம்மாளுக்கு ஆசார்யரான எங்களாழ்வானுடைய பரம்பரைக்கு 'அம்மாளாசார்யர்' என்று திருநாமம் ஏற்பட்டது. நல்லார்கள் வெள்ளறையாகையாலே உபத்₃ரவங்கள் இல்லாத இத்திவ்ய தேச வாஸத்தை விரும்பி இங்குப் பல வருடங்கள் எம்பெருமானார் எழுந்தருளியிருந்தார் 'உடையவர் குளம்' என்று பெயர்பூண்ட ஒரு குளம் இன்றும் இங்கு விளங்குகின்றது. தேசிகன் இத்திவ்ய தேசத்தில் காலக்ஷேபம் ஸாதித்ததாகப் பெரியோர் கூறுவர்.

உபஸம்ஹாரம் :

மையினர் தருவராலினம், தெய்வநாறுமொண் பொய்கைகள் பலவற்றில் துள்ளிவிளையாடும் அளவுக்கு நீர்வளம் மிக்கிருந்த திருவெள்ளறையில் ஸமீபகாலங்களில் ஆழிமழைக் கண்ணனின் அருள்கிடைக்காமல் அடிக்கடி எல்லோரும் ஏங்குகின்றனர். 'முப்போதும் வானவரேத்தும் முனிவர்கள் வெள்ளறை நின்றாய்' என்றவிடத்து மணவாளமாமுனிகள், ''மங்களாஶாஸன பரராய்க்கொண்டு உன்னுடைய ஸம்ருத்₃தி₄யையே எப்போதும் மநநம் பண்ணுநிற்குமவர்களுடைய திருவெள்ளறையிலே நிற்குமவனே !'' என்று அருளிய வ்யாக்₂யானத்தின்படி எம்பெருமானின் நித்யகைங்கர்யத்திற்காகவே, தீர்த்த₂கஷ்டம் மிகுந்த இப்போதும் ஸ்ரீவைஷ்ணவர்கள் சிலர் இங்கிருக்கின்றனர் ஆழ்வார் இவ்வெம்பெருமானிடம் 'அருள்புரியே' என்று ஒருகால் மட்டுமின்றிக்கே ஒன்பதின்கால் சொன்னாற்போல், நாமும், ''உலகுதன்னை வாழநின்ற நம்பீ! வாழ உலகினில் (மழை) பெய்திடாய்'' என்று அடிக்கடி குழாங்களாய் அடியாருடன் ப்ரார்த்தி₂த்தால் 'பத்தி உழவனுகிய' எம்பெருமான் நம் ஏங்குகுரலைக்கேட்டு அனுக்₃ரஹிப்பான். ''ஏங்கும் நம்மை ஈடேற்ற இனிதமர்ந்தாளாகிய'' பங்கயத்தாள் திருவருளும், ''சீராரும் பங்கயச் செல்விக்கு இனியனுகிய'' செந்தாமரைக் கண்ணனின் இன்னருளும் பெற்றிருக்கும் நமக்குக் குறை ஒன்றுமில்லை.

''தொண்டீர்! எல்லீரும் வாரீர் தொழுது தொழுது நின்றார்த்தும்''. திருவெள்ளறை எம்பெருமானின் த்₄யானஶ்லோகத்துடன் இக்கட்டுரையை நிறைவுபடுத்துகிறேன்.

ஆஸ்தாம் சேதஸி மே நிரந்தரமஸாவம்பே₄ாத₄ரஶ்யாமள:
புண்யே ஸ்ரீமதி புண்ட₃ரீகநயந: ஶ்வேதாசலே தஸ்தி₂வாந் ।
மார்க்கண்டே₃ய விஹங்க₃ராஜ பு₄ஜக₃ாதீ₄ஶ க்ஷமா ஸேவித:
சந்த்₃ராதி₃த்ய விதூ₄த சாமரயுகே₃ா லக்ஷ்மீஸஹாயோ ஹரி: ॥

ஸ்ரீ :
ஸ்ரீமதே ராமாநுஜாய நம :
ஸ்ரீவிஷ்ணுசித்த குருவே நம :



# ஸ்ரீ வைஷ்ணவ நிஷ்டை

ஸ்ரீ உ. வே.
[அம்மாள் ஸ்ரீ. திருவேங்கடாசாரிய ஸ்வாமி,
கீழத்திருமாளிகை, 43, மேலச்சித்திரைவீதி, ஸ்ரீரங்கம்]

ஸ்ரீ வைஷ்ணவன் எம்பெருமானைத் தவிர மற்ற உபாயங்களிலும், மற்ற தெய்வங்களிடமும், மற்ற விஷயங்களிலும் ஆசையை அடியோடு விடவேண்டும். ஸ்ரீமந் நாராயணன் ஒருவனே ரக்ஷகன் என்று எம்பெருமானையே உபாயமாகப் பற்றிநிற்கும் ப்ரபன்னநிஷ்டையில் ஆழ்ந்த நம்பிக்கை கொள்ளவேண்டும். "கூவிக்கொள்ளும் காலம் இன்னம் குறுகாதோ" என்று எண்ணவேண்டும். அல்லாமல் 'பரமபதம் நமக்கு வருகிறபோது தானேவரட்டும்' என்று இருக்கக்கூடாது. இதுவே ப்ராப்யத்வரை எனப்படும். திவ்யதேசத்து எம்பெருமான்களுடைய கல்யாணகுணங்களை அனுபவித்துப் பல்லாண்டு பாடவேண்டும். "ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி" என்று எப்போதும் எல்லாவித கைங்கர்யங்களையும் செய்ய ஆசைப்பட்டு, இயன்றவரையில் செய்யவேண்டும். பரமபாகவதோத்தமர்களான ஸ்ரீவைஷ்ணவர்களின் ஏற்றத்தை உணர்ந்து, அவர்களிடத்தில் உகப்புடன் இருக்க வேண்டும். அறியவேண்டிய அர்த்தங்கள் அனைத்தும் "திருமந்திரத்"தில் இருக்கிறது. அதன் விவரணம் "த்வயம்" "சரமஶ்லோகம்" ஆகியவை. இவைகளின் பொருளில் ஊன்றியிருக்கவேண்டும். எம்பெருமானுக்குப் பிரியனாகும்படி நமக்கு இத்தகைய யோக்யதையை உண்டாக்கின ஆசாரியன் பக்கலில் நன்றியுடன் அதிகபக்தியுடன் கைங்கர்யம் செய்துகொண்டு இருக்கவேண்டும். அதேபோல் நம்மைத் திருத்திப் பணிகொண்ட அந்த ஆசார்யனோடு ஸம்பந்தத்தை உண்டாக்கின எம்பெருமானிடத்தில் எப்பொழுதும் நன்றி பாராட்ட வேண்டும். ஞானம், பக்தி, வைராக்யம் (விரக்தி) இவற்றை உடையவராயினும், இவை தனக்கு உண்டு என்று கர்வமில்லாத பரம ஸத்வநிஷ்டராயிருக்கிற ஒரு பாகவதரோடு கூடியிருக்கவேண்டும். அப்போதுதான் அவருடைய ஜ்ஞான பக்தி விரக்திகள் நமக்கும் உண்டாகும். இதுவே ஸ்ரீவைஷ்ணவர்கள் அறிந்து கைக்கொள்ள வேண்டிய ஸ்ரீவைஷ்ணவ நிஷ்டை.

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
ஸ்ரீவிஷ்ணுசித்த கு₃ரவே நம:



# ஸ்ரீரங்கேச புரோஹிதர்

[ஸ்ரீ S. ஸௌம்யநாராயணன், B. A.
S/o. மேலத்திருமாளிகை தி. அ. ஸ்ரீநிவாஸாசார்ய ஸ்வாமி,
திருவெள்ளறை]

ஸ்ரீமந் நாதமுனிகள் தொடக்கமான நம் பூர்வாசார்யர்கள் அதி₄காரிகளைப் பரீக்ஷித்து ஓராண்வழியாய் உபதேசித்துப் போந்த ரஹஸ்யங்களையும், வ்யாக்யானங்களையும் எம்பெருமானாரான நம் மிராமானுசர் — இவ்விருள்தருமாஞாலத்தாரின் மந்த₃பு₃த்₃தி₄யையும், அனர்த்த₂த்தையும் கண்டு ஆற்றாமல், பரமக்ருபையுடன் ''பாருலகில் ஆசையுடையோர்க்கெல்லாம் கூறும்'' என்று விளித்துப் பழைய வரம்பைப் போக்கியருளினார். எம்பெருமானார் த₃ர்ஶனத்துக்கு ஆழ்வான், எம்பார், எங்களாழ்வான், பட்டர், நஞ்சீயர், நம்பிள்ளை, பெரியவாச்சான்பிள்ளை முதலானோர் விளக்கொளியாய், முளைத்தெழுந்த திங்கள் தானாய் விளங்கிய மஹான்கள். இவர்களின் வைபவங்களும், க்ரந்தங்களும் நாம் நிச்சலும் அனுஸந்திக்கத் தக்கவை. இந்த மஹான்களுள் ஸ்ரீரங்கே₃ஶ புரோஹிதராய் 'வேதாந்தாசார்ய பட்டர்' என்னும் பி₃ருதை₃ உடையவரான பராஶரபட்டரின் வைப₄வம் சுருக்கமாக எழுதப்படுகிறது.

கு₃ருபரம்பரையிலேயே ஆழ்வான் பரம்பரை பரமவிலக்ஷண மானது. தே₃விகளும், புத்ர பௌத்ரர்களும் மேத₄ாவிலாஸத்தோடு விளங்கிய பெருமை ஆழ்வான் பரம்பரை ஒன்றுக்கே உரியது. எம் பெருமானார்போன்ற மஹான்களும் ஆழ்வான் ஸம்ப₃ந்த₄த்தைப் பெரும்பேருகக் கொண்டனர். எம்பெருமானார், ஆழ்வான் திரு மாளிகைக்கு எழுந்தருளிக் குழந்தையான பட்டரைக் கடாக்ஷித்தார். எம்பெருமானார் கடாக்ஷிக்குமுன் எம்பார், குழந்தையின் தேஜஸ்ஸைக் கண்டு, தாம் முந்திக்கொண்டு த்₃வயரக்ஷைசெய்தருளினார். பிறந்த வுடனேயே ஆசார்யரால் த்₃வயரக்ஷைபெற்ற மஹான் பட்டர் ஒரு வரே. ஸ்ரீரங்கநாச்சியாரால் மஞ்சள்நீர் குடிப்பித்துப் பெற்றுவளர்ந்த பெருமை இவர் ஒருவர்க்கே உண்டு. பெருமாள் அமுதுசெய்வதற்கு முன்னே தவழ்ந்துசென்று, படைத்திருந்த தளிகையில் அள்ளி அமுது செய்யும்படியாயிறே பட்டர் வளர்ந்தருளினது. ''வண்ணச்செஞ்சிறு கைவிரலனைத்தும் வாரிவாய்க்கொண்ட அடிசிலின் மிச்சில் உண்ணப்

பெற்றிலேன் ஓ! கொடுவினையேன்'' என்று தாயான தேவகி, பிள்ளையான கண்ணனின் மிச்சில் உணவை உண்ணமுடியவில்லையே என்று வருந்தினாள். அவ்வருத்தம் தீர, '' தாய்சொல்லுக்கொள்வது தன்மம் கண்டாய்'' என்று தாயிடம் சிக்ஷிக்கப்பட்ட அரங்கன் தன் பிள்ளையான பட்டர் அமுதுசெய்த மிச்சிலை அமுதுசெய்தருளினன் போலும்! [அரங்கன்-கண்ணன். ''வருபுனல் காவிரித்தென்னரங்கன் பண்டவன் செய்த கிரீடையெல்லாம்'' என்பது பெரியாழ்வார் திருமொழிப் பாசுரம். '' யசோதைப் பிராட்டி பிள்ளைப் பணியாகச் சாத்தின திருவாபரணம் இப்போதும் பெரியபெருமாள் திருக்கழுத்திலே கிடக்கிறது'' என்று கண்டநுபவித்தாரிறே பட்டர்.]

பட்டர் சிறுவயதிலேயே மஹாவைபவத்துடன் விளங்கினார். 'சிறுமாமனிசர்' என்ற அருளிச்செயலுக்கு அர்த்தம் என்னவென்று பால்யத்திலேயே கேட்டவரன்றோ பட்டர். ஒருநாள் பட்டர், திருவீதியிலேயே புழுதியள்ளி விளையாடிக் கொண்டிருக்கும்போது 'ஸர்வஜ்ஞன் வந்தான்' என்று ஒருவன் விருதூதிவர, பட்டரும் அத்தைக் கேட்டு ''அவனாடா, ஆழ்வான், ஆண்டான், எம்பார் முதலானோர் இருக்குமிடத்தில் ஸர்வஜ்ஞன் என விருதூதி வருகிறான் ?'' என்று கூறிக் கீழே இருந்த புழுதியை ஒரு கையெடுத்து ' இது எத்தனை புழுதி ?' என்று கேட்க, அவன் பதில் சொல்லமாட்டாமல் திகைக்க, '' 'இது ஒரு கைப்புழுதி' என்று கூடச் சொல்லமுடியாத அஜ்ஞனை உனக்கு 'ஸர்வஜ்ஞன்' என்கிற விருது வேணுமோ ? '' என்றாரன்றோ.

பட்டருக்கு உபநயனம் ஆனவாறே வேதாத்யயநம் ஆரம்பமாயிற்று. முதல் நாள் சந்தை நடந்தது. மற்றைநாள் ஓதுகிற ரீதியிலே ஓதப்புக்கவாறே ''ஓதினவிடத்தைத் திரும்பவும் ஓதுகின்றீர்களே'' என்று கூறிவிட்டு விளையாடப் போய்விட்டார். இதையறிந்த ஆழ்வான் ' அப்ப! எல்லாரும் ஓதாநிற்க நீ மட்டும் புறப்பட்டு வந்தாயே ' என்ன, பட்டரும் 'ஓதினவிடத்தையே திரும்பவும் ஓதுகின்றனர்' என்ன, 'அப்படியாகில் நேற்று நடந்த சந்தையைச் சொல்' என்ன, இவரும் சந்தையிட்டபடியே உச்சரிக்க, ஆழ்வான் ஆச்சர்யமடைந்தார். இவ்வாறு மிகுஞானச் சிறு குழவியாக விளங்கிய இவருடைய விவாஹ மஹோத்ஸவத்தைப் பெரிய பெருமாளே நடத்தி வைத்தார்.

எம்பெருமானார், அருளாளப் பெருமாள் எம்பெருமானாரைத் திருத்திப் பணிகொண்டது போல, பட்டரும் மேல்நாட்டு வேதாந்தி

யைத் திருத்திப் பணிகொண்டார். அத்வைதிகளிடம் வாதம் செய்து வென்றவர்கள் பலருண்டு. ஆனால் ஓர் அத்வைதியைத் திருத்திப் பணிகொண்டு பூர்வாசார்ய பரம்பரையின் முன்னணியில் விளங்க வைத்த பெருமை இவ்விருவர்க்கே உண்டு. ஆச்ரம ஸ்வீகாரம் பெற்ற நஞ்சீயரும், பட்டரை ஸ்ரீபாதம் தாங்குவதாகத் தோளிலே தண்டை வைக்கப் புகுந்தார் என்றால் பட்டரின் பெருமையைப் பற்றிப் பேசத்தானுவதுண்டோ? திருத்தாயாரான ஆண்டாளும் புத்ர ரான பட்டரின் ஸ்ரீபாததீர்த்தத்தை ஸ்வீகரித்தாள். ''பட்டர் வைபவம் முற்றச் சொல்லி முடியாதிறே'' என்ற குருபரம்பரா ப்ரபாவ ஸ்ரீஸூக்தியும் பட்டரின் பெருமையை ஸ்திரப்படுத்தும்.

### அருளிச்செயல் நிர்வாஹம்:—

எம்பெருமானருக்குப் பிறகு பட்டர் தர்சனம் நிர்வஹித்தார். அவருடைய சிஷ்யர்கள் அடிக்கடி அவரிடம் வந்து உபயவேதாந்த விஷயமாக ப்ரச்னம் பண்ணுவார்கள். உடனுக்குடன் அவர் ஸமாதானம் அனுக்ரஹிப்பார். சங்ககால இலக்கியங்களிலிருந்தும் மேற்கோள்களை அநாயாஸமாக எடுத்து வழங்கும் திறமைபெற்றவர். பட்டருடைய மேதாவிலாஸத்திற்கு நூற்றுக்கணக்கான அருளிச்செயல் நிர்வாஹங்களில் ஒவ்வொன்றும் சான்று கூறும். ஓரிரு நிர்வாஹங்களை இப்போது அனுபவிப்போம்.

''கள்ளக்குறளாய்''(5-1-2) என்ற பெரியதிருமொழிப் பாசுரத்தின் பின்னடிகள்— ''பள்ளச் செறுவில் கயலுகளப் பழனக்கழனியதனுள் போய், புள்ளுப் பிள்ளைக்கிரை தேடும் புள்ளம் பூதங்குடிதானே''. இவ்விடத்து வ்யாக்யானத்தில் காணும் ஐதிஹ்யம் வருமாறு:—

ஒரு தமிழன் பட்டரிடம் வந்து '' 'பள்ளச் செறுவில் கயலுகள' என்றபோதே அவ்விடத்து வயல்களில் மீன்கள் அளவற்றுக்கிடக்கின்றமை வெளிவந்துவிட்டது. அப்படியிருக்க, ஈற்றடியில் 'புள்ளுப் பிள்ளைக்கு இரை தேடும்' என்று எங்ஙனே சொல்லலாம்? மீன்கள் அளவற்றுக் கிடக்கும்போது தேடிப் பிடிப்பதாகச் சொல்வது பொருந்தாதே'' என்று கேட்டான். இதற்கு பட்டர் அருளிச் செய்ததாவது—''பிள்ளாய்! நீ சொற்போக்கு அறிந்திலை; பிள்ளைக்கு இரைதேடும் என்றுள்ளதுகாண்! அங்குள்ள மீன்கள் நிலப் பண்பாலே தடித்திருக்கும். அவை பறவைக் குட்டிகளின் வாய்க்குப் பொருந்தமாட்டாவாகையால், குட்டிகளுக்குரிய சிறு மீன்களைத் தேடிப் பிடிக்கும்படியாய்த்து''.

திருவிண்ணகர்த் திருப்பதி விஷயமான 'துறப்பேன்' என்ற திருமொழியின் மூன்றாவது பாசுரத்தில் 'திருநறையூர்த்தேனே' என்று விளிக்கிறார் ஆழ்வார். இத்திருமொழி முடிந்தவுடன் நூறு பாசுரங்களாலே திருநறையூரை அனுபவிக்கப் போகிறாரே ஆழ்வார். அதற்குள் திருவிண்ணகர் அனுப₄வத்தில் 'திருநறையூர்த்தேனே' என்று அத்திருப்பதி பற்றி ப்ரஸ்தாவம் செய்யக்காரணம் என்ன? என்றகேள்விக்குப் பதிலாகப் பட்டர் அருளிச்செய்யும்படியைக் கேளீர். ''ஆற்றில் பெருவெள்ளம் வரப்போவதற்கு முன்பு ஆறு பொசிந்து காட்டுவது வழக்கம். அதேபோல, மேல் நூறு பாசுரங்களாலே திருநறையூர் அனுப₄வமாகிற மஹாப்ரவாஹம் ஸமீபித்திருப்பதால் அதற்கு முன் அடையாளமாகத் 'திருநறையூர்த்தேனே' என்று இவ்வாறு பொசிந்து காட்டுகிறது'' என்றார்.

பட்டர் ஒரு நாள் உபந்யாஸத்தில் 'பரிவதிலீசனைப் பாடி' என்கிற திருவாய்மொழிப் பாசுரத்தில் 'புரிவதும் புகை பூவே' என்கிற இடத்தை எடுத்துக் கொண்டு 'ஏதேனும் ஒரு புகையும், ஒரு பூவும் எம்பெருமானுக்கு அமையும்; செதுகை(கூளத்தை)யிட்டுப் புகைக்கலாம்; கண்டகாலிப் பூவும் சூட்டலாம்' என்று உபன்யஸித்தார். அதை நஞ்சீயர் கேட்டு, 'கண்டகாலிப்பூவை எம்பெருமானுக்குச் சாத்தலாகாது' என்று சாஸ்திரம் மறுத்திருக்க, இப்படி அருளிச் செய்யலாமோ? என்று கேட்டார். அதற்கு பட்டர் 'கண்டகாலிப்பூ எம்பெருமானுக்கு ஆகாது என்று மறுத்ததன்று. அடியார்கள் அப் பூவைப் பறித்தால் அவர்கள் கையில் முள்பாயுமே! என்று பக்தர்கள் பக்கல் த₃யையினால் ஶாஸ்த்ரம் மறுத்ததேயன்றி எம்பெருமானுக்கு ஆகாத பூ எதுவும் இல்லை' என்றார்.

அனேக வித்வான்கள் திரண்டு ஒரு நாள் பட்டரைப் பரீக்ஷிக்க எண்ணி, ஒரு குடத்தில் ஒரு பாம்பை அடக்கி, 'இக்குடத்திலே இருக்கும் வஸ்து என்ன?' என்று பட்டரைக் கேட்க, அவரும் 'திருவெண்கொற்றக்குடை' என்ன, அவர்கள் பரிஹஸித்துக் குடத்தைக் கவிழ்த்த அளவில் பாம்பு புறப்பட, அவர்களும் 'இது கொற்றக் குடையோ?' என்ன, பட்டரும் '' 'சென்றாற்குடையாம்' என்றன்றோ ஆழ்வார் அருளிச்செயல்'' என்றார்.

**அர்ச்சாவிக்₃ரஹ ஸேவையில் ஈடுபாடு :—**

பலர் டில்லி, பம்பாய் போன்ற இடங்களிலிருந்து நம்பெருமாளை ஸேவிக்கவேண்டும் என்று ஸ்ரீரங்கம் வருவார்கள். பெருமாள் எழுந்தருளியிருக்கும் இடத்தையடைந்தவுடன் கண்டு உகக்காமல் கண்ணை மூடிக்கொண்டு த்₄யானம் செய்வார்கள்! 'நாம் அங்கிருந்து கஷ்டப்பட்டு ஸேவிக்கவந்தோமா, கண்ணைமூடிக்கொள்ள வந்தோமா' என்பதை அறியாதவர்கள் அவர்கள். பட்டர் காலத்திலும் இதுபோன்ற

செய்கை உள்ளவர்கள் இருந்திருக்கிறார்கள். பெரியதிருமொழி 'நீணிலா முற்றத்து' (8-2-2) என்ற பாசுர வ்யாக்2யானத்தில் அர்ச்சா விக்3ரஹ ஸேவையில் ஈடுபட்டுக் கண்ணாரக் கண்டுகக்கும் காதல் உலகத்தோர்க்கு இல்லையே என்று மிகவும் வருந்துகின்றார் பட்டர்.

ஒருநாள் பட்டர், பெருமாளுக்குத் திருவாலவட்ட கைங்கர்யம் செய்துகொண்டிருந்தபோது, அவர் சிஷ்யர்கள் 'ஸந்த்4யாவந்த3னத் திற்குக் காலம் தப்புகிறது' என்ன, பட்டர் 'ப4க3வத்கைங்கர்ய நிரதருக்குக் காலந்தவறி ஸந்த்4யாவந்த3னம் செய்வதால் ஏற்படும் தோ3ஷம் வராது' என்றருளினார். யானைக்காக, பெரியதிருவடியின் வேக3மும் போராமல் அவரையும் இழுத்துச்சென்ற ப4க3வானின் வேக3த்தை ஸ்தோத்ரம் பண்ணின பட்டர் அர்ச்சாவிக்3ரஹஸேவையி லும், கைங்கர்யத்திலும் ஈடுபட்டிருப்பதைப்பற்றிச் சொல்லவேணுமோ?

**ஸதா3சார்யலக்ஷணம் :—**

ஒருநாள் பட்டர் ஸ்ரீபாத3த்தில் விளங்குவார் ஒருவர் ஸஹவாஸ தோ3ஷத்தாலே கலங்கி, பட்டரிடம் சென்று, 'இனி உமக்கும் நமக்கும் தொடர்பில்லை' என்ன, பட்டரும் 'அது உன் நினைவாலே; நீ விட்டாலும் நாம் விடுவோமோ?' என்றருள, அவரும் அகன்று போகத்தேட, இவரும் அவரை ப3லாத்கரித்துப் பிடித்துத் திருத்திப் பணிகொண்டார்.

பட்டர் ஒருநாள் பெருமாளை ஸேவித்துக்கொண்டிருக்கும்போது சிலர் அவரைக்குறித்துக் கேட்பார் செவிசுடும்படியான கீழ்மை வசவு மொழிகள் சொல்லக்கேட்டு, சாத்தின திருவாழி மோதிரத்தையும், திருப்பரியட்டத்தையும் கொடுத்தருளி, சிஷ்யர்களைப் பார்த்து 'இவர்கள் வசவுமொழிக்கு நான் அஞ்சிக்கொடுத்தேனன்று. நாமறி யாத தோ3ஷங்களையும் பெருமாள் திருச்செவி சாத்தும்படி சொன்ன உபகாரத்தைப்பற்றக் கொடுத்தேன்' என்றார். "குற்றம் செய்தவர்கள் பக்கலுமகப்பட ஹிதபரராய், த3யார்த்3ரசித்தராய்ப் போருவது ஆழ்வான் ஸம்ப3ந்த4ம் உடையவர்களுக்கே உள்ளதொன்றிறே" என்ற கு3ருபரம்பராப்ரப4ாவ ஸ்ரீஸூக்தி குறிக்கொள்ளத்தக்கது.

**பட்டரின் நைச்யானுஸந்தானம் :—**

"அஸந்நிக்ருஷ்டஸ்ய" என்கிற ஶ்லோகத்திலே ஒரு ஐதிஹ்யம் உள்ளது. நம்பெருமாள் புறப்பாட்டுக்குமுன், கோவில் கொத்தில் உள்ளவர்கள் பட்டரை எழுந்தருளப் பண்ணுவது வழக்கம். ஒருநாள் புறப்பாட்டன்று வெகுநாழிகையாகியும் ஒருவ ரும் வந்து ஸமயம் தெரிவிக்கவில்லை. ஆகவே, ஸ்வாமி தாமே ஸன்னதிக்குள் வந்து விசாரிக்கையில், ஒரு நாய் உள்ளே வந்து விட்டதாகவும், அதற்காக சாந்தி ஹோமம் நடைபெறுவதாகவும், அதனால் காலதாமதம் என்பதையும் தெரிந்துகொண்டு நேரே பெரிய

பெருமாளிடம் சென்று இந்த ஶ்லோகத்தை விண்ணப்பம் செய்தார். "நாய் ஸன்னிதி₄க்குள் ஏதோ ஒரு புறத்தில் நுழைந்ததேயன்றி க₃ர்ப்ப₄க்₃ருஹத்தினுள் நுழையவில்லை. அதற்கே இவ்வளவு சாந்தி அனுஷ்டி₂ப்பதாயின் அந்த நாயினும் கீழ்மையான அடியேன் தேவரீரது அருகிலேயே வந்துவிட்டேனே! இதற்கு எவ்விதமான ப்ராயச்சித்தம் செய்தருளத் திருவுள்ளமோ" என்றருளினார் பட்டர்.

**பட்டரது க்₃ரந்த₂ங்கள் :—**

ஸ்ரீ பராசரபட்டர் அருளிச்செய்த க்ரந்தங்கள் — ஸ்ரீகு₃ணரத்ன கோசம், ஸ்ரீரங்க₃ராஜஸ்தவம், ஸ்ரீரங்க₃நாத₂ஸ்தோத்ரம், அஷ்ட ஶ்லோகீ, ப₄க₃வத்₃கு₃ணத₃ர்ப்பணம் என்கிற ஸஹஸ்ரநாமபா₄ஷ்யம், கைசிகபுராண வ்யாக்₂யானம், நம்பெருமாள் திருமஞ்சனக் கட்டியங்கள், அருளிச்செயல் நிர்வாஹங்கள் முதலியவை.

**உபஸம்ஹாரம் :—**

ராஜேந்த்₃ர சோழன் என்னும் ஊரிலே ஒரு ப்₃ராஹ்மண குமாரன் பௌ₃த்₃த₄ருடைய ஸஹவாஸத்தாலே மதிகெட்டுப் பூணூலை அறுத்தெறிந்து, குடுமியைச் சிரைத்துத் திரிந்துகொண்டிருந்தான். ஒருநாள் அவ்வூர்க்குக் கூரத்தாழ்வான் எழுந்தருளினார். அவரை ஸேவிக்கப் பெற்றான் ப்₃ராஹ்மண குமாரன். கூரத்தாழ்வான் கடாக்ஷமே ஹேதுவாக முன்போல் ப்₃ராஹ்மண லக்ஷணங்களுடன் வீடுவந்து சேர்ந்தான். அவனைக் கண்ட தகப்பனார், 'பிள்ளாய்! கூரத்தாழ்வானோடு ஸந்தி₄க்கப் பெற்றாயோ?' என்றார். கூரத்தாழ்வான் ஸம்ப₃ந்த₄ம் நாஸ்திகர்க்கும் ஸாத்விகமான தன்மைகளைத் தர வல்லது என்றபடி. பட்டர்க்கும் இப்பெருமை உண்டு. அந்தக் கூரத்தாழ்வானுடையவும், அவர் குமாரரான பட்டருடையவும் பெருமைகளை வாயாரப்பேசி, அவர்களது அனுக்₂ரஹம் பெற்றுப் பரமானந்தமடைவது ப்ராப்தம்.

பட்டர் பெருமையைப் பேசுவான்புகில் நம்பரமன்று. "எப்படி ஊரா மிலைக்கக் குருட்டா மிலைக்குமென்னும் அப்படி யானும் சொன்னேன்" என்ற கணக்கிலே, பல பெரியோர்கள் விலக்ஷணமான ரீதியில் நம் சபை வெளியிடும் மலருக்கு விஷயங்கள் எழுதி அனுக்₃ரஹிக்கும் ஸமயத்தில், சிறியேனை அடியேனும் யத₂ாமதி எழுதி ஸத்தை பெறுகின்றேன்.

"ஸ்ரீபராஶரப₄ட்டார்ய: ஸ்ரீரங்கே₃ஶபுரோஹித: ।
ஸ்ரீவத்ஸாங்கஸுத: ஸ்ரீமாந் ஶ்ரேயஸே மேऽஸ்து பூ₄யஸே ॥"

[திருவரங்க₃நாத₂னுக்குப் புரோஹிதராய், கூரத்தாழ்வான் குமாரராய், (ஜ்ஞாநம், ப₄க்தி முதலான) செல்வம் நிறைந்த ஸ்ரீபராஶர ப₄ட்டார்யர் எனக்கு மிகுந்த நன்மையை அளிப்பாராக.]

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
ஸ்ரீவிஷ்ணுசித்த கு₃ரவே நம:

# எம்பெருமான் திருவுள்ளம்

—: :—

[ஸ்ரீ உ. வே. R சிங்கமய்யங்கார் ஸ்வாமி,
இந்துஸ்தான் லிவர் கம்பெனி முன்னாள் அதிகாரி, சென்னை]

எம்பெருமான் திருவுள்ளம் என்னும் கருணைக்கடலிலே சில திவலைகளை அனுபவிக்கும் நோக்குடன் சிற்சில விஷயங்களை விண்ணப்பம் செய்து கொள்ளுகிறேன். இந்த ஜகத்தின் ஸ்ருஷ்டி ஸ்தி₂தி ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளும், எம்பெருமானை அடைந்து சேதனன் உஜ்ஜீவனம் பெறுவதும் அவன் திருவுள்ளத்தை அனுஸரித்தே நடக்கின்றன என்பது நம் பூர்வர்கள் அருளிய உண்மை.

ஸ்ரிய:பதியான ஸர்வேஶ்வரன் தனக்கே உரித்தான ஸ்ரீவைகுண்ட₂த்தில் திருமகள் மண்மகள் முதலிய தேவிமாரோடு வீற்றிருந்து, நித்யமுக்தர்களாலும் தொண்டு செய்யப்பெற்று பேரானந்தம் அனுப₄வித்தபோதிலும், அதே சமயத்தில் இதர ஜீவராசிகளும் தன்னை அனுபவித்து இன்பக்கடலில் மூழ்கிப் பெருங்களிப்புறவேண்டியிருக்க, மூலப்ரக்ருதியில் அழுந்தி அசேதனப் பொருளைப்போல் இருத்தலைக் கண்டு, இவர்களைக் கரையேற்றத் திருவுள்ளம்பற்றி, தன்னை வணங்கி வழிபட்டு உய்வு பெறுமாறு இவர்களுக்குக் கண், கை, கால் முதலிய உறுப்புக்களையும், இவ்வுறுப்புக்களோடு கூடிய உடலையும் தந்தருளினன். இதற்குமேலே இவர்கள் இத்தைக்கொண்டு, ஆற்றைக் கடக்கக்கொடுத்த தோணியைக்கொண்டு அவ்வாற்றைக் கடக்காமல் கடலிடைப்புகுவாரைப்போல், சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் இந்த்₃ரிய விஷயங்களில் உழலப்புக்கார்கள். இவர்களைத்திருத்தத் திருவுள்ளம்பற்றி நன்மை தீமைகளைத் தெரிவிக்கும் வேத₃ம் முதலான ஞானக்கலைகளைக் கிருபையாலும் நீர்மையாலும் அருளினன் எம்பெருமான்.

இங்ஙனம் அருளப்பெற்றிருப்பினும், இச்சேதனர் அக்கலைகள் காட்டிய வழியைப் பின்பற்றாது, "தங்களையும் ஈஶ்வரனையும் மறந்து, ஈஶ்வர கைங்கர்யத்தையும் இழந்து, இழந்தோம் என்கிற இழவுமின்றிக்கே, ஸம்ஸாரமாகிற பெருங்கடலிலே விழுந்து நோவுபட", தன் கட்டளை செல்லாத நாட்டிலே தானே படையெடுத்துச் சென்று, தன் வழி வருமாறு செய்யும் அரசனைப்போலே, "ப₃ஹூநி மே வ்யதீதாநி" என்றும், "சன்மம் பல பல செய்து"

என்றும் அருளியபடி இவ்வுலகங்களில் பல அவதாரங்களைச் செய்தருளினான். அவைகளிலே தலைசிறந்ததான ராமாவதாரத்திலே "கடற்கரை வார்த்தை" என்ற ராமசரமஶ்லோகமும், க்ருஷ்ணாவதாரத்திலே "திருத்தேர்த்தட்டுவார்த்தை" என்ற க்ருஷ்ண சரமஶ்லோகமுமான மெய்ம்மைப் பெருவார்த்தைகளை லோகோஜ்ஜீவனத்தின் பொருட்டு வெளியிட்டருளினான்.

இவை இரண்டிலும் வைத்துக்கொண்டு சிறந்ததான கிருஷ்ணாவதாரத்தில் ஸகலோபநிஷத்ஸாரமான கீ₃தாஶாஸ்த்ரத்தை "அறிவினால் குறைவில்லா அகல்ஞானத்தவரறிய நெறியெல்லாம் எடுத்துரைத்த நிறைஞானத்தொரு மூர்த்தி"யான கண்ணன் அர்ஜுனனை வியாஜமாகக்கொண்டு உலகுக்கு உபதே₃ஶித்தான். அதில் தன் வர்ணாஶ்ரமத₄ர்மங்களைச் செய்வதாகிற கர்மயோக₃மும், அதனால் சித்தஶுத்₃தி₄பெற்று அச்சித்தத்தைக்கொண்டு ஜீவன் தன் ஆத்மாவைச் சிந்திப்பதாகிற ஞானயோக₃மும், பிறகு பரமனைப்பற்றிச் சிந்திப்பதாகிற ப₄க்தியோக₃மும், கடைசியாக இந்த ஸாத₄னங்கள் அனுஷ்டிக்கக் கூடாதவை, என்று அறிந்து ஶோகமடைபவனுக்கு அவைகள் எல்லாவற்றையும் விட்டு ஸாக்ஷாத் த₄ர்மமாகிற தன்னையே பற்றும் படியும் உபதேசித்தருளினான். இப்படிப் பற்றுமிடத்திலேயும் எம்பெருமானான தானே பேற்றுக்கு ஸாத₄னம் என்பதொழிய இவன் பற்றுதலை ஸாத₄னமாகக்கொள்ளாமல் அதி₄காரி விஶேஷணம் என்று எண்ணவேணும். எம்பெருமான் அருளாலேயே சேதனன் அவனை உபாயமாகப்பற்றும் உறுதியை அடைகிறான். அவ்வுறுதிக்கும் எம்பெருமான் உபாயம் என்னும் அறிவு காரணம்; அவ்வறிவு பெறுவதற்கும் எம்பெருமான் திருவுள்ளத்திலே உண்டாம் அருளே காரணம் என்ற உண்மையை ஆழ்வாரும் "என் உணர்வினுள்ளே இருத்தினேன் அதுவும் அவனது இன்னருளே" என்று திருவாய்மலர்ந்தருளினார்.

கீதையிலே "சரணாகதனை ஸகலபாபங்களினின்றும் விடுவித்து மோக்ஷத்தை அளிப்பேன்" என்னும் வார்த்தையை ஶரண்யனுடைய அத்₄யவஸாயம் என்று நம் பூர்வாசார்யர்கள் கூறுவர். எம்பெருமான் ரக்ஷித்தே தீருவன் என்று ஜீவன் திடமாக எண்ணும் நம்பிக்கை ஶரணாக₃தனுடைய அத்₄யவஸாயமாகும். இப்படி இச்சேதனன் எம்பெருமானை உபாயமாக பற்றும்போதும், இவன்பற்றுதல் அவ்வெம்பெருமான் திருவுள்ளத்தைப் பின்சென்றே இருக்கவேண்டும்; அப்படி இல்லையெனின் இவன் நன்மைபெற இயலாது என்பது சரணாகதியைப் பற்றிய ஓர் முக்கியமான உண்மையாகும். இந்த உண்மையை பரதன் பண்ணிய சரணாகதி பலிக்காததிலிருந்து அறியலாம்.

ஸ்ரீபரதாழ்வான் சித்ரகூடம் சென்று இராமபிரான் திருவடிகளையே உபாயமாகப்பற்றி, 'எம்பெருமான் இப்பொழுது திருவயோத்திக்கு எழுந்தருளி முடிசூட்டிக்கொள்ளவேணும்' என்று பிரார்த்தித்தான்.

இந்தச் சரணுகதி பண்ணின பரதனே ''ராஜ்யம் ச அஹம் ச ராமஸ்ய'' என்று எம்பெருமானுக்கே உடைமைப்பொருள் என்கிற அத்யந்த பாரதந்தர்யத்துடன் கூடிய உயர்ந்த அதி₄காரி; அவன் பற்றியது ''ராமோ விக்₃ரஹவாந் த₄ர்ம:'' என்கிற ஸாக்ஷாத் எம்பெருமானை பற்றும்போதும் ''ராமஸ்ய சிரஸா பாதௌ₃ ஜக்₃ராஹ'' என்று முறையோடும் ''ஸப₃ாஷ்ப:'' என்று ஆர்த்தியோடும் பற்றினவன். அவன் பிரார்த்தித்ததோ எம்பெருமான் முடிசூடுதல் என்ற பரம ப்ராப்யமான விஷயம். இப்படி அதி₄காரி, உபாயம், ப்ராப்யம் மூன்றும் சீரியதாக இருந்தும் ''ஸகாமமநவாப்யைவ'' என்று இராமபிரானிடம் தான் விரும்பிய பேற்றைப் பெறவில்லை.

இவன் சரணுகதி பலிக்காததற்குப் பல காரணங்கள் சொன்ன போதிலும் ஒன்றும் பொருத்தமாகத் தெரியவில்லை. 'தேவர்கள் ராவணவத₄த்தை உத்தேசித்துச்செய்த சரணுகதி முன்பு, இவன் செய்தது பின்பு, ஆகையினுலே ராவணவதத்துக்குப் பின்பே இவன் பிரார்த்தனைக்கு எம்பெருமான் இரங்கினுர்' என்னும் சமாதானம் பொருந்தாது. ஏனென்ருல் ராவணவதம் எப்பொழுது செய்ய வேண்டும் என்று தேவர்கள் குறிப்பிடவில்லை. பரதனே 'அபி₄ஷிஞ்சஸ்வ அத்₃யைவ' என்று தாம் விரும்பும் காலத்திலேயே ராமன் முடிசூட்டிக் கொள்ளவேண்டும் என்று காலத்தை முக்கியமாகக் குறித்து சரணுகதி பண்ணியிருக்கிருன். ஆனுலும் இது நிறைவேறவில்லை.

இராமபிரான் திருவுள்ளம் புண்படும்படி பரதன் நடந்துகொண் டான் என்னும் வாத₃மும் பொருந்தாது. அவ்வெம்பெருமான் வேற்றுத்தாய் என்று வித்யாசமில்லாமல் ''மாதரம் ரக்ஷ கைகேயீம்'' என்று அருளிச்செய்திருக்கிருன். இருந்தும் ஜீவாத்மாவான பரத னுக்கு எல்லாச் சேதனர்க்கும் தந்தையும் தாயுமாகிய எம்பெருமானைக் காட்டுக்கனுப்புதல் முதலிய விபரீதச்செயல்கள் உள்ள கைகேயியிடம் மனம் பொருந்தாதது ஒரு குற்றமாக ஒப்புக்கொள்வதற்கில்லை. மேலும் பரதன் ''பூஜிதா மாமிகா மாதா'' என்று பின்னுல் ஒரு வாறு அவளைப் பூஜித்ததாகவும் சொல்லியிருக்கிருன்.

சரணுகதிக்கு அங்கமாகப் பெரியோரை முன்னிடுவது என்பதிலும் ஒரு குறைவும் இல்லை. 'விதி₄வத்புந:'' என்று முறை வழுவாமல் எம்பெருமான் திருவடியைப் பற்றினவன். மேலும் குலகுருவும் ஞானத்தை அளித்தவருமான ஆசார்யருமான வஸிஷ்ட₂ரே ''ப₄ரதஸ்ய வச: குர்வந் யாசமாநஸ்ய ராக₄வ। ஆத்மாநம் நாதிவர்த்தேத₂ா:'' என்று ''இராமா, நீ ப₄ரதனுக்குப் பரதந்த்ரனுய் அவன் வேண்டிய வாறு முடியை ஏற்றுக்கொள்ளாதிருந்தால், நீ ஆஶ்ரிதபரதந்த்ரன் என்ற சீரிய செல்வத்தை இழக்க நேரிடுமே'' என்கிருர். இப்படி மந்த்ரோபதேசம் பண்ணின ஆசார்யன் வார்த்தையையும் நிராகரித்து, 'தந்தை தாய் வசனமே ஆசாரியன் வார்த்தையிலும் ஆதரிக்கத்தக்கது'

என்று எம்பெருமான் திருவுள்ளம் பற்றினன். ஆகையால், இவ்வளவாலே அவன் ஸ்வதந்த்ரன் என்பதும், முக்கியமாக அவன் திருவுள்ளம் அப்போதே அயோத்திக்குத் திரும்பி முடிசூட இடம் தரவில்லை என்பதுமே விளங்குகிறது.

வேதாந்ததேசிகனும்—தசரதசக்ரவர்த்தி கோரியவாறு இராமபிரானுக்கும், கைகேயி கோரியவாறு பரதனுக்கும் திருவபிஷேகம் நடைபெருது திருவடிநிலைக்குத் திருவபிஷேகம் நடந்தது என்னும் இவ்வுண்மையையே "ராமே ராஜ்யம் பிதுரபி$_4$மதம் ஸம்மதம் ச ப்ரஜாநாம் மாதா வவ்ரே ததி$_3$ஹ ப$_4$ரதே ஸத்யவாதீ$_3$ த$_3$தெ$_3$ள ச! சிந்தாதீத: ஸமஜநி தத$_3$ா பாது$_3$காக்$_3$ர்யாபி$_4$ஷேக: து$_3$ர்விஜ்ஞாநஸ்வஹ்ருத$_3$யமஹோ தை$_3$வமத்ர ப்ரமாணம்!!" என்று அருளிச் செய்திருக்கிருர்.

இப்பேர்ப்பட்ட பரதன் சரணுகதிக்கு மாருக 'கடற்கரை வார்த்தை' யான ராம சரம ஶ்லோகத்திலே, "எப்பேர்ப்பட்ட ஆக்ஷேபமும் எதிர்ப்பும் இருப்பினும் இந்த ஜீவனை நாம் விட்டிடாது ரக்ஷித்தே தீருவோம்" என்ற திடமான உறுதி எம்பெருமாஞல் காட்டப்பட்டுள்ளது. இதையே "ஶரண்ய அத்$_4$யவஸாயம்" என்று ஆசார்யர்கள் நிர்வஹித்தார்கள். இந்த உண்மையை விபீ$_4$ஷண சரணுகதியிலே பார்க்கலாம். இலங்கையினின்றும் ராவணஞல் "தி$_4$க் குலபாம்ஸநம்" என்று நிராகரிக்கப்பட்ட விபீஷணன் நான்கு இராக்கதருடன் ஆகாயத்தில் கிளம்பி அந்தரிக்ஷக$_3$த ஶ்ரீமாஞக வடகரையிலே தங்கின பொழுது, எல்லா வானரர்களும் இராமபிரானிடம் தங்கள் அன்புக்குச் சேர 'இலங்கையிலிருந்து வந்த இந்த இராக்கதரால் எம்பெருமானுக்கு என்ன தீங்கு நேரிடுமோ' என்று அஞ்சி, தம் கைகளில் மலைகளையும் மரங்களையும் எடுத்துக்கொண்டு அவ்விராக்கதரை அழிக்கத் துணிந்திருந்தார்கள். அந்நிலையைக் கண்டும் விபீஷணன் அவ்வானரர்கள் முன்னுக எம்பெருமானைப் பற்றுகையே முறை என்ற நோக்கத்துடன் அவர்களிடம் வெகு மதிப்புடன் "இராமனையும் ஸீதாப்பிராட்டியையும் பிரித்து, ஜடாயுவைக் கொன்று, நான் கூறிய ஹித வசனத்தை ஏற்காமல் என்னை அவமதித்த மஹாபாபியான ராவணனுக்குத் தம்பியாய்ப் பிறந்தவன் நான்; இப்படி நான் ராவணனுக்குத் தம்பியானுலும் அறப்பெரியோனுன அப்பரமனுக்கு என்னுல் சிறிதும் பொல்லாங்கு உண்டாவதற்கு இடமில்லை. இப்படி நீங்கள் என் வரவை சீக்கிரம் அறிவிக்கும்போது உங்களுக்கு நன்மையும், அப்பரமன் என்னை ஏற்று அடிமை செய்யும் போது அவனுக்கு நன்மையும், நான் அடிமைசெய்யும்போது எனக்கு நன்மையும் உண்டு. இப்படி எல்லார்க்கும் நன்மை உண்டாகுமாறு என் வரவை சீக்கிரம் இராமபிரானுக்கு அறிவியுங்கோள்" என்று முறையிட்டான்.

இப்படி விபீஷணன் முறையாகப் பிரார்த்தித்தும், சுக்ரீவன் 'விபீஷணனைக் கொல்லவேணும்' என்றும், அங்கதன் 'அவனைப்பற்றி நன்கு ஆராயவேணும்' என்றும், சரபன் 'அவன் நடத்தையை அறியுமாறு முதலில் தூதுவிடவேணும்' என்றும், ஜாம்பவான் 'அவனை ராமகோஷ்டியில் சேர்த்துக்கொண்டு நன்மை தீமைகளை அறிந்து அதற்கேற்ப நடக்கவேணும்' என்றும் பலவாறு ஆக்ஷேபங்களை எழுப்ப, கடைசியாகத் திருவடி ''தீம்பனான ராவணனைக்கொன்று லங்கா ராஜ்யத்தையும் தனக்கு வயமாக்கிக் கொடுக்க வல்லவன் ராமன் என்னும் திட எண்ணத்துடன் இவன் வந்தவன்; ஆகையால் இவனை ஏற்கலாம்'' என்று தெரிவித்தார். இவ்வளவு ஆக்ஷேபங்களுக்குப் பின் 'இவனை ஏற்கலாம்' என்கிற வார்த்தையைக்கேட்டுப் பெருமாள் உளரானார்; ( அத₂ ராம: ப்ரஸந்நாத்மா ) என்றுவால்மீகி பகவான் அருளிச்செய்கிறார்.

இவ்வளவையும் திருச்செவி சாத்திய இராமபிரான்—''ஸக்ருதே₃வ ப்ரபந்நய தவாஸ்மீதி யாசதே। அப₄யம் ஸர்வபூ₄தேப்₄யோ த₃தா₃ம்யேதத் வ்ரதம் மம॥''அதாவது–எந்த சேதனன்முறை வழுவாமல்நம்மை உறுதியுடன் ஶரணடைந்து, 'உனக்கே அடிமையாக இருக்கிறேன்' என்று யாசிக்கிறானே, அப்படிப்பட்டவனுக்கு எல்லா ஜந்துக்களிடத்தினின்றும் பயத்தைப் போக்கித் துன்பம் துடைத்து இன்பம் தருவது என்பது நமக்கே ஏற்பட்ட விரதம் அன்றோ; ஆகையாலே ''மித்ர பா₄வேந ஸம்ப்ராப்தம் ந த்யஜேயம் கத₂ஞ்சந। தோ₃ஷோ யத்₃யபி தஸ்ய ஸ்யாத் ஸதாமேதத₃க₃ர்ஹிதம்॥'' அதாவது-நம்பத் தகுந்த செயலாலே நம்மை நாடிவந்த விபீ₄ஷணனுக்குக் குற்றம் இருந்தாலும் இவனை விடுவதற்கில்லை, இது பெரியோர்களாலும் நிந்திக்கத்தகாதது — என்று அருளிச்செய்திருக்கிறார்.

இப்படி எப்பேர்ப்பட்ட எதிர்ப்பும் ஆக்ஷேபமும் தம் அநுகூலர்கள் கோ₃ஷ்டி₂யில் இருப்பினும் அதைப் பொருட்படுத்தாது ''இந்த ஜீவனை நாம் விட்டிடாது ரக்ஷித்தே தீரவேண்டும்'' என்ற திடமான எண்ணம் எம்பெருமான் கொண்டதால் அவன் திருவுள்ளம் விபீஷணன் செய்த சரணாகதிக்குப் பாங்காக அமைந்து கார்யகரமாக முடிந்தது.

இதே கருத்தையே திருமங்கைமன்னனும் ''உன் மனத்தால் என் நினைந்திருந்தாய்'' என்று திருவிடவெந்தை எம்பெருமானைக் குறித்துத் தாய்ப்பாசுரமாக அருளிச்செய்திருக்கிறார்.

ஆக ஜக₃த்ஸ்ருஷ்டி முதலாகச்செய்து அகிலசேதனவர்க்கங்களையும் உய்விக்கவிரும்பும் ஸித்₃தோ₄பாயமான எம்பெருமான் திருவுள்ளத்தை அனுசரித்ததே மோக்ஷப்ரத₃ாநம் என்று தேறிற்று.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே ஶரணம்.

ஸ்ரீ:

# மதுரகவிகள்

(ஆழ்வார் தோழப்பர் ஸ்ரீ உ. வே.
M. A. சுந்தரராஜ அய்யங்கார், மானாமதுரை.)

திருவழுதி நாடென்றும் தென்குருகூ ரென்றும்
மருவினிய வண்பொருநல் லென்றும்—அருமறைகள்
அந்தாதி செய்தான் அடியிணையே எப்பொழுதும்
சிந்தியாய் நெஞ்சே! தெளிந்து.

பூர்வசிக ஸ்ரீவைஷ்ணவ ப்ராஹ்மண வம்சத்திலே பிறந்த எந்த ஒரு பெரியார் அவதரித்திருக்காவிட்டால், நாம் இன்றும் என்றுமே பெருமையுடன் ஸேவித்துக்கொண்டிருக்கிற அருளிச்செயல்கள் என்கிற திவ்யப்ரபந்தமே காணமுடியாதோ, அந்த மஹாநுபாவருடைய சரித்திரத்தையும், அவர் இயற்றிய எந்த தசகத்தை 12000 உரு அநுஸந்தித்து நம் ஆசார்ய ஸார்வபௌமரான ஸ்ரீமந்நாதமுனிகள் தமது யோகதசையில் ப்ரபன்னஜனகூடஸ்தரான நம்மாழ்வாரை ஸாக்ஷாத்கரித்து எல்லா ப்ரபந்தங்களையும், ரஹஸ்யார்த்தங்களையும் அதிகரித்தாரோ, அந்த உருவில் சிறிய பெருமையில் பெரிய ப்ரபந்தமான "கண்ணிநுண் சிறுத்தாம்பு" பற்றியும் இக்கட்டுரையில் சிறிது விளக்குகிறேன்.

செல்வம் மல்கி அவன் கிடந்த திருக்கோளூரிலே "சைத்ர: ஸ்ரீமாந் அயம் மாஸ: புண்ய; புஷ்பிதகாநந:" என்று ஸ்ரீமத்தாகச் சொல்லப்படுகிற சித்திரை மாதத்தில் சித்ரா நக்ஷத்திரத்தில் வேதாத்மாவான பெரியதிருவடி அம்சமாய் ஸ்ரீ வகுளபூஷண பாஸ்கரோதயத்திற்கு அருணோதயம்போலே முன்னே அவதரித்தருளினார் ஸ்ரீமதுரகவிகள். வயதுவந்தபின்பு முக்திப்ரதமாகச் சொல்லப்படும் திருவயோத்தி முதலான திவ்ய தேசங்களை ஸேவிக்க எழுந்தருளினார். ஒருநாள் திருவயோத்தியில் இராத்திரி தென்திசையில் சூர்யோதயம்போலே ஓர் அப்ராக்ருத திவ்யதேஜஸ்ஸைக் கண்டு திகைத்து, ஏதோ ஒரு கிராமம் எரிகிறதோ, அல்லது காட்டுத்தீயோ என்று நினைத்து அன்றைக்குக் கண்வளர்ந்தருளினார். பின்னையும் இரண்டு மூன்று நாட்கள் இப்படியே கண்டு, இது ப்ராக்ருததேஜஸ் அன்று, அப்ராக்ருத திவ்யதேஜஸ்ஸே என்று உணர்ந்தார். இதைப் பரீக்ஷிப்போம் என்று பகலெல்லாம் கண்வளர்ந்தருளி இரவெல்லாம் அந்த திவ்ய தேஜஸ்ஸையே குறியாக வைத்து அதித்வரையுடனே புறப்பட்டார். மாடமாளிகை கூட கோபுரங்கள் சூழ்ந்து அழகாய திருக்குருகூரிலே சென்று, அப்பால் பார்த்ததில் அந்த திவ்யதேஜஸ்ஸைக் காணாமையால் இது இங்கேயே தான் இருக்கும் என்று சோதித்துப் பார்க்க, ஸம்ஜ்ஞாநபூர்ணராய்,

உறங்காப்புளி நிழல்தன்னிலே முகுளிதநயனராய், ஷோட₃ஶ வார்ஷிகராய், ஷோட₃ஶகலாபூர்ணரான சந்திரனைப்போன்றவராய், பத்₃மாஸநோபவிஷ்டராய். பரதத்வமுத்₃ராயுக்தராய் இருக்கிற பரமாசார்யரான ஸ்ரீபராங்குசரைப் பார்த்து 'இவர்க்குச் சைதன்ய முண்டோ, செவி கேட்குமோ' என்று பரீக்ஷிப்பதற்காக ஒரு குண்டுக் கல்லை எடுத்து அவர் முன்னே திடீரென்று போட, இவரும் அது கேட்டு திடுக்கென்று திருக்கண்களை மலரவிழித்துப் பார்த்தருள, ஸ்ரீமதுரகவிகளும் இவருக்கு வாக்குண்டோ என்று அறிய, அவரைக் குறித்து "செத்தத்தின் வயிற்றிலே சிறியது பிறந்தால் எத்தைத் தின்று எங்கே கிடக்கும்" என்று கேட்க, "அத்தைத்தின்று அங்கே கிடக்கும்" என்று ஆழ்வார் அருளிச்செய்ய, ஸ்ரீமதுரகவிகள் இதுகேட்டு 'இவர் ஸர்வஜ்ஞர், இந்த மஹாநுபாவரை அநுவர்த்தித்து உஜ்ஜீவிக்கவேண்டும்' என்று நினைத்துத் தாளும்தடக்கையும் கூப்பி ஆழ்வார் திருவடிகளிலே ஸாஷ்டாங்கமாய் விழுந்து 'மேவினேன் அவன் பொன்னடி மெய்ம்மையே' என்று ஆஶ்ரயித்து க்ருதார்த்த₂ரானார்.

எம்பெருமான் ஆழ்வார்க்கு மயர்வற மதிநலமருள, ஆழ்வாரும் எம்பெருமானுடைய திவ்யாத்ம ஸ்வரூபத்தையும், திவ்யமங்கள விக்ரஹத்தையும் திவ்யகுணங்களையும் நன்றாக அநுபவித்து, அவ்வநுபவஜநிதப்ரீதி உள்ளடங்காமல், ருக், யஜுஸ், அதர்வணமென்கிற வேத₃த்ரய ஸாரார்த்தத்தைத் திருவிருத்தம், திருவாசிரியம் பெரிய திருவந்தாதி என்கிற தி₃வ்யப்ரப₃ந்த₄த்ரயத்தாலே அருளிச்செய்து, ஸாமவேதஸாரார்த்தத்தைச் சரமப்ரப₃ந்த₃மான திருவாய்மொழியாலே அருளிச்செய்து, "மிக்கவேதியர் வேதத்தின் உட்பொருள் நிற்கப் பாடி என் நெஞ்சுள் நிறுத்தினன்" என்கிறபடியே தேவுமற்றறியாத ஸ்ரீமதுரகவிகள் அறியக்கற்று உணரலாம்படி ஆக்கி, அர்த்த பஞ்சகத்தையும், வேத₃ஶாஸ்த்ரஸாரபூ₄த ஶரணாகதி மந்த்ரார்த்த₂த்தையும் திருவாய்மொழியிலே ஸுவ்யக்தமாக அருளிச்செய்தார்.

அநந்தரம் திருக்குருகூர் நம்பிக்கு ப்ரத₂ம சிஷ்யரான ஸ்ரீமதுரகவிகள் ப்ரபந்நஜனகூடஸ்தரான ஸ்வாசார்ய வைப₄வத்தை "கண்ணிநுண் சிறுத்தாம்பு" என்கிற தி₃வ்யப்ரப₃ந்த₄த்தாலே அருளிச்செய்து பஞ்சமோபாயநிஷ்ட₂ரான முமுக்ஷுக்களுக்கு உபகரித்தருளி, அர்ச்சாரூபமான ஆழ்வார் விக்ரஹத்தை ஏறியருளப்பண்ணி, அவருக்கு நித்ய, பக்ஷ, அயன, ஸம்வத்ஸர உத்ஸவங்களையெல்லாம் நடத்தி வந்தார். "வேதம் தமிழ் செய்த பெருமாள் வந்தார், திருவாய்மொழிப் பெருமாள் வந்தார், திருநகரிப் பெருமாள் வந்தார்,

காரிமாறர் வந்தார்'' என்று பல சின்னங்கள் பணிமாற, சங்கத்தார் சிஷ்யர்கள்''எங்கள் சங்கத்தாரோடு தர்க்கித்து ஜயித்தாலொழிய 'வேதம் தமிழ்செய்த பெருமாள் வந்தார்' முதலான விருது பிடிக்க ஒட்டோம்'' எனத்தடுக்க, இவரும் 'அது நியாயம், ஆனுல் எங்கள் ஆழ்வார் எங்கும் எழுந்தருளமாட்டார்; அவர் திவ்ய ஸூக்திக்கு சங்கப்பலகை இடம் கொடுத்தால் அவருக்கு இடம் கொடுத்ததாகும்' என்று சொல்லி, ஒரு சிறு முறியிலே ''கண்ணன் கழலிணை'' என்று எழுதிக்கொடுக்க, அச்சிறுமுறியைச் சங்கப்பலகையின்மேல் வைக்க, அக்காலத்தில் 300 தமிழ்ப் புலவர் சங்கப்பலகை ஏறியிருக்க, அப் பலகை இவர்கள் எல்லோரையும் கவிழ்த்துப்போட்டு ஆழ்வார் திவ்ய ஸூக்தியான சிறிய முறி ஒன்றையே தரித்துநிற்க, இத்தைக்கண்டு சங்கத்தலைவனும் பயப்பட்டு ''ஈயாடுவதோ கருடற்கெதிரே, இரவிக் கெதிர் மின்மினியாடுவதோ, நாயோடுவதோ உறுமிப்புலிமுன்''என்று ஆழ்வாரிடம் அபராதக்ஷமாபணம் பண்ணிக்கொண்டான். இப்படி நம்மாழ்வார் பெருமை மதுரகவியாழ்வாராலே லோகமெல்லாம் பிரகாசித்தது—என்பது சரிதம்.

நாலாயிர திவ்யப்ரபந்தங்கள் முழுவதும் பகவத் விஷயமாயிருக்க அங்ஙனல்லாத இவரது ப்ரபந்தத்தை அவற்றினிடையே சேர்த்தது தகுமோ? என்னும் ஶங்கையை ஸ்வாமி மணவாள மாமுனிகள் தம் உபதேசரத்னமாலையில் ''வாய்த்த திருமந்திரத்தின் மத்திமமாம் பதம்போல்...தாத்பரியம் தேர்ந்து'' என்கிற பாசுரத்தினுல் போக்கி யருளினுர். ''இதுதானும் பயிலும் சுடரொளி, நெடுமாற்கடிமை, தொடக்கமானவற்றின் அர்த்தஂத்தை ப்ரதிபாதிஂக்கையாலே அர்த்தஂ கௌஂரவத்தை விசாரித்து, நன்ருயிருப்பதொரு ஹாரத்தைச்சமைத்து அது ஒளிபெறும்படி ஶ்லாக்ஂயமாயிருப்பதொரு நாயகக்கல்லை அதன் நடுவே பதித்தாற்போல், அருளிச்செயல்கள்தான் நிறம்பெறும்படி அவற்றின் நடுவே இத்தைச் சேர்த்தார்கள். சேர்த்த சேர்க்கையின் சாதுர்யத்தாலிறே முத்துமாலை தொடக்கமான ஆபஂரணுதிஂகள் நிறம் பெறுவது. அதேபோலாய்த்து இதுவும்'' என்று அப்பாட்டின் வ்யாக்யானத்தில் பிள்ளைலோகம் ஜீயர் அருளிச்செய்கிருர்.

ஸ்ரீவசநபூஂஷணத்திற்கு அந்தரங்கஂார்த்தஂமான ஆசார்ய நிஷ்டைஂக்கு ஸ்ரீமதுரகவிகளின் நிலை மூலமாகும் என்பது ''உண்ட போது ஒரு வார்த்தையும் உண்ணுதபோது ஒருவார்த்தையும் சொல்லுவார் பத்துப்பேருண்டிறே'' இத்யாதிஂ ஸூத்ரத்தாலும், அவ் விடத்து மணவாள மாமுனிகள் வ்யாக்ஂயானத்தாலும் தெரியத்தக்கது. (1) ''வேதார்த்தம்'' என்று தொடங்கி (447) ''ஆசார்யாபிமானமே உத்தாரகம்'' என்று ஸ்ரீவசநபூஂஷணத்தில்அறுதியிட்டதே கண்ணிநுண் சிறுத்தாம்பின் ஸாரார்த்தஂமாகும்.



ஸ்ரீ :

# செந்தமிழ் வேதியர் சிந்தைதெளிந்து- சிறந்து மகிழ்ந்திட என்ன வழி?

—❋—

[திருவெள்ளறை அம்மாள் ஸ்ரீ உ. வே. S. கிருஷ்ணமாசாரியர்]

1. இது கலியுகம். முந்தியயுகங்களில் இருந்த ரிஷிகள் - இக்கலி காலத்தின் நிலையை முன்கூட்டியே நன்கு அறிந்திருந்தனர். இந்தக் கலியுகத்தில் "வேதாத்யயனம்" செய்பவர்கள் வெகு குறைவு. ஸம்ஸ்கிருதபாஷையின் பெருமையும் குன்றிவிடும். ஆகையால் தேவபாஷையான ஸம்ஸ்கிருதத்தில் உள்ள வேதங்களையும் அதில் அடங்கியுள்ள தத்துவங்களையும் அறியும் சக்தி மிகவும் குறைந்து விடும். ஆனால் இதற்கு ஒரு பரிஹாரம் வேண்டுமே; அதற்கு அவர்கள் எம்பெருமான் ஸ்ரீமந் நாராயணனை சரணமடைந்து கலியுகத்தில் மானிடர்கள் உஜ்ஜீவிக்க வழி ஒன்று கூறும்படி கேட்டனர். ஸ்ரீமந் நாராயணனும் 'அடியார்களுக்கு அருள்செய்வதைவிட அவன் உள்ளத்துக்கு உகப்பானது ஏதுமில்லை' என்றபடி அவர்களுடைய வேண்டுகோளுக்குச் செவிசாய்த்து, தனது தேவிகளான ஸ்ரீதேவி, பூ$_4$மிதேவி, நீளாதேவி முதலிய தேவிகளையும், அநந்தன், கருடன், விஷ்வக்ஸேனர், ஸ்ரீவத்ஸம், கௌஸ்துபம், வைஜயந்தி வநமாலை களையும், ஸுதர்ஶனம், பாஞ்சஜந்யம் கௌமோதகீ எனும் க$_3$தை$_3$, நாந்தகவாள், ஶார்ங்க$_3$வில் என்ற பஞ்சாயுதங்களையும் இவ்வுலகில் மயர்வற மதிநலம் அருளப்பெற்ற ஆழ்வார்களாக அவதரிப்பித்தான். பல நீர்நிலைகளில் உள்ளஜலத்தை சூரியனின் கிரணங்களால் எடுத்து மேகங்கள் ஸர்வலோகங்களுக்கும் மழையாகப்பொழிவதுபோல, அவ்வாழ்வார்கள் வேதங்களை உட்கொண்டு வேதத்தைத் தமிழில்செய்து இவ்வுலகினருக்கு மஹோபகாரமாக அருள்மாரி பொழிந்தனர். செந்தமிழ் வேதியர்களான ஆசாரியர்கள் பல நூல்களின் இவ்வருளிச்செயல் களின் ஆழ்பொருளை விளக்கினர். ஆனால் இன்று உள்ள நிலை என்ன?

2. கலிகாலத்தின் கொடுமைகளைக் கண்டு வருந்தியபோதிலும், அவைகளுக்கு பலியாகி அதனால் பாதிக்கப்பட்ட தலைமுறையில் நாம் வாழ்ந்து வருகிறோம்! நமது ஸ்ரீவைஷ்ணவ இளைஞர்கள், இளம் தலைமுறையினர், பாஷாந்தரப் படிப்பினாலும் "ஹிப்பி" என்ற மேனாட்டு அநாகரிகமான கவர்ச்சியினாலும் பீடிக்கப்பட்டுச் சேற்றைப் பூசிக்கொள்கிறார்கள் மணமான சந்தனம் இருக்க. ஏன் இந்த விபரீத புத்தி? என்ன "கிருதா"வும், "மீசை"யும், பெண் பிள்ளைபோன்றமுடி"யும்? இவை எதனால்? ஏன்? இந்த அவல நிலைமைகளிலிருந்து நம்மைக் காப்பாற்றிக்கொள்ள, நம் சமூகத்தை

நல் வழிப்படுத்த உள்ள ஒரே வழி ஆழ்வார்கள், ஆசாரியர்கள், தெய்வப் புலவர்களின் அருள் வாக்குகளைச் சிந்தனை செய்வதேயாகும். நமது புராதனமான பண்பாட்டையும் தார்மீக நெறிமுறைகளையும் கைவிடாமல் இருந்தால், இந்தக் கவர்ச்சிகள் நம் சமூகத்தைச் சீர் குலைக்கவே முடியாது. பகவத்பக்தி, ஆசார அனுஷ்டானங்கள் தான் முதற்கண் அவசரமாகத் தேவைப்படுவது.

3. இன்று எல்லா சமூகங்களும், குறிப்பாக பிராம்மண சமூகம் தனது ஆசார அனுஷ்டானங்களை இழந்து நெறிகெட்ட வாழ்வை மேற் கொள்வதற்குக் காரணம் ''சினிமா''க்களும், ''கவர்ச்சிப்பத்திரிகை'' களுமே! அன்று இயல், இசை, நாடகம் என்ற மூன்றின் மூலம் பண்பாடு காக்கப்பட்டது. இப்போது இவையே பண்பாடு குலைய வழி கோலுகிறது. கீழான காம உணர்ச்சியைத் தூண்டுவது, பெரியோர் களை அவமதிப்பது, பெற்றோர்களை, அதிலும் வயதானவர்களை உதா சீனப்படுத்துவது, அநாகரிகமான கொள்கைகளைப் பிரசாரம்செய்வது இவைதானே இந்த சினிமாக்களின், பத்திரிகைகளின் தொண்டு? அதற்காக 'சினிமா' அல்லது நாடகமே பார்க்கக்கூடாது, பத்திரிகையே படிக்கக்கூடாது என்று கூறவில்லை. ஆபாஸமான நம் சமுதாயப் பண்பாட்டை இழிவுபடுத்தும் சினிமாக்களையும், பத்திரிகைகளையும் பார்க்கவேண்டாமே. நல்ல கருத்தும் போதனையும் உள்ளவற்றை மட்டுமே பார்க்கலாமே. அப்படிப்பட்டவற்றிலும் வசூல் அம்சத்திற் காகக் கற்பனைகள் ''படுபச்சையாக'' பாலில் தண்ணீர் கலப்பதுபோல சேர்த்திருப்பார்கள்! அதனால் பாதிக்கப்படாதவாறு, அன்னப் பக்ஷி போலக் கெட்டதைத் தள்ளி நல்லதைக்கொள்ளலாம். தீமைகளுக்கு இடையில் தூய்மையாக வாழ முயற்சிசெய்யவேண்டும். பழம்பெருமை பேசிப்பயன் இல்லை! ஆக, நான் திட்டவட்டமாகப் பறைசாற்றிக் கூறுவேன் —''ஸ்ரீவைஷ்ணவ சமூகத்தின் நீதி உணர்ச்சிகளும் தார்மீக சிந்தனைகளும் பக்தி நெறிகளும் புராதனப்பெருமைகளும் சீர்குலைந்து தறிகெட்டுநிற்க, இந்த ''சினிமா'' ''பத்திரிகை''மாயப் பிசாசுதான் காரணம். இதை ஓரளவு தவிர்த்தால் இந்த விலைவாசி ஏறும் காலத்தில் அதற்கென்று செலவுசெய்யும் பணமும் மிச்சமாகும். பசியாறப் பால் வாங்கிச் சாப்பிடுங்கள்; அதற்குச் செலவாகும் பணத்தை 10 பைசாக்களாக மாற்றி தினசரி ''10 பைசா'' தர்மம் செய்யுங்கள்; அல்லது கோவிலில் உண்டியலில் போடுங்கள். சினிமாவிற்காட்டிலும் நிம்மதி கிடைக்கும்! மனமிருந்தால் மார்க்க முண்டு. இதுவே செந்தமிழ் வேதியர் சிந்தைதெளிந்து சிறந்து மகிழ்ந்திட வழியாகும்.

ஸ்ரீ :

ஸ்ரீமதே ராமாநுஜாய நம :

# ஸ்ரீரங்க ஸ்ரீவிவேசந ஸமாலோசநம்

*[ஸ்ரீ உ. வே. ஶதாபி$_4$ஷேகம்*
*கோ$_3$விந்த$_3$நரஸிம்ஹாசார்ய ஸ்வாமி, ஸ்ரீரங்கம்]*

## முன்னுரை

ந்யாயவேதா$_3$ந்த வித்வான் மதுராந்தகம் வீரராகவாசார்யர் ஸ்வாமி பெயரால் வெளிவந்திருக்கும் "ஸ்ரீரங்கஸ்ரீவிவேசநம்" என்னும் நூல் எழுதுவிக்க இது எழுதப்படுகிறது.

இதில் மிகச் சுருக்கமாகப் பத்து விஷயங்கள் தெரிவிக்கப்படுகின்றன. இவ்விஷயங்களில் சில-கோர்ட்டு ரெகார்டுகளைக்கொண்டும், சில-பரம்பரையாக இன்றளவும் பலர் சொல்லக்கேட்டுப்போருவதையிட்டுமே எழுதப்படுகின்றன. இது ஓரளவு தத்துவமுணர்த்த எழுதப்படுகிறதேயன்றி யார்மீதும் காழ்ப்பும் சார்பும்கொண்டு எழுதப்படவில்லை. இதில் காட்டப்படும் விஷயங்களை ஸரியான ஆதா$_4$ரங்கொண்டு மறுத்துரைத்தால் அவை நன்றியுடன் ஏற்றுக்கொள்ளப்படும்.

ஸரியான ஆதாரமொன்றுமில்லாமலும், ப்ரத்யக்ஷவிருத்$_3$த$_4$மாகவும் எழுதப்பட்ட மதுராந்தகம் ஸ்வாமியின் 'ஸ்ரீரங்க$_3$ஸ்ரீவிவேசநம்' ஓர் நூலாக ஒப்புக்கொள்ளப்படுமேயானால், உபபத்தியுக்தங்களான விஷயங்களைக்கொண்ட இந்த ஸ்ரீரங்க ஸ்ரீவிவேசந ஸமாலோசநமும் ஏன் விலை செல்லாது? இதில் காணும் விஷயங்கள் நெடுநாட்களாகப் பலர் சொல்லிவருவதுதான். பலரறிய இங்கு எழுதப்படுகிறது.

### விஷயம் 1. ஸ்ரீரங்கஸ்ரீவிவேசநமெழுதிய மதுராந்தகம் ஸ்வாமியைப்பற்றிச் சில வார்த்தைகள்

இந்த ஸ்வாமி, ஓர் சிறந்த வித்வானுக்கு எடுத்துக் காட்டாய் அமைந்தவர். பரமசாந்தர். ஆதாரமற்ற விஷயங்களைக் கொண்டு சர்ச்சையில் காலம்போக்காதவர். எதையுமே ஆதாரத்துடன் பேசுபவர் எழுதுபவர். யாரிடத்தும் காழ்ப்புணர்ச்சியற்றவர். ஸகல பூர்வாசார்யர்களிடத்தும் மிக்க ஆதரம்கொண்டவர். அடியேனிடம் மிக்க வாத்ஸல்யம் கொண்டவர்.

இத்தகைய பெருமையுடையவர், 'அநார்ஜவமே வடிவெடுத்தவர்' என நிரூபிக்கப்பட்ட D. T. தாதாசார்யரின் ஓர் சுவடியை ஆதாரமாகக்காட்டி, 'எல்லா ஆழ்வார்களும் ஆசார்யர்களும் திவ்யதேசங்களும் பூர்வம் வடகலையே' என எழுதத்துணிந்தது அடியேனுக்கு வியப்பை உண்டாக்குகிறது. "வடமாள் என்றால் வடகலையார்" என்கிற இவருடைய அபூர்வகல்பனம் சாதுர்யத்தை வெளிப்படுத்தவில்லை. இதனை இவர் ஸமநஸ்கமாக எழுதியிருக்கமுடியாது. சிலரின்

உள்வெதுப்புக்குத் தத்காலஶாந்தியளிக்க இதையெழுதியிருக்கவேணும். இந்த ஸ்வாமியின் பிற்காலத்தில் இந்தச் சுவடி காணப்படுமேயானால், இது இவருடையதன்று என்று உபயகலையாருமே சபதம்பண்ணுவர்கள். நடையும் விஷயமும் அத்தகையது. அல்லது ராஜஸதாமஸ புராண ப்ரவர்த்தநத்துக்குப் பிரமனுக்குச் சொன்னது இவரிடத்தும் காரணமாகலாம். ஸ்ரீரங்கநாதன் இவரை லீலைக்கு விஷயமாக்கி விட்டானத்தனை. இப்படி இவரைப்பற்றி எழுதவேண்டி வந்ததை நினைத்து வருந்துகிறேன்.

## விஷயம் 2. D. T. தாதாசாரியரின் செவ்வைக்கேடு

இவரெழுதிய ''ஸம்ப்ரதா₃யப்ரதீபம்'' என்னும் சுவடி மஹா வித்வான் காஞ்சீ ஸ்வாமியால் நிரஸ்தமாயிற்றென்பதை உபயகலையாருமே அறிவர். காஞ்சீ ஸ்வாமி இவரெழுத்து இவர் ஸம்ப்ரதா₃யத்தவர்களுக்கே ப₃ாத₄கமானதென்று காட்டியிருக்கிறார்.

அதாவது:- அமுதனாரிடமிருந்த ஸ்ரீரங்கம் ஸந்நிதி நிர்வாஹத்தைக் கைப்பற்ற, ஸ்வாமி எம்பெருமானார் கூரத்தாழ்வானை அவரகத்தில் நிமந்த்ரணமிருக்கப் பண்ணி, த்ருப்தி சொல்லும்போது நிர்வாஹத்தையும் கோயில் சாவிகளையும் கேட்டு வாங்கப்பண்ணினார் என்னும் ஓர் ஐதிஹ்யம் உபயகலையாராலும் சொல்லப்பட்டு வருகிறது. கோயிலொழுகு முதலானவற்றிலும் உள்ளது.

அதனை D. T. தாதாசாரியர் எம்பெருமானார் காலத்துக்குப் பிற்பாடு ஒருவர் செய்ததாக எழுதி, வடகலை ஸந்நிதி தென்கலையாக்கப் பட்டதாகத் திரித்துக் கூறியிருக்கிறார். அவர் யார் என்பதைக் காட்டவில்லை. நெடுநாள் வழக்கத்தையே மாற்றமுடிந்த அப்படிப்பட்ட ஒருவர் அப்ரஸித்₃த₄ராயிருப்பாரா? எதையும் தமக்கு ஸாத₄கமாக ஆக்கப்புகுந்து திக்கித்திணறுவதும் மூக்கறுபடுவதும் D. T. தாதாசாரியருக்கு ஸ்வபா₄வஸித்₃த₄ம். தம் ஊரான திருவரங்கத்தைப் பற்றித் தம்பி பெயரால் ஓர் சுவடி எழுதி, ஸ்ரீ. உ. வே. வித்வான் புத்தூர் அட்வகேட் S. க்ருஷ்ணஸ்வாமி அய்யங்கார் ஸ்வாமியின் ஸுத₃ர்ஶநத்தால் பங்கப்பட்டதும் எல்லாருமறிந்ததே. ஸ்ரீரங்கம் எம்பெருமானார், நம்மாழ்வார் திருமுகமண்டலத்தில் வடகலைப் புண்ட்ரரேகை இருப்பதாகக் கூசாமல் பொய் எழுதுகிற D. T. தாதாசார்யரின் செவ்வை எத்தகையதென்பதைக் கண்ணுடையார் இரு திருவுருவங்களையும் ஸேவித்து நிச்சயித்துக்கொள்ளலாம். நம் மதுராந்தகம் ஸ்வாமியும் இப்படி ராக்கண்ட குழியில் பகலில் விழலாமா? இந்த D. T. தாதாசார்யரை இவர் பின்பற்றலாமா?

## விஷயம் 3. வடகலை தென்கலை வ்யவஹாரம்

ஸ்ரீவைஷ்ணவர்கள் எல்லாருக்குமே ஊர்த்வபுண்ட்ரம் இடைவெளியோடு கூடிய ஹரிபாதத்வயாக்ருதியான தென்கலைத் திருமண் காப்பே. இதனை ஆதாரத்துடன் நிலைநாட்டுகிறேன். வடகலை தென்கலை வ்யவஹாரம் திருமண்காப்பைப்பற்றி வந்ததன்று — சாஸ்த்ரார்த்தாநுஷ்டாநத்தைப்பற்றி வந்ததே.

அதாவது :- குணநுகுணமான ப்ரவ்ருத்திபரர்களான உபாஸகர்களே வடகலையார். ப்ரபத்தி ஶாஸ்த்ரமான திருமந்த்ரார்த்தநிஷ்டர்களாய், நிவ்ருத்திபரர்களே தென்கலையார். திருமந்த்ரார்த்தத்தை நன்கு நிரூபிப்பதாலே திவ்யப்ரபந்தங்களை இவர்கள் முக்யமாகக் கொண்டார்கள். ஆகையால் இவர்கள் தென்மறையையும் பற்றினவர்களென்று தென்கலையார் எனப்பட்டார்கள். தேஶிகனும் தேஶிகாநுயாயிகளும் ப்ரபத்தி நிஷ்டர்களேயாகையாலே தென்கலையாரேயாம். 'தெளியாத மறைநிலங்கள் தெளிகின்றோமே' என்று ஸ்வாமி தேஶிகன் ஸாதித்ததே அவரைத் தென்கலை என உறுதிப்படுத்துகிறது. ஆக, உபாஸகர்களோ ப்ரபந்நர்களோ யாராகிலும் அர்த்தாநுஷ்டாநத்தால் வடகலை தென்கலை என்கிற பேதம்கொண்டிருந்தாலும், ஸ்ரீவைஷ்ணவர்களாகையாலே ஹரிபாதத்வயாக்ருதியான தென்கலைத் திருமண்காப்பையே தரித்துவந்தார்கள். இந்த ஹரிபாதத்வயாக்ருதிக்குத் தென்கலைத் திருமண் என வ்யவஹாரம் பிற்பட்ட காலத்தில் வந்தது. முன்பு ஊர்த்வபுண்ட்ரமென்று மாத்ரமே பெயர் ''நீறு செவ்வேயிடக்காணில்'' என்கிறவிடத்தில் ஈட்டில் இதனைக் காணலாம். இப்போது (முறம்போன்ற) சூர்ப்பாக்ருதியிலோ, (மூங்கிலிலைபோன்ற) வேணுதளாக்ருதியிலோ காணப்படும் வடகலை ஊர்த்வபுண்ட்ரம் தேசிகனால் சிலருக்காகக் கல்பிக்கப்பட்டது. இப்போது 300 வருஷங்களாக இது வைஷ்ணவர்களில் ஒரு சாரார்களிடத்துப் புகுந்துவிட்டது.

வடகலையாரை—சாஸ்த்ரிகள் என்றும், வர்ணதர்மிகள் என்றும் அந்தணர், மறையோர் என்றும், விப்ரர் என்றும், தென்கலையாரை - ஸாரஜ்ஞர் என்றும், தாஸவ்ருத்திகளென்றும், அடியார், தொண்டர் என்றும், ஆசார்யஹ்ருதயத்தில் நிரூபித்திருப்பதை 6-வது சூர்ணைமுதல் 37-வது சூர்ணைமுடிய மணவாளமாமுனிகளின் வ்யாக்யாநத்துடன் ஸேவித்தால் நன்கறியலாம். அங்கு ''அத்யயநஜ்ஞாநாநுஷ்டானங்களாலே ப்ராஹ்மண்யமாகிறுப்போலே சந்தங்களாயிரமும் அறியக்கற்றுவல்லராகில் வைஷ்ணவத்வஸித்தி'' என ஓர் சூர்ணையிட்டு, அழகியமணவாளப்பெருமாள் நாயனார்—

ஸ்ரீவைஷ்ணவர்களாகவேணுமேயானுல் திவ்யப்ரபந்தங்களைக் கற்றுத் தெளியவேணும் என்கிற வழியால் அருளிச்செயல் கற்ற ஸ்ரீவைஷ்ணவ ஸாமாந்யத்தையும் தென்கலையாரே என்கிருர். இது ஏற்றிச் சொன்னதன்று. கண்ணுடையார் இன்றைக்கும் காணலாம்.

ஆகவே, தேசிகன் காட்டிய வழியில் போமவர்கள் வடகலையார் மற்றையாசாரியர்கள் காட்டின வழியில் போமவர்கள் தென்கலையார் என்பது ஸமீபகாலத்து வாதமேயொழிய இதற்கு ஆசார்யர்கள் காலத்தில் ஆதாரம் கிடையாது. எல்லாம் வடகலையே என்கிற மதுராந்தகம் ஸ்வாமி கூற்று அடியற்றது. எல்லாம் முதலில் தென்கலையே என்பதே உண்மை.

ஸ்ரீரங்கஸ்ரீ விவேசநத்தில் பக்கம் 13ல் வில்லிபுத்தூர்ப் பகவரைப் பற்றி எழுதிய மதுராந்தகம் ஸ்வாமியைக் கேட்கிறேன். ''தேவரீர் கூறுவதுபோல் வில்லிபுத்தூர்ப் பகவர் சாத்தாத ஸ்ரீவைஷ்ணவராய் சதுர்த்தவர்ணத்தவரானுல், திருவயிந்திரபுரத்து ப்ராஹ்மணர்கள் அவரைத் தங்கள் துறையில் ஏன் நீராடவருவதில்லை எனக்கேட்பர் களா? அவர்கள் வினவே வில்லிபுத்தூர்ப் பகவரை ஸ்ரீவைஷ்ணவ ப்ராஹ்மணோத்தமர் எனக்காட்டவில்லையா? அவர் தனியாக நீராடினுல் இவர்களுக்குக் குறை ஏன்? விலக்ஷணபுருஷரான அவரின் தனி நீராட்டம் இவர்களை மற்றையார் பழிக்குமளவுக்கு முடிந்தது தானே காரணம். விமர்ஶகுஶலரான மதுராந்தகம் ஸ்வாமி விமர்ஶி யாததேனே? வில்லிபுத்தூர்ப் பகவரும், கேவலப்ராஹ்மணர்களை ''யூயம் வர்ணதர்மிண: — நீங்கள் வர்ணதர்மாநுஷ்டாதாக்கள்; வயம் விஷ்ணுதாஸா:— நாங்கள் எம்பெருமான் அடியார்கள்; அஸ்மாகம் தாஸவ்ருத்திநாம் — அடிமைத் தொழில்கொண்ட எங்களுக்கும், யுஷ்மாகம் நாஸ்தி ஸங்கதி: — அடிமைத் தொழிலற்ற உங்களுக்கும் ஸம்பந்தம் கூடாது'' என்ருர். நடுநிலையாளர்களே! நன்கு கவனியுங்கள். குளங்காத்தலான ப்ராஹ்மண தர்மாநுஷ்டானம் உயர்ந்ததா? கோயில் காத்தலான ஸ்ரீவைஷ்ணவதர்மம் உயர்ந்ததா? இக்காலத்து வடகலையார் போரிடுவது இக்கோயில் களில் உரிமைக்குத்தானே. ஆசார்யஹ்ருதய ஸ்ரீஸூக்திகள் ஒவ் வொன்றுமே இவர்களுக்குப் பேரிடிகளாம். உண்மையில் ஆசார்ய ஹ்ருதயகாரர் ப்ரபத்தி நிஷ்டர்களான எவரையும் குறைசொல்ல வில்லை. இப்போது கிடைக்கவரியவர்களான உபாஸகர்களைத் தான் இகழ்ந்தார். இவர்களும் உண்மையில் தேஶிகாநுயாயிகளேயானுல் தாஸவ்ருத்திகளே; சந்தங்களாயிரமும் அறியக்கற்று வைஷ்ணவர்க ளானவர்களே. இந்தச் சண்டைக்கே மூலகாரணமான ராமாநுஜ

த₃யாபாத்ரத்தையும், தேசிகன் யாரோ சிலருக்காகக் கல்பித்த சூர்ப்பா க்ருதி வேணுத₃ளாக்ருதிகளான புண்ட்₃ரங்களையும் விட்டு, ப்ரபந்ந ஸ்ரீவைஷ்ணவர்களுக்கான அநாதி₃ஸித்₃த₄மான ஹரிபாத₃த்₃வயா க்ருதி ஊர்த்₄வபுண்ட்₃ரத்தை த₄ரித்தார்களேயானுல் இவர்களுடன் ஸந்நிதி₄களில் கூடிக் குலாவத் தடை ஏது? ஆகவே சாஸ்த்ரஸித்₃த₄ வடகலையார் இப்போது நம்மில் யாருமில்லை,

## விஷயம் 4. வடகலைத் திருமண்காப்பைப் பற்றிய உண்மை

முற்காலத்தில் ப்₃ராஹ்மணர்கள் அனைவரும் வைஷ்ணவர்களே. அதாவது விஷ்ணுவுக்கே பரத்வம் என்ற கொள்கை உடையவர்களே. இவர்களில் சைவர்கள் கிடையாது முதலில் விஶிஷ்டாத்₃வைதி ஸ்ரீவைஷ்ணவர்களும், ஆதிசங்கரர் காலத்திற்குப்பிறகு அத்₃வைதிகள், விஶிஷ்டாத்₃வைதிகள் என இருவகுப்பினருமே இருந்தனர். இதற்குச் சான்று மிகப்பழைய சங்க இலக்கியங்களில் வைஷ்ணவ மதமே காணப்படுவதும், ஆதிசங்கரர் தொடங்கி ''நாராயண ஸ்ம்ருதி:'' என்று கையெழுத்திடுவதும், ஆதிசங்கரர் தம் பா₄ஷ்யங்களில் சிவபரமாக, ஏன் அந்யதே₃வதாபரமாக ஓர் வாக்யமும் ஓர் ஶ்லோகமும் எழுதாததுமேயாகும், இந்த அத்₃வைதிகளும் வேணுத₃ளாக்ருதியில், புருவ மத்தியிலிருந்து ஊர்த்₄வபுண்ட்₃ரமே இட்டுவந்தார்கள். இன்றைக்கும் அவர்களில் பலரைக் குடி குடியாகக் காணலாம். சங்கரர் பரம்பரையில் வந்தாரொருவர், ஸ்ரீவைஷ்ணவர்களால் தங்கள் மதம் அழிந்துவிடு மென நினைத்து, ஜநங்களை வசப்படுத்த து₃ர்தே₃வதையான ஶக்தியை உபாஸிக்கத் தொடங்கினுர். அதிலிருந்து அவரும் அவர் பரம்பரை யாரும் ப₄ஸ்மத₄ாரிகளானுர்கள், பரம்பரையாக வந்த நாராயண ஸ்ம்ருதியை விடமுடியவில்லை காலக்ரமத்தில் ப்₃ராஹ்மணாத்₃வைதிகள் பலரும் ப₄ஸ்மத₄ாரிகளாய் ஶைவர்களாகிவிட்டார்கள்

ஆகவே, அத்₃வைதிகளும் முற்காலத்தில் வைஷ்ணவர்களான மைக்குச்சேர நெற்றியில் சந்தனத்தால் வேணுத₃ளாக்ருதியில் நடுவில் இடைவெளியுடன் புருவங்களின் நடுவிலிருந்து மேல்நோக்கிப் புண்ட்₃ர மிட்டு வந்தார்கள். ஆதிசங்கரர் உட்பட இவர்கள் ஸகு₃ணப்ரஹ்ம மாக உபாஸித்தது விஷ்ணுவையேயாம். இன்றைக்கும் அத்₃வைதிகள் சிலர் மறந்தும் புறந்தொழாமாந்தராயே உள்ளார்கள் இதற்கு எடுத்துக்காட்டாக, ஸ்ரீமான் க்ருஷ்ணப்ரேமீ என்பவரையும், ஸ்ரீரங்கம் அம்மாமண்டபம் ரோட்டிலிருக்கும் ஶ்ரௌதபாடசாலை அத்₄யக்ஷரையும் காணலாம். இவ்விஷயத்தை விசாரித்துத் தெளிவும் பெறலாம்.

ஸ்வாமி தேசிகன் இத்தகைய அத்வைதபண்டிதர்கள் பலரை வாதில் வென்றார். இவர் வாதிகளின் துஸ்தர்க்கங்களைத் தம் ஸத்தர்க்கங்களால் வென்றமையையிட்டே தேஶிகனுக்கு "தார்க்கிக கேஸரீ" என மற்றையாசாரியர்கள் ஒருவருக்குமில்லாத சிறப்புப்பெயர் ஏற்படலாயிற்று.

அத்வைதிகளுடன் இவர் வாதிடும்போது ஓர் பணயம்வைத்தார். அதாவது அவர்கள் தோற்றால் விஶிஷ்டாத்வைதிகளாகிவிடவேணும் என்பதே அது. அவர்களும் தோற்றார்கள்; விஶிஷ்டாத்வைதிகளானார்கள். அப்போது அவர்களின் அத்வைத வேஷமும் மாற வேண்டாவோ? அத்வைத பாஹ்ய சிஹ்நமோ சந்தநத்தாலான ஊர்த்வபுண்ட்ரமேயாம். அதனை ஸ்வாமி தேஶிகன் ஶ்வேத ம்ருத்திகையான திருமண்ணால் முன்போலவே வேணுதளாக்ருதியில் நடுவில் மஞ்சள் ஸ்ரீசூர்ணத்துடன் தரிக்க நியமித்தார். ஏன்? தாமிட்டு வந்த ஹரிபாதத்வயாக்ருதியான தென்கலைத் திருமண்காப்பையே இடப்பண்ணலாகாதோ? எனக்கேட்கலாம். அவர்கள் உபாஸகர்கள்; வர்ணதர்மநிஷ்டர்கள், ப்ரவ்ருத்திபரர்கள். திவ்யப்ரபந்தங்களிலும் திவ்யதேஶங்களிலும் ப்ராவண்யமற்றவர்கள், கேவலஸம்ஸ்க்ருத வேதாந்தமாத்ரத்தில் ப்ரமாணபுத்தியும் ஊற்றமும் கொண்டவர்கள், அஸக்ருத்ப்ராணமம், விதவாவபநம், அபிவாதனம், கன்னத்தில் அறைந்துகொள்வது, குட்டிக்கொள்வது இன்னமித்தகைய ஸாமாந்ய தர்மநிஷ்டர்கள். அதிகமேன்? இப்போது ஸ்மார்த்தர்கள் என்ன என்ன கொண்டிருக்கிறார்களோ அதையெல்லாம் உடையவர்கள். பண்டைநாளாலே எம்பெருமான் திருவருளும் பங்கயத்தாள் திருவருளும்கொண்டு எம்பெருமான் கோயில் சீய்த்துப் பல்படிகால் குடிகுடி வழிவந்தாட்செய்யும் தொண்டர்களானவர்களுடன் முற்கூறியவர்களைக் கலக்கவிடக்கூடாதென்று ஸ்வாமி தேசிகன் அவர்களைத் தனித்துக்காணும்படி ஓர் புண்ட்ரகல்பனை பண்ணிவைத்தார். காலக்ரமத்தில் அவர்களின் ஸந்ததியார் ப்ரபன்ன ஸ்ரீவைஷ்ணவர்களுடையவும், திவ்யப்ரபந்தங்களுடையவும், திவ்ய தேசங்களுடையவும் வைபவமறிந்து திருந்தி, ஸ்ரீவைஷ்ணவர்களுடன் சேர்ந்து வாழ ஆசைகொண்டார்கள். இவர்களும் அவர்களின் ஆசாரவைகல்யம் ஓரளவு நீங்கினமைகொண்டு உகந்து, கலந்து பழக ஆரம்பித்தார்கள். ஆனால் அவர்கள், தம் புண்ட்ரத்தையும், மற்றும் சில ப்ரகாரங்களையும் விடாததுதான் இப்போது நம் மதுராந்தகம் ஸ்வாமியை இப்படியோர் நூல் எழுதப் பண்ணிற்று.

ஆகவே, இப்போது பார்க்கப்படும் வடகலைத் திருமண் ஸ்வாமி தேஶிகனால் பிறருக்காக உண்டாக்கப்பட்டதே; அவர் காலந்தொடங்கி

ஏற்பட்டதே. ஆனால் அவர் காலத்தில் ஸ்ரீவைஷ்ணவ ஸமூகத்தில் புகவில்லை. சுமார் 300 வருடங்களுக்குள்ளேயே புகுந்தது. இதுதான் வடகலைத் திருமண்காப்பின் தத்வம். இது பரம்பரையாகச் சொல்லி வந்ததைக்கேட்டு எழுதப்பட்டதே தவிர, 'இது இப்படித்தான்' என அடியேனுக்கு ஆக்₃ரஹம் கிடையாது. கோர்ட்டுகளில் தென்கலை வடகலை வ்யவஹாரங்கள் ஆரம்பமான காலம் முதலானவற்றைக் கோர்ட்டு தீர்ப்புகளைக்கொண்டு ஆராய்ந்தால், இது உபபந்நம் என விளங்கும். ஸரியான ப்ரமாணத்துடன் இந்த வாதம் மறுக்கப் படுமேயானால் ஏற்கத்தட்டில்லை. இப்போது இந்தப் புண்ட்₃ரத்துடன் ஸேவைஸாதிக்கும் ஸ்ரீவைஷ்ணவோத்தமர்களிடத்தும் ப்ரதிபத்திக்குக் குறையொன்றுமில்லை. வாதமென்று வந்தால் யாருக்குமே விஷயங் களைத் தெளிவுபடுத்தல் கடமையாகிறது.

## விஷயம் 5. வடகலை ஆசார்யபுருஷர்கள்

ஸ்வாமி எம்பெருமானார் பின்புள்ளாரும் தம் ஸம்பந்தம் பெற்று வாழ தம் ஶிஷ்யர்களில் 74 ஸிம்ஹாஸநாதி₄பதிகளை நியமித்தார் என்பது யதிராஜவைப₄வம், கு₃ருபரம்பரை நூல்கள் முதலானவற்றில் காணப்படும் உண்மை.

இந்த 74 ஸிம்ஹாஸநாதிபதிகளின் வம்சத்தவர்களே பஞ்சஸம் ஸ்காரம் செய்ய அதி₄காரம் பெற்றவர்கள். மற்றையார் ஜ்ஞாநா நுஷ்ட₂ாநங்களில் எவ்வளவு சிறந்து விளங்கினாலும் பிறருக்குப் பஞ்ச ஸம்ஸ்காரம் செய்யலாகாது என்பது எம்பெருமானார் நியமனம். இன்ற ளவும் தென்னாசார்ய ஸம்ப்ரதாயத்தவர்களால் இந்நியமனம் கடைப் பிடிக்கப்பட்டுவருகிறது.

ஆனால் இக்காலத்து வடகலையார் இம்முறைக்கு ப்ராத₄ாந்யம் கொடுப்பதில்லை. இதில் தே₃ஶிகனுக்கே விப்ரதிபத்தியுண்டென்றும் தெரிகிறதென்பர் பெரியோர்.

ஆகவேதான் ஸ்வாசார்யனை விட்டு ப₄ரந்யாஸத்துக்காக ஓர் உத்தமாச்ரமியைப் பற்றுவதென்பது அவர்களில் ஸஹஜமாகிவிட்டது. காலக்ரமத்தில் ஸ்வாசார்யத்யாக₃மே ப₂லித்து விட்டது. இதைக் கண்டு அவர்களில் பலர் சோகிப்பதை அடியேன் நன்கறிவேன்.

நிற்க. வடகலை ஸம்ப்ரதாயத்திலும் 74 ஸிம்ஹாஸனாதிபதிகளில் சேர்ந்த வம்சத்தவர்கள் சிலர் பார்க்கப்படுகிறார்களே என்னில் - அவர்களைப்பற்றி அடியேன் கேள்விப்பட்டதை எழுதுகிறேன். இதிலும் அடியேனுக்கு எந்த ஊற்றமுமில்லை. ஸமாஶ்ரயணத்தை ஓர் ஆசார்ய பரம்பரைக்கு ஸ்வாதீ₄நமாக்காமல் போனால், ஏகாசார்யகத்வம் போய்

விடும். ஆசார்யஸந்ததியாருக்கும் ஜீவநம் ஶ்ரமப்படும் எனத் தெரிந்து கொண்ட—ஜ்ஞாநாநுஷ்டாநத்தால் சிஷ்யர்களை ஸம்பாதித்திருந்த சில பேர் தமக்கும் 74 ஸிம்ஹாஸநாதிபதிகளின் வம்சத்தில் அந்தர்ப்பாவ முண்டென்று காட்டச் சிலபேரின் ஸந்ததியாராகத் தம்மைச் சொல்லிக் கொள்ள ஆரம்பித்தனர் என்பதே பெரியோர்களின் உபபாதநம்.

74 ஸிம்ஹாஸநாதிபதிகளின் வம்சத்திலுமேயா வடகலையார் உள்ளார்கள்? பத்தெட்டு வம்சம் தேறலாம், அல்லது அவ்வம்ஶத்தவர் களிலே சில குடிகள் ஏதோ நிர்ப்பந்தத்தால் வடகலைத் திருமண்காப்பு இட்டுக் கொண்டிருக்கலாம். திருவயிந்திரபுரத்தில் ஓர் அஷ்டகோத்ர குடும்பம் ஸந்நிதியில் தீர்த்தம் பெற வடகலைத் திருமண் இட்டுக் கொண்டும் தீர்த்தம் பெருமல் வடகலைத் திருமண்ணுடன் விளங்கு வதை இன்றைக்கும் காணலாம். ஆகவே 74 ஸிம்ஹாஸநாதிபதி களுக்கே ஸமாஶ்ரயணம் செய்ய அதிகாரமுள்ளதென்பதை ஒப்புக் கொள்ளாத இந்த ஸமூஹத்தார், தங்களில் சிலரை 'அவர் ஸந்ததி, இவர் ஸந்ததி' என்று சொல்லிக்கொண்டு, 'ஸந்ததியார் வடகலையாரா யிருக்கும்போது மூலபுருஷனும் வடகலையே' என்று வாதிட்டுப் பெறப் போகிறதொன்றுமில்லை. தூங்குகிறவன், தொடையில் திரித்தவரை லாபம். அந்த ஆசார்யர்களை வாய்வெருவியாவது புண்ணியம் பெறட்டும்.

## விஷயம் 6. ஸந்நிதிகளை ஆக்ரமித்தல்

இப்போது முழுவதும் வடகலையாயிருக்கும் ஒரு சில ஸந்நிதிகள் விஷயமாகவும், அவர்களுக்கும் சில உரிமைகள் உள்ள தென்கலை ஸந்நிதிகள் விஷயமாகவும் கோர்ட்டு ரெகார்டுகள் ஆங்காங்கு எண்ணிறந்தவை காணக்கிடைக்கின்றன. இன்னம் விவாதங்களும் நடந்துவருகின்றன. எங்கு எந்த ரெகார்டைப் பார்த்தாலும் ஆக்ர மித்தவர்களும் ஆக்ரமிக்கப்பார்ப்பவர்களும் வடகலையாரே என்பது ப்ரத்யக்ஷமானதொன்று. ஆகவே, எல்லா திவ்யதேசங்களுமே முன்பு வடகலைதான் என மதுராந்தகம் ஸ்வாமி ஸாதிப்பதும் அடியற்றதே யாம். ஏன்? எங்களுக்கும் விட்டுக்கொடுக்கலாகாதா? எங்களையும் கோஷ்டி முதலான கைங்கர்யங்களில் கூட்டிக்கொள்ளலாகாதா? என்றால், உரிமை பறிபோகாத இடங்களில், ஸமயங்களில் உங்களுடன் கூடிக்குலாவியே வருகிறோம்.

## விஷயம் 7. மைஸூர் பரகால ஜீயர் வ்ருத்தாந்தம்

இந்த விஷயமும் உண்மை உணர்த்த எழுதப்படுகிறதே தவிர இப்போதைய மடத்தின் சீர்மையில் குறைகாணவல்ல. இம்மடத்தின் தோற்றுவாயைச் சிறிது விளக்கும்படி ஆக்கிவிட்டது நம் மதுராந்தகம் ஸ்வாமியின் நூல்.

ஏற்பட்டதே. ஆனால் அவர் காலத்தில் ஸ்ரீவைஷ்ணவ ஸமூகத்தில் புகவில்லை. சுமார் 300 வருடங்களுக்குள்ளேயே புகுந்தது. இதுதான் வடகலைத் திருமண்காப்பின் தத்வம். இது பரம்பரையாகச் சொல்லி வந்ததைக்கேட்டு எழுதப்பட்டதே தவிர, 'இது இப்படித்தான்' என அடியேனுக்கு ஆக்₃ரஹம் கிடையாது. கோர்ட்டுகளில் தென்கலை வடகலை வ்யவஹாரங்கள் ஆரம்பமான காலம் முதலானவற்றைக் கோர்ட்டு தீர்ப்புகளைக்கொண்டு ஆராய்ந்தால், இது உபபந்நம் என விளங்கும். ஸரியான ப்ரமாணத்துடன் இந்த வாதம் மறுக்கப் படுமேயானால் ஏற்கத்தட்டில்லை. இப்போது இந்தப் புண்ட்₃ரத்துடன் ஸேவைஸாதிக்கும் ஸ்ரீவைஷ்ணவோத்தமர்களிடத்தும் ப்ரதிபத்திக்குக் குறையொன்றுமில்லை. வாதமென்று வந்தால் யாருக்குமே விஷயங்களைத் தெளிவுபடுத்தல் கடமையாகிறது.

## விஷயம் 5. வடகலை ஆசார்யபுருஷர்கள்

ஸ்வாமி எம்பெருமானார் பின்புள்ளாரும் தம் ஸம்பந்தம் பெற்று வாழ தம் ஶிஷ்யர்களில் 74 ஸிம்ஹாஸநாதி₄பதிகளை நியமித்தார் என்பது யதிராஜவைப₄வம், கு₃ருபரம்பரை நூல்கள் முதலானவற்றில் காணப்படும் உண்மை.

இந்த 74 ஸிம்ஹாஸநாதிபதிகளின் வம்சத்தவர்களே பஞ்சஸம்ஸ்காரம் செய்ய அதி₄காரம் பெற்றவர்கள். மற்றையார் ஜ்ஞாநாநுஷ்ட₂ாநங்களில் எவ்வளவு சிறந்து விளங்கினாலும் பிறருக்குப் பஞ்ச ஸம்ஸ்காரம் செய்யலாகாது என்பது எம்பெருமானார் நியமனம். இன்றளவும் தென்னாசார்ய ஸம்ப்ரதாயத்தவர்களால் இந்நியமனம் கடைப்பிடிக்கப்பட்டுவருகிறது.

ஆனால் இக்காலத்து வடகலையார் இம்முறைக்கு ப்ராத₄ாந்யம் கொடுப்பதில்லை. இதில் தே₃ஶிகனுக்கே விப்ரதிபத்தியுண்டென்றும் தெரிகிறதென்பர் பெரியோர்.

ஆகவேதான் ஸ்வாசார்யனை விட்டு ப₄ரந்யாஸத்துக்காக ஓர் உத்தமாச்ரமியைப் பற்றுவதென்பது அவர்களில் ஸஹஜமாகிவிட்டது. காலக்ரமத்தில் ஸ்வாசார்யத்யாக₃மே ப₂லித்து விட்டது. இதைக் கண்டு அவர்களில் பலர் சோகிப்பதை அடியேன் நன்கறிவேன்.

நிற்க. வடகலை ஸம்ப்ரதாயத்திலும் 74 ஸிம்ஹாஸனாதிபதிகளில் சேர்ந்த வம்சத்தவர்கள் சிலர் பார்க்கப்படுகிறார்களே என்னில் - அவர்களைப்பற்றி அடியேன் கேள்விப்பட்டதை எழுதுகிறேன். இதிலும் அடியேனுக்கு எந்த ஊற்றமுமில்லை. ஸமாஶ்ரயணத்தை ஓர் ஆசார்ய பரம்பரைக்கு ஸ்வாதீ₄நமாக்காமல் போனால், ஏகாசார்யகத்வம் போய்

## விஷயம் 8. அஹோபிலமடத்து வ்ருத்தாந்தம்

தெய்வமல்லால் செல்லவொண்ணுச் சிங்கவேள் குன்றத்தில் எழுந்தருளியிருக்கும் சிங்கப்பிரானுக்குத் திருவாராதநம் முதலிய கைங்கர்யங்களைச்செய்ய மணவாளமாமுனிகள் வானமாமலையிலும், திருமலையிலும்போல ஓர் ஜீயர் ஸ்வாமியை நியமித்தார். அவரே ஆதிவண்சடகோப ஜீயர் என்னும் அஹோபிலமடத்து முதல் ஜீயர் ஸ்வாமி. இந்த ஜீயர் ஸ்வாமிக்கு மணவாளமாமுனிகளிடத்து விசேஷ ப்ரதிபத்தியுண்டென்பதை ஆழ்வார்திருநகரியில் இவர் செய்திருக்கும் கைங்கர்யங்களால் அறியலாகிறது. ஸ்ரீரங்கத்தில் ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞையாய் கோயில் கார்யங்கள் இன்றளவும் நடந்துபோரு கிறபடி, ஆழ்வார்திருநகரியில் வரவரமுநி திவ்யாஜ்ஞையே நடந்து வருகிறது. ஆக, அந்த ஸந்நிதியில் ஆதிவண்சடகோபஜீயர் செய்து போந்த கைங்கர்யங்கள் ஆழ்வாரிடத்துக்கொண்ட ப்ரதிபத்தியால் என்பதைக்காட்டிலும் மாமுனிகளிடத்து ப்ரதிபத்தியால் என்னக் குறையில்லை. ஆக, அஹோபிலமடம் ஆதியில் தென்கலையே தவிர வடகலையன்று. இதை ஸந்தர்சனம் ஸ்தாபகரான ஸ்ரீ உ. வே. ஸ்ரீநிவாஸய்யங்கார்ஸ்வாமி ''அபயப்ரதராஜவிஜயம்'' என்னும் நூலில் சுமார் 28 வருஷங்களுக்கு முன்பே பல ஆதாரங்களைக்காட்டி நிரூபித்துள்ளார். அஹோபிலமடத்தாருக்குத் தென்கலை பூர்வாசார்யர் களிடத்தும், விசேஷித்து திவ்யப்ரபந்தங்களிடத்தும், ஆழ்வார்க ளிடத்தும், ஈடுமுப்பத்தாறுயிரப்படியிடத்தும் விசேஷப்ரதிபத்தியுண்டு. முனித்ரயத்தாரைப்போல் ஈட்டையும், பெரியவாச்சான்பிள்ளையையும், தத்வ்யாக்யாநங்களையும் இவர்கள் த்வேஷிப்பதில்லை. இதற்கு முக்யகாரணம் மாமுனிகள் ஸம்பந்தமே. ஐந்தாறு பட்டங்களுக்குப்பின் இம்மடம் வடகலையாக மாறினது. கோட்டைவிடுவதற்குத் தென்கலை யாராகவும், அசந்தால் ஆக்ரமிக்க வடகலையாராகவுமே பிறந்துவிட்ட போது, இம்மடமும் சில திவ்யதேசங்களும் வடகலையாக மாறினதில் வியப்பொன்றுமில்லை. யதிகள் விக்ரஹாராதநம் பண்ணக்கூடா தென்னும் கொள்கையுடைய வடகலை ஸமூஹத்திலிருந்து ஓர் திவ்யதேசத்தெம்பெருமானுக்கு ஆராதகராக ஓர் யதி எப்படி வந்திருக்கமுடியும்? இவ்விஷயங்கள் அடியேன் பலர் கர்ணபரம் பரையாகச் சொல்லிவருவதைக் கேட்டெழுதினதே தவிர, இது இப் படித்தான் என்கிற ஆக்ரஹமொன்றுமில்லை. மடத்தவர்களிலும், முனித்ரயத்தாரிலும் பரமஸாத்விகர்களாய் ஸஹவாஸயோக்யர்களும் ஸத்காரயோக்யர்களும் மலிந்திருக்கிருர்கள். அவர்கள் தங்களுக்குப் பரம்பராப்ராப்தமான ஓர் ஸம்ப்ரதாயத்தில் ஊற்றங்கொண்டு அநுஷ்டாநபரர்களாய் அவ்வர்த்தங்களை நிலைநாட்ட முயலுவதில்

தவறென்ன இருக்கிறது ? இவ்விதத்தில் நம் மதுராந்தகம் ஸ்வாமியும் ஸ்வமதஸ்தாபநத்திலிழிந்து, பலநாள்களாக தேசிகன் திருவுள்ளத்தைச் சில விஷயங்களில் தாமும் உலகும் அறியவிரும்பிக் காஞ்சீ ஸ்வாமி கேட்டுவரும் கேள்விகளுக்குத் தெளிவாய் ஸமாதாநமெழுதி உலகை உஜ்ஜீவிக்கச் செய்யலாகாதோ ?

## விஷயம் 9. முனித்ரய வ்ருத்தாந்தம்

இது நவீந ஸம்ப்ரதாயமென்பதை வடகலையாரே ஒப்புக்கொள்ளுகிறார்கள். பிறர் ப்ரமிக்க இவர்கள் 'நாதமுனி யாமுநமுனி ராமாநுசமுனிகளான முனித்ரயம் எங்களுக்கு மூலம்' என்று சொல்லி வந்தாலும், ஒரு சில நூற்றாண்டுகளுக்குள் இருந்த திருக்குடந்தை யதிகள் மூவரே இந்த ஸம்ப்ரதாயத்தைத் தோற்றுவித்தவர்கள் என்பது உலகமறிந்த விஷயம். இந்த ஸம்ப்ரதாயத்தவர்கள்தான் தென்னாசார்யர்களிடத்தும், விசேஷித்துப் பெரியவாச்சான்பிள்ளை, நம்பிள்ளை, உலகாசிரியர், அழகியமணவாளப் பெருமாள்நாயனார், மணவாளமாமுனிகள் முதலானோரிடத்தும் த்வேஷம் பாராட்டுபவர்கள். இதற்குக் காரணம்—தேசிகன் தமது ரஹஸ்யத்ரயஸாராதிகளில் காட்டிய பல அர்த்தங்கள் இவ்வாசார்யர்களின் க்ரந்தங்களால் அடியறுக்கப்படுவதே. ஸ்ரீகாஞ்சீ மஹாவித்வான் ஸ்ரீ உ. வே. ப்ர. ப. அண்ணங்கராசார்ய ஸ்வாமி இஸ்ஸம்ப்ரதாய வித்வான்களின் வாதங்களை எண்ணிறந்த முறை எடுத்துக் கண்டித்திருப்பதும் உலகறிந்த விஷயமேயன்றோ. இம்முநித்ரயஸம்ப்ரதாயத்தவரே நம் மதுராந்தகம் ஸ்வாமி. ஆகையால் தம் ஸம்ப்ரதாயரக்ஷணம் தமக்கும் பரமாகி, ஸ்ரீரங்கஸ்ரீவிவேசநத்தை எழுதினார்போலும் ! இதுவா ரக்ஷணப்ரகாரம் ?

## விஷயம் 10. ஸ்ரீரங்கம் அர்ச்சகர்கள் திருமண்

இவர்கள் ஆகமஸித்த புண்ட்ரதாரிகள். தங்கள் திருமண்காப்பை வடகலை என்றோ, தங்களை வடகலை (தேசிக) ஸம்ப்ரதாயத்தவர்கள் என்றோ அவர்கள் சொல்லிக்கொள்வதில்லை. இவர்கள் வடகலையாரைப்போல் த்ரயோதச (பதின்மூன்று) புண்ட்ரங்களையும் தரிப்பதில்லை. நான்கே தான் தரிக்கிறார்கள். தேசிகன் தனியனைச் சொல்வதில்லை. இவர்களுக்கு பரந்யாஸம் கிடையாது. இவர்கள் தேசிக ஸம்ப்ரதாய ஆசார்ய ஸம்பந்தமும் பெற்றவர்களன்று. இது இவர்களே கோர்ட்டில் கொடுத்த வாக்குமூலம். நீண்ட காலமாக இப்படித் தனித்தன்மையோடிருந்த இவர்கள் இப்போது புத்ரஸ்வீகாரத்தாலும், கந்யகாதாந ப்ரதிக்ரஹங்களாலும் வடகலை ஸமுதாயத்துடன் கலந்துவிட்டார்கள். ஆனாலும் ஒருவரைத் தவிர மற்றையார் தேசிக ஸம்ப்ரதாய ஸம்பந்தம் கொள்ளவில்லை.

இவர்களையிட்டு மதுராந்தகம் ஸ்வாமி ஸ்ரீரங்கம் கோயிலையும் பெரியபெருமாளையும் வடகலை என்னமுடியாது, ஆக்கவும் முடியாது. இவ்வூரில் பெரியபெருமாளுக்குச் சாத்தியிருந்த தென்கலைத் திருமண் காப்பின் பாதம் வளைக்கப்பட்டு, கேஸ் நடந்து தென்கலையார் ஜயித்த வ்ருத்தாந்தத்தையும், மற்றும் பல வழக்குகள் நடந்து "கோயில் தென்கலையே" என்று ஹைகோர்ட் தீர்ப்பு ஏற்பட்டிருப்பதையும், தேசிகனுக்குப் புண்ட்ரம் மாற்றியதிலிருந்து அவர் வெளிப்புறப்பட மாட்டாமையையும், ஸமீபத்தில் தேசிகனை எழுந்தருளப்பண்ணத் தொடுத்த கேஸ் விபரீதமாகி, ப்ரவ்ருத்திபரர்களை நிவ்ருத்திபரர்களாக்கிவிட்டதையும் நம் மதுராந்தகம் ஸ்வாமி அறியாமல்போனது— இவரின் இத்தகைய விவாதங்களில் நெஞ்சு செலுத்தாத பெருந்தன்மையைக் காட்டுகிறது. ஆனால் ஸ்ரீரங்கஸ்ரீவிவேசநம் அவரைக் கொண்டு எப்படி உருப்பெற்றதென்பதுதான் தெரியவில்லை.

## முடிவுரை

ஆக அடியேன் இந்த ஸ்ரீரங்க ஸ்ரீவிவேசந ஸமாலோசநத்தில் 10 விஷயங்களைச் சுருக்கமாக நிரூபித்திருக்கிறேன். இவைகளே இன்னம் விவரிக்கப்படுமேயானால், மஹாபாரத ஸங்க்யையை எட்டி விடலாம். அவ்வளவு எழுதித்தான் என்ன பயன்பெறப்போகிறோம்? இரண்டு ஸ்ரீ வைஷ்ணவ ஸமுதாயமும் ஒற்றுமையுடன் வாழவும், ஸம்ப்ரதாய ப்ரவசநம் பண்ணவும், ஸ்ரீவைஷ்ணவஸ்ரீயைத் தழைக்கச் செய்யவுமே முயலவேண்டும். இரு சாரார்களுமே தங்கள் முன்புள்ள நிலையை நன்கறியட்டும். யார் யாராக மாறப்போகிறார்கள்?

ஆகையால் ஸந்நிதிகளிலும் மற்றவிடங்களிலும் இப்போதுள்ள உரிமைகள் இனி மாறாதபடிக்கு இரு சாராருமே தக்கபடி உறுதிப் படுத்திக்கொண்டு, சாஸ்த்ரார்த்தங்களிலோ, அநுஷ்டாநங்களிலோ பொதுவானவைகளில் ஒன்றுசேர்ந்து வாழ வழிதேடுவதே இனி இரு ஸம்ப்ரதாயத்தவர்களுக்கும் முக்கியமான கடமையாகிறது. இனி மதுராந்தகம் ஸ்வாமியும் இவ்வித ப்ரவ்ருத்தி கொள்ளவேண்டாம். அடியோங்களும் ஸம்ப்ரதாய விவாத க்ரந்தங்களை எழுதுவதில்லை. இவ்வளவையும் அடியேன் எழுதினதற்கு மதுராந்தகம் ஸ்வாமி திறத்தில் க்ஷாமணம் வேண்டிநிற்கிறேன்.

மதுரகவிதாஸன் (திருநாராயணபுரம்)
தி. அ. சதாபிஷேகம் கோவிந்தநரஸிம்ஹார்ய தாஸன், ஸ்ரீரங்கம்.

---

பின்குறிப்பு:— இதிலெழுதப்பட்ட வாதத்திலோ, விஷயங்களிலோ குற்றம் குறைகளைக் காட்டினால் பணிவுடன் ஏற்றுக்கொள்கிறேன்.

# தென்னாட்டு ப்₃ராஹ்மண சரித்திரம்

*[ஸு₂த₃ர்ஶனம் ஆசிரியர்]*

## முன்னுரை

1. நமது ஸ்ரீ வைஷ்ணவ கு₃ருபரம்பரை நூல்களில் ஸ்ரீராமாநுஜ வைப₄வத்தில், எம்பெருமானாரது தே₃விகளுக்கும், அவரது ஆசார்யரான பெரியநம்பிகளின் தே₃விகளுக்கும் காஞ்சீபுரத்தில் 'வடமாள், ப்₃ருஹச்சரணம்' என்னும் ஜாதிகாரணமாகக் கிணற்றடிச் சண்டை நிகழ்ந்ததாகவும், அதுவே எம்பெருமானார் துரீயாஶ்ரம ஸ்வீகாரம் கொள்ள முக்₂யகாரணமானதென்றும் காணப்படுகிறது. பெரிய திருமுடியடைவு முதலான நூல்களிலும் பூர்வஶிகை₂யினரல்லாத ஆசார்யர்கள் விஷயத்தில் 'வடமாள்' 'ப்₃ருஹச்சரணம்' எனும் ஜாதிக்குறிப்பு காண்கிறது. ப்ரபந்நாம்ருதத்தில், அஷ்டஸஹஸ்ரப் பிரிவைச் சேர்ந்த யஜ்ஞேஶர் (எச்சான்), பருத்திக்கொல்லையம்மாள் முதலான ஸ்ரீ வைஷ்ணவ அந்தணர்கள் வாழ்ந்த அக்₃ரஹாரத்தில் நடந்த நிகழ்ச்சிகள் வர்ணிக்கப்படுகின்றன. இவற்றிலிருந்து, இன்றும் அபரஶிகை₂யுடைய ஸ்மார்த்த ப்₃ராஹ்மணர்களிடையே காணப்படும் வடமாள், ப்₃ருஹச்சரணம், அஷ்டஸஹஸ்ரம் என்னும் பிரிவு பூர்வாசார்யர்கள் காலத்தில் அபரஶிகை₂யுடைய ஸ்ரீ வைஷ்ணவ ப்₃ராஹ்மணர்களிடமும் இருந்துவந்ததென விளங்குகிறது. இது எப்படி ஏற்பட்டது என்றறியாமலோ, அறிந்தோ ஸ்ரீரங்க₃ஸ்ரீவிவேசந மெழுதியவர் "வடமாள் என்பது வடகலையே" என்னும் ப்₃ரஹ்மாண்ட₃ப்புளுகை எழுதியுள்ளார். இப்புளுகு தவிர மற்றும் பல அப்பட்டமான பொய்களை இவர் அந்த விவேசநநூலில் எழுதியுள்ளார். அவற்றில் முக்கியமானவற்றை அடுத்த பாராவில் கொடுக்கிறோம்.

## ஸ்ரீரங்க₃ஸ்ரீவிவேசநத்திலுள்ள முக்கியமான பொய்கள்

2 (1) ப்ரதீபத்தில் 65-வது பக்கத்தில் 35-வது பாராவில் 'எங்களாழ்வான்' அவர் வம்சத்தைச் சேர்ந்த பெரியவாச்சான்பிள்ளை— பர்யந்தர்களான எல்லோரும் கலப்படமற்ற சுத்த வடகலையாரே. மாறுதல் ஏற்பட்டது அவர்களுக்கு மிக்க பிற்காலத்திலேயே. பிற்பட்ட இந்நிலையைக்கொண்டு பூர்வர்கள் நிலையை நிர்ணயிக்கலாகாது என்று எழுதியுள்ளார். இதற்கு முன்னும் பின்னும் வடகலையாசார்யர்கள் அனைவரும் என்பதை நிலைநாட்டியுள்ளார் ஸ்ரீரங்கத்தில் உடையவருடைய புண்ட்ரரேகை வடகலை, இவர்தம்மால் ப்ரதிஷ்டை செய்யப்பட்டுள்ள ஸ்ரீரங்கம் நம்மாழ்வாருடைய ரேகா புண்ட்ரம் வடகலை. ஸ்ரீபெரும்புதூரில் ஸ்ரீபாஷ்யகாரருடைய அர்சாவிக்ரஹ புண்ட்ரம் வடகலை. ஸ்ரீரங்கம் கோபுரம் ஒன்றில் பெரிய வடகலை புண்ட்ரம் உள்ளது. 1—2—1908-இல் டிஸ்ட்ரிடிக்ட் முனிஸீப் கோர்ட் ஜட்ஜ் நேரில் வந்து ஆழ்வார் எம்பெருமானார் வடகலை

புண்ட்ரங்களை போட்டோ எடுத்திருக்கிறார் என்றிவ்வாறாக எழுதியுள்ளார். [ஸ்ரீரங்கஸ்ரீவிவேசனம் பக்கம் 1]

(2) ப்ரக்ருதம் 65-வது பக்கத்தில் 35-வது பாராவில் எங்களாழ்வான் முதலாக பெரியவாச்சான்பிள்ளை முடிவாக வடகலையே என்று எழுதி, அடுத்ததான 36-வது பாராவில் இவ்வாறு எழுதியுள்ளார்:— "ஸ்ரீரங்க தேவஸ்தான புருஷர்கள் நிர்பந்தத்தாலே அனைவரும் புண்ட்ர விபர்யாஸம் (புண்ட்ர மாற்றம்) பெற்றவர்கள். அந்த ஸ்ரீரங்க க்ஷேத்ர ஸம்பந்தமாக இவ்வைதிஹ்யம் தொடர்ந்து வருகிறது. அதாவது ஓர் சிராத்தகர்த்தாவை நிர்பந்தித்து கோவில் சாவியும் தேவஸ்தான நிர்வாஹாதிகாரமும் பலவந்தமாகப் பெறப் பெற்றது" என்று. அங்கு அரையர் வடகலையாரைச் சேர்ந்தவராயிருக்க அதை மறுத்ததற்காக வம்சாவளீ நிரூபணம் பெற்று அதிகாரிகளால் அபராதம் விதிக்கப்பெற்றார்கள் என்று அதே பாராவில் உள்ளது. ......
[ஷை நூல் பக்கம் 2]

(3) பிள்ளைலோகாசார்யர் வடமகுல ஸ்ரீ வைஷ்ணவரென்று திருமுடியடைவில் தெளிவு ஆகிறது. வடக்குத்திருவீதிப்பிள்ளை குலம் வடமாள். வடமகுலம் என்பதற்கு வடகலையார் திருவம்சம் என்றல்லது வேறு பொருளில்லையே. ...... [ஷை நூல் பக்கம் 8]

(4) எங்களாழ்வான் தமது ஸ்ரீவிஷ்ணுசித்தீயத்தில் ஆத்மாநுபவ ஸ்தாநம் அர்சிராதியில்லாது ப்ரக்ருதிமண்டலாந்தர்கதமானது என்று ஸ்தாபித்துள்ளார். ஆதலால் வடகலையே இவர்.......[ஷை நூல் பக்கம் 10]

(5) * வில்லிப்புத்தூர் பாகவதர் என்பவர் எம்பெருமானார் திருவடிகளிலே ஆச்ரயித்துள்ள சாத்தாத முதலிகளிலொருவர் * " ஸ்ரீ வில்லிப்புத்தூர் தாஸர் " என்பதாக பெரிய திருமுடி அடைவு 53-வது பக்கத்திலேயுள்ளது. வில்லிப்புத்தூர் தாஸர் உடையவர் திருவடிகளில் ஆச்ரயித்தவர் சாத்தாதமுதலி என்று அபிதான விளக்கம் (554) ...... [ஷை நூல் பக்கம் 13]

(6) திருப்பாணாழ்வார் அவதாரம் நெல்லுக்கதிரிலே. அஞ்சாம் வர்ணத்திலே வளர்ந்தவர். அதே இடத்தில் கோவில் அவருக்குக் கட்டியுள்ளார்கள். ஸ்ரீபாஷ்யகாரருக்கு வடகலை திருமண்காப்பு ஸ்ரீபெரும்புதூரிலேயும் ஸ்ரீரங்கத்திலேயும் என்பது தெளிவானது. இவர் குலம் வடமாள், அதாவது வடகலை. இதனால் தேறியதென்னவென்றால்— ஸ்ரீவைஷ்ணவர்கள் அனைவரும் வடகலையே. ஏகதேசிகளும் வடகலையாயிருக்கச் செய்தே வடகலாசாரத்திலிருந்து நழுவியபடியால் தென்கலை என்று வழங்கப்படுகிறார்கள்.......[ஷை நூல் பக்கம் 14]

---

* வில்லிபுத்தூர்ப்பகவரை தாஸரோடு ஒன்றாக்கியிருப்பது விவேசநகாரரின் வஞ்சனை—ஸுதர்சனம் ஆசிரியர்.

(7) இந்தியாவிலுள்ள விஷ்ணு சிவாலயங்கள் முதலியன வடகலையினால் ப்ரதிஷ்டை பெற்றவையே. நித்யாராதனம், பக்ஷோத்ஸவ, மாஸோத்ஸவ, வர்ஷோத்ஸவாதிகள் அனைத்தும் வடகலை மந்த்ரத்தைக் கொண்டே நடைபெறுகின்றன. ஆகவே, ஆலயங்களனைத்தும் வடகலையேயாய், வடகலை வைஷ்ணவர், வடகலை சைவர் ஆகியவர்களுடைய உரிமையாயிருக்கின்றன. சைவாலயங்களில் ஓதுவார் சிலருண்டு. நாயன்மார் தமிழிசைபாடுவார் ஆவார்கள். அவர்களை யிட்டு ஓதுவார் ஆலயமாக வழங்குவதில்லை. அவ்வாறாகவே தென்கலையார் கோவிலென்பது பொருந்தாது. ...... [ஷை நூல் பக்கம் 19]

## விவேசநவாக்யங்களுக்கு ஆத₄ாரலேஶமுமில்லை

3. முன் பாராவில் எடுக்கப்பட்ட பெரும்பாலான வாக்யங்களுக்கு ஆத₄ாரலேஶமுமில்லை என்பதை ஸ்ரீரங்க₃ம், உறையூர், ஸ்ரீபெரும்பூதூர் முதலான தி₃வ்யதே₃ஶங்களுக்குச் சென்று அவரவர் ப்ரத்யக்ஷமாகவே பார்த்துக்கொள்ளலாம். அப்ராமாணிகதமமான ஸம்ப்ரத₃ாயப்ரதீபநூலையும், பல பிழைகள் மலிந்த அபி₄த₄ாந விளக்கம் போன்ற நவீன நூல்களையுமே, தாம் எழுதியிருக்கும் விஷயங்களுக்கு இவர் ஆதாரமாகக் காட்டியுள்ளார். பொய் சொல்லி மயங்கவைப்பதில் ஊற்றத்தாலே, சிவாலயங்களையும் வடகலை என்கிறார். இவர் இந்நூலில் எழுதியுள்ள பெரும்பாலான பொய்களுக்கு ஸ்ரீ காஞ்சீ மஹாவித்₃வான் ஸ்வாமியால் தமது ஸ்ரீராமாநுஜனிலும், இம்மலரில் நாம் எழுதியுள்ள 'தென்னாசார்ய ஸம்ப்ரத₃ாயமும் தே₃ஶிக ஸம்ப்ரத₃ாயமும்' எனும் கட்டுரையிலும், ஸ்ரீ உ. வே. ஶதாபி₄ஷேகம் ஸ்வாமி எழுதியுள்ள விவேசநஸமாலோசநத்திலும் பதிலளிக்கப்பட்டுள்ளது. இவரெழுதிய கைவல்யவிவேசனத்திலும், இந்த ஸ்ரீரங்க₃ஸ்ரீ விவேசநம் பக்கம் பத்திலும், எங்களாழ்வான் கைவல்யத்தில் தம் கொள்கையை ஆத₃ரித்திருப்பதாக இவர் எழுதியிருப்பது பெரும்பொய் என்பதை நமது கீ₃தாவ்யாக்₂யானத்தில் (த்₃விதீய ஷட்கம் பக்கம் 215 முதல் 221 வரை) நிலைநாட்டியிருக்கிறோம். அவ்வண்ணமே ஸ்ரீஸூக்த பா₄ஷ்யம்பற்றி இவரெழுதியுள்ளதின் பொய்ம்மை எந்தையாரருளிய அப₄யப்ரத₃ராஜவிஜயத்திலும், நமது ஸ்ரீஸூக்த வ்யாக்₂யானத்திலும் நிலைநாட்டப்பட்டுள்ளது. ஆசார விஷயமாக இவர் எழுதியுள்ளவைகளுக்கு ஸத₃நுஷ்ட₂ாந த₃ர்ப்பணத்தில் ஏற்கனவே தினவடங்க பதிலளிக்கப்பட்டுள்ளது. இனி, எஞ்சியிருப்பது ஒரே வாத₃ம். "வடமாள் என்பது வடகலையே; பூர்வஶிகை₂யினர் அனைவரும் வடகலையே; மிக ஸமீபகாலத்திலேயே தென்கலையாக மாறினார்கள்" என்பதே அது. இவ்வாத₃த்திற்கு இக்கட்டுரையில் தினவடங்க பதிலளிக்கிறோம்.

## தமிழ்நாட்டு ப்₃ராஹ்மணர்களின் பிரிவுகள்

4. தமிழ்நாட்டில் விஶிஷ்டாத்₃வைத ஸ்ரீவைஷ்ணவ மதமே கடைப்பிடிக்கப்பட்டு, அந்தணர்களிடையே சைவம், வைஷ்ணவம், அத்₃வைதம், விஶிஷ்டாத்₃வைதம் என்னும் மதத்தால் ஏற்பட்ட பிரிவுகள் ஏற்படுவதற்கு முன்பே ஶிகை₂யையிட்டுப் பூர்வஶிகை₂, அபரஶிகை₂ என்னும் பே₄த₃மும், அபரஶிகை₂யினரிடையே வடமர், ப்₃ருஹச்சரணம், அஷ்டஸஹஸ்ரம் என்னும் பிரிவுகளும் இருந்து வந்தன. எம்பெருமானார் காலத்திற்கு முன்பு பல நூற்றாண்டுகளாக இப்பிரிவு இருந்திருக்கவேண்டும் என்பது கு₃ருபரம்பரை நூல்களில் அக்காலத்திலேயே இந்த ஜாதிப்பிரிவுகள் குறிக்கப்பட்டிருப்பதிலிருந்து விளங்கும். இந்த ஜாதிப்பிரிவினர் தங்களுக்குள்ளேயே பெண்கொடுத்து வாங்குவதாகிற கொள்வினை கொடுப்பினைகளைச் செய்து வந்தனர். இந்த ஜாதிகளைச் சேர்ந்த அஜ்ஞானிகளிடையே ஜாதியையிட்டு உயர்வுதாழ்வு மனப்பான்மையும் இருந்ததென்று காஞ்சியில் எம்பெருமானார் திருமாளிகையில் ஏற்பட்ட கிணற்றடிச் சண்டையிலிருந்து விளங்குகிறது. இப்பிரிவு எப்படி ஏற்பட்டதென்பதை ஆராய்வது இக்கட்டுரையின் முக்கிய நோக்கம்.

## பூர்வஶிக₂ ஸ்ரீவைஷ்ணவர்கள் வரவு

5. த₃ண்ட₃காரண்யக் காடாகக் கிடந்த சோழதே₃ஶத்திற்கு வடநாட்டிலிருந்து முதலில் வந்தவர்களாகையாலே பூர்வஶிகை₂யந்தணர்கள் சோழியர்கள் என்று அந்நாள் தொடங்கி இந்நாள் வரை அழைக்கப்பட்டு வருகின்றனர். இம்மலரில் திருவெள்ளறை பற்றிய கட்டுரையில் விவரிக்கப்பட்டபடி, ராமனுக்கு மிகவும் முன்னோனான சிபிச்சக்ரவர்த்தியால் 3700 பூர்வஶிக₂ ஸ்ரீ வைஷ்ணவ ப்₃ராஹ்மணர்கள் வடநாட்டிலிருந்து முதன்முதலில் சோழநாட்டிற்குக் குடிபெயர்த்து ப்ரதிஷ்டை₂ செய்விக்கப்பட்டதாகத் திருவெள்ளறை ஸ்த₂லபுராணம் கூறுகிறது. ஆழ்வார்கள் காலத்திலிருந்து செல்வ நம்பி முதலான பூர்வஶிக₂ ஸ்ரீவைஷ்ணவர்கள் வாழ்ந்துவரும் திருக்கோட்டியூரில் இவர்கள் புரூரவஸ் சக்ரவர்த்தியால் அங்கு கொண்டு வந்து ஸ்த₂ாபிக்கப்பட்டதாக ஸ்த₂ல புராணம் கூறுகிறது. இன்றும் தில்லையில் பூர்வஶிகை₂யுடன் விளங்கும் தில்லைமூவாயிரவர் "அந்தணர்கள் ஒரு மூவாயிரவரேத்த அணிமணியாசனத்திருந்த அம்மான்தானே" [பெருமாள்திரு 10-2] "மூவாயிர நான்மறையாளர் நாளும் முறையால் வணங்க" [பெரியதிரு 3-2-8] என்று குலசேகராழ்வார், திருமங்கையாழ்வார் காலத்தில் ஸ்ரீவைஷ்ணவர்களாகவேயிருந்தனரென விளங்குகிறது. பிற்காலச் சோழராஜாக்கள்

காலத்தில் இவர்கள் சைவராயினர். இன்றும் பூர்வஶிகையுடன் விளங்கும் கேரள நம்பூதிரி ப்ராஹ்மணர்களும் ஆழ்வார் காலத்தில் விஶிஷ்டாத்வைதி ஸ்ரீவைஷ்ணவர்களாகவே இருந்தனர் என்பது திருச்செங்குன்றூர் மூவாயிரவர் முதலானோரை நம்மாழ்வார் திருமாலடியார்களாகப் பாடியிருப்பதிலிருந்து விளங்குகிறது. பூர்வஶிகைக் குலத்தவரான ஆதிசங்கரர் காலந்தொடங்கி இவர்கள் படிப்படியாக அத்வைதிகளாகவும், பிற்காலத்தில் சைவர்களாகவும் மாறினர். இப்படித் தமிழ்நாட்டின் பழங்கால நிலையைப் பார்த்தால் தமிழ் நாட்டிற்கு வடநாட்டிலிருந்து பல்லாயிரக்கணக்கான பூர்வஶிக ஸ்ரீ வைஷ்ணவ ப்ராஹ்மணர்கள் முதலில் வந்து குடியேறிக் கோயில் கைங்கர்யமும், விஷ்ணுபக்தியைப் பரப்புவதுமே யாத்ரையாயிருந்தனர் என்றும், சோழநாட்டிற்கு முதலில் வந்தவர்களாகையால் 'சோழியர்' என அழைக்கப்பட்டனர் என்றும் விளங்கும். ஆழ்வார்களில் ப்ராஹ்மணர்களாயிருப்பவர் அனைவரும் பூர்வஶிகையுடையவர்களாகவேயிருப்பதும் இதை வலியுறுத்தும்.

## வடமர் முதலானோர் வரவு

6. ஆசார்யர்கள் காலத்தில் ஸ்ரீவைஷ்ணவர்களிடையே பூர்வஶிக ப்ராஹ்மணர்களைக் காட்டிலும், அபரஶிகப்ராஹ்மணர்கள் அதிகமாயிருப்பதிலிருந்து இடைக்காலத்தில் வடமர், ப்ருஹச்சரணம், அஷ்டஸஹஸ்ரம் எனும் மூன்று அபரஶிகப்ராஹ்மணப் பிரிவினர் வடநாட்டிலிருந்து வந்து குடியேறியது விளங்குகிறது. சில நூற்றாண்டுகள் இடைவெளியில் ஒவ்வொரு ஸமூஹமாக வந்து குடியேறியபடியால், ஆசாரபேதத்தால் தனித்தனி ஜாதியாயிருந்து, கொள்வினை கொடுப்பினைகளை இந்நாலு பிரிவினரும் தங்கள் தங்கள் ஜாதிக்குள்ளேயே வைத்துக்கொண்டிருந்தனர். 'ப்ருஹச்சரணம்' என்பதிலுள்ள சரணஶப்தம் இவர்கள் ஸஞ்சாரம் செய்துவந்தவர்கள் எனக்காட்டுகிறது. பூர்வஶிகையினருக்கு அடுத்தபடி வந்து தமிழ் நாட்டின் வடபகுதிகளில் குடியேறியதால் வடமர் எனப்பட்டனர் ஒரு பிரிவினர். பெரிய குழுவாகக் குடிபெயர்ந்து வந்ததால் ப்ருஹச்சரணம் எனப்பட்டனர் ஒரு பிரிவினர். எண்ணாயிரம் குடும்பங்கள் குடிபெயர்ந்து வந்ததால் 'அஷ்டஸஹஸ்ரம்' எனப்பட்டனர் ஒரு பிரிவினர். அபரஶிகையையுடைய ஸ்ரீ வைஷ்ணவ ப்ராஹ்மணர்களிடையே ஆசார்யர்கள் காலம் வரையில் பரஸ்பரம் கொள்வினை கொடுப்பினையில்லாமல் தனித்தனிப்பிரிவாயிருந்த இவர்கள் பிற்காலத்தில் ஒன்றாகச் சேர்ந்துவிட்டனர். இவற்றிலிருந்து 'வடமாள்' என்பது—ப்ருஹச்சரணம், அஷ்டஸஹஸ்ரம்போலே ஆசார்யர்கள் காலத்தில் அபரஶிக

ஸ்ரீவைஷ்ணவ ப்₃ராஹ்மணர்களிடையேயும், இன்றளவும் அபரஶிகை₂ ஸ்மார்த்தர்களிடையேயும் உள்ளதொரு ஜாதிப்பிரிவே என்பது தெளிவாக விளங்கும். ஆகையால் விவேசநகாரர் 'வடமாள்என்பது வடகலையே' என்பது ப்₃ரஹ்மாண்ட₃ப் புளுகுகளில் ஒன்றே என விளங்குகிறது.

## பூர்வசிகையினர் சிறப்பு—சோழியர் ஸாமாந்யர் சண்டை

7. ஊர்த்₄வபுண்ட்₃ரம்போல் ஊர்த்₄வமுக₂மாகையாலே சிறப்புற்ற பூர்வஶிகை₂யை உடையவர்களாயிருந்ததாலும், முதலில் வந்து கோயில் காணியாட்சிகளை உடையவர்களாயிருந்ததாலும் பூர்வசிகை₂யினர் மற்றவர்களைக் காட்டிலும் சிறப்புற்றவர்களாகக் கருதப்பட்டனர். அதனாலேயே மற்றவர்கள் முற்காலத்தில் 'ஸாமாந்யர்கள்' என வழங்கப்பெற்றனர். இப்போது கோயில் உரிமையில்லாதவர்கள் இருப்பவர்களுடைய உரிமைகளை ஆக்ரமிப்பதால் தென்கலை வடகலைச் சண்டைகள் நடப்பதுபோலே, அக்காலத்திலே அழகர்கோயிலில் சோழியர்களுக்கிருந்த உரிமைகளில் ஸாமாந்யர்கள் ஆக்ரமித்ததினால் சோழியர் ஸாமாந்யர் சண்டை நடந்த விஷயம் — கண்ணிநுண்சிறுத்தாம்பு முதல் பாசுரத்தின் பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்₂யானத்திலும், அதன் அரும்பதவுரையிலும் காட்டப்பட்டுள்ளது. ஞானிகளான நமது பூர்வாசார்யர்கள் இச்சண்டைகளில் கலந்துகொள்ளாமல் எம்பெருமானுக்கும் ஆழ்வார்களுக்கும் தொண்டு புரிபவர்களாய் வைணவத்தைப் பரப்பிவந்தனர். பூர்வஶிகை₂ அபரஶிகை₂ ஆசார்யர்கள் பரஸ்பரம் சிஷ்யாசார்ய ஸம்ப₃ந்த₄த்துடன் குலாவிவந்தனர். ஆனாலும் இவர்களுக்கிடையே இன்றளவும் கொள்வினை கொடுப்பினை கிடையாது.

## பூர்வசிகையினரில் வடகலை ஒருவரும் எக்காலத்திலுமில்லை

8. கொள்வினை கொடுப்பினையுடன் ஒரே பிரிவாகிவிட்ட அபரஶிகை₂யினரிடையே ஸ்ரீ உ. வே. ஶதாபி₄ஷேகம் ஸ்வாமி விவேசந ஸமாலோசனத்தில் விவரித்த காரணத்தாலோ, வேறு எதனாலோ 300 வருஷங்களுக்குள் தென்கலை வடகலைப் புண்ட்₃ரபே₄த₃மும், அநுஷ்டா₂னபே₄த₃மும் ஏற்பட்டுவிட்டது. ஆனால் இன்றளவும் அபரஶிகை₂யினரோடு கலக்காத பூர்வசிகை₂யினரிடையே ஒரு வடகலையாரும் கிடையாது. அப்படியிருக்கும்போது விவேசநமெழுதியவர் பூர்வஶிகை₂யார் எல்லாரும் வடகலையாயிருந்து ஸமீபகாலத்தில் தென்கலையானார்கள் என்றெழுதுவது ப்₃ரஹ்மாண்ட₃ப் புளுகுகளில் தலையானதாகும். விவேசநகாரர் இனியாவது இப்படிப் பொய்யும் புளுகும் எழுதித் தன் மதிப்பைத் தானே குலைத்துக்கொள்ளாமல் உத்தமூர் ஸ்வாமி, நவநீதம் ஸ்வாமி போன்ற ஸபூஜ்₂ய மஹநீயர்களை அநுகரிப்பாரென்று நம்புகிறோம்.

ஓம் ஶாந்தி: ஶாந்தி: ஶாந்தி:



**எம்பெருமானார் — ஸ்ரீபெரும்பூதூர்**

**(தாமுகந்த திருமேனி)**



அடுத்து, திருச்சி வானொலி நிலயத்தில் ஸுதர்ஶனம் ஆசிரியர் நிகழ்த்திய "ராமாநுஜநெறி" என்னும் சொற் பொழிவு (ஸுதர்ஶனம் 357 பிங்கள வருஷம் ஆவணி மாத இதழில் வெளிவந்தது) பொன்விழா மலரில் அநுபந்தமாக இணைக்கப்படுகிறது.

ஸ்ரீ:

# ராமாநுஜ நெறி

[ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார், அட்வகேட்,
'ஸுதர்சனம்' ஆசிரியர், 3, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-17.]

## 1. முன்னுரை

இப்போது நடக்கும் பிங்கள வருஷத்திற்கு 960 வருஷங்களுக்கு முற்பட்ட (கி. பி. 1017) பிங்கள வருஷத்தில் சித்திரை மாதத்தில் சுக்லபக்ஷ பஞ்சமியில் திருவாதிரை நட்சத்திரத்தில் வியாழக்கிழமையன்று ஸிம்ஹ லக்னத்தில் பிற்பகலில் ஸ்ரீ பெரும்பூதூரில் அவதரித்து, விசிஷ்டாத்வைத ஸ்ரீ வைஷ்ணவ மதத்தை நிலைநாட்டி, 120 வருஷங்கள் நிறை வாழ்வு வாழ்ந்து, அதே பிங்கள வருஷத்தில் (கி. பி. 1137ல்) மாசி மாதத்தில் சுக்லபக்ஷ தசமியில் திருவாதிரை நட்சத்திரத்தில் சனிக்கிழமையன்று நடுப்பகலில் ஸ்ரீரங்கத்தில் திருநாட்டை அலங்கரித்தவர் ஸ்ரீராமாநுஜர்.

தொன்மையான வேதநெறிக்கு மூன்று வகையான விளக்கங்களை வெளியிட்டவர்கள் ஆதிசங்கரர், ஸ்ரீராமாநுஜர், ஸ்ரீமத்வர் என்னும் மூன்று ஆசார்யர்கள். இவர்கள் (முறையே) கேரளத்திலும், தமிழ்நாட்டிலும், கன்னட நாட்டிலும் பிறந்து நிலைநாட்டிய அத்வைதம், விசிஷ்டாத்வைதம், த்வைதம் என்னும் மூன்று நெறிகளும் இன்றும் பாரததேசம் முழுவதிலும் லக்ஷக்கணக்கான மக்களால் பின்பற்றப்படுகின்றன. இவர்களில் ஸ்ரீராமாநுஜரே தமிழ்நாட்டில் அவதரித்தவர். சான்றோருடையதாகப் புகழ்பெற்ற தொண்டைமண்டலத்தைச் சேர்ந்த ஸ்ரீ பெரும்பூதூரில் ஸ்ரீ கேசவஸோமயாஜியாருக்கும், பூமிதேவிக்கும் தனிப் புதல்வராகத் தோன்றியவர் ஸ்ரீராமாநுஜர். தமிழ்நாட்டில் பரம வைதிக குடும்பத்தில் பிறந்தமையால், வடமொழி வேதங்களையும், தென்மொழி வேதங்களாகிற ஆழ்வார்களின் அருளிச்செயல்களையும் ஒருமைப்படுத்தி, சங்ககாலம் முதலாகவே தமிழ்நாட்டில் விளங்கிவந்த இருமொழி ஒருமைப்பாட்டு நெறியான விசிஷ்டாத்வைத வைணவ நெறியை நிலைநாட்டினார் ஸ்ரீராமாநுஜர். இம்முறையில் தென்னாட்டுக்கும், வடநாட்டுக்கும், தென்மொழிக்கும், வடமொழிக்கும் ஒருமைப்பாட்டின் முழு உருவமாக விளங்குகிறார் இப்பெரியவர்.

இவரது கொள்கைகளைச் சுருங்கக் கூறுவோம் இனி. உலகிலுள்ள எல்லாப்பொருள்களும் சித், அசித், ஈச்வரன்

எனும் மூன்று வகையில் அடங்கும். இவற்றில் 'சித்' அல்லது 'சேதனம்' என்பது அறிவுள்ள ஜீவர்கள். 'அசித்' அல்லது 'அசேதனம்' என்பது அறிவற்ற பொருள்கள். சேதனரான ஜீவர்களும் கணக்கற்றவர்கள். அசேதனமான பொருள்களும் கணக்கற்றவைகள். உண்மைப் பொருள்களான இவையனைத்தையும் என்றும் தன்னைவிட்டுப் பிரியாத சரீரமாகக் கொண்டவனுயிருக்கும் ஸ்ரீமந்நாராயணனே ஈச்வரன் எனப்படும் பரம்பொருள். ஸத்வம், ரஜஸ், தமஸ் என்னும் முக்குணங்கள் கொண்ட மூலப்ரக்ருதியென்னும் அசேதனப்பொருளின் விகாரமான இவ்வுலகம் அந்த நாராயணனால் அவ்வப்போது ஆக்கி அளித்து அழிக்கப்பட்டு, அவனது அளவிலா விளையாட்டுக்கு இலக்காவதால் லீலாவிபூ₄தி எனப்படுகிறது. இதில் உள்ள ஜீவர்கள் புண்யபாபங்களால் கட்டுப்பட்டவர்களாகையால் ப₃த்₃த₄ர் எனப்படுவர். என்றும் உள்ளதாய், (ரஜோகுணமும், தமோகுணமும் கலக்காத) சுத்தஸத்வகுணமுடைய பரமபதம் என்னும் ஸ்ரீவைகுண்டம்—அவனுக்கு என்றும் ஆட்பட்டிருக்கும் அளவற்ற நித்யஸூரிகளாலும், இந்த லீலாவிபூ₄தியிலிருந்து ஒருகாலத்தில் முக்திபெற்ற அளவற்ற முக்தர்களாலும் நிறையப் பெற்றிருக்கையால், நித்யவிபூ₄தி என்று புகழ்பெற்றிருக்கிறது. விபூ₄தி எனும் சொல் செல்வம் என்று பொருள்படும். இவ்விரு உலகங்களும் பரமாத்மாவான நாராயணனுடைய செல்வமாகையாலே உப₄யவிபூ₄திகள் எனப்படுகின்றன.

லீலாவிபூ₄தியிலுள்ள ப₃த்₃த₄சேதனர் நித்யவிபூ₄திக்குச் சென்று ஸ்ரீமந்நாராயணனை அனுப₄வித்து ஆட்செய்வதே 'பரமமோக்ஷம்' என்று வடமொழி சாஸ்திரங்களிலும், 'நல்வீடு' என்று ஆழ்வார்களாலும், "வீறுபெறு துறக்கம்" என்று சங்ககாலத் தமிழர்களாலும் குறிக்கப்படுகிறது. ஜீவர்கள் இவ்வீடு பேற்றை அடைவதற்கு அறியவேண்டியவை ஐந்து விஷயங்கள்:— (1) எல்லாவுலகையும் உடையவனாகிய இறைவனைப்பற்றிய உண்மையாகிற இறைநிலை (2) அவனுடைய உடைமைகளில் உயர்ந்த ஜீவர்களாகிற நம்மைப்பற்றிய உண்மையாகிற உயிர்நிலை. (3) நல்வீடுபெற்று நாம் அடையும் பயனாகிய வாழ்வு. (4) இவ்வாழ்வை அடைவதற்கு உபாயமாகிற நெறி. (5) இதுகாறும் நாம் இவ்வாழ்வை அடையத் தடையாயிருந்த *தடைகள்.* இவ்வைந்து விஷயங்கள் பற்றியும் ஸ்ரீராமாநுஜர் காட்டும் நெறிகளை அடுத்த ஐந்து உரைகளில் விளக்குவோம்.

## 2. இறைநிலை

ராமாநுஜநெறியில் இறைவனின் நிலை விளக்கப்படுகிறது. இறைவனுகிற ஸ்ரீமந்நாராயணன் தாழ்வுகள் அனைத்துக்கும் எதிர்த்தட்டானவன். நற்குணங்கள் அனைத்துக்கும் கொள்கலமானவன். தன்னிலும் வேறுபட்ட எல்லாச் சேதனரையும், அசேதனப்பொருள்களையும் தன்னைவிட்டுப் பிரியாத சரீரமாகக் கொண்டிருக்கையால், எல்லாம் தானே என்றும் சொல்லலாம் படியிருப்பவன். ஆயினும், சரீரமாயிருக்கும் அவற்றின் தாழ்வுகளால் தீண்டப்படாதவனுயிருப்பவன். எல்லாக் காலத்திலும் எல்லா இடங்களிலும் வியாபித்திருப்பவன். அறிவும் ஆனந்தமுமே வடிவாயிருப்பவன். இயல்வானவையாய், எல்லையற்றவையான அறிவு, ப₃லம், ஈம்₂வரத்தன்மை, வீர்யம், சக்தி, தேஜஸ்ஸு, நீர்மை, அன்பு, மென்மை, நேர்மை, உயிர்களிடத்து நட்பு, நடுநிலைமை, கருணை, இனிமை, க₃ம்பீ₄ரத்தன்மை, வண்மை, திறமை, நிலையுடைமை, தீ₄ரத்தன்மை, சூரத்தன்மை, பராக்ரமம், வேண்டத்தக்கதெல்லாம் பெற்றிருக்கை, நினைத்ததெல்லாம் நடத்தும் வல்லமை, அடியார்களது காரியம் தன் பேருயிருக்கை, அவர்களிடத்துச் செய்ந்நன்றி மறவாமை முதலான கணக்கற்ற கல்யாணகுணங்களை உடையவன். இக்கல்யாணகுணங்களை வெளிப்படுத்துவதற்காகவே கணக்கற்ற திருமேனிகளைக் கொண்டிருப்பவன். தனக்கினியதாய், தக்கதாய், காலத்தால் வேறுபடாததாய், நினைத்தற்கரியதாய், அப்ராக்ருதமான சுத்தஸத்வப்பொருளால் ஆனதாய், எப்போதுமிருப்பதாய், குற்றமற்றதாய், ஒப்பற்ற ஒளியுடையதாய், அவயவ அழகு, மேனியழகு, நறுமணம், மென்மை, நித்ய யௌவனப்பருவம் முதலிய கணக்கற்ற குணங்களுக்குக் கொள்கலமாயிருப்பது இவன் திருமேனி. கர்மம் காரணமாக ஏற்படும் ப்ராக்ருதமான அழுக்குடம்புகளைக் காட்டிலும் மிகவும் வேறுபட்டதாய், அடியார்க்கு அருள்புரிவதற்காக ஈச்வரனுல் விரும்பியே ஏற்றுக்கொள்ளப்பட்டதாய், அப்ராக்ருதமாயிருப்பது இவனுடைய பரஞ்சோதியுருவம். அத்திருமேனியில் மிக அழகிய பல திருவாபரணங்களும், சங்கம் சக்ரம் முதலான திவ்யாயுதங்களும் உள. சேதனரை ஈம்₂வரனேடு சேர்த்துவிடுவதையே இயல்வாக உடையவளாகையாலே சேதனர் அனைவர்க்கும் தாயாய், நாராயணனுக்கு என்றும் ஆட்பட்டிருக்கையாலே அவனுக்கு அப்ராக்ருத பத்னியாயிருக்கும் லக்ஷ்மீ தே₃வியையும், அவளுக்கு ஆட்பட்ட பூ₄மிதே₃வி முதலானவர்களையும் தி₃வ்யமஹிஷிகளாக உடையவன். பரமபத₃த்தில்

இவ்விறைவனுக்கே என்றும் ஆட்செய்து வாழும் ஆதிசேஷன், கருடன் முதலான கணக்கற்ற நித்யஸூரிகளையும், முக்தர்களையும் உடையவன். இத்தகைய பெருமையுடையவனாய், பரமபதம் என்றும், வைகுண்டம் என்றும் வேதவேதாந்தங்களில் புகழப்படும் மேல் எல்லையற்ற அப்ராக்ருத நித்யவிபூதியிலிருந்துகொண்டு — அவ்வுலகத்தையும், ப்ராக்ருதமாய், ப்ரக்ருதி, புருஷர்கள் எனப்படும் ஜீவர்கள், காலம் என்னும் மூவகைத் தத்துவங்கள் அடங்கிய கீழ் எல்லையற்ற லீலாவிபூதியான இவ்வுலகத்தையும் ஆட்சிசெலுத்திக்கொண்டிருப்பவன். இவ்வுலகில் கர்மத்தால் கட்டுப்பட்டுக் கிடக்கும் சேதனரை ஆட்கொண்டு அவ்வுலகிற்கு அழைத்துச் செல்வதற்காக வேதம் முதலான சாஸ்திரங்களை அளித்து, ராமன், கிருஷ்ணன் முதலான கணக்கற்ற அவதாரங்களையும் எடுப்பவன்; கோயில்களில் அர்ச்சாவதாரமாகவும் எழுந்தருளியிருப்பவன். ஆழ்வார்கள், ஆசார்யர்கள் போன்ற ஞானிகளையும் அவதரிக்கச்செய்பவன். இவ்வுலகிற் சேதனரைத் திருத்தி ஆட்கொள்வதற்காகவே சோம்பாமல் இவ்வுலகைப் படைத்து, ரக்ஷித்து, அழித்துக்கொண்டும், அவதரித்து அருஞ்செயல்களைப் புரிந்துகொண்டுமிருப்பவன். இப்படி இவன் செய்வதற்குக் காரணம் அனைத்துலகிற்கும் ஸ்வாமியாய், ஆதாரமாய், நியமிப்பவனாய், ரக்ஷகனாயிருக்கையேயாகும். மிகுந்த ஜ்ஞானசக்திகள் படைத்த பிரமன், சிவன் முதலான தேவர்களும் இவனால் படைத்து, அளித்து அழிக்கப்படும் ஜீவர்களே. ஒத்தாரும் மிக்காரும் இல்லாத ஆதியஞ்சோதியாயிருப்பவனிவன். நாராயணன், விஷ்ணு, ஹரி, அநந்தன் முதலான கணக்கற்ற பெயர்களை உடையவனிவன். உண்மையில் உலகில் உள்ள எல்லாப் பொருள்களின் பெயர்களும், அவற்றுக்கு அந்தர்யாமியான இவனுடைய பெயர்களுமாகும். ஆகையால் எந்தப் பெயராலும் வேதங்களும், ஞானிகளும் இவனைக் குறிப்பர். தன்னால் படைக்கப்பட்ட பொருள்களுக்குத் தன்னுடைய பெயர்களில் சிலவற்றைக் கொடுத்திருக்கிறான் இவன், ஆயினும் நாராயணன் முதலான ஆயிரக்கணக்கான நாமங்களைத் தன் தனிப்பெயர்களாக வைத்துக்கொண்டுமிருக்கிறான். அதனாலேயே இப்பெயர்களால் இவனை அழைப்பதில் ஞானிகள் ஆர்வங்கொண்டிருக்கின்றனர். இப்பெருமைகளையெல்லாம் இவனுக்கு வேதம் முதலான வடமொழி நூல்களும், ஆழ்வார்களின் அருளிச்செயல்களும், சங்ககால நூல்களான பரிபாடல் முதலானவையும் காட்டுகின்றபடியால் ராமாநுஜர்நெறி மிகத்தொன்மையான நெறி என்று விளங்கும்.

## 3. உயிர்நிலை

ராமானுஜநெறியில் உயிர்களின் நிலை விளக்கப்படுகிறது. அனைத்துயிர்களுக்கும் தந்தையாய், ரக்ஷகனாய், தலைவனாய், நாயகனாய், அறியத்தக்கவனாய், உடையவனாய், ஆதாரமாய், ஆத்மாவாய், அனுபவிப்பவனாயிருக்கும் இறைவனான ஸ்ரீமந் நாராயணனுக்குப் பிள்ளையாய், ரக்ஷிக்கப்படுபவனாய், அடியானாய், நாயகியாய், அறிபவனாய், உடைமையாய், தாங்கப்படுபவனாய், சரீரமாய், அநுபவிக்கப்படுபவனாக ஒவ்வோருயிரும் இருக்கையாலே, உயிர்கள் எனப்படும் ஜீவர்கள் அனைவரும் இறைவனோடு இத்தகைய ஒன்பது வகைப்பட்ட இயல்வான உறவுகளை உடையவர்களாயிருக்கிறார்கள். உயிர் எனப்படும் ஜீவாத்மா ஈச்வரனைப்போலவே என்றுமிருப்பவன். தேஹம், இந்திரியங்கள், மனம், ப்ராணன். எனப்படும் ஜடப் பொருள்களைக்காட்டிலும் மிகவும் வேறுபட்டதாய். அவ்வவ்வுயிர்க்கு 'நான்' 'நான்' என்று எப்போதும் தோன்றிக் கொண்டிருப்பது ஆத்மா. இவ்வாத்மா இயற்கையில் அறிவு மயமாகவும், ஆநந்தமயமாகவும் இருப்பது; எங்கும் பரவக் கூடிய அறிவை உடையது. முக்திநிலையில் இதன் அறிவு எங்கும் பரவுகிறது. ஆயினும் ப்ராக்ருதமான சரீரத்தோடு தொடர்பினால் இந்த லீலாவிபூதியிலுள்ள உயிர்களுக்கு அவரவர் செய்த பூர்வகர்மங்களால் ஏற்பட்ட உடலின் தொடர்பால் அந்த அறிவுக்கு ஏற்றத்தாழ்வுகள் ஏற்படுகின்றன. இறைவனுக்கும், அவனடியார்க்கும் அடிமைப்பட்டிருக்கையையே இயல்வாகக்கொண்டது உயிர். நித்யமான ஆத்மாவுக்கு அநாதிகாலமாகப் பலவகைப்பட்ட சரீரங்களோடு பூர்வகர்மம் காரணமாகத் தொடர்பு ஏற்படும்போது பிறப்பும், அத்தொடர்பு அழியும்போது இறப்பும் உண்டாவதாக உலகில் வழங்கப்படுகிறது. உண்மையில் ஆத்மஸ்வரூபத்திற்குப் பிறப் பிறப்புகள் கிடையாது. ஆத்மா அணுபரிமாணமுடையதாய், உடலின் நடுவில் உள்ள ஹ்ருதயத்தில் வாழ்கிறது. கண் முதலான இந்திரியங்களுக்குப் புலப்படாததாகையாலே, பௌதிகப்பொருள்களை அறிவதுபோலே ஆத்மாவை அறிய முடியாது. அணுவாய், ஹ்ருதயத்தில் வாழ்ந்தபோதிலும், விளக்கானது ஒளியால் அறைமுழுவதும் பரவுவதுபோலே, ஆத்மாவானது தன் அறிவினால் உடல் முழுவதும் பரவிநின்று உடலில் ஏற்படும் இன்பதுன்பங்களை மெய், வாய், கண், மூக்கு, செவி, மனம் என்னும் ஞானேந்திரியங்களின் மூலம்

உணர்கிறது. முதலிற்கூறிய ஐந்து ஞானேந்திரியங்களோடும், வாக்கு, கை, கால், மலத்தைத்தள்ளும் பாயு, ஆண் பெண் சேர்க்கைக்கருவியான உபஸ்த₂ம் என்னும் ஐந்து கர்மேந்திரியங்களோடும் மனத்தின்மூலம் தொடர்புகொண்டு ஸ்பர்ஶித்தல், சுவைப்பது, காண்பது, முகர்வது, கேட்பது, பேசுவது, எடுப்பது, நடப்பது முதலான செயல்களைச் செய்கிறான் ஜீவன். ஆத்மாவாகிற ஜீவன் இவ்வண்ணமாக அறிபவனான ஜ்ஞாதாவாகவும், செயல்புரிபவனான கர்த்தாவாகவும். அநுப₄விப்பவனான போக்தாவாகவும் ஆகிறான்: இப்படி ஆகும்போதும் ஈஶ்வரனுக்கு அதீ₄னமாகவே இருக்கிறான். ஆயினும் ஒவ்வொரு நல்வினை தீவினைகளையும் புரியும்போதும் இறைவன் முதல் முயற்சியில் இவனுக்கு ஸ்வாதந்த்ர்யம் (free will) அளித்திருக்கிறானுகையால் அந்த நல்வினை தீவினைகளுக்கு ஸுக₂துக்கங்களைப் பலனாகக் கொடுப்பதால் ஈஶ்வரனுக்குப் பக்ஷபாதம் கருணையின்மை முதலான தோஷங்கள் ஏற்படுவதில்லை. ஆத்மாக்கள்—எப்போதுமே கர்மஸம்பந்தமற்ற நித்யஸூரிகள் என்றும், ஒரு காலத்தில் கர்மஸம்பந்தம் நீங்கப்பெற்ற முக்தர்கள் என்றும். கர்மத்தாலும் அதுகாரணமாகவரும் தேஹத்தாலும் கட்டுப்பட்டவர்களான ப₃த்₃த₄ர்கள் என்றும் மூவகைப்படுவர். ஒவ்வொரு வகையினரும் கணக்கற்றவர். முதலிரண்டு வகையினரும் நித்யவிபூ₄தியிலும், மூன்றுவது வகையினர் லீலா விபூ₄தியிலும் உள்ளனர். மூன்றுவது வகைப்பட்ட இவ்வுலகிலுள்ள ஜீவர்களுக்கு ஜட₃ப்பொருளான ப்ராக்ருததே₃ஹத்தின் தொடர்பாலே அஜ்ஞானம் முதலான தாழ்வுகள் ஏற்படுகின்றன. இந்த தே₃ஹஸம்ப₃ந்த₄ம் அடியோடு நீங்கும்போது இவர்கள் முக்தராகிறார்கள். அப்போதும் இவர்கள் ஈஶ்வரனோடு ஒன்றுவதில்லை. அவனோடு ஒத்த பல பெருமைகளை உடையவர்களாய், ப்ராக்ருத தே₃ஹஸம்ப₃ந்த₄த்தால் வரும் தாழ்வுகள் அற்றவர்களாய், மறுபடியும் என்றும் ப்ராக்ருதமான தே₃ஹத்தோடு தொடர்பு ஏற்படாத வாழ்வுநிலையை அடைகிறார்கள். சாஸ்திரங்களில் அசேதனப் பொருள்களை இறைவனோடு ஒன்றாக வழங்கியிருப்பதுபோலே, சேதனனான ஜீவனை இறைவனோடு ஒன்றாக வழங்கியிருப்பதும் இறைவன் அனைத்துக்கும் ஆத்மாவாகவும், மற்றவையனைத்தும் அவனை விட்டுப்பிரித்துக் காணமுடியாத சரீரமாகவுமிருக்கையாலேயேயாகும். ஆகையால் ஸம்ஸாரநிலையிற்போலே மோக்ஷநிலையிலும் ஜீவன் ப்₃ரஹ்மத்தோடு ஒன்றுவதில்லை. இது உயிர்கள்பற்றிய ராமானுஜநெறி.

## 4. வாழ்வு என்னும் முக்திநிலை

ராமானுஜநெறியில் வாழ்வு எனப்படும் முக்திநிலை விளக்கப்படுகிறது. உயிராகிற ஜீவன் இறைவனாகிற ஸ்ரீமந்நாராயணனின் அருளாலே ப்ராக்ருத தேஹஸம்பந்தம் நீங்கப்பெற்று, நித்ய விபூதியாகிற பரமபதம் சென்று தாம் விரும்பிய வாழ்ச்சியைப் பெறுவது முக்திநிலை எனப்படுகிறது. உயிரானது பரமபதம் சென்று ஜ்ஞாநாநந்தமயமான தன் ஆத்மஸ்வரூபத்தையே சரீரமில்லாமல் என்றும் தான் தனி நின்று அநுபவித்துக்கொண்டிருக்கையாகிற கைவல்யம் எனப்படும் தாழ்ந்த மோக்ஷத்தையோ, அல்லது இறைவனை ஸ்ரீமந்நாராயணனை அடைந்து அப்ராக்ருத சரீரம்பெற்று அந்தமில் பேரின்பத்து அடியரான நித்யமுக்தர்களோடு கூடிநின்று அவனை அனுபவித்துப் பேரின்பமடைதல், அவனுக்குக் கைங்கர்யம்செய்து பேரின்பமடைதல், அவனுகப்பையே பயனாகக்கொண்டு அவனுக்கு அடிமைசெய்து அவன் முகமலர்த்திகண்டு பேரின்பமடைதல், அவனது அடியார்களது உகப்பையே பயனாகக்கொண்டு அவர்களுக்கு அடிமைசெய்து அவர்கள் முகமலர்த்திகண்டு பேரின்பமடைதல் ஆகிய இவற்றில் தான் விரும்பியதொன்றைப் பெறும் தலைசிறந்த மோக்ஷத்தையோ இவ்வுலகில் தான் விரும்பியபடி அடைகிறான் என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன. இத்தலைசிறந்த மோக்ஷமாகிற ஸாயுஜ்யமே 'பரமமோக்ஷம்' என்றும், 'நல்வீடு' என்றும் 'வீறுபெறுதுறக்கம்' என்றும் கூறப்படுகிறது. நித்யஸூரிகளுக்குப்போலே இவ்வுலகிலுள்ள பத்தஜீவர்களுக்கும் இத்தகைய நல்வீட்டை அருளித் தான் இன்புறவேண்டும் என்னும் ஆசையாலேயே ஸ்ரீமந்நாராயணன் ப்ரளயகாலத்தில் ஸூக்ஷ்மமான மூலப்ரக்ருதியெனும் அசேதனப்பொருளோடு கலந்து சரீரேந்திரியங்களற்றுக் கிடக்கும் ஜீவர்களுக்கு ஸ்ருஷ்டிகாலத்தில் ஸ்தூலமான உடலையும் இந்திரியங்களையும் அளித்து, தன்னை அறிவிக்கும் சாஸ்திரங்களையும் அளித்து, தானும் நாட்டிற்பிறந்து படாதனபட்டு, ஞானிகளையும் அவதரிக்கச் செய்கிறான். இத்தகைய நல்வீட்டை விரும்பினால், இதை அடைவதற்கு ஒவ்வொரு ஜீவனுக்கும் உரிமையுண்டு என்கிறது ராமாநுஜநெறி. இந்த நல்வீட்டை அடைவதற்குப் பற்பல படிகளாகவே உலகிலுள்ள எல்லாச்சமயங்களையும் படைத்திருக்கிறான் என்பதும் ராமாநுஜநெறியின் உட்கருத்தாகும். பரமபதத்தில் ஸ்ரீமந்நாராயணனுக்கும், அவனுடைய அடியார்களுக்கும் கைங்கர்யம்செய்து பேரின்பப்பெறுவாழ்ச்சி பெறுவதற்காக முக்தஜீவன் இறைவனின் விருப்பத்தைப் பின்செல்லும் தன் விருப்பப்படி அப்ராக்ருதமான சரீரத்தை எடுத்துக்கொள்கிறான். ஈச்வரனுடைய திருமேனிபோலே இந்த

முக்த சரீரமும் நித்யவிபூதியிலுள்ள சுத்தஸத்வமுடைய அசேதனப்பொருளால் ஆனது. ஸத்வம் ரஜஸ்ஸு தமஸ்ஸு என்னும் முக்குணங்களுடைய ப்ராக்ருத சரீரம்போலே, இந்த சரீரம் ஜீவனுடைய ஜ்ஞாநாநந்தங்களைக் கட்டுப்படுத்தித் தாழ்த்தாது. இந்த சரீரத்தைக்கொண்டு எல்லா இடங்களிலும், எல்லாக்காலங்களிலும், எல்லா நிலைகளிலும் உசிதமான எல்லா விதமான கைங்கர்யங்களையும் செய்கிறான் பேரின்பப்பெருவாழ்வு பெற்ற முக்தன். இதுவே ஜீவஸ்வருபத்திற்குத் தகுந்த பெரு வாழ்ச்சியாகும். இக்கைங்கர்யத்தையும் தாஸனான தன் ஆனந்தத்திற்காக என்று எண்ணிச்செய்யாமல், ஸ்வாமியான அவனுடைய ஆனந்தத்திற்காகவே என்று எண்ணிச் செய்ய வேண்டும். ஸம்ஸாரமண்டலத்தில் இருக்கும்போது அவனு கப்புக்கேயான கைங்கர்யத்தைச் செய்ய ஆசைப்படுபவர் களுக்கே அத்தகைய பெருவாழ்வுகிடைக்கும் என்பதை "தனக்கேயாக எனைக்கொள்ளும் ஈதே எனக்கே கண்ணனை யான்கொள் சிறப்பே" என்று நம்மாழ்வாரும், "உனக்கே நாம் ஆட்செய்வோம்" என்று ஆண்டாளும் அருளிச்செய்தனர். உடைமையான ஜீவனை அடைந்து தான் இன்புறவேண்டும் என்பதே உடையவனான இறைவனின் விருப்பமாகையால், ஜீவன் மோக்ஷத்திலும் தன் ஆனந்தத்தை குறிக்கோளாகக் கொள்ளாமல் இறைவனின் ஆனந்தத்தையே குறிக்கோளாகக் கொள்வது தலைசிறந்தது. இத்தகைய மோக்ஷத்தையும் இறைவன் எவர்க்கும் நிர்ப்பந்தப்படுத்திக் கொடுப்பதில்லை. எவர்கள் இத்தகைய அடிமைசெய்ய ஆசைப்படுகிறார்களோ, அவர்களுக்கே இதை அருளுகிறான் இறைவன். ஆகையால் இவ்வடிமை இவ்வுலகில் தகாதவர்களுக்குச் செய்யும் அடிமை போலே துன்பத்தை விளைப்பதாயிராமல், உயிர்களுக்கு எல்லா உறவுமாயிருக்கும் இறைவன் விஷயத்தில் அவனுகப்புக்காகச் செய்யப்படுவதாகையால் பேரின்பப்பெருவாழ்வாயிருக்கிறது. ராமாநுஜநெறியின்படி உயிர்களுக்கு முக்தியை அளிப்பதற்கு உரியவன் திருமாலேயாவான். "மோக்ஷத்தை அளிக்கவல்லவன் புருஷோத்தமனே" என்று புருஷஸூக்தமும், "மோக்ஷத்தை ஜநார்த்தனனிடமிருந்தே பெறவேண்டும்" என்று ரிஷிகளும், "எருத்துக்கொடியுடையானும், பிரமனும், இந்திரனும் மற்றும் ஒருத்தரும் இப்பிறவி என்னும் நோய்க்கு மருந்தறிவாருமில்லை; மருத்துவனாய்நின்ற மாமணிவண்ணா" என்று பெரியாழ்வாரும், "மறுபிறப்பு அறுக்கும் மாசில்சேவடி மணிதிகழ் உருபின் மாஅயோயே" "நாறு இணர்த்துழாயோன் நல்கின் அல்லதை ஏறுதல் எளிதோ வீறுபெறு துறக்கம்" என்று சங்ககாலப் புலவர்களும் கூறிய அர்த்தத்தையே இவ்விஷயத்திலும் ராமாநுஜர் வலியுறுத்தினார் என்று விளங்குகிறது.

## 5. நெறி அல்லது உபாயம்

ராமாநுஜநெறியில் முற்கூறிய மோக்ஷநிலையை அடைவதற்கு நெறி எனப்படும் உபாயம்பற்றி விளக்கப்படுகிறது. உலகில் உள்ள மதங்கள் அனைத்திலும் உயிர்கள் முக்திநிலையாகிற பேரின்பம் அடைவதற்குப் பெருமுயற்சிசெய்யும் வழிகள் காட்டப்படுகின்றன. அதே ரீதியில் ஸ்ரீ ராமாநுஜரும் தமது ஸ்ரீ ப₄ாஷ்யம் கீ₃தாப₄ாஷ்யம் முதலான நூல்களில் உயிர்கள் மோக்ஷானந்த₃த்தைத் தாம் அடைவதற்குக் கர்மஜ்ஞான யோகங்களை அங்க₃மாகக்கொண்ட ப₄க்தியோகத்தை ஸாத₄னமாக அனுஷ்டிக்கவேண்டும் என்னும் வேதசாஸ்த்ர நிர்ணயத்தைக் காட்டினார். இத்துடன் நில்லாமல், வேதசாஸ்திரங்களின் உட்கருத்தாய், உயிர்கள் அனைவரும் உய்வதற்கு வழியான சரணாக₃திநெறியையும் க₃த்₃யத்ரயம் என்று பெயர்பெற்ற மூன்று நூல்களிலும் காட்டினார் ராமாநுஜர். ஆழ்வார்கள் காட்டிய இந்த சரணாகதி நெறியை, ஸ்ரீ ரங்க₃நாதனின் முன்னிலையில் பங்குனி உத்திரச்சேர்த்தியன்று அருளிச்செய்யப்பட்ட இந்நூல்களில் தாமே தமக்காகவும் தம்மோடு தொடர்புகொண்டவர்களுக்காகவும் அனுஷ்டித்துக்காட்டினார். இதன் கருத்தை விளக்குவோம். தன் உடைமையான ஜீவனை அடைந்து தான் இன்புறவேண்டும் என்பது இறைவனின் விருப்பம். அதற்காக அவன் படைத்தல் அவதரித்தல் முதலான பல முயற்சிகளை அநாதி₃காலமாகச் செய்துகொண்டேயிருக்கிறான். ஜீவர்களோவெனில் அநாதி₃காலமாகச் செய்திருக்கும் பாபங்களின் பயனாகத் தமக்கும் இறைவனுக்கும் உள்ள இயற்கையுறவை உணராமல், இறைவன்கொடுத்த சுதந்திரமான அறிவைக்கொண்டு, அற்பமாய், நிலைநில்லாதவையான இவ்வுலக இன்பங்களைத்தேடி ஓடுகிறார்கள். பல சமயநெறிகளைக் காட்டிப் பல பிறவிகளில் இவர்களைப் படிப்படியாகத் திருத்தி, கடைசியில், தன்னை அடைவதே நல்வீடு என இவர்களை உணரவைக்கிறான். அப்போதும், ஜீவன் அவ்வீட்டை அடைந்து தான் இன்புறவிரும்பினால் பல பிறவிகளில் அவனைக் கர்மஜ்ஞாநப₄க்தியோகங்களை ஸாத₄னமாக அனுஷ்டிக்கச்செய்து, கடைசிவரையில் மோக்ஷத்தில் தான் ஆனந்தமடைய விரும்பித் தன் முயற்சியிலேயே நிலைநின்றால், அந்த ஸாதனத்தின் பலனாக மோக்ஷானந்தத்தை அவனுக்கு அளிக்கிறான். சில அறிவாளிகள் பின்வருமாறு சிந்திக்கிறார்கள்:— "இறைவன் நம்மோடு இயற்கையில் உறவுடையவன்; நம்மை அடைந்து தான் இன்புறுவதற்கு அநாதி₃காலமாகப் படாதபாடுபடுகிறான். நாமோ நமக்கு ஆனந்த₃த்தைப் பெறுவதற்காக அநாதிகாலமாகப் பாடுபட்டுவருகிறோம். உண்மையில் நம்மைப்பெற்று இறைவன் அடையும் ஆனந்த₃மே

நமக்குப்பேறுகும். நாம் நமது ஆனந்தத்திற்காகப் பாடுபட்டு வருவதுதான் இறைவன் நிர்ஹேதுகமாக அருள்புரிந்து நம்மைத் தன்னை அடைவித்துக்கொள்வதற்கு இதுநாள்வரை தடையா யிருந்துவருகிறது. ஆகையால் மோக்ஷத்தில் நாம் ஆனந்தம் அடைவதைக் குறிக்கோளாகக்கொண்டு இங்கு பாடுபடுவதினின் றும் நீங்கி, அவனது ஆனந்தத்தையே குறிக்கோளாகக்கொண்டு, அவனையே நம்மை ரக்ஷிப்பவனுக உறுதிபூண்டு அவனுக்கும் அவனடியார்களுக்குமேயாக வாழ்ந்துவந்தோமானல், அவன் மோக்ஷத்தின்பொருட்டு நம்மிடம் எந்த முயற்சியையும் எதிர் பாராமல் (நிர்ஹேதுகமாக) நமக்கு மோக்ஷத்தை இப்பிறவியின் இறுதியில் அருளி, அவனுகப்புக்கேயான பேரின்பப்பெரு வாழ்வை அருளுவான்" என்னும் ரீதியிலே அவ்வறிவாளிகளின் சிந்தனை செல்கின்றது. அதற்குத் தக்கபடி தாம் மோக்ஷமடை வதற்காகப் பாடுபடுவதினின்றும் நீங்கி, அவனையே அடையத் தக்க பொருளான உபேயமாகவும், அடைவிக்கும் வழியான உபாயமாகவும் கொண்டு அவனுக்கேயாக இப்பிறவியில் வாழ்ந்து, பரமபதத்தில் அவனுக்கே ஆட்செய்யும் பேரின்பப்பெருவாழ்வை, ஒரு ஸாதநாநுஷ்டானமில்லாமலேயே நிர்ஹேதுகமாகப் பெறு கிறுர்கள். இவர்களுக்கு இறைவனே மோக்ஷோபாயமாவான். இத்தகையவர்களே ப்ரபந்நர்கள் என்றும் சரணுகதர்கள் என் றும் கூறப்படுகின்றனர். இவர்களது வாழ்க்கை முறையான சரணுகதிநெறியே தலைசிறந்த முக்திவழியாகும் என்று கத்யத்ர யத்தில் காட்டினுர் ராமாநுஜர். "கண்ணனல்லால் இல்லை கண்டீர் சரண்" என்று நம்மாழ்வார் காட்டிய வழி இதுவே. இப்படி இறை வனையே உபாயமாகவும் உபேயமாகவும் உறுதிபூண்டு வாழ்க்கை நடத்த இயலாதவர்கள் அத்தகைய உறுதியுடைய ஓர் ஆசார் யனின் அபிமானத்திற்குப் பாத்திரராக வாழ்ந்தால், அதனுலும் பேரின்பப்பெருவாழ்வை மிக எளிதில் பெறலாம் என்றும் உபதேசித்தார் ராமாநுஜர். இதுவே மதுரகவியாழ்வாரால் 'கண்ணிநுண் சிறுத்தாம்பு' என்னும் திவ்யப்ரபந்தத்தில் காட்டப்பெற்ற தொல்வழி. இத்தொல்வழியின்மூலம் பிற்காலத்தில் உள்ளவர் களும் உய்வதற்காக 74 ஆசார்யபீடங்களாகத் தம் சிஷ்யர்களில் தலைசிறந்தவர்களை நியமித்து, பரம்பரை பரம்பரையாக இந் நெறிகளைப் பரப்பிவர ஏற்பாடுசெய்தார் ராமாநுஜர். உலகி லுள்ள எல்லா உயிர்களும் பேரின்பப்பெருவாழ்வுபெற்று உய்யவேண்டும் என்னும் பெருங்கருணையாலே, ஆழ்வார்களை அடியொற்றி மிக எளிய வழிகளை எக்காலத்திற்கும் அமைத்துக் கொடுத்த ஸ்ரீ ராமாநுஜரை "காரேய் கருணை இராமாநுச" என்று இராமாநுச நூற்றந்தாதியில் அமுதனுர் கொண்டாடியது மிகையில்லையன்றே.

# 6. தடை

பேரின்பப் பெருவாழ்வை இவ்வுலகிலுள்ள உயிர்கள்
அடையத் தடையாயிருப்பவை பற்றிய ராமாநுஜநெறி விளக்
கப்படுகிறது. இறைவனைப்போலே என்றுமிருக்கும் இவ்வுலகி
லுள்ள உயிர்களுக்கு அநாதி₃காலமாக உண்டான ப்ராக்ருத
மான சரீரங்களோடுள்ள தொடர்பால், தம்மைப்பற்றிய
உண்மையறிவு மழுங்கிக் கிடக்கிறது. இதனுல் இவர்கள்
தே₃ஹத்தையே தாமாகவும், தம்மைச் சுதந்திரராகவும் எண்ணி
விடுகின்றனர். இது அவித்₃யை அல்லது அஜ்ஞானம் எனப்
படும். இந்த அஜ்ஞானத்தினுல் இவர்கள் அற்பமாய், நிலை
நில்லாதவையான இவ்வுலக இன்பங்களை விரும்பி, அவற்றைப்
பெறுவதற்காக நற்செயல்களையும் தீச்செயல்களையும் செய்து
வருகிருர்கள். இறைவன் இவர்களுக்குக் கொடுத்துள்ள
சுதந்திர அறிவைக்கொண்டு இவர்கள் செய்யும் நற்செயல்களால்
இறைவனுக்கு இவர்களிடம் ப்ரீதியும், தீச்செயல்களால்
இவர்களிடம் கோபமும் உண்டாகிறது. அந்தப் ப்ரீதியானது
புண்யம் என்று பெயர்பெறுகிறது. இதனுல், இவர்கள் விரும்
பும் இவ்வுலக இன்பங்களை அளிக்கின்றுன் இறைவன். அந்தக்
கோபம் பாபம் என்று பெயர்பெறுகிறது. இதனுல் இவர்
களுக்குத் துன்பங்களை அளிக்கின்றுன் இறைவன். ஒவ்வொரு
ஜீவனும் அநாதி₃காலமாகக் கணக்கற்ற புண்ய பாபங்களைச்
சேர்த்து வைத்திருக்கிறுன். இப்புண்ய பாபங்கள் மேன்மேலும்
இவ்வுலக இன்பங்களை விரும்பச்செய்து நற்செயல் தீச்செயல்
களிலே மூட்டி ஒன்று பத்து நூருயிரமாகப் புண்யபாபங்
களை வளர்த்து வருகின்றன. இதனுல் இவ்வுலக இன்பங்களி
லேயே வாஸனை எனப்படும் பழக்கம் உண்டாகிவிடுகிறது.
அதனுல் அவற்றையே மேலும் மேலும் விரும்பவைக்கும் ருசி
யும் உண்டாகி விடுகிறது. இப்படி சங்கிலித் தொடர்போலே
உண்டாகும் உடல்களோடு ஸம்பந்தம், அஜ்ஞானம், புண்ய
பாபகர்மங்கள், வாஸனை, ருசி ஆகியவை, இவனுக்கு மேலும்
மேலும் பல பிறவிகளையும் அவற்றில் பல உடல்களோடு
தொடர்பையும் ஏற்படுத்திக்கொண்டேயிருக்கிறது. அவித்யை
எனப்படும் அஜ்ஞானம், கர்மம், வாஸனை, ருசி, ப்ரக்ருதிஸம்
பந்தம் எனப்படும் உடல்களோடுள்ள தொடர்பு ஆகியவை—
நம்மைப்பற்றியும், இறைவனைப் பற்றியும் உணரமுடியாதபடி
செய்துவிடுகின்றன. இவையே நாம் பேரின்பப் பெருவாழ்வை
அநாதி₃காலமாகப் பெறமுடியாமல் தடுத்துவரும் தடைகள்.
இவை—நாஸ்திகவாத₃ம் முதலானவை செய்து இறைவனிடத்
திலேயே அபசாரப்படும்படியாகவும், அவனடியார்களிடத்திலே

அபசாரப்படும்படியாகவும், அவனையும், அவனடியார்களையும் மிகவும் த்வேஷிக்கும்படியாகவுங்கூடச் செய்துவிடும். இவை இறைவனை அடைவதற்குப் பெரிய தடைகள். இப்படிக் கணக்கற்ற தடைகள் இருந்தபோதிலும் இறைவன் தான் செய்யும் முயற்சிகளாலே தற்செயலாக இவர்களுக்கு நேரிடும் புண்யங்களை ஒன்று பத்து நூறாயிரமாக வளரச்செய்து புண்யங்களாலே பாபம் குறையப்பெற்றவர்களுக்குத் தன்னை உணர வைக்கிறான். அவனை உணர்ந்து முற்கூறிய வழிகளாலே ஒரு சில ஜீவர்கள் முற்கூறிய தடைகள் அடியோடு நீங்கப்பெற்று, தாம் விரும்பிய முக்திநிலையை அடைகின்றார்கள் என்கிறது ராமாநுஜநெறி. ஆக, இறைநிலை, உயிர்நிலை, வாழ்வு, நெறி, தடை ஆகியவை பற்றிய ராமாநுஜநெறி இதுகாறும் விளக்கப்பட்டது.

## முடிவுரை

ஸ்ரீராமாநுஜர் அருளிய நூல்கள் ஒன்பது. வேதவ்யாஸர் அருளிய ப்ரஹ்மஸூத்ரத்திற்கு வ்யாக்யானமாய் அமைந்தவை ஸ்ரீபாஷ்யம், வேதாந்ததீபம், வேதாந்தஸாரம் எனும் மூன்று நூல்கள். உபனிஷத் வாக்யங்களை அலசி ஆராய்ந்து உபனிஷத்துக்களின் கருத்தைத் தெளிவுபடுத்துவது வேதார்த்த ஸங்க்ரஹம் எனும் நூல். கண்ணன் அருளிய கீதைக்கு உரையாக அமைந்தது கீதாபாஷ்யம் எனும் நூல். சரணாகதி நெறியை விளக்குபவை கத்யத்ரயம் எனும் மூன்று நூல்கள். ஸர்வேச்வரனான ஸ்ரீமந்நாராயணனுக்கு ஆராதனம் செய்யும் முறையை விளக்குவது நித்யக்ரந்தம் எனும் நூல். நவ ரத்னங்கள் போன்ற இவ்வொன்பது நூல்களும் வடமொழியில் அமைந்தவை. ஸ்ரீராமாநுஜருடைய பரம்பரையில் ஓரிரு நூற்றாண்டுகளுக்குள் வந்த பல மஹாசார்யர்கள் திவ்யப்ரபந்தங்களுக்குத் தாம் அருளிய ஈடு முதலான வ்யாக்யானங்களில் ஸ்ரீராமாநுஜர் அப்பிரபந்தப் பாசுரங்களுக்குக் காட்டிய விளக்கங்களை ஆங்காங்கு அழகிய தமிழில் பொறித்து வைத்திருக்கிறார்கள். இவையனைத்தையுங்கொண்டு ராமாநுஜர் காட்டிய நெறி இங்கு சுருக்கமாக விளக்கப்பட்டது. இவற்றிலிருந்து, ராமாநுஜர் நிலைநாட்டிய விசிஷ்டாத்வைத ஸ்ரீவைஷ்ணவநெறி— வேதகாலம் முதல் பாரதநாட்டிலும், சங்ககாலம் முதல் அதன் பகுதியான தமிழ்நாட்டிலும் நிலவிவந்த இருமொழி ஒருமைப்பாட்டுநெறியே என உணரலாம்.

**[இது, திருச்சி வானொலியில் 25—7—77 முதல் 30—7—77 முடியக் காலையில் நெறிவிளக்கத் தொடரில் ஒலிபரப்பானது.]**

# முகவுரை

[ஸ்ரீ. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார், M. A. B. L.
அட்வகேட், 'ஸுதர்சனம்' ஆசிரியர்,
3, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-620017.]

பரிபாடல் முதலான சங்க இலக்கியங்களில், திருமால் ஒருவனே பரம்பொருளாகக் காட்டப்பட்டான். சிவன், முருகன் முதலானோர் அவனுக்கு அடங்கிய, சக்திமிக்க தெய்வங்களாகவே காட்டப்பட்டனர். இவ்விஷயம் எமது * சாதிமத ஆராய்ச்சியில், எவரும் மறுக்கவொண்ணாத முறையில் நிலைநாட்டப்பட்டது.

சங்ககாலத்திற்குப் பின் படிப்படியாக சிவன், சக்தி, முருகன் முதலான தெய்வங்களுக்கு, அத்தெய்வங்களின் பக்தர்கள் பரத்துவங்கூறத் தலைப்பட்டனர். சங்ககாலத்தில் அடியோடு இல்லாதவையாய், வேதங்காட்டிய முழுமுதல்வனை திருமாலைத் தாழ்த்திக் கூறுகின்றவையான நூற்றுக்கணக்கான பொய்க்கதைகள் புனையப்பெற்றன. அம்முறையில் இராமன் இராமேஶ்வரத்தில் சிவலிங்க ப்ரதிஷ்டைசெய்து பூசித்தான் என்னும் கதை நாயன்மார்கள் காலத்திற்குச் சிறிது முற்காலத்தில் தோன்றியது. ஒரு பொய், ஒன்பது பொய்யாகவும், ஒன்பதினாயிரம் பொய்யாகவும் விரிவடைவது போலே, தமிழ்நாட்டிலுள்ள பற்பல கிராமங்களிலுள்ள சிவன் கோவில்களில் இராமபிரான் லிங்க₃ ப்ரதிஷ்டைசெய்து பூசித்ததாகப் பொய்க்கதைகள் ஏராளமாகப் புனையப்பெற்று, 'ஸ்தலபுராணம்' என்னும் பெயரில் நம் நாட்டுப் பொதுஜனப் பத்திரிகைகளால் தொடர்ந்து பிரசாரம் செய்யப்படுகின்றன.

சிவனுக்கு வேத₃வேதா₃ந்தங்களைக்கொண்டு பரத்வம் சொல்ல இயலாமையினாலும், அவ்வேத₃வேதா₃ந்தங்களிலும், இதிஹாஸங்களிலும், ஸாத்விக புராணங்களிலும் காணப்படும் தாழ்வுகளை மறைக்க முடியாமையாலும், இலிங்கபுராணம் முதலான தாமஸபுராணங்களைக்கொண்டு திருமாலைத் தாழ்த்திப் பேசுவதால் சிவனுக்கு எப்பெருமையும் ஏற்பட்டுவிடாது ;

---

* 'சாதிமத ஆராய்ச்சி' விலை ரூ. 4-00. தபாற்செலவு 0-75. கிடைக்குமிடம்:—S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார், அட்வகேட், 3, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-620017.

ஆகையால் இப்பொய்க் கதைகளால் சைவர்களுக்கு எப்பயனும் இல்லை என்பதை ஞானிகளில் தலைவரான நம்மாழ்வார்,

*பேசநின்ற சிவனுக்கும் பிரமன்றனக்கும் பிறர்க்கும்*
*நாயகன் அவனே கபாலநன் மோக்கத்துக் கண்டுகொண்மின்*
*தேசமாமதிள் சூழ்ந்தழகாய திருக்குருகூரதனுள்*
*ஈசன்பாலோர் அவம்பறைத லென்னுவ திலிங்கியர்க்கே?.*

*என்று அருளிச்செய்தார்* [*திருவாய்* 4-10-4]

கிராமந்தோறுமுள்ள லிங்க ப்ரதிஷ்டைக் கதைகளுக்கெல்லாம் மூலமான இராமேஶ்வர லிங்க ப்ரதிஷ்டைக் கதையே பொய்யானது என்று—நமது அன்பரும், பல பொது ஸ்தா₂பனங்களில் பொறுப்புள்ள பதவிகள் வகிப்பவரும், முகவை வழக்கறிஞருமான திரு S. திருமலை சடகோபன் அவர்கள் இந்நூலில் நடுநிலைநின்று ஆராய்ச்சி முறையில் காட்டியுள்ளார். 25 பை. தபால் வகைக்கூலிக்கு அனுப்புகிறவர்களுக்கு இந்நூல் தலைப்பில் கண்ட நமது விலாசத்திலும், "38, வடக்குரதவீதி, இராமநாதபுரம்" என்னும் நூலாசிரியர் விலாசத்திலும் இலவசமாகக் கிடைக்கும். பொன்விழாக் காணும் பா. பூ. ஸ்ரீவைஷ்ணவ சபையின் பொன்விழா மலரிலும், அந்த சபையின் தென்பிராந்தியத் தலைவரான நூலாசிரியரின் இந்நூல் அநுப₃ந்த₄மாக இணைக்கப்படுகிறது.

**உண்மைக்கு மதிப்புக் கொடுக்கும் ஆஸ்திகர்கள்** அனைவரும் இந்நூலைப் பிரசாரம்செய்து "**ஸத்யமேவ ஜயதே**" [உண்மையே வெல்லும்] என்னும் வேத வாக்கை வெற்றி பெறச் செய்வார்கள் என நம்புகிறோம். லிங்க ப்ரதிஷ்டைக் கதைகளையும், வேதமுதல்வனை விஷ்ணுவை இழித்துரைக்கும் மற்றும் பல ஸ்தலபுராணக் கதைகளையும் ஓயாது பிரசாரம் செய்யும் பொதுஜனப் பத்திரிகைகளுக்கு இந்நூல் விமர்சனத்திற்கு அனுப்பப்படுகிறது. நடுநிலைநின்று இதை விமர்சிக்கும் நேர்மை அவற்றுக்கு உண்டா? என்பதைக் காலம் தெளிவுபடுத்தும்.

*இங்ஙனம்,*
*உண்மையை உயிரினும் ஓம்பும்.*

**ஸ்ரீ. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்.**

## இராமேஶ்வரத்தில்

# இராமலிங்க ப்ரதிஷ்டை

[கட்டுரையாளர் :—

*ஸ்ரீ. எஸ். டி. சடகோபன், அட்வகேட், ராமநாதபுரம்*]

*(வகுளாபரணன்)*

### முன்னுரை

சிஷ்டபரிபாலனம் செய்யவும் துஷ்டசம்ஹாரம் செய்யவும் பகவான் அவதரிக்கிறார். இவ்விதம் பல்வேறு மதத்தவர்களும் தம் தம் கடவுளர் லீலைகளை விவரிக்கிறார்கள். அவ்விதம் இறைவன் அருள்வடிவு எடுத்து அரக்கர்களை—துஷ்டர்களை சம்ஹாரம் செய்யும்பொழுது அதனால் இறைவனுக்கு தோஷம் ஏற்படக் கூடியதில்லை. அங்நிலையில் இராமாவதாரத்தின்போது மட்டும் இராமருக்கு பிராமணனான இராவணனைக் கொன்றதால் பிரம்மஹத்தி தோஷம் ஏற்படுவதாகவும், அதைப் போக்க இராமேஶ்வரத்தில் லிங்கப்பிரதிஷ்டை செய்து சீதாதேவியுடன் லிங்கபூஜைசெய்து தோஷம் நிவர்த்தி அடைந்ததாகவும் விவரிக்கப்படுகிறது. திருமாலின் மற்ற அவதாரங்களிலும் அரக்கர்களை அழித்துள்ளார். சிவன், முருகன் முதலிய மற்ற கடவுளரும் அவ்வாறே சம்ஹாரம் செய்துள்ளனர். அவர்களுக்கு தோஷம் ஏற்படாது, இராகவனுக்கு மட்டும் தோஷம் ஏற்படுவானேன்? என்ற ஐயம் ஏற்பட்டது. மனிதனாகப் பிறந்து இராமர் அந்த முறையில் வாழ்ந்து காட்டினார்; அதனால் தோஷம் ஏற்பட்டது; அதனால் லிங்கப் பிரதிஷ்டை ஏற்பட்டது என்ற வாதமும் சரியாகப்படவில்லை. ஆகவே லிங்கப் பிரதிஷ்டை வரலாறு உண்மைதானா என்பதைப் பெரியோர்களின் நூல்களைக்கொண்டு ஆராய்ந்ததில் தோன்றியது இந்தக் கட்டுரை. இதுபற்றி ஏற்கனவே பல மஹான்கள் லிங்கப் பிரதிஷ்டை என்பது வரலாற்றுக்கு முற்றிலும் முரண்பட்டது என்பதைத் தெளிவாகக் காட்டியுள்ளனர். அந்தக் கட்டுரைகளைப் பாமரர் புரிந்துகொள்ளுதல் சுலபமல்ல.

அக்குறைதீர இக்கட்டுரை நடுநிலைநின்று ஆராய்ந்து எழுதப்பட்டது. இது சைவசமயத்தின்பால் துவேஷத்தினால் எழுதப்பட்டது அன்று.

**முன்னுரை நிறைவடைகிறது.**

இராவண வதத்திற்குப் பிறகு இராமர் இலங்கையிலிருந்து திரும்பும் வழியில் இராமேச்வரத்தில் இறங்கி லிங்கப் பிரதிஷ்டை செய்து பிரம்மஹத்தி தோஷம் நிவர்த்தியானதாக இராமேச்வரம் ஸ்தல வரலாறுகளில் விவரிக்கப்படுகிறது. தேவஸ்தானத்தில் விற்கப்படும் படங்களிலும் இதையே சித்திரிக்கிறார்கள். அநுமன் கொணர்ந்த லிங்கத்தைப் பக்கத்திலே பிரதிஷ்டை செய்ததாக விவரிக்கிறார்கள். இதை யாவரும் உண்மை என்றே நம்புகிறார்கள். இதுவரை அடியேனும் நம்பிவந்தேன். இந்தச் சிறு ஆராய்ச்சிக்குப்பின்பு இந்த வரலாறு உண்மை அன்று; பல்வேறு இராமாயணங்களுள் எதிலும் (நூற்றெட்டு இராமாயணம் உள்ளது) இதற்கு ஆதாரம் இல்லை என்பதும் நன்கு விளங்குகிறது. ஏற்கனவே பல அறிஞர்கள் இந்த வரலாறு தவறானது என்பதை நிலைநாட்டியுள்ளனர்.

வால்மீகி இராமாயணம் ஆதிகாவ்யம். மற்ற இராமாயணங்கள் யாவும் பிற்காலத்தில் ஏற்பட்டவை. வால்மீகி முனிவர் இராமாயண காலத்தில் வாழ்ந்தவர். அவர் காவ்யத்தில் வர்ணிக்கப்படும் விஷயங்கள் யாவையும் நிர்மலமான ஞான திருஷ்டியால் வால்மீகி முனிவரால் பார்க்கப்பட்டு நேரில் அனுபவித்துக் காவ்யம் எழுதப்பட்டது. இந்த ஆதி காவ்யத்திலே உண்மை வரலாறு மட்டுமே உள்ளது. இதில் காணப்படாத வரலாறு எதுவும் உண்மைக்கு மாறுபட்டது. அவ்வித வரலாறு பிற்காலத்துக் கவியின் கற்பனை என்பது நன்கு புலனாகும்.

வால்மீகி இராமாயணம்—பாலகாண்டம்—ஸர்க்கம் 3

நான்கு புருஷார்த்தங்களையும் தெளிவாய் விளக்கும் ராம சரிதத்தை வால்மீகி நாரதரிடமிருந்து கேட்டார். ஆயினும் அந்த தர்மசிந்தனை உடையவர் அதை இன்னும் நன்றாகத் தெரிந்துகொள்ள முயன்றார். விதிப்படி ஆசமனம் செய்து கிழக்கு நுனியாகப் போடப்பட்ட தர்ப்பங்களில் உட்கார்ந்து, தம் குருவை மனத்தால் நமஸ்கரித்துக் கைகூப்பி பிரஹ்மாவின் அனுக்கிரஹத்தால் கிடைத்த யோக பலத்தால் பின்வருமாறு ஆலோசித்தார்.

இராமன், லக்ஷ்மணன், ஸீதை, தசரதர், ராஜபத்னிகள், கோஸல ஜனங்கள் முதலியவர்களுக்கு நேர்ந்தது, அவர்கள் பேச்சு ஸம்பாஷணை, நடை, உடை, பாவனை, வேடிக்கை பார்த்தது, கலஹம், கோபம், துக்கம் முதலானவை, பித்ரு வாக்ய பரிபாலனத்திற்காக இராமலக்ஷ்மணர்களும் ஸீதையும் வனத்தில் வஸித்தபொழுது *அவர்களுக்கு நேர்ந்தது, அதற்கு மேல் நடக்கப்போவது, யாவற்றையும் உள்ளங்கை நெல்லிக்கனியைப்போல் ஞானக்கண்ணுல் ஸ்பஷ்டமாகப் பார்த்தார்.* இராமனுடைய கல்யாணகுணங்களைப் பார்த்து அனுபவிக்கும்பொழுது அவருக்குப் பரமானந்தம் உண்டாயிற்று. தேஜஸ் அதிகரித்தது. லோக ரக்ஷணத்திற்காக ரகுகுலத்தில் அவதரித்து ஸகல ப்ராணிகளின் மனத்தைக் கவர்ந்த இராமனுடைய சரித்தை நாரதர் தனக்கு உபதேசித்தபடி இராமாயணம் என்ற மஹாகாவ்யமாகச் செய்ய ஆரம்பித்தார்.

இவ்விதம் வால்மீகி முனிவர் ஞானதிருஷ்டியால் நேரில் பார்த்து அனுபவித்து எழுதிய ஆதி காவ்யத்தில், இலங்கையிலிருந்து திரும்பும்பொழுது இராமர் ஸீதையுடன் இராமேச்வரத்தில் இறங்கியதாகவோ, லிங்க ப்ரதிஷ்டை செய்ததாகவோ எங்காவது வரலாறு இருக்கிறதா என்று பார்த்தால், அவ்வித நிகழ்ச்சி எதுவும் நடைபெற்றதாக எழுதப்படவில்லை.

இராவண வதத்திற்குப் பின் விபீஷணன் இராமரைச் சில காலம் இலங்கையில் தங்கிப்போக வேண்டுகிருன். பதினன்கு ஆண்டுகள் பூர்த்தி அடைவதால் பரதாழ்வானுக்குக் கொடுத்த வாக்குறுதிப்படி உடனே திரும்பவேண்டும் என்று அவசரமாக அயோத்திக்கு விரைகிருர்.

இராமாயண காவ்யத்தில் சரணுகதி செய்தவருக்கும் பாகவத உத்தமர்களுக்கும் இராகவன் ஒரு ஊறும் ஏற்படாதபடி காக்கிருர். சுக்கிரீவன் இராவணனைக் கண்டவுடன் அவனுடன் மோதி வெற்றியுடன் திரும்பியபொழுது, அவனுக்கு ஒரு சிறு காயம்கூட ஏற்படக்கூடாதே எனப் பதறியவாறு இருந்துள்ளார்; ஸீதையை மீட்பதைக்கூடத் தூசியாகக் கருதினர். அவ்வாறே விபீஷணன் சரணுகதியின்போது —

தன்னை அடைக்கலம் அடைந்தவனைக் காப்பதில், அவனது சூழ்ச்சியால் தான் இறக்க நேரிட்டாலும் 'அந்த இறந்தநாள் அன்றோ என்றும் இருந்த நாள்' என விவரிக்கிறார். பரதன் சகோதரனாக மட்டும் இல்லை. பாகவத உத்தமனாக வாழ்கிறான். பதினான்கு ஆண்டுகள் பூர்த்தி அடைவதில் இராமர் தாமதம் செய்தால் உயிர் பிரிவான். பரதனுக்கு ஓர் ஊறு ஏற்படுவதை பகவான் சகிக்கமாட்டான். ஆகவே விரைவாகப் புஷ்பக விமானத்தில் அயோத்திக்கு விரைகிறார்.

இந்தச் சூழ்நிலையில் இராமர் சேதுவில் இறங்கவோ, தங்கவோ பூஜை செய்யவோ அவகாசம் இல்லை. புஷ்பக விமானத்தில் அயோத்தி திரும்பிய இராமர், பரத்வாஜர் ஆச்ர மத்தில்தான் வந்து இறங்குகிறார். ஊடே சேதுவில் இறங்கிய தாக ஆதிகாவ்யத்தில் வரலாறு கிடையாது. மற்ற இராமா யணங்கள் எதிலும் கிடையாது.

**வால்மீகி இராமாயணம் — யுத்தகாண்டம் — ஸர்க்கம் 126**

வானரர்களும் ராக்ஷஸர்களும் விபீஷணனும் கைகூப்பிநின்று, புஷ்பக விமானத்தில் இராமருடன் சேர்ந்துவர விரும்ப, அவர்களையும் இராமர் ஏற்றுக்கொண்டார். இராமரால் ஆஜ்ஞா பிக்கப்பட்டு அந்த விமானம் *சண்டமாருதத்தால் அடிக்கப்பட்ட மஹாமேகத்தைப்போல் அதிவேகமாய்ப் போயிற்று.* அப்போது ரகுநாதர் நான்கு புறங்களையும் கவனித்துப் பார்த்து, தன் மடியிலிருந்த சீதைக்கு அந்தப் பிரதேசங்களையும் ஸ்தலங் களையும் காட்டிக்கொண்டுபோனார். வரிசையாக — இலங்கை, யுத்தகளம், ஸமுத்திரத்தைத் தாண்டியபின்பு இராமர் இரவு தங்கிய இடம், கட்டுவித்த அணையின் முடிவு, மைநாகபர்வதம், அணைநடுவே தங்கிய இடம், அணையின் வடக்குக்கோடி, விபீஷணன் சரண் அடைந்த இடம், கிஷ்கிந்தை, ரிச்யமூக பர்வதம், பம்பாநதி, சபரி ஆச்ரமம், பஞ்சவடி, கோதாவரிநதி, அகஸ்தியர் ஆச்ரமம், அனுஸூயா அனுக்கிரஹித்த இடம், சித்ரகூடம் இவைகளை விமானத்தில் இருந்தபடியே வர்ணித்து வந்து, சித்ரகூடம் அடைந்தபின்பு பரத்வாஜர் ஆச்ரமத்தில் வந்து இறங்கினார்.

இவ்விதம் இராமர் சீதைக்கு வர்ணித்துவரும்பொழுது சேதுவை வருணிக்குமிடத்தில் "அத்ர பூர்வம் மஹாதே₃வ: ப்ரஸாத₃ம் அகரோத் ப்ரபு₄:" என்று வருணிப்பதாக வால்மீகியின் ஆதிகாவ்யத்தில் உள்ளது. இதற்குப் பொருள்—"இந்த இடத்தில்தான் மஹாதேவர் எனக்கு *முன்பு* அனுக்ரஹம் செய்தார்" என்பது. இதில் மஹாதேவன் என்ற சொல் பரமசிவனைக் குறிப்பதாக ஒரு சாராரும், வருணனைக் குறிப்பதாக மற்றொரு சாராரும் பொருள் கொள்ளுகிறார்கள். பரமசிவனை அந்தச் சொல் குறிப்பதாகக் கொண்டாலும் சேதுவைக் கடக்கும் முன்பு, அதாவது சீதையை மீட்பதற்கு முன்புதான் பரமசிவன் அனுக்கிரஹம் பெற்றதாக ஆகிறது. அப்பொழுது சீதை இல்லாமலேதான் வழிபடமுடியும். இராவணனை சம்ஹாரம் செய்வதற்கு முன்பு தோஷம் ஏற்படக்கூடியதில்லை. அதற்காக முன்கூட்டி வழிபட்டதாகச் சொல்லவும் இயலாது. ஆகவே பிரம்மஹத்தி தோஷம் நீங்க, இராமரும், சீதாதேவியும் லிங்கப் பிரதிஷ்டை செய்ததாகக் கற்பனைசெய்ய எவ்வித மார்க்கமும் இல்லை.

இராமர் சீதையிடம் விவரிக்கும் வர்ணனை பூராவும் முன் நடந்தவைகளை விவரிக்கின்றன. இலங்கை தொடங்கி சேது பந்தபர்யந்தம் சொல்லிவிட்டு, இந்த இடத்தில் தர்ப்ப சயன ஸ்தானத்தைக் குறிப்பிடுகிறார். "மஹாதேவ சப்தார்த்த விளக்கம்" என்ற கட்டுரையில் ஸ்ரீரங்கம் ஸ்ரீ. சதாபிஷேகம் கோவிந்த நரஸிம்ஹாசார்ய ஸ்வாமிகள் ஸ்ரீகோவிந்தராஜர் வியாக்கியானத்தை ஒட்டி மஹாதேவன் என்ற சப்தம் வருணனையே குறிக்கும் என நிலைநாட்டுகிறார். "அத்ர பூர்வம் மஹாதே₃வ: ப்ரஸாத₃ம் அகரோத் ப்ரபு₄:" [இங்குதான் முன்பு ப்ரபு₄வான மஹாதேவன் அநுக்ரஹம் செய்தார்.] இங்கு மஹாதேவன் என்று ஸமுத்திரராஜன் சொல்லப்படுகிறான். ஸமுத்திரத்தில் அணைகட்ட ஸமுத்திரராஜனை வேண்டி விபீஷணனின் வார்த்தைப்படி பெருமாள் மூன்றுநாட்கள் தரையில் தர்ப்பையைப் பரப்பிக்கொண்டு படுத்திருந்தார். இது ஸமுத்திரராஜனைக் குறித்துச் செய்த சரணாகதியாகும். இராகவன் சரணாகதி செய்தும் ஸமுத்திரராஜனான வருணன் வராததால், பெருமாள் கோபமுற்று ப்ரஹ்மாஸ்திரத்தைத் தொடுக்க, ஸமுத்திரராஜன்

பத்தினிகளுடன் சரணடைகிருன். தன் மீது அணைகட்ட ஒப்புக்கொள்கிருன். பெருமாள் யாரிடமும் குற்றம் காணுத தன்மையராகையாலே, ஸீதாபிராட்டிக்குச் சொல்லும்பொழுது ஸமுத்திரராஜனை 'ப்ரபு,' என்றும், 'வெறும் தேவனில்லை, மஹா தேவன்' என்றும், 'எனக்கு அணைகட்ட வழிகொடுத்துப் பெரிய அநுக்ரஹம் செய்தார்' என்றும் கொண்டாடிச் சொல்கிருர். இவ்வாறு மஹாதேவ சப்தத்திற்கு சதாபிஷேகம் ஸ்வாமி கருத்தை விவரிக்கிருர்.

சேது அணைகட்டும்பொழுது பரமசிவனை வழிபட்டு ஸ்ரீராமர் பெறவேண்டியது எதுவுமில்லை. சேது நிர்மாணத்தைக் குறித்துச் சிவனை வழிபடத் தேவையில்லை. வழிபட்டிருக்க முடியாது. ஏனெனில் சேதுநிர்மாணம் என்பது ஸமுத்திரத்தில் ஆகும். ஸமுத்திரத்திற்கும் சிவனுக்கும் சம்பந்தமில்லை. ஆகவே ஸமுத்திரத்தைக் கடக்க அணைகட்டும்பொழுது சிவா ராதனமும், சிவாநுக்ரஹமும் ஏற்பட வகையில்லை. ஸமுத்திரத் திற்குள்ள கடவுளான வருணனையே வழிபடவேண்டும். அவரையே வழிபட்டு, உதவிபெற்றுத் திருவணை கட்டினுர். ஆகவே வால்மீகி இராமாயணத்தில் இலிங்கப் பிரதிஷ்டை வரலாறு இல்லை என்பது நன்கு புலனுகும்.

வால்மீகி ராமாயணத்தை ஒட்டியே கம்பராமாயணம் எழுதப்பட்டிருக்கிறது. கம்பராமாயணத்திலும் இலங்கையி லிருந்து திரும்பும் வழியில் சேதுவில் இறங்கியதாகவோ, லிங்கப் பிரதிஷ்டை செய்ததாகவோ வரலாறு கிடையாது.

வால்மீகி காவ்யத்தில் வருணிப்பதுபோலவே கம்பராமாய ணத்திலும் இராகவன் சீதாபிராட்டியிடம் வரும் வழியில் உள்ள பல இடங்களைப் புஷ்பகவிமானத்திலிருந்தபடியே விவரித்துக் காட்டுகிருர். சேதுவை வருணிக்கும்பொழுது "பாதகம் அனைத்தும் வந்து நோக்கிய பொழுதே நூறுஞ் சேதுவை நீயும் நோக்காய்" என்று சீதாதேவியை சேதுவை தரிசிக்கும்படி சொல்கிருர். இந்த சேதுவைப்போல் தானும் புனிதம் அடையவேண்டும் என்று கங்கை தவம் கிடக்கிருள் எனவும் வருணிக்கிருர். ஆக, கம்பராமாயணத்திலும் லிங்க ப்ரதிஷ்டை நிகழ்ச்சி விவரிக்கப்படவில்லை.

பிற்காலத்தில் எழுந்த துளசி இராமாயணம், ஆனந்த ராமாயணம், அத்யாத்ம ராமாயணம் எதிலும் தோஷநிவர்த்தி வரலாறு இல்லை என்பதைக் கற்றறிந்த பெரியோர் விவரிக்கிறார்கள்.

"ஆனந்தராமாயணம் அத்யாத்மராமாயணம் இரண்டிலும்—சேதுவைக்கட்ட ஆரம்பிக்கும்பொழுது உலக நன்மைக்காக சிவபூஜை செய்ததாக விவரிக்கப்படுகிறது" என சிவாகம சிரோமணி ஸ்ரீ அய்யாமணி சிவம்—அருள்மிகு ஸ்ரீ இராமநாதஸ்வாமி கோயில் கும்பாபிஷேக மலரில் பிரசுரித்துள்ள தனது கட்டுரையில் விவரிக்கிறார்.

அதே மலரில் ஆராய்ச்சியாளர் பேராசிரியர் டாக்டர் ராகவன் தனது "Rameswaram in Puranas and Ramayanas" என்னும் கட்டுரையில் வால்மீகிராமாயணத்தில் இராமேச்வரம் பற்றி எதுவும் இல்லை என்பதை ஒப்புக்கொள்கிறார்.

**"Of the Sanskrit Ramayanas other than Valmiki, the Adyatma Ramayana speaks of Rameswara and Ramanatha in canto IV of the Yuddhakanda. Rama is said here to establish Siva and worship Him. Rama pour on Siva the water of Ganga from Varanasi and completed the pilgrimage thus all of which we continue to do. In book I chapter 10 of the Ananda Ramayanam the consecration by Rama of Shiva Linga named after him at this place is mentioned".** ஆகவே பிரம்மஹத்தி தோஷநிவர்த்திக்காக, திரும்பும் வழியில் சேதுவில் இறங்கியதாகவோ சீதையுடன் பூஜித்ததாகவோ விவரிக்க எவ்வித ஆதாரமும் இல்லை என்பது தெளிவாகிறது.

இராமலிங்க ப்ரதிஷ்டையைப்பற்றி இதிஹாஸங்களான இராமாயணம், மஹாபாரதம் இரண்டிலும் இல்லை. பின் ஏற்பட்ட புராணங்களில் கூர்மபுராணம், பாத்மபுராணம், ஸ்காந்த புராணம் இவைகளில் விவரிக்கப்படுகிறது. மேற்படி புராணங்கள் யாவும் இராமாயணங்கள் அல்ல. இராமனின் வரலாறு அன்று. இதிஹாஸங்கள் இரண்டும் நடந்தவைகளை

அப்படியே விவரிப்பவை; முந்தியவை. புராணங்கள் அப்படி அல்ல. ஆகவே புராணங்களைக் காட்டிலும் இதிஹாஸங்கள் மேம்பட்டவை. இதிஹாஸத்துடன் புராணவசநங்களுக்கு விரோதம் ஏற்பட்டால் அவை ப்ரமாணங்கள் ஆகமாட்டா. மேலும் ஸ்காந்த புராணம், கூர்மபுராணம் இவை தாமஸ புராணங்களாகும். அவ்விதத் தாமஸ புராணங்களைப் பாராயணம் செய்தல் கூடாது எனப் பரமசிவனே பார்வதியிடம் பாத்ம புராணத்தில் விவரிக்கிறார். ஆகவே இராமாயணங்களில் இல் லாத வரலாறான இராமலிங்கப் பிரதிஷ்டை புராணங்களில் விவரிக்கப்படுவதை உண்மை என ஏற்றுக்கொள்ளக்கூடாது. ஆகவே இராகவன் தன் பிரம்மஹத்திதோஷம் போவதற்காக லிங்கப் பிரதிஷ்டைசெய்து ஆராதித்து வரம்பெற்ற சிவன்தான் ராமேச்வரலிங்கம், அந்த இடம்தான் ராமேச்வரம் என்னும் கதை ஆதாரமற்றது.

மேற்சொன்ன தாமஸ புராணங்களைத் தழுவி ஏற்பட்டது பிற்காலத்துக் கவி பாடிய "சேதுபுராணம்" என்ற நூலாகும். ஆகவே இதுவும் உண்மைக்குப் புறம்பானதாகும்.

சைவ சமயக்குரவர்கள் தங்கள் பாடல்களில் இராமேச்வரத்தை விவரிக்கிறார்கள்.

திருஞானசம்பந்தர்—

தேவியை வவ்விய தென்னிலங்கைத் தசமாமுகன்
பூவியலும் முடி பொன்றுவித்த பழிபோய் அற
ஏவியலும் சிலையண்ணல் செய்த இராமேச்சுரம்
மேவிய சிந்தையினார்கள் தம்மேல் வினை வீடுமே.

திருநாவுக்கரசர்—

கோடிமா தவங்கள் செய்து குன்றினார் தம்மை எல்லாம்
வீடவே சக்கரத்தால் எறிந்து பின் அன்புகொண்டு
தேடிமால் செய்த கோயில் திரு இராமேச்சுரத்தை
நாடிவாழ் நெஞ்சமே நீ நன்னெறி ஆகும் அன்றே.

இந்தப் பாடல்கள் யாவும் தங்கள் இஷ்டதெய்வத்தை ஏத்துவதற்கும், பிறதெய்வத்தைத் தாழ்த்துவதற்கும் புனையப்

பட்டவை. சமயக்குரவர் மூவரும் தங்கள் பாடல்களில் இராவணனைக் கொடியவன் என்றும், அரக்கன் என்றும், பாவி என்றும் விவரிக்கிறார்கள். குறிப்பாகத் திருஞானசம்பந்தர் தன்னுடைய பாடல்களில் அநேகமாக ஒவ்வொரு பதிகத்திலும் எட்டாவது பாடலில் இராவணனுடைய அடாதசெயலைக் கண்டித்து விவரிக்கிறார். கொடியவனான இராவணனை மற்ற தெய்வங்கள் யாவரும் சம்ஹாரம் செய்யமுடியாதுபோய், அனைவரும் சென்று திருமாலிடம் போய்ப் பிரார்த்தித்தபோது இராவணனை சம்ஹாரம் செய்யவே ஏற்பட்டது இராமாவதாரம். அந்தக் கொடியவனை சம்ஹாரம் செய்தது எவ்விதம் பாவம் ஆகும்? இராமர் இராவணனைக் கொன்றது பாவம் என்றால், இவர்கள் இஷ்டதெய்வங்கள் சூரபத்மன்போன்ற அரக்கர்களை சம்ஹரித்தது எப்படிப் பாவம் அல்லாமல் இருக்கமுடியும்? அந்த தெய்வங்கள் பாவத்தைத் தொலைக்கப் பூஜை செய்ததாக வரலாறு இல்லை. இராமர் மனிதராகப் பிறந்தார், அவ்விதம் வாழ்ந்து காட்டினார் என வாதிட்டாலும் இராமர் ஒரு க்ஷத்திரியன் என்ற முறையில் தர்மத்தை அனுஷ்டிக்க, அதர்மம் செய்தவர்களை தண்டிப்பது அவர் கடமையாகும். கடமையைச் செய்யும் மன்னருக்கு எப்படிப் பாவம் ஏற்படும்? 'இறைவன் பொருள் சேர் புகழ்புரிந்தார் மாட்டு இருள்சேர் இருவினையும் சேரா' [திருக்குறள் 5] என மனிதருக்கே பாவம் ஏற்படாத நிலையில் இறைவனுக்கு எப்படிப் பாவம் ஏற்படும்?

வாதத்திற்காக இராகவனுக்கு ப்ரம்மஹத்தி தோஷம் ஏற்பட்டதாகவும், சிவபூஜைசெய்ததாகவும் வைத்துக்கொண்டாலும், இலங்கையிலேயே பரமசிவன் நேரில்வந்து இராமரைத் துதிசெய்தபொழுது நேரில் பூஜைசெய்யாது கடல் கடந்துவந்து, சேதுவில் லிங்கப்பிரதிஷ்டைசெய்து ஏன்பூஜைசெய்யவேண்டும்?

**வால்மீகி ராமாயணம் — யுத்தகாண்டம் — ஸர்க்கம் 120**

"பிறகு குபேரன், யமன், மஹேந்திரன், வருணன், மஹாதேவன், லோககர்த்தாவான ப்ரஹ்மா முதலானவர்கள் சூரிய ப்ரகாசமுள்ள விமானங்களில் இலங்கைக்கு வந்து இராமனிடம் சென்றார்கள்".

வால்மீகி ராமாயணம்—யுத்தகாண்டம்—ஸர்க்கம் 122

பிரம்மா இராகவனைத் துதிசெய்து 'தேவர்களின் கார்யம் முடிந்தது' என்று இராமனைத் தன் அடிச்சோதிக்கு எழுந்தருளும்படி பிரார்த்தித்தார். அதன்பின் சிவபெருமான் இராம லக்ஷ்மணர்களுக்கு தசரதரைக் காட்டுவதற்குமுன் கீழ்க்கண்ட வாறு அருளினன் :—

'லோகத்தில் தலைகெட்டுத் தடுமாறும் தர்மத்தை நிலை நிறுத்தவேண்டும் என்ற ராமனுடைய கருத்தை நான் அறிவேன்' என்று, ரகுவீரனை நோக்கி 'புண்டரீகாக்ஷ! சங்கசக்ர கதாயுதங்களால் விளங்குபவரே! ஸ்ரீவத்ஸமென்ற மறுவால் பிரகாசிக்கும் திருமார்பா! ஸங்கல்பத்தாலே ஸகல சத்ருக்களையும் நாசம் செய்யும் ப்ரபோ! க்ஷத்ரிய தர்மத்தைக் குறைவற அனுஷ்டிக்கும் இக்ஷ்வாகு குலதிலகனை நீ இப்படிச் செய்வது மிகவும் யுக்தம். ஸகலலோகங்களிலும் அதர்மம் என்ற இருள் வரவர விருத்தி அடைந்தது. ராவணனுல் உண்டான பயம் எல்லோரையும் ஏக்கமடையச் செய்தது. இன்று அந்த தசகண்டனை யுத்தத்தில் கொன்று ஸகலப்ராணிகளுக்கும் அபயம்கொடுத்து அதர்மத்தை வேரறுத்து தர்மத்தை நிலைநாட்டினுய். பரதன் மனம் நொந்திருக்கிறுன். உன்னைப் புத்திரனைகப் பெறும் பாக்யமடைந்த கௌஸல்யை வாடியிருக்கிறுள். விசேஷ கீர்த்தியுள்ள கைகேயியும் ஸுமித்திரையும் உன்னை வழி பார்த்துக்கொண்டிருக்கிறுர்கள். அவர்களைக் கண்டு அவர்களுடைய துக்கத்தைப்போக்கு. அயோத்யாதிபதியாய் அபிஷேகம் பெற்று, பந்துக்களையும், மித்ரர்களையும், பிரஜைகளையும் வெகு காலம் ஸந்தோஷப்படுத்தி, தர்மமாய் அரசாண்டு, இக்ஷ்வாகு குலத்தை விருத்தி செய்யும் புத்திரர்களைப்பெற்று, அநேக அச்வமேதங்களைச்செய்து, பிராஹ்மணோத்தமர்களுக்கு அளவற்ற தானங்களைக்கொடுத்து, நித்தியமான கீர்த்தி அடைந்து, பின் அடிச்சோதிக்கு எழுந்தருள்வாய். விசேஷ காந்தியுடன் ஜ்வலிக்கும் உன் பிதாவை நீயும் லக்ஷ்மணனும் நமஸ்காரம் செய்யுங்கள்'' என்றுர்.

கம்பராமாயணம்—யுத்தகாண்டம்—மீட்சிப்படலம்

கம்பரும் பரமசிவன் இராகவனைப் போற்றியதை விவரிக்கிறார்—

''என்னு மாத்திரத்து ஏறமர் கடவுளும் இசைத்தான்
உன்னை நீஒன்றும் உணர்ந்திலே போலுமால் உரவோய்
முன்னை ஆதியாம் மூர்த்திநீ மூவகை உலகின்
அன்னை சீதையாம் மாதுநின் மார்பின்வந் தமைந்தாள்''

இராகவனைப் பரமசிவன் நேரில் வந்து துதிசெய்திருப்பதினால், தோஷம் இருந்து சிவன்மூலம் நிவர்த்தி அடைய வேண்டியிருந்தால் அப்பொழுதே நிவர்த்தியடையாதா? சிவபெருமான் வாக்கியத்தின்படியே சிவன் உட்பட உள்ள தேவர்கள் அனைவருக்கும் முதல்வனாய், அவர்களுக்கு இருந்த பயத்தைப் போக்கி அதர்மத்தை வேரறுத்து தர்மத்தை நிலை நாட்டியுள்ளார் இராமபிரான். ஆகவே, பிரம்மஹத்தி தோஷம், லிங்கப்பிரதிஷ்டை இவை யாவும் பிற்காலத்தில் ஏற்பட்ட கற்பனை என்பது எளிதில் புரியும்.

சைவ சமயத்தைச் சேர்ந்த ஆராய்ச்சியாளர்களிடையிலேயே இருவித அபிப்பிராயம் நிலவுகிறது. இராமேஸ்வரம் என்பது இராமர் இராமலிங்கப் பிரதிஷ்டை செய்தபின்பு ஏற்பட்டது என்று ஒருசாராரும், லிங்கப்ரதிஷ்டைக்கும் முன்பே கந்தமாதனபர்வதம் என்ற பெயரில் சிவஸ்தலமாயிருந்தது என்று மற்றொரு சாராரும் தெரிவிக்கிறார்கள்.

காஞ்சீபுரம் சீலத்திரு ஞானப்பிரகாச தேசிக பரமாசார்ய ஸ்வாமிகள் ஸ்ரீ இராமநாதஸ்வாமி திருக்கோயில் கும்பாபிஷேக மலரில் உள்ள "திருவிராமேச்சுவரம்" என்ற கட்டுரையில் 'மீண்டு மால் செய்த கோயில்' என்ற பாடலை ஆதாரமாகக் கொண்டு இராமேஸ்வரம் என்ற க்ஷேத்திரம் இராமர் செய்த லிங்க ப்ரதிஷ்டைக்குப்பின் ஏற்பட்டதாக விவரிக்கிறார். அதே மலரில் சோம. லெ. செட்டியார் தனது கட்டுரையில் இராமேஸ்வரம் லிங்கப்ரதிஷ்டைக்கும் முன்பே கந்தமாதனபர்வதம் என்ற பழைய பெயரில் ஒரு சிவஸ்தலமாக இருந்து வந்ததாகவும் குறிப்பிடுகிறார்.

ராமேश्वर: என்ற வடமொழிச் சொல்லுக்கு "ராமஸ்ய ஈश्वர: ராமேश्वர:" அதாவது–இராமருக்குத் தலைவன் என்றும், "ராம: ஈश्वர: யஸ்ய ஸ:" அல்லது "ராமश्சாஸௌ ஈश्वரश्ச" அதாவது—இராமனைத் தலைவராகக்கொண்டவர், ராமனுகிய தலைவன் என்றும் பொருள் கொள்ளலாம் எனப்பெரியோர்கள் விவரிக்கிறார்கள். லிங்கப்ரதிஷ்டையை வலியுறுத்துபவர்கள் 'இராமருக்கு ஈश्वரன் பரமேश्वரன்' என்றும், லிங்கப்ர திஷ்டையை மறுப்பவர்கள் 'பரமசிவனுக்குத் தலைவர் இராமர்' என்றும் சொல்லியும், அத்வைதிகள் 'இராமராகிற ஈश्वரன்' என்று இருவருக்கும் ஐக்யம் சொல்லியும், அதனால் அந்த ஊருக் குப் பெயர்வந்தது எனக் கூறுவர். இந்தக் கூற்றுகளை நூல்கள் வாயிலாக ஆராய்ந்தால் இராமரைத் தலைவராகக் கொண்டவர் பரமசிவன் என்பதே பொருத்தமாகத் தோன்றும். ஆகவே, இராமேश्वரம் என்பது ஊரின் பெயராகும்போது, இராமரைத் தலைவனாகக்கொண்ட சிவன் வாழும் ஊர் என்றதாகும். அந்தச் சொல் தெய்வத்தைக் குறிக்கும்போது, இராமரை தெய்வமாகக் கொண்ட பரமशிவனையே குறிக்கும்.

இராமருக்குப் பரமशிவன் தலைவன் என எந்த இதிஹாஸத் திலும் விவரிக்கப்படவில்லை. இராமருக்குத் தலைவனான தெய்வம் எதுவும் இல்லை என்பது இதிஹாஸத்தின்மூலமே வெளியாகும்.

இராமாயண ரஹஸ்யார்த்தத்தை விவரிக்கும்பொழுது பெரி யோர்கள் விவரிப்பதாவது:—வால்மீகியின் கேள்விகளால் பரம புருஷன் யாரென்று கேட்கப்பட்டது; நாரதரின் பதிலால் ஸ்ரீராமனே அந்தப் பரவஸ்து என உபதேசிக்கப்பட்டது. ப்ரஹ்மாவும் அதையே ஆமோதித்தார். இராவண வதத்திற்குப் பிறகு ப்ரஹ்மா, ருத்ரன் முதலான தேவர்கள் தங்களுடைய ஸ்தோத்திரத்தால் அதை வற்புறுத்தினார்கள். கிரந்தத்தின் நடுவிலும் இந்த உண்மை அடிக்கடி ஞாபகப்படுத்தப்படுகிறது. தான் கொல்லவேண்டும் என்று இராமனால் குறிக்கப்பட்டவனை ப்ரஹ்மா, ருத்ரன், மஹேந்திரன் இவர்கள் யாராலும் காப்பாற்ற முடியாது என மாருதி வர்ணிக்கிறார். இராவணனே 'இந்த இராகவன் அழிவற்ற நாராயணன்' என ஒப்புக்கொள்ளுகிறான்.

வால்மீகியின் காப்பியத்திலே பாலகாண்டத்தில் மஹா விஷ்ணுவே ஜகத்காரணரென்றும், அயோத்யாகாண்டத்தில் ரக்ஷகர் என்றும், ஆரண்யகாண்டத்தில் முக்தியை அளிக்க வல்லவர் என்றும், கிஷ்கிந்தாகாண்டத்தில் கல்யாணகுண பரிபூர்ணரென்றும், ஸுந்தரகாண்டத்தில் யாவற்றையும் ஸம்ஹரிக்கிறவரென்றும், யுத்தகாண்டத்தில் வேதவேதாந்தங்களால் அறியப்படும் பொருள் என்றும் காட்டப்படுகிறது.

வால்மீகி ராமாயணம் பாலகாண்டம் பதினைந்தாவது ஸர்க்கத்தில் விஷ்ணுவை அவதாரம் எடுக்க சிவன் முதலான தேவர்கள் பிரார்த்தித்ததாக உள்ளது. அந்த கட்டத்தில் வால்மீகி "எங்களுடைய கவலையை நீக்கிய பிறகு, நாங்கள் அடைய முடியாததும், அழிவில்லாததும், காமக்குரோதங்கள் அற்றதுமான தங்களுடைய ஸ்ரீவைகுண்டத்திற்கு மறுபடியும் எழுந்தருள வேண்டும்'என தேவர்கள் பிரார்த்தித்தார்கள்"—என விவரிக்கிறார்.

வால்மீகி ராமாயணம்—பாலகாண்டம்—ஸர்க்கம் 76

பயங்கரமான பராக்ரமத்தை உடைய சிவதநுஸ்ஸானது பகவானின் ஹுங்காரத்தாலே அப்பொழுது முறிந்தது. முக்கண்ணனான மஹாதேவன் மயக்கமுற்றான். விஷ்ணு பராக்ரமத்தாலே சிவன் வில் முறிந்தது கண்டு ரிஷிகணங்களோடு கூடிய தேவர்கள் விஷ்ணுவையே உயர்ந்தவராக அறிந்தனர்.

இராவண வதத்திற்குப்பின்பு பிரம்மாவும், சிவனும் மற்ற தேவர்களுடன் வந்து இராமரைத் துதி செய்துள்ளனர்.

வால்மீகி ராமாயணம்—யுத்தகாண்டம்—ஸர்க்கம் 120

பிரம்மாவின் துதியில் அவர் இராமரை விவரிப்பது—

நாரம் என்ற ப்ரக்ருதியிலும், ஜீவன்களிலும் இருப்பிடத்தை அடைந்து அந்தர்யாமியாய் விளங்குவதால் நாராயணன் என்று தங்களுக்குப் பெயர். லக்ஷ்மீஸமேதராய் விளங்குபவர்...ஸர்வ வ்யாபி...தாங்கள் அக்ஷர ஸ்வரூபி. ப்ரஹ்மம்...மூன்று லோகங்களுக்கும் ஸ்ருஷ்டி கர்த்தா. எனக்கும் மற்ற தேவர்களுக்கும் தாங்களே கர்த்தா. பிறருக்கு உட்படாதவர். முக்தர்களுக்கும் நித்யஸூரிகளுக்கும் தமக்கு ஸமமான ஆனந்தத்தை அனு

க்ரஹிப்பவர். அவர்களை ரக்ஷிப்பதற்காக அவர்களுக்கு முன்னும் ஸ்ருஷ்டிக்கு முன்னும் விளங்குகிறவர். தாங்களே யஜ்ஞும், வஷட்காரம், ஓங்காரம்...பிரமனின் தினத்தின் முடிவில் இந்த பூமி அழிந்தபிறகு மூன்று லோகங்களையும் அவைகளிலுள்ள ஸகல பூதங்களையும் தமக்குள் அடக்கிக்கொண்டு க்ஷீரஸாகரத்தில் சேஷசயனத்தில் யோகநித்திரை செய்கிறீர்கள்...மஹா லக்ஷ்மியே ஸீதையாய் அவதாரம் செய்திருக்கிருள். தாங்கள் மஹாவிஷ்ணு, அதர்மத்தை நாசம்செய்து தர்மத்தை நிலை நிறுத்துவதே ஸ்வபாவமாய் ஸ்வருபமாயுள்ள தாங்கள் எங்கள் பிரார்த்தனையை அங்கீகரித்து, ராவணன் முதலிய ராக்ஷஸர்களை நாசம் செய்தீர்கள். இனி, தங்கள் அடிச்சோதிக்கு எழுந்தருள வேண்டும்—என்கிருர் பிரம்மா.

**வால்மீகி ராமாயணம்—யுத்தகாண்டம்—ஸர்க்கம் 72**

போருக்கு வந்திருக்கும் இராகவன் நாராயணனே என இராவணனே விவரிக்கிருன்—"இதுவரையில் ஸகலராக்ஷஸர்க ளும் அவனுடைய பராக்ரமத்தால் மடிந்ததைப் பார்த்தால், அந்த இராகவன் நித்யனை ஸ்ரீமந்நாராயணனே என்று தோன்றுகிறது. அவனைக்கண்டு பயந்து லங்கையில் வெளிக்கதவுகளும் உட்கதவு களும் எப்பொழுதும் அடைக்கப் பட்டிருக்கின்றன." - என்று.

இராவணவதம் முடிந்தபின்பு மண்டோதரி புலம்புகிருள். கணவனைப் பிரிந்த சோகத்திலும் பதிவிரதாசிரோமணியான மண்டோதரி இராமனை விவரிக்கும் கட்டம் யாவரும் சிந்திக்கத் தக்கது.

**வால்மீகி ராமாயணம்—யுத்தகாண்டம்—ஸர்க்கம் 144**

"லோகங்களைக் காப்பாற்றுவதைப் பற்றி எப்பொழுதும் கவலைகொண்டவரும், பரமாத்மாவும், நித்யரும், ஆதி அந்தம் இல்லாதவரும், அழிவற்றவரும், விகாரமற்றவரும், இந்திராதி தேவதைகளுக்கு மேலான ப்ரஹ்மாவிற்கும் மேலானவரும், ப்ரகிருதியால் செய்யப்பட்ட இந்தப் பிரபஞ்சத்திற்கு வெளியில், அப்ராகிருதமான சுத்தஸத்வத்தால் நிர்மிக்கப்பட்ட ஸ்ரீவைகுண் டத்தில் வீற்றிருக்கும் சங்கசக்ரகதாதரரும், ஸ்ரீவத்ஸம் என்ற மறுவால் அலங்கரிக்கப்பட்ட மார்பை உடையவரும், ஸகல

ஜகத்தையும் போஷிக்கிறவரும், மஹாலக்ஷ்மியைவிட்டு எப்பொழுதும் பிரியாதவரும், ஒருவராலும் ஜயிக்கமுடியாதவருமான ஸ்ரீமந்நாராயணனே மனுஷ்ய ரூபத்துடன் ராமனென்று அவதாரம் செய்திருக்கிறார்'' என்கிறாள் மண்டோதரி.

கம்ப நாட்டாழ்வார் தமது இராமாயண காவ்யத்தில் ஆரம்பத்திலேயே கடவுள் வாழ்த்துப் பாடலில்—இராமனே முழுமுதற்கடவுள் என்றும், அவரே படைத்தல், காத்தல், அழித்தல் என்ற முத்தொழிலையும் புரிகிறார் என்றும், அவரே சத்துவகுணமுடையவர், அதனாலேயே அவர் குணக் கடலில் ஆடுகிறேன் என்றும் விவரிக்கிறார்.

''உலகம் யாவையும் தாமுள வாக்கலும்
நிலைபெறுத்தலும் நீக்கலும் நீங்கலா
அலகிலா விளையாட்டுடையாரவர்
தலைவர் அன்னவர்க்கே சரண் நாங்களே'' [முதற்பாட்டு]

''சிற்குணத்தர் தெரிவரு நன்னிலை
எற்குணர்த்தரி தெண்ணிய மூன்றனுள்
முற்குணத்தவரே முதலோர் அவர்
நற்குணக் கடலாடுதல் நன்றரோ'' [இரண்டாம் பாட்டு]

தனது மூன்றாவது பாடலில்—வேத₃த்தைத் தொடங்கும் பொழுதும் முடிக்கும் பொழுதும் ''ஹரி: ஓம்'' என்று கூறி, கற்றவர்களும் பற்றற்றவர்களுமான பெரியோர்கள் உண்மையான நெறியும் பயனுமாக விளங்கும் இறைவனுடைய திருவடிகளைத் தஞ்சமாகப் பற்றுவார். பிறிதொன்றைப் பற்ற மாட்டார் என அறைகூவுகிறார்.

''ஆதியந்தம் அரிஎன யாவையும்
ஓதினார் அலகில்லன உள்ளன
வேதம் என்பன மெய்ந்நெறி நன்மையன்
பாதம் அல்லது பற்றிலர் பற்றிலார்'' [மூன்றாம்பாட்டு]

கம்பராமாயணம்—பாலகாண்டம்—திருவவதாரப்படலம்

படைத்தல், காத்தல், அழித்தல் என்று முத்தொழிலில் அழித்தலைத் தொழிலாகக்கொண்ட சிவபெருமானுக்கே இராவணனை அழிக்க இயலவில்லை. பிரம்மா சிவன் உட்பட எல்லா தேவர்களும் திருமாலிடம் தஞ்சம் அடைந்தனர். அவரும் 'அஞ்சேல்' என்று அபயம் கொடுத்தார்.

வெய்ய மாமுனி வெகுளியால் விண்ணகமுதலாம்
வையம் யாவையும் வறுமைநோய் நலிதர வானோர்
தையல்பாகனும் சதுமுகக் கடவுளுங்கூடி
செய்யதாமரைத் திருவுறு மார்பனைச் சேர்ந்தார்.

வெஞ்சொன் மாமுனி வெகுளியால் விளைந்தமை விளம்பிக்
கஞ்சநாண்மலர்க் கிழவனுங் கடவுளர் பிறரும்
தஞ்சமில்லை நின் சரணமே சரணெனச் சலியாது
அஞ்சல் அஞ்சலென்று உரைத்தனன் உலகெலாமளந்தோன்.

மண்டோதரி புலம்பும் படலத்திலும் கம்பர் வால்மீகியைப் போல் வர்ணிக்கிறார். கம்பராமாயணம் ஒவ்வொரு படலத்திலும் இராமரை முழு முதற்கடவுளாகக் கம்பர் சித்திரிக்கிறார்.

இராமநாமத்திலே சிவபெருமானுக்கு எப்படிப்பட்ட ப்ரதிபத்தி (மதிப்பு) இருக்கிறது என்பது ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாமத்தில் பார்வதி கேள்வியாக ஒரு ச்லோகமும் பரமசிவன் பதிலாக ஒரு ச்லோகமும் இருப்பது ஸஹஸ்ரநாம பாராயணம் செய்யும் யாவரும் அறிந்ததே.

ஈச்வர உவாச—

ஸ்ரீராம ராம ராமேதி ரமே ராமே மனோரமே |
ஸஹஸ்ரநாம தத்துல்யம் ராமநாம வரானனே ||

பரமசிவன் தன் பதிலில் ராமநாமத்தைச் சொன்னால் ஸஹஸ்ரநாமத்தைச் சொன்ன பலன் கிடைக்கும் என்று சொல்லுவதோடு, *தானும் அந்த ராமநாம ஸங்கீர்த்தனத்தில் ரமித்திருப்பதாகச் சொல்கிறார்.* சிவபெருமான் தன்பெயரைச் சொன்னால் ஸஹஸ்ரநாமம் சொன்னபலன் கிடைக்கும் என்று பார்வதியிடம் சொல்லவில்லை. தன்பெயரைப் பாராயணம் செய்யக் கூறவில்லை.

ஆதிசங்கரர் ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம பாஷ்யம் செய்ததோடு "ப₄ஜ கோ₃விந்த₃ம்" ஸ்தோத்திரம் செய்துள்ளார். எப்பொழுதும் கோவிந்தனையே துதிக்கவேண்டும் என்று வலியுறுத்துகிறார். ராமநாமத்தின் சிறப்பையும் விவரிக்கிறார்.

" யத்₃வர்ணயத் கர்ணமூலேந்தகாலே
சிவோ ராம ராமேதி ராமேதி காச்யாம் |
ததே₃கம் பரம் தாரகம் ப்₃ரஹ்மரூபம்
ப₄ஜேஹம் ப₄ஜேஹம் ப₄ஜேஹம் ப₄ஜேஹம் ||"

இதன் பொருளாவது—

''சிவன் காசிக்ஷேத்திரத்தில் ஜீவன்சரீரத்தை விடும்பொழுது வலதுகாதில் எந்த இராமனுடைய தாரகமந்திரத்தை ராமராம ராம என்று நன்கு உபதேசிக்கின்றுரோ, அப்படிப்பட்டதும், ஸர்வோத்தமமந்திரமும், ஜனன மரண துக்கத்திலிருந்து காப்பாற்றுவதும், வேதமயமுமான ஸ்ரீராமதாரகமந்திரத்தை நான் பஜிக்கிறேன், பஜிக்கிறேன், பஜிக்கிறேன், பஜிக்கிறேன்'' என்று ஒரு தடவைக்கு நான்கு தடவை பஜிப்பதாகக் கூறி உறுதியாக்குகிறுர். ஸ்ரீ ஆதிசங்கரர் அத்வைதமத ஸ்தாபகர். அவரே ராமநாமத்தின் மகிமையை இவ்விதம் அறுதியிட்டுக் கூறுகிருர்.

காசி க்ஷேத்திரத்தில் எப்பொழுதும் ராமதாரக மந்திர அநுஸந்தானத்துடன் பரமசிவன் வஸிக்கிருர். அங்கு மரணம் அடைந்தோர் எல்லோருக்கும் பரமசிவன் தானே ராமதாரக மந்திரத்தை உபதேசிக்கிருர். இதனுலேயே சைவ வைஷ்ணவர்களுக்குக் காசி ஒரு யாத்ரா ஸ்தலமாக விளங்குகிறது. அங்குள்ள கங்கையில் தானே விழுந்தவனுக்கும், தள்ளினவனுக்கும், தள்ளுண்டவனுக்கும் நற்கதி உண்டென்று சாஸ்திரம் கூறுகிறது.

ஆகவே, பரமசிவனுக்கு இராகவன் தலைவர் என்பதும், இராகவனுக்குத் தலைவன் யாரும் இல்லை என்பதும் தெளிவாகும்.

இராமனைத் தலைவராகக்கொண்ட ராமேச்வரன் ஸ்ரீராமநாத ஸ்வாமி என்பதற்கு மற்ருெரு சான்றும் உள்ளது. ராமேச்வரம் தற்பொழுது சுற்றிலும் கடலால் சூழப்பட்ட தீவாக உள்ளது. பாம்பன் ஆறு குறுக்கிடுகிறது. முன்பு பாம்பன் ஆறு இல்லாதபடி ஒரே நிலப்பரப்பாக இருந்துள்ளது. அப்பொழுது இராமேச்வரத்தில் எழுந்தருளியிருக்கிற பர்வதவர்த்தனி சமேத ராமநாதர் திருப்புல்லணை வந்து பெருமாளை தரிசனம்செய்து போயிருக்கிருர். பாம்பன் ஆறு ஏற்பட்ட பின்பும் படகில் ஸ்வாமியை எழுந்தருளச்செய்து மண்டபத்தில் தங்கி ஆற்றுக் கரை வழியே திருப்புல்லணை. சேதுக்கரை வந்துள்ளனர். இதைத் தற்பொழுதுள்ள கோயில் சிப்பந்திகளும் உறுதிப் படுத்துகிருர்கள்.

இதற்கு நூல்களில் உள்ள சான்றுகள் :—

இராமேஸ்வரம் கோயில் கும்பாபிஷேக மலர்—பட்டயம் 26 பக்கம் C—7

இராமநாதபுரம் சேதுபதி மன்னர் இராமலிங்கதுரை என்பவர் ராமேஸ்வர தீர்த்தம் ஆடிவிட்டு பச்சைப்புல்லை மிதியாமல் ஆற்றுவழியே நடந்துசென்று சாமி தரிசனம் செய்தார் எனப் பட்டயம் கூறுகிறது.

விஜயரகுநாத சேதுபதியும் தினசரி இராமேஸ்வரத்திலும் குதிரையில் போய் இராமநாத ஸ்வாமியை அர்த்த சாமபூஜையில் வழிபட்டு, தீவட்டி பிடித்து, பின் இராமநாதபுரம் சேர்ந்த தாக பட்டயம் கூறுகிறது,

*Rameswaram ( The Sacred Island ) by Major H. A. Newell Printed by Higginbotham Limited Madras & Bangalore.*

Page 2: Records treasured in the celebrated Ramanathaswamy temple describe how a violent gale caused a breach in the isthmus as long ago as 1480. Subsequent storms enlarged the opening and rendered it permanent............ In 1828 blasting operations were undertaken with a view to widening and deepening the channel.

*South India and her Mohamedan Invaders by Dr. S. Krishnasamy Iyengar - 1921 Edition Page 4- Footnote 2*

"The tradition is now current that there was no channel here between Mandapam and Pamban. The name Mandapam is said to have been given to the place as it contains a Mandapam to which the God of Rameswaram used to be carried on the occasion of annual festivals. Of course that could not be done across the sea."

RAMESWARAM By MAJOR H. A. NEWELL. Page 22

"The temple records state that prior to the breach in the causeway made by the gale in 1480 cutting

Rameswaram off from the mainland the swamy was on these great occasions borne in state across Rama's bridge to Thiruppullani temple some six miles from the present capital of the zamindary.

Page 29: "Rama appointed a Sethupathy to guard the causeway built by the monkey host. According to the ancient records as Thiruppullani the present capital of the Zamindary the Sethupathy was enjoined by Rama to build a city near the entrance to Sethu or cause way. This he did and called it Mugainagaram or Entrance Town. In course of time the name changed to that of Ramnad."

லிங்கப் பிரதிஷ்டை ஒன்று சிருஷ்டித்து, சேதுவுடன் இணைத்து, இராமேச்வரம் கோயில் வரலாறு இருப்பதுபோல, இன்னமும் எத்தனையோ கோவில்களுடன் இராமசரிதம் இணைக்கப்படுகிறது. இதற்கும் பல சான்றுகள் உள்ளன. அதில் ஒன்று டீ. என். அருணுசலம் பி. ஏ. பி. எல். எழுதிய நூற்றெட்டு சிவாலயம் என்ற கட்டுரை தினமணியில் புத்தாண்டு சிறப்பிதழில் 14—4—78உ வெளியாகியுள்ளதில் காணலாம். அந்தக் கட்டுரையில் அவர் விவரிப்பதாவது:—

தஞ்சை பாபநாசம் நகரின் மேற்கு எல்லையில் தஞ்சைக்குப் போகும் நெடுஞ்சாலையை ஒட்டிஞற்போல் கோயில் அமைந்துள்ளது. இக்கோயிலின் வரலாறு இராமகதையோடு தொடர்புள்ளது. கரன், தூஷணன் என்ற இரு அரக்கர்களைக்கொன்ற பாவம் நீங்குவதற்கு இராமபிரான் இங்கு நூற்றெட்டு சிவலிங்கங்களை ஸ்தாபித்து வழிபட்டார் என்றும், அதனுல் இந்த ஸ்தலம் பாவநாசம் எனப்பெயர்பெற்றது எனக்கூறுவர். இத்தலத்தை திருமால்புரம் எனவும் ஒரு கல்வெட்டில் குறிப்பிடப்படுகிறது. கீழை இராமேச்வரம் என்றும் பெயருண்டாம்... இப்பாவநாசம் கோயிலின் கர்ப்பகிரஹத்திலுள்ள பிரதான லிங்கம் இராமலிங்கம் என்ற பெயருடையார். இதையடுத்து தென்பால் தனிக்கோயில். அதிலுள்ள மூர்த்திக்கு அனுமலிங்கம் என்றுபெயர். இம்மூர்த்தியை அநுமன் கொண்டுவர இராமர் ஏற்று ஸ்தாபித்துப் பூஜித்தார். ஆகவே அனுமலிங்கம் எனப் பேர்பெற்ருர். இம்மூர்த்தியையும் உள்ளிட்டு நூற்றி

எட்டு என்ற எண்ணிக்கை. ஏனைய நூற்றி ஆறும் அடுத்துள்ள மண்டபத்தில் ஸ்தாபிக்கப்பட்டுள்ளன. [தினமணி கட்டுரை]

இந்த வரலாறு போன்றே, இராமேச்வரத்தில் உள்ள லிங்கம் இராமலிங்கம் என்றும், பக்கத்தில் தனி சன்னிதியில் உள்ள லிங்கம் அநுமன் கொண்டுவந்ததாகச் சொல்லப்படும் லிங்கம் அநுமலிங்கம் என்றும் பெயர். இங்கும் தோஷம் நிவர்த்திக்கவே பிரதிஷ்டைசெய்ததாக வரலாறு. பாபநாச வரலாறுக்கு எவ்வித ஆதாரமும் இல்லாததுபோல இராமேச்வரம் வரலாறுக்கும் ஆதாரம் இல்லை. தமிழ்நாட்டில் மற்றும் பல சிவன் கோவில்களிலும் ராமன் லிங்கப்ரதிஷ்டை செய்ததாகக் கதைகள் உள்ளன. உண்மை வரலாறுக்கு அவை முற்றிலும் முரண்பட்டவை. யாவும் கட்டுக்கதை.

இந்தக் கட்டுரை வரைவதற்குப் பெரிதும் உதவியது 'ஸ்ரீ வைஷ்ணவ ஸுதர்சனம்' ஆசிரியர், திருச்சி புத்தூர் கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் ஸ்வாமியின் நூல்களாகும். அவருக்கு மிகவும் கடமைப்பட்டுள்ளேன்.



# ஸ்ரீஸூக்திமாலா வெளியீடுகள்

*பதவுரை, அரும்பதவுரை, ப்ரமாணத்திரட்டு முதலானவற்றோடு கூடிய பெரியவாச்சான்பிள்ளை முதலான பூர்வாசார்யர்களின் க்ரந்தங்கள், ஆழ்வாரருளிச்செயல்கள்.*

| | க்ரந்தங்கள் | விலை | தபால் |
|---|---|---|---|
| 1. | பரந்த ரஹஸ்யம் முதலிய எட்டு ரஹஸ்யங்கள் | (அச்சில்) | |
| 2. | ஸ்தோத்ரரத்நசது:ஶ்லோகீ ஜிதந்தே வ்யாக்யானங்கள் | 8-00 | 1-00 |
| 3. | திருப்பல்லாண்டு வ்யாக்யானம் | 1-50 | -40 |
| 4. | முதல் திருவந்தாதி வ்யாக்யானம் | 1-88 | -50 |
| 5. | பெருமாள் திருமொழி வ்யாக்யானம் (அச்சில்) | | |
| 6. | திருமாலை வ்யாக்யானம் (அச்சில்) | | |
| 7. | திருவாசிரியம் பெரியதிருவந்தாதி வ்யாக்யானம் (அச்சில்) | | |
| 8. | சது:ச்லோகீ வ்யாக்யானம் [நாயனாராச்சான்பிள்ளை] | 2-50 | -50 |
| 9. | கத்ய வ்யாக்யானங்கள் | 4-50 | -50 |
| 10. | நாச்சியார் திருமொழி வ்யாக்யானம் (அச்சில்) | | |
| 11. | திருச்சந்தவிருத்த வ்யாக்யானம் | 3-00 | -65 |
| 12. | நான்முகன் திருவந்தாதி வ்யாக்யானங்கள் [விவரணத்துடன்] | 5-00 | -75 |
| 13. | ஸ்ரீராமாயண தனிச்லோகம் [விவரணத்துடன்] part I | 3-50 | -75 |
| | ஷை இரண்டாம் பாகம் [விவரணத்துடன்] | 7-00 | 1-00 |
| 14. | திருப்பள்ளியெழுச்சி வ்யாக்யானம் | 0-50 | -20 |
| 15. | பாசுரப்படி ராமாயணம் [விலையில்லை] | | -10 |
| 16. | அமலனாதிபிரான் வ்யாக்யானங்கள் (அச்சில்) | | |
| 17. | கண்ணிநுண்சிறுத்தாம்பு வ்யாக்யானம் (அச்சில்) | | |
| 18. | சிறியதிருமடல் வ்யாக்யானம் [விவரணத்துடன்] | 3-00 | -65 |
| 19. | முமுக்ஷுப்படி வ்யாக்யானம் | 3-00 | -65 |
| 20. | பெரியதிருமடல் வ்யாக்யானங்கள் [விவரணத்துடன்] | 5-00 | -75 |
| 21. | முதல் திருவந்தாதி, அப்பிள்ளையுரை [விவரணத்துடன்] | 3-00 | -65 |
| 22. | இரண்டாந்திருவந்தாதி வ்யாக்யானம்[விவரணத்துடன்] | 4-00 | -85 |
| 23. | ஆறாயிரப்படி குருபரம்பராப்ரபாவம் முதலியவை | 12-00 | 1-50 |
| 24. | ஸ்ரீவசநபூஷண வ்யாக்யானம் 4-அரும்பதவுரைகளுடன் முதல் பாகம் | 6-00 | 1-20 |
| 25. | மூன்றாந்திருவந்தாதி வ்யாக்யானம் [விவரணத்துடன்] | 4-00 | -85 |
| 26. | அருளிச்செயல் ரஹஸ்யம் [பூஷணத்துடன்] | 2-50 | -65 |
| 27. | திருவெழுகூற்றிருக்கை வ்யாக்யானம் [விவரணத்துடன்] | 1-00 | -35 |
| 28. | கைசிகபுராணம் | 1-00 | -25 |
| 29. | பகவத்விஷயம் (முதலிரண்டு திருவாய்மொழிகள்) | 25-00 | 5-00 |
| | ஷை இரண்டாம் பாகம் (முதற்பத்து 3-10 திருவாய்மொழிகள்) | 28-00 | 5-00 |
| 30. | உபயவேதாந்த ஐககண்ட்யம் | 2-50 | -50 |
| 31. | கோயிலொழுகு | 3-00 | -50 |
| 32. | யதிராஜ வைபவம்—வடுகநம்பி அருளியது [விவரணத்துடன்] | 1-00 | -25 |
| 33. | நாலாயிர திவ்யப்ரபந்தம் [முதலாயிரம்] | 7-00 | 1-00 |

# ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம் வெளியீடுகள்

(ஸுத3ர்ஶன பத்ரிகையில் வெளிவந்த எளியநடை நூல்கள்) விலை - தபால்

| | | விலை | தபால் |
|---|---|---|---|
| 1. | திருப்பாவை வ்யாக்யானம் | 4-00 | -75 |
| 2. | [போதாயந] ஸந்த்யாவந்தநம் பதவுரையுடன் | 0-50 | -20 |
| 3. | [போதாயந] உபாகர்மவிதி | 0-50 | -20 |
| 4. | புருஷஸூக்த வ்யாக்யானம் | 0-75 | -25 |
| 5. | நாராயணஸூக்த வ்யாக்யானம் | 0-75 | -25 |
| 6. | ஸ்ரீஸூக்த வ்யாக்யானம் | 2-00 | -40 |
| 7. | பூ4நீளா விஷ்ணுஸூக்த வ்யாக்யானங்கள் | 1-75 | -40 |
| 8. | தே3ஹளீஶ ஸுப்ரப4ாதம் | 0-25 | -15 |
| 9. | விசிஷ்டாத்வைதவிஜயம் [முதல் பாகம்] | 10-00 | 1-50 |
| | ஷை [இரண்டாம் பாகம்] | 5-00 | 1-00 |
| 10. | சாதிமத ஆராய்ச்சி [முதல்பாகம்] | 4-00 | -75 |
| 11. | ஸ்ரீலக்ஷ்மீ ந்ருஸிம்ஹஸ்தவம் | 0-50 | -20 |
| 12. | ஸந்மதகாரிகாவளீ | 1-75 | -40 |
| 13. | விஷ்ணுசித்தவிஜயம் [முதல் பாகம்] | 5-00 | 1-00 |
| | ஷை [இரண்டாம் பாகம்] | 7-00 | 1-50 |
| 14. | கம்பனின் சமயம் | 1-00 | -25 |
| 15. | சாரீரககாரிகாவளீ [முதல் பாகம்] | 3-00 | -65 |
| | ஷை. [இரண்டாம் பாகம்] | 5-00 | -75 |
| 16. | ஸாத்விகவிஜய ஸர்வஸ்வம் | 0-75 | -25 |
| 17. | ஸந்த்4யாவந்த3நபா4ஷ்யம் | 3-00 | -75 |
| 18. | திருப்பல்லாண்டு வ்யாக்யானம் | 2-00 | -50 |
| 19. | மகரநெடுங்குழைக்காதர் பாமாலையந்தாதி | 1-50 | -40 |
| 20. | ஸ்ரீகேசவமணிமாலை | 0-75 | -25 |
| 21. | மாமுனிகள் அறுநூறுவது ஆண்டு மலர் | 1-50 | -40 |
| 22. | சங்கரரும் வைணவமும் | 0-75 | -25 |
| 23. | ஸித்3தோ4பாய விஜயம் & [ஸ்ரீரங்கராஜ விஜயம்] | 3-00 | -75 |
| 24. | திருப்பாவை, திருப்பள்ளியெழுச்சி மூலம் மட்டும் | 0-25 | -10 |
| 25. | ரஹஸ்யத்ரயம் மூலம் மட்டும் | 0-25 | -10 |
| 26. | திருவாய்மொழி நூற்றந்தாதி | 0-25 | -10 |
| 27. | கீ3தா வ்யாக்2யானம் முதல் ஷட்கம் | 10-00 | 1-50 |
| 28. | அக்3நிஹோத்ரியும் வைணவமும் | 2-50 | -65 |
| 29. | காட்டுமன்னார்கோவில் வீரநாராயணப்பெருமாள், நாதமுனிகள், ஆளவந்தார் வைபவம் | 0-50 | -20 |
| 30. | சோலைமலைக்குறவஞ்சி | 3-50 | -75 |
| 31. | ஸ்ரீவைஷ்ணவ மகாநாடு மலர் | 1-00 | -25 |
| 32. | ஸுதர்சனர் பதில் (முதல் ஶதகம்) | 1-00 | -25 |
| 33. | அஷ்டோத்தரசதாதி3 திவ்யதேச விவரணம் | 2-50 | -40 |
| 34. | What is Visishtadvaita System of Philosophy? (English) | 1-00 | -30 |
| 35. | பராசரவிசிஷ்ட பரமதர்ம சாஸ்திரம் | 3-00 | -50 |
| 36. | பொன்விழா மலர் (ஆழ்வாராசார்யர்கள் வைபவமடங்கியது) | 8 00 | 1-00 |

கிடைக்குமிடம்:—

S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார், அட்வகேட்,
3, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-620017.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# இன்றைய தினம் திருவரங்கத்தில் பொன்விழாக் கொண்டாடும் பாரதீய பூர்வசிக ஸ்ரீவைஷ்ணவ சபாவிற்குப் பொன்னான எதிர்காலத்தை அளிக்கத் திருமகள் கேள்வன் திருவருள் பாலிக்கப் பிரார்த்திக்கிறேன்.

எஸ். சுந்தர ஸ்ரீநிவாசன், B. E.
மானாமதுரை.

---

ஸ்ரீராமஜெயம்

பின் சந்ததியர்களுக்கும் தெரியவேண்டி ஆழ்வார்களின் அருளிச்செயல்களுக்கு அரிய வியாக்கியானங்கள் செய்த ஸ்ரீமான்பெரியவாச்சான்பிள்ளை வழிவந்தவர்கள் தங்களுக்கெனச்சங்கம் அமைத்து, அதுவும் பொன்விழாக் கொண்டாடுகிற இந் நன்னாளில் சங்கம் மேலும் சீரும் சிறப்பும் பெற்று வளர்ச்சிக்கான எல்லா வசதிகளையும் அருள எம்பெருமானைப் பிரார்த்திக்கிறேன்.

எஸ். திருமலை,
இடைக்காட்டூர்,
இராமநாதபுரம் ஜில்லா.

ஸ்ரீராமஜெயம்

மாலரங்கர் மணவாளர் வளமுரைக்கும்
வையமுய்யக்கொண்டார்தம்
வழிவந்தவர்கள் துவங்கி இன்று
பொன்விழாக் கொண்டாடும்
பாரதீய பூர்வசிக ஸ்ரீவைஷ்ணவ சபா மேலும்
வளமும் வலிவும் பெற்று வளர்ந்தோங்கத்
திருநாரணனை இறைஞ்சுகிறேன்.

எஸ். சத்தியகிரிராஜன், M. A. B. Ed.
மாநுமதுரை.





ஸ்ரீராமஜெயம்

பெரிய கோயில் திருநகரத்தில் இன்று
பொன் விழாக் காணும் பாரதீய பூர்வசிக
ஸ்ரீவைஷ்ணவ சபா சமூகத்தின் அனைத்துப்
பேர்களும் வலிவும் பொலிவும் பெறத்தக்க
வகையில் இன்னும் சிறப்புறப் பணியாற்ற
எல்லா சௌபாக்கியங்களையும் அருளத்
திருமலையப்பனைப் பிரார்த்திக்கிறேன்.

என். சுந்தர ஸ்ரீநிவாசன், B.Sc.B.T.,
மதுரை.